# படைப்பிலக்கியம்- விளிம்புநிலை மக்கள் ஆய்வுநோக்கு

முனைவர் மேகலின் சந்திரா




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

# படைப்பிலக்கியம் – விளிம்புநிலை மக்கள் ஆய்வுநோக்கு

முனைவர் சா. மேகலின் சந்திரா




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
இரண்டாம் முதன்மைச் சாலை மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்
தரமணி, சென்னை – 600 113

கல்நிலையம் டி.என். சேஷாசலம். அறக்கட்டளைச் சொற்பொழிவு
(அறக்கட்டளை நிறுவியவர் : பரணீதரன்)
வரிசை எண் : 10

## BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Title of the Book | : | Pataippilakkiyam - viḷimpunilai makkaḷ āyvunōkku |
| Author | : | Dr. S. Mehalin Chandra<br>Assistant Professor, Dept. of Tamil<br>Nesamani Memorial Christian College<br>Marthandam, Kanyakumari Dist. |
| General Editor | : | Prof. Dr. K.A. Gunasekaran<br>Director<br>International Institute of Tamil Studies<br>Tharamani, Chennai-600 113 |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus,<br>Chennai-600 113<br>Ph: 22542992 |
| Publication No. | : | 714 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Year of Publication | : | 2011 |
| Paper Used | : | 18.6 Kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type used | : | 10 Point |
| No. of Pages | : | vi + 218 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs. 100/- (Rupees One hundred Only) |
| Printed by | : | Abi Offset<br>Offset Print House<br>Old No. 26, New No. 57, Thayar Sahib Street,<br>Mount Road, Chennai - 600 002. |
| Subject | : | Subaltern studies |

*பேரா. முனைவர் கரு. அழ. குணசேகரன்*
*இயக்குநர்*
*உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்*
*சென்னை-600 113*

# அணிந்துரை

தமிழில் பல நல்ல ஆய்வு நூல்கள் வெளிவந்து கொண்டிருக்கின்றன. கடந்த பத்து பதினைந்து ஆண்டுகளாகத் தலித் இலக்கிய ஆய்வுகள் முகிழ்ந்து வருகின்றன. தலித் மக்கள் தங்களைப் பற்றிய வாழ்வியலை இலக்கியமாகப் படைப்பது, தலித் அல்லாதார் தலித் மக்கள் குறித்து இலக்கியங்களைப் படைப்பது என இரு போக்குகள் உள்ளன. 'படைப்பிலக்கியம் – விளிம்புநிலை மக்கள் ஆய்வு நோக்கு' எனும் தலைப்பிலான ஆய்வு தலித் அல்லாதாரின் தலித் படைப்பு குறித்த ஆய்வாகும். எழுத்தாளர் சோலை சுந்தரபெருமாள் திருவாரூர் மண்ணுக்காரர் இருபது வயது வரை படைப்பு எழுதவேண்டும் என எண்ணாத வறிய நிலையில் வாழ்ந்தவர். 'தெற்கே ஒரு இமையம்' எனும் கவிதை நூல்வழி தமிழ் எழுத்துலகில் நுழைந்தவர். கவிதைத் துறையில் வெற்றிபெற இயலவில்லை. பின்னர்தான் மண்ணுக்கேயுரிய சடங்குகள், மரபுத் தொடர்கள், பழமொழிகள், உவமைகள், நாட்டுப்புறப் பாடல்கள் என மணங்கமழும் கதையாசிரியராக தமிழ் இலக்கிய உலகில் காலடி எடுத்துவைத்தார்

இந்நிலையில் நூலின் ஆசிரியர் மேகலின் சந்திரா தலித் மக்களின் வாழ்வுரிமை, அதற்கானப் போராட்டங்கள் குறித்து சோலைசுந்தர பெருமாளின் படைப்புகள் வழி ஆய்வு செய்கிறார்.

காலங்காலமாக அடிப்படை வசதிகள் இல்லாமல் சேரியில் வாழ்தல், இயற்கை சீற்றங்களுக்கு உள்ளாகுதல், சாதிக் கட்டுப்பாட்டுக்குள் வாழ்தல் என்பதை செந்நெல், பெருந்திணை, மரக்கால், தப்பாட்டம் போன்ற நாவல்களிலும் சிறுகதைகளிலும் பதிவு செய்திருப்பதை ஆசிரியர் திறனாய்வு செய்கிறார்.

இன்றும் தமிழ்நாட்டில் ஒடுக்கப்பட்ட சாதிக்கும் ஒடுக்கும் சாதிக்கும் என நிலவும் இரட்டைக் குவளைமுறை வெட்கக்கேடானது. செருப்பு அணிய தடை, ஒடுக்கும் சாதியார் வீதிகளில் தலித் மக்கள் மிதிவண்டியில் ஏறிப்போக தடை, வெள்ளாடுகள் வளர்க்கத்தடை போன்ற சாதிய வன்கொடுமைகள் ஏராளம். இப்பிரச்சனைகளை யெல்லாம் எதிரொலிக்கும் சோலையின் படைப்புகளை அடையாளப் படுத்தும் நூலாசிரியர் பாராட்டுக்குரியவர்.

மேலும், தலித் கவிதைப் படைப்புகளான நாவல், சுயசரிதை, மொழிபெயர்ப்புகள், ஒலிப்பேழைகள், நாடகங்கள் எனத் தலித் கலை இலக்கிய வடிவங்கள் அனைத்தையும் மேகலின் சந்திரா பகுத்துத் தொகுத்துத் தந்துள்ளார்.

அது மட்டுமில்லாமல் 'தலித்' என்பதற்கு பல்வேறு நிலைகளில் விளக்கங்கள் சொல்லப்பட்டாலும் தலித்தியம் என்பது அறிவுடன் தொடர்புடையது மட்டுமில்லாமல் உணர்வுடன் தொடர்புடையது (ப. 12) என்ற விளக்கம் மிகையானது அல்ல.

மனிதர்கள் அனைவரும் சமமானவர்கள். எனவே தலித் மக்கள் இழிவானவர்கள் அல்லர். தலித்துகள் உட்பிரிவுகளை களைந்து வர்க்கமாகத் திரள வேண்டும்; போராட வேண்டும். திருமணம் என்னும் அங்கீகரிக்கப்பட்ட உறவில் ஆதிக்கச் சாதியினர் தலித் மக்களோடு ஒன்று கலக்க வேண்டும். வர்க்கம் எனும் அளவில் ஆதிக்கச்சாதி தொழிலாளர்கள், தலித் தொழிலாளர்களோடு ஒன்றிணையவேண்டும் என்பன போன்ற நிலைப்பாடுகளைக் கொண்ட சோலை சுந்தரபெருமாள் படைப்பு வழி ஆய்ந்து தலித் மக்கள் சிக்கலை அவிழ்ப்பதற்கு காரணமான இப்படைப்பு நூல் தமிழ் உலகிற்குப் பயனளிக்கும்.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதோடு தம் தனிப்பட்ட அக்கறையைக் காட்டிவரும் **இந்து சமய அறநிலையம் மற்றும் தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத் துறை அமைச்சர் மாண்புமிகு சுப. சண்முகநாதன்** அவர்களுக்குத் தமிழுலகம் என்றும் நன்றிக் கடன்பட்டுள்ளது.

நிறுவனச் செயல்பாட்டுக்கு உறுதுணையாக இருந்துவரும் தமிழக அரசின் **தமிழ் வளர்ச்சி, அறநிலையம் மற்றும் செய்தித் துறைச் செயலாளர் திரு. து.நா. இராமநாதன் இ.ஆ.ப.** அவர்களுக்கும் நன்றி.

இச்சொற்பொழிவின் எழுத்துருவை மெய்ப்புத் திருத்தம் செய்த நிறுவன முதுநிலை ஆராய்ச்சியாளர் முனைவர் கோ. பன்னீர்செல்வம் அவர்களுக்கும் இச்சொற்பொழிவு மற்றும் நூல் தொடர்பான அனைத்து ஏற்பாடுகளையும் செய்த நிறுவனப் பணியாளர்கள் மற்றும் கணிப்பொறியாளர் திருமதி எ.ம. லட்சுமி ஆகியோருக்கும் எம் நன்றிகள் என்றுமுண்டு. இந்நூலை அழகுற அச்சிட்டுத் தந்த யுனைடெட் பைண்ட் கிராபிக்ஸ் அச்சகத்தாருக்கு எம் பாராட்டுகள்.

**இயக்குநர்**

## ஆசிரியர் குறிப்பு



பெயர் : முனைவர் சா. மேகலின் சந்திரா

இவர் குமரி மாவட்டத்தில் 1985இல் பிறந்தார். இவர் பள்ளிக்கல்வியை குமரி மாவட்டத்திலும், ஆய்வியல் நிறைஞர் மற்றும் முனைவர் பட்டத்தை குமரி மாவட்டத்திலுள்ள ஸ்காட் கிறித்துவக் கல்லூயிலும் முடித்தார்.

இவர் படித்த ஸ்காட் கிறித்துவக் கல்லூரியிலேயே உதவி பேராசிரியராக ஒரு வருடம் பணியாற்றியுள்ளார். மேலும் இவர் கேரளப் பல்கலைக் கழகத்தில் விருந்துநிலை பேராசிரியராக ஒன்றரை வருடங்கள் பணியாற்றியுள்ளார்.

இவர் தற்போது நேசமணி நினைவு கிறித்துவக் கல்லூயில் (மார்த்தாண்டம்) உதவிப் பேராசிரியராகப் பணியாற்றி வருகிறார். பதினைந்திற்கும் மேற்பட்ட இலக்கியக் கட்டுரைகளை எழுதியுள்ளார்.

# பொருளடக்கம்

பக்கம்

# முன்னுரை

இலக்கியம் மனித வாழ்க்கையைப் பிரதிபலித்துக்காட்டும் கண்ணாடி ஆகும். இந்த அடிப்படையில் இன்றைய தமிழ் இலக்கியத்தின் ஒரு தனிப்பெரும் பிரிவாக விளிம்புநிலை மக்களின் வாழ்க்கையைப் பிரதிபலித்துக்காட்டும் தலித் இலக்கியம் தோன்றி வளர்ந்து வருகிறது. தலித் சமுதாயத்தைச் சார்ந்த மற்றும் விளிம்புநிலை மக்கள் சமுதாயத்தைச் சாராத பல படைப்பாளர்கள் தலித் இலக்கியம் வளரத் தங்கள் பங்களிப்பை நல்கியுள்ளனர். அவர்களில் தலித் சமுதாயத்தைச் சாராத சோலை சுந்தரபெருமாள் என்பவரின் படைப்புகளைத் தலித்தியப் பார்வையில் இனங்கண்டு விளக்கும் நிலையில் இந்நூல் அமைக்கப்பட்டுள்ளது.

தலித்தியம் தொடர்பான செய்திகளைப் பொதுவாக அறிமுகம் செய்வதோடு சோலை சுந்தர பெருமாள் படைப்புகளில் இடம்பெற்றுள்ள விளிம்புநிலை மக்கள் தொடர்பான செய்திகளைச் சிறப்பாக எடுத்தியம்புவதுடன் எழுதப்பட்டுள்ள இந்நூலுக்கென நோக்கங்கள் பல உண்டு. அவை,

1. தலித்தியம் தொடர்பான செய்திகளை அறிமுகம் செய்தல்
2. சோலை சுந்தர பெருமாள் படைப்புகளை அறிமுகம் செய்து விளக்குதல்
3. ஒடுக்கப்பட்ட மக்களின் அவலநிலையைச் சோலை சுந்தர பெருமாள் படைப்புகள் வாயிலாகக் கண்டறிதல்
4. மனிதர் அனைவருக்கும் சமஉரிமைகள் வழங்கத் தூண்டுதல்
5. விளிம்புநிலை மக்களின் நல்வாழ்க்கைக்கான மேம்பாட்டுச் சிந்தனைகளை எடுத்தியம்புதல்

என்பன.

இந்தியச் சமூகம் பிறப்பின் அடிப்படையில் உயர்வு, தாழ்வு கற்பித்துச் சாதி என்ற கருத்தாக்கத்தை நியாயப்படுத்தியும் நிலைப் படுத்தியும் மனித மாண்பை விலைபேசி வந்தது. இந்த அவல நிலையை முற்றிலும் களைந்து, புதிய சமூகத்தைத் தோற்றுவிக்கும் நோக்கில் தலித் விழிப்புணர்வுச் சிந்தனைகள் முதலில் மராட்டிய மொழியில் தோன்றின. பின்னர் இந்தி, கன்னடம், குஜராத்தி, தமிழ், தெலுங்கு எனப் பல மொழிகளில் வெளிப்பட்டன. அவ்வாறு தமிழில் நிலைபெற்ற தலித் சிந்தனைகள் ஒரு தனிப் பெரும்பிரிவாக வளர்ச்சி பெற்று வருவதோடு

தலித் இலக்கியம் குறித்த ஆய்வுகளும் மிகப் பரவலாக வெளிவரும் சூழ்நிலை ஏற்பட்டுள்ளது. அவை தலித் இலக்கியங்கள், தலித் மக்களின் வாழ்க்கை நிலைகள், தலித் கலைகள் போன்ற வகைகளில் உள்ளன. அவற்றில் ஆ. சிவசுப்பிரமணியன் (தமிழகத்தில் அடிமை முறை), கு. சின்னப்பன் (தமிழகத்தில் தலித் சிந்தனை மரபு), ஆ. ஜீவானந்தம் (தமிழில் தலித் இலக்கியம்) ஆகியோரின் பங்களிப்புகளை இந்நூல் முன்னோடியாகக் கருதுகிறது.

இந்நூல் சோலை சுந்தரபெருமாள் படைப்புகளை மையமாக வைத்துத் தலித்துகளின் வாழ்க்கைப் பிரச்சனைகளையும் தலித்துகளின் வாழ்வுரிமைப் போராட்டங்களையும் தலித்துகளின் வாழ்க்கை மேம்பாட்டுச் சிந்தனைகளையும் விளக்குவதாக அமைந்துள்ளது. எனவே, தலித் தொடர்பானச் செய்திகளை அடிப்படையாகக் கொண்டு உருவாக்கம் பெற்ற இந்நூல். சமூக அளவில் தலித்துகள் ஒடுக்கப்படுவதை வெளிப்படுத்தி மக்களிடையே விழிப்புணர்வைத் தூண்டுவதாக அமையும். மேலும் சாதி, மதம், நிறம், பால், இனம் முதலாக உள்ள வேறுபாடுகள் இல்லாமல் அனைத்து மனிதர்களும் சமமாக நடத்தப்பட வேண்டும் என்ற கருத்தை வலியுறுத்தவும் உதவும்.

# 1. தலித்தியம் தொடர்பான செய்திகள்

தலித்தியம் என்பது ஒடுக்கப்பட்ட மக்களின் வாழ்க்கைப் பிரச்சனைகள் மற்றும் மேம்பாடு தொடர்பான கல்வி மற்றும் ஆய்வுகளைக் குறிக்கும் சொல்லாக உள்ளது. இந்த அடிப்படையில் தலித்தியம் குறித்த விளக்கம், தமிழ் நூல்களில் சாதி குறித்த செய்திகள், சாதி இயக்கங்கள், தலித் இலக்கியம் தொடர்பான செய்திகள், தலித் சார்பான நிறுவனங்கள், தலித் இயக்கங்கள், தலித் இதழ்கள், தலித் அழகுக் கூறுகள், தலித் மொழி, தலித் சார்ந்த கொள்கைப் படைப்புகள் என்ற நிலைகளில் செய்திகளைத் தருவதாக இப்பகுதி அமைகிறது.

## 1. தலித்தியம் குறித்த விளக்கம்

ஒடுக்கப்பட்ட விளிம்புநிலை மக்களைக் குறிப்பதற்காக 'தலித்' என்ற சொல் முதன்முதலாக மாராட்டிய மொழியில் பயன்படுத்தப்பட்டது. பின்னர் இந்தச் சொல் "தாழ்த்தப்பட்டவர்கள், மலைவாழ் மக்கள், புதிய பவுத்தர்கள், உழைக்கும் மக்கள், நிலமற்றவர்கள், ஏழை விவசாயிகள், பெண்கள், அரசியல் ரீதியாகவும் பொருளாதார ரீதியாகவும் மதத்தின் பெயராலும் சுரண்டப்படும் அனைவரையும் குறிக்கும் நோக்கில் உள்ளது" (கெயில் ஓம்வெத், தலித் பேந்தர்கள் தலித் இலக்கியம் பெண்கள், நிறப்பிரிகை, நவம்பர் 1994, ப.3). மேலும் தலித் என்பது ஆதிதிராவிடர், தாழ்த்தப்பட்டவர், பஞ்சமர், அரிஜன் போன்ற சொற்களை ஒதுக்கிவிட்டு, அகப்பார்வையில் நசுக்கப்படுதலை உணர்த்தி நிற்கிறது. அதோடு 'உரிமை எங்களுக்குத் தேவை. ஆனால் உரிமை இல்லாத சலுகை எங்களுக்குத் தேவை இல்லை' என்ற கருத்தைத் வலியுறுத்துகிறது. மேலும் 'தலித் என்பதைப் பிற்படுத்தப்பட்டோர் அனைவரும் உணர்வு அடிப்படையில் இணையும் புள்ளி என்றும் கூறலாம். தீண்டாமையை உடைத்தெறிந்து சமூக, பொருளாதாரத்தில் முன்னேறுவதே இதன் நோக்கம். பொதுவாக தலித் என்ற சொல் சாதி அமைப்பை நொறுக்கும் சொல்லாக உள்ளதால் பெரும்பான்மையோரால் இந்தச் சொல் ஏற்றுக்கொள்ளப்படுகிறது. 'அரிஜன்' என்ற சொல் 'கடவுளின் பிள்ளை' என்று உயர்சாதியினரின் பரிதாபத்திற்கு உரியதாக அமைகிறது. ஆனால் தலித் என்பது 'சலுகை என்ற அனுதாபத்தை ஏற்காமல் உரிமையைத் தரவேண்டும்' என வலியுறுத்துகிறது. இந்த நிலையில் 'தலித்' என்ற சொல்லின் மூலமொழி குறித்துப் பலவிதமான கருத்துவேறுபாடுகள் மொழி அறிஞர்களிடம் காணப்படுகின்றன. பொதுவாக, "தலித் என்ற சொல் சமயம், சமூகம் மற்றும் பொருளாதாரம் என்ற நிலையில்

உடைக்கப்பட்ட அல்லது ஒதுக்கப்பட்ட மக்களைக் குறிக்கிறது. மேலும் இந்தச் சொல் 'தல்' என்ற எபிரேய மொழிச் சொல்லை அடிப்படையாகக் கொண்டது என்றும் இது சிறிய, சிறுமைப்பட்ட என்ற பொருள்களில் கிறிஸ்தவத் திருமறையில் பயன்படுத்தப்படுகிறது என்றும் கிறிஸ்தவத் திருமறை மராட்டிய மொழியில் வழங்கிய பிறகு இது மராட்டிய மொழியில் புகுந்து சமூகநிலையில் ஒடுக்கப்பட்டுக் கீழ்நிலைக்குத் தள்ளப்பட்ட மக்களைக் குறிக்கும் நோக்கில் 'தலித்' என வழக்கு பெற்றுள்ளது என்றும் கருதும் நிலை ஏற்பட்டுள்ளது" (டேவிட் சித்தையா, திரிபுவாத விடுதலை இறையியல், சுபமங்களா, 1995, பக். 86, 87). இவ்வாறு தலித் என்ற சொல்லிற்குச் சிறுமைப்பட்டோர், நசுக்கப்பட்டோர், ஒடுக்கப்பட்டோர், பிழியப்பட்டோர் போன்றவற்றைப் பொருள்களாகக் கொள்ளலாம். வடமொழியில் 'தல்' என்பது பிளவு, பிளக்கப்பட்ட என்ற பொருள்களில் உள்ளது. இதன் அடிப்படையில் உடைக்கப்பட்டவர்கள், நொறுக்கப்பட்டவர்கள், கிழிக்கப்பட்டவர்கள், முகம் இழந்தவர்கள், சிதறடிக்கப்பட்டவர்கள், அடையாளம் அற்றவர்கள் எனப் பல பொருள்கள் இந்தச் சொல்லுக்கு உண்டு (அ.சஜன், தலித்தியம்-இயக்கமும் இலக்கியமும், 2004, ப.76). மேலும் எபிரேய மொழியில் 'தல்' என்பதற்குப் பலகீனம் அடைவது, குனிந்து போவது, தாழ்ந்து போவது, பலமற்றது, நிலையற்றது, மதிக்கப்படாதது என்று பல பொருள்கள் உண்டு. தயாபவர் என்னும் மராட்டியத் தலித் கலைஞர் 'தல்' என்பதற்கு 'மண்ணில் வேர் பிடித்தவர்கள்' என்று பொருள் கூறி, தலித் என்பது மராட்டியச் சொல் என்று வாதிட்டுள்ளார். தமிழ்மொழி 'தலித்' என்ற சொல்லை மாராட்டியத்திலிருந்து வாங்கிப் பயன்படுத்துகின்றது. "தலித் படைப்பாளியான சிவகாமி, தலித் என்னும் சொல் தாழ்த்தப்பட்ட சாதிகள் அனைத்தையும் ஒன்றிணைக்கும் வசதிக்காகத் தோன்றிய சொல் என்று கருதுகிறார்" (அ.சஜன், தலித்தியம்-இயக்கமும் இலக்கியமும், 2004, ப.79). இவ்வாறு ஒடுக்கப்பட்ட மக்களின் விழிப்புணர்வைத் தூண்டும் குறியீடாக இந்தச் சொல் அமைகிறது. தமிழகச் சூழலில் நாற்சாதியிலும் சேராத அவர்ணர்கள் தலித் அமைப்பிற்குள் அடங்குகின்றார்கள். எனவே, இவர்கள் சாதியற்றவர்கள் ஆவர். பொதுவாக தலித் என்றால் செட்யூல்டு சாதியினரைக் குறிப்பதாகப் பரவலாகப் பேசப்பட்டது. சித்தலிங்கய்யா என்ற கர்நாடாகச் சிந்தனையாளர் 'தலித் என்கிற சொல்லைச் சாதியைக் குறிக்கிற ஒன்றாகச் சுருக்கிவிடக்கூடாது என்று அது வேதனையின் குறியீடாக இருக்கலாம் என்றும் ஆனால், அது சுரண்டலின் குறியீடாக மாறிவிடக் கூடாது' என்றும் கூறியுள்ளார். 1930-32 இல் செட்யூல்டு சாதி என்பது பொருளாதாரத்தில் பின்தங்கியவர்களைக் குறிக்க முதன்முதலில் பயன்படுத்தப்பட்டது. அப்போது செட்யூல்டு சாதியினர் தங்களுக்குள் பல சாதிகளாக இருப்பதால் அவ்வாறு அழைப்பதற்கு மறுப்புத் தெரிவித்துத் தங்களைச் சாதிப் பெயராலேயே அழைக்கக்

கூறினர். எனவே "தலித் என்ற சொல்லைச் சாதிகளைத் தாண்டி, அனைத்து ஒடுக்கப்பட்ட மக்களையும் அடையாளப்படுத்துகிற ஒன்றாக எடுத்துக் கொள்ளலாம்" (முகில், தமிழில் தலித் இலக்கியம், தலித்தியம், 1996, ப.101) என்று முகில் என்பவர் குறிப்பிட்டுள்ளார். இவற்றின் அடிப்படையில் தலித் சமுதாயம் முன்னேற வேண்டும் என்ற கருத்துடைய சமூக ஆர்வலர்கள் பிற அடையாளங்களைவிட 'தலித்' அடையாளத்தை ஏற்கின்றனர் எனக் கருத இடமுள்ளது. தலித் என்ற சொல்லை அடியாகக் கொண்டு தமிழில் தலித்தியம் என்ற சொல் வழங்குகிறது. இதனைத் தலித் + இயம் = தலித்தியம் எனப் பிரித்துத் தலித்தைப் பற்றி இயம்புவது தலித்தியம் எனப் பொருள் கொள்ளலாம். பொதுவாக ஒடுக்கப்பட்ட சாதியினர் ஆதிக்கச் சாதியினருக்கு எதிராக மீறுவதும், சேருவதுமான கலகப் பண்பாடாகத் தலித்தியம் விளங்குகிறது. இதனால் தலித்தியம் அறிவுடன் தொடர்புடையது மட்டுமல்லாமல் உணர்வுடன் தொடர்புடையதாகவும் அமைகிறது.

## 2. தமிழ் நூல்களில் சாதி குறித்த செய்திகள்

தமிழ் நூல்களில் மிகப்பழங்காலம் முதற்கொண்டே சாதி குறித்த சொற்கள் பதிவாகியுள்ளன. அவற்றைத் தமிழ் இலக்கண நூல்களில் சாதி குறித்த செய்திகள், தமிழ் இலக்கிய நூல்களில் சாதி குறித்த செய்திகள் என்ற அடிப்படைகளில் விளக்குவதாக இந்தப் பகுதி உள்ளது.

### 1. தமிழ் இலக்கண நூல்களில் சாதி குறித்த செய்திகள்

தமிழ் இலக்கண நூலான தொல்காப்பியம் அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் ஆகிய நால்வருணத்தார்க்கும் கீழானோரை இழிந்தோர் என்று குறிப்பிட்டுள்ளது (சண்முகம் பிள்ளை, தொல்காப்பியம், அகத்திணையியல், 2000, நூ. 26). மேலும் தொல்காப்பிய அகத்திணையியலில் ஐவகை நிலங்களுக்கும் உரிய தாள இசைக்கருவிகள் குறித்துக் கூறப்பட்டுள்ளன. அவற்றில் முல்லை – ஏறுகோட்பறை, குறிஞ்சி – வெறியாட்டுப்பறை மற்றும் தொண்டகப் பறை, மருதம் - நெல்லரிபறை, நெய்தல் – நாவாய்ப்பறை, பாலை – ஆறலைப் பறை மற்றும் சூறை கொண்ட பறை என்பன சுட்டிக்காட்டத்தக்கன.

### 2. தமிழ் இலக்கிய நூல்களில் சாதி குறித்த செய்திகள்

தமிழ் மரபிலக்கியப் படைப்புகளில் சாதி குறித்த செய்திகள் இடம்பெற்றுள்ளன. அவற்றைச் சங்க இலக்கியங்கள் குறிப்பிடும் சாதி பற்றிய செய்திகள், நீதி நூல்களில் சாதி குறித்த செய்திகள், பக்தி இலக்கியத்தில் சாதி பற்றிய குறிப்புகள், சிற்றிலக்கியங்களில் சாதி குறித்த செய்திகள், சித்தர் பாடல்களில் சாதி பற்றிய செய்திகள், மறுமலர்ச்சிக் கவிஞர்களின் படைப்புகளில் சாதி பற்றிய செய்திகள் எனப்

பகுத்து விளக்குவதாக இந்தப் பகுதி உள்ளது.

### 1. சங்க இலக்கியங்கள் குறிப்பிடும் சாதி பற்றிய செய்திகள்

சங்க இலக்கியப் பாடல்களில் சாதி குறித்த செய்திகள் இடம்பெற்றுள்ளதால் அந்தக் காலத்திலேயே சமுதாயம் பலவகைச் சாதிகளால் பிளவுபட்டிருந்தது எனலாம்.

"மலையன்மா ஊர்ந்து போகி புலையன்
பெருந்துடி" (நற். 77)

"அரும்பறை வினைஞர் புல்லிகல் படுத்து" (பதிற். 75)

"கட்டி னிணக்கு மிழிசினன் கையது" (புறம். 82)

"இழிபிறப்பாளர் கருங்கை சிவப்ப" (புறம். 170)

"முருகுமெய்ப் பட்ட புலைத்தி போல" (புறம். 259)

"துடி எறியும் புலைய
எறிகோல் கொள்ளும் இழிசன" (புறம். 287)

"பூக்கோள் இன்றென் றறையும்
மடிவாய்த் தண்ணுமை இழிசினன் குரலே" (புறம். 289)

"புலைத்தி கழீஇய தூவெள் ளறுவை" (புறம். 311)

"துடியன் பாணன் பறையன் கடம்பனென்
றின்னான் கல்லது குடியுமில்லை" (புறம். 335)

"புலையன் ஏவப் புன்மேல் அமர்ந்துண்டு
அழல்வாய்ப் புக்க பின்னும்" (புறம். 360)

மேற்குறிப்பிட்ட அனைத்தும் தாழ்த்தப்பட்ட மக்களைக் குறிப்பதற்குச் சங்க இலக்கியங்களில் பயன்படுத்தப்பட்டவை ஆகும். பண்டைக் காலத்தில் உற்பத்தியோடும், ஆட்சியோடும் பறை இணைந்திருந்தது. எனவே அரசின் ஆணைகளை அறிவிக்க பறை பயன்படுத்தப்பட்டது. மேலும் போர்ச்செய்தியை மக்களுக்கு அறிவிக்க பறை முழக்கப்பட்டது. இதற்கு மூத்தோர் குறவை என்று பெயர். மேலும் பிந்தோர் குறவை போர் வெற்றிச் செய்தியை மக்கள் அறிந்து கொள்வதற்கு முழக்கப்பட்டது. போரில் வீரமரணம் தழுவிய வீரர்களுக்கு அரசு மரியாதையுடன் அடக்கம் நடந்தபோது சாப்பறை முழக்கப்பட்டது. ஏரி, குளங்களின் வெள்ள அபாயம் ஏற்படும் நிலைகளில் அதை மக்களுக்கு அறிவிக்க காப்பறை முழக்கப்பட்ட செய்தியைப் பரிபாடல் கூறுகிறது. இவ்வாறு பல்வேறு நிலைகளில் பறை பயன்படுத்தப்பட்டுள்ளது. இந்தப் பறையைப் பயன்படுத்தின மக்கள் பறையர் எனப்பட்டனர். இவ்வாறு சங்க

இலக்கியங்கள் தொடங்கி அனைத்து இலக்கியங்களிலும் தாழ்ந்த சாதியினர் என்று மக்களைத் தனிப் பிரிவாகப் பகுத்துக்காட்டும் வழக்கம் இருந்தது எனலாம்.

## 2. நீதி நூல்களில் சாதி குறித்த செய்திகள்

நீதி நூல்களில் சாதி எதிர்ப்புக் கருத்துகள் உள்ளன. அவை பின்வருமாறு தரப்படுகின்றன.

"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்" (குறள். 927)

"களர்நிலத்துப் பிறந்த உப்பினைச் சான்றோர்
விளைநிலத்து நெல்லின் விழுமிதாக் கொள்வர்
கடைநிலத்தோர் ஆயினும் கற்றறிந் தோரைத்
தலைநிலத்து வைக்கப் படும்" (நாலடி. 133)

இடாதார் இழிகுலத்தார் (நல்வழி. 2)

மேற்குறிப்பிட்ட கருத்துகள் சாதி எதிர்ப்பைக் குறிப்பதாக உள்ளதால் அந்தக் காலத்தில் சாதி மிகுந்த செல்வாக்குடன் விளங்கியதை அறியலாம்.

## 3. பக்தி இலக்கியங்களில் சாதி பற்றிய குறிப்புகள்

பக்தி இலக்கியங்களில் சாதி குறித்த கருத்துகள் இடம்பெற்றுள்ள நிலை பின்வருமாறு தரப்பட்டுள்ளது.

"பழுதிலா ஒழுக லாற்றுப்பலசதுப் பேதி மார்கள் !
இழிகுலத் தவர்களேலும் எம்மடியார்களாகில்
தொழுமின் நீர் கொடுமின் கொள்மின் என்றுநின் னோடும் ஒக்க
வழிபட அருளினாய் போல் மதிள்திரு வரங்கத் தானே"
(தொண்டர் அடிப்பொடி ஆழ்வார் அருளிச்செய்த திருமாலை. 42)

நந்தனாரின் கதையைக் கூறும் திருநாளைப் போவார் புராணம் 'இப்பிறவி போய்நீங்க எரியிடை மூழ்கி' என்கிறது.

பேரூர் புராணம் இறைவன் பள்ளன், பறையன் உட்பட பல அவதாரங்களை எடுத்ததாகக் கூறியுள்ளது.

## 4. சிற்றிலக்கியங்களில் சாதி பற்றிய செய்திகள்

பள்ளு, குறவஞ்சி போன்ற இலக்கியங்களில் பள்ளர், குறவர் போன்ற இனத்தவர்கள் கதை மாந்தர் ஆவர். இவைகளில் அவர்கள் மேன்மைப்படுத்தப் படுவதற்குப் பதிலாக எள்ளி நகையாடப்படுகின்றனர். அவர்கள் பேச்சு இழிவானதாகவும் நகைப்பிற்குரியதாகவும் சுட்டப்படுகிறது.

"சுறுக்குந் தொறும் குதிப்பும்
சறுக்குந் தலை — யசைப்பும்
தடி சுற்றி ஏப்பமிட்டே
அடி வைப்பதும்
மறுக்கும் மதுவெறி — கொண்டு
உறுக்கும் சிரிப்பும் தோன்ற
வடிவழகக் குடும்பன் வந்து
தோன்றி னானே" (பள்ளு. 11)

இந்தப் பாடல் இங்குக் கவனத்தில் கொள்ளத்தக்கதாக உள்ளது.

## 5. சித்தர் பாடல்களில் சாதி குறித்த செய்திகள்

சித்தர் பாடல்களில் சாதி எதிர்ப்புக் கருத்துகள் உள்ளன.

"சாதி ஆவது ஏதடா? சலந்திரண்ட நீரெலாம்
பூதவாசல் ஒன்றலோ, பூதம் ஐந்தும் ஒன்றலோ?
காதில்வாளி, காரை, கம்பி, பாடகம் பொன்ஒன்றலோ
சாதிபேதம் ஓதுகின்ற தன்மை என்ன தன்மையோ?
(சிவவாக்கியர் - 42)

"சாதிப் பிரிவினிலே தீயை மூட்டுவோம்
சந்தை வெளியினிலே கோலை நாட்டுவோம்"
(பாம்பாட்டி சித்தர் - 123)

"தொல்லுலகில் நாற்சாதி யனேகஞ் சாதி
தொடுத்தார்க ளவர்கள் பிழைக்கத்தானே"
(வால்மீக சித்தர் - 8)

"ஒவ்வாவென்ற பலசாதி — யாவும்
ஒன்றென் றறிந்தே யுணர்ந்துற வோதி"
(கடுவெளி சித்தர் - 32)

இந்தப் பாடல்கள் சாதி அமைப்பு இல்லை என்றும் பிறப்பு வழி அனைவரும் சமம் என்றும் பிழைப்பதற்கு ஏற்படுத்தின அமைப்புதான் சாதி என்றும் குறிப்பிடுகின்றன.

## 6. மறுமலர்ச்சிக் கவிஞர்களின் படைப்புகளில் சாதி பற்றியச் செய்திகள்

மறுமலர்ச்சிக் கவிஞர்களில் ஒருவரான பாரதியார் தாழ்த்தப்பட்ட மக்களுக்குச் சமஉரிமை தந்து அவர்களது தேவைகளை நிறைவு செய்ய வேண்டும் என்று கூறியுள்ளார். எனவே அவர் 'பிறப்பின் அடிப்படையில் சாதி அமைப்பு அமைகிறது' என்பதை மறுப்பதாக ஞானரதம், சாஸ்திரியார் மகன் என்ற இரு கதைகளையும் எழுதியுள்ளார்.

சமுதாயத்தில் சாதி இருக்கலாம். ஆனால் அது பிறப்பின் அடிப்படையில் அமைவதாக இருத்தல் கூடாது என்பதை 'ஆறில் ஒரு பங்கு' கதையில் பாரதியார் வலியுறுத்தியுள்ளார். மேலும் அவர் கோயில் திருத்தம், சாரல் என்ற கட்டுரைகளில் தாழ்த்தப்பட்ட மக்களின் தேவைகளுக்காகப் பரிந்துரை செய்துள்ளார். இவை தவிர, பாரதியாரின் பாடல்களிலும் சாதி எதிர்ப்புக் கருத்துகள் கூறப்பட்டுள்ளன. என்றாலும்,

"ஈனப் பறையர்க ளேனும் - அவர்
எம்முடன் வாழ்ந்திங் கிருப்பவர் அன்றோ?"
(இ. சுந்தரமூர்த்தி, பாரதியார் கவிதைகள், 2003, ப.14).

என்ற பாடல்வரிகளில் பறையர்களை 'ஈன' என்ற சொல்லால் குறிப்பிட்டுள்ளார். அதோடு அவர் 'புலையர்' என்ற சாதிச் சொல்லிலுள்ள 'புலை' என்ற பகுதியை 'இழிவு' என்ற பொருளில் பல இடங்களில் கையாண்டுள்ளார். எனவே, பாரதியிடம் தலித் பற்றிய அனுதாபம் மட்டுமே உள்ளது என்று கருதி அவரைத் தலித் நேயப் படைப்பாளி எனக் கொள்ளலாம். இது தவிர பாரதிதாசன், கண்ணதாசன், வாணிதாசன், பட்டுக்கோட்டை கலியாண சுந்தரனார் பாடல்களிலும் சாதி பற்றிய கருத்துகள் உள்ளன.

### 3. சாதி இயக்கங்கள்

சாதி இயக்கங்கள் அம்பேத்கர் காலத்திற்கு முன்னும் பின்னும் செயல்பட்டுள்ளன. அவற்றில் பிராமணர் அல்லாதார் இயக்கம், நீதிக்கட்சி, அரிசன இயக்கம், சுயமரியாதை இயக்கம், தலித் பாந்தர் இயக்கம் என்பன குறிப்பிடத்தக்கவை ஆகும்.

### 1. பிராமணர் அல்லாதார் இயக்கம்

பிராமணர் வகித்து வந்த உயர் பதவிகளைப் பெற பிராமணர் அல்லாத மேல்சாதி இந்துக்கள் முயன்றனர். எனவே "பிராமணர்கள் பெற்றுவந்த உயர்பதவிகளைப் பெறுவதே பிராமணர் அல்லாதார் கிளர்ச்சியின் நோக்கமாக அமைந்தது" (அ.சஜன், தலித்தியம் இயக்கமும் இலக்கியமும், 2004, ப.29). மாறாக சாதி அமைப்பைத் தகர்ப்பது இவர்களின் நோக்கமாக அமையவில்லை. மேலும், தாழ்த்தப்பட்டவர் களின் சமுதாய விடுதலை இந்த இயக்கத்தில் ஒரு பொருட்டாகக் கருதப்படவில்லை. ஆனால் பிராமணர்களின் ஆதிக்கத்தையும், சமயச் சடங்குகளையும் இந்த இயக்கம் எதிர்த்தது.

### 2. நீதிக்கட்சி

நீதிக்கட்சி பிராமணர் அல்லாத மேல் சாதியினரை உறுப்பினர் களாகக் கொண்டிருந்தது. படித்தவர்களிடம் அறிமுகமாயிருந்த நீதிக்கட்சி 1920, 1923, 1930 ஆகிய ஆண்டுகளில் அரசமைத்தது. "தாழ்த்தப்பட்டவரின் தலைவராக விளங்கிய எம்.சி. ராஜா, இரட்டை மலை

சீனிவாசன், என். சிவராஜ் போன்ற பெருந்தலைவர்கள் நீதிக்கட்சி மூலம் நாட்டு மக்களுக்குத் தொண்டாற்ற முன்வந்தனர்" (அ. சஜன், தலித்தியம் இயக்கமும் இலக்கியமும், 2004, பக். 31, 32). இந்தக் கட்சி தாழ்த்தப் பட்டவர்களைக் குறிக்கும் பஞ்சமர், பறையர் சொற்களை நீக்கி ஆதிதிராவிடர் என்று அழைக்குமாறு வேண்டுகோள் விடுத்ததன் விளைவாக 1921 ஆம் ஆண்டு முதல் மக்கள் தொகைக் கணக்கெடுப்பில் ஆதிதிராவிடர் என்ற பெயர் பயன்படுத்தப்பட்டது. இந்த நிலையில் பார்ப்பனர் அல்லாத மேல்சாதியினர் தாழ்த்தப்பட்டோரைக் கண்டுகொள்ளாமல் தங்கள் ஆதிக்கத்தை நிலைநாட்ட நீதிக்கட்சியைப் பயன்படுத்தியதால் பெரியார் சுயமரியாதை இயக்கத்தைத் தோற்றுவித்தார்.

### 3. அரிசன இயக்கம்

காந்தியடிகள் சீர்திருத்தவாதியாக இருந்தாலும் இந்து சமயத்திலிருந்து முழுமையாக வெளியேறவில்லை. அம்பேத்கர் சாதிப்படிநிலைகளையும் வருணங்களையும் நிலைப்படுத்துகிற நிறுவனமாக இந்து சமயத்தைக் கருதியதால் காந்தியடிகளுக்குக் கொள்கை அடிப்படையில் எதிரியானார். காந்தியடிகள் தீண்டாமையை ஒழிப்பதன் வாயிலாகச் சாதியை ஒழிக்க விழைந்தார். ஆனால் அம்பேத்கர் சாதியை ஒழிப்பதன் வாயிலாகத் தீண்டாமையை ஒழிக்க நினைத்தார். காந்தியடிகள் தேசவிடுதலையில் குறிக்கோளாக இருந்தார். அம்பேத்கர் தலித் சமுதாய விடுதலையில் குறிக்கோளாக இருந்தார். இருவரும் ஒரே இலக்கை அடைய தனித்தனி கொள்கைகளைப் பின்பற்றினர். "காந்தியடிகள் தன்னை ஒரு சீர்திருத்தவாதியாகவும் சுதந்திரவாதியாகவும் ஒரு புறம் காட்டிக்கொண்டாலும் மறுபுறம் இந்துத்துவப் பழமைவாதியாகவே விளங்கினார்" (அ. சஜன், தலித்தியம் இயக்கமும் இலக்கியமும், 2004, ப.36). எனினும், காந்தியடிகளின் அரிசன இயக்கம் மேற்கூறிய இயக்கங்களைவிட செல்வாக்குடன் இயங்கியது.

### 4. சுயமரியாதை இயக்கம்

சுயமரியாதை இயக்கத்தைப் பெரியார் ஆரம்பித்தார். இவர் கடவுள் மறுப்புக் கொள்கை, பார்ப்பன எதிர்ப்பு, மூடப்பழக்கவழக்கங்கள் எதிர்ப்பு இவைகளை முன்வைத்துத் தனது எழுத்துகளையும் மேடைப்பேச்சுகளையும் அமைத்துக் கொண்டார். அதோடு சாதி ஒழிப்புப் போராட்டங்களில் நேரடியாக ஈடுபட்டார்.

### 5. தலித் பாந்தர் இயக்கம்

1960 இல் அமெரிக்காவில் நீக்ரோக்கள் தங்களைப் 'பிளாக் பாந்தர்' என்று அழைத்துக் கொண்டு வெள்ளையர் ஆட்சிக்கு எதிராகப் போராடினர். இதனைப் பின்பற்றி மாராட்டிய மாநிலத்தைச் சேர்ந்த தலித் போராளிகள் 'தலித் பாந்தர்' என்ற இயக்கத்தை 1972 இல் பம்பாயில் தோற்றுவித்தனர். இந்த இயக்கத்தினரின் போராட்டம் அனைத்து

மக்களையும் கவர்ந்தது. "தியோதாசல், அர்ஜீன் டாங்ளே, பாபுராவ் பாகுல், ராஜாதாலே, தயாபவார் போன்றோர் இந்த இயக்கத்தை நடத்திச் சென்றனர்" (பூ. மூர்த்தி, சி. நிக்கோலஸ், தலித் சமூக இயல், 1995, ப. 116). மராட்டியத்தில் தலித் இலக்கிய வளர்ச்சிக்கும் இவர்கள் காரணமாயினர். தமிழகத்தில் மதுரையில் 1978 இல் இந்த இயக்கம் தோற்றம் பெற்றது.

## 4. தலித் இலக்கியம் தொடர்பான செய்திகள்

மறுமலர்ச்சிகாலத் தமிழ் இலக்கியங்களில் ஒடுக்கப்பட்ட மக்களைக் குறித்த செய்திகள் இடம்பெற்றிருந்தன. எனினும், மராட்டியத்தில் 'தலித் இலக்கியம்' என்ற ஒரு தனி இலக்கியப் பிரிவு தோற்றம் பெற்ற பின்புதான் தமிழிலும் 'தலித்' இலக்கியப் படைப்புகள் படைக்கப்பட்டன. இவ்வாறான தலித் இலக்கியங்கள் தொடர்பான செய்திகளை மாராட்டிய மொழியில் தலித் இலக்கியம் தொடர்பான செய்திகள், தமிழ் மொழியில் தலித் இலக்கியம் தொடர்பான செய்திகள் எனப் பகுத்து விளக்கலாம்.

### 1. மராட்டிய மொழியில் தலித் இலக்கியம் தொடர்பான செய்திகள்

மராட்டியத்தில் தலித் இலக்கியத் தோற்றம் குறித்து அறிஞர்களிடையே பல கருத்து வேறுபாடுகள் நிலவுகின்றன. புத்தர் காலத்தில் தோன்றியதாகவும் மகாத்மா ஃபூலே, எஸ்.எம். மாதேவி ஆகியோர் தோற்றுவித்ததாகவும், சொக்கமேளர் தோற்றுவித்ததாகவும் கூறுகின்றனர். ஆனால், மேற்கூறியவர்கள் காலத்தில் 'தலித் இலக்கியம்' என்ற சொல்லாட்சி நிலவியதற்குச் சான்றுகள் இல்லை. மராட்டியத் தலித் இலக்கியத்தின் முன்னோடிகளில் ஒருவரான அர்ஜுன் டாங்ளே மேற்கூறியவர்களைத் 'தலித் இலக்கிய முன்னோடிகள்' என்கிறார். அறிஞர் அம்பேத்கர் துவங்கிய சித்தார்த்தா கல்லூரியிலிருந்து 1950 ஆம் ஆண்டு வாக்கில் ஒடுக்கப்பட்ட இளைஞர்களின் முதல் அணி வெளிவந்தது. அப்போது கன்சிராம், தல்வாட்கர் ஆகியவர்களோடு வேறுசிலரும் இணைந்து சித்தார்த்த இலக்கியச் சங்கத்தை அமைத்திருந்தனர். இதிலிருந்துதான் பின்னாளில் மராட்டிய மாநிலத்தின் தலித் இலக்கியச் சங்கம் உருவானது (அர்ஜுன் டாங்ளே, தலித் இலக்கியம், 1992, ப.23). 1958 இல் மராட்டியத்தில் தலித் எழுத்தாளர் மாநாடு நடைபெற்றது. இதன் பின்னர் காந்திய மற்றும் மார்க்சியத் தத்துவங்களைப் பின்னணியாகக் கொண்ட இலக்கியங்கள் மராட்டியத்தில் தோன்றின. இந்த இரண்டு இலக்கியப் பிரிவுகளோடும் தலித் இலக்கியப் படைப்பாளிகளால் ஒன்றுபட இயலவில்லை. இதனால், தனியாக இலக்கியப் படைப்பை உருவாக்க அவர்கள் முயன்றனர். மேலும், அம்பேத்கரின் புரட்சிக் கருத்துகளும் இத்தகைய இலக்கியப் படைப்பிற்குத் தோற்றுவாயாகத் திகழ்ந்தன. இவற்றின் விளைவாகத்

தலித் மக்களின் ஆதங்கத்தை வெளிப்படுத்தும் 'அகார்' என்ற முதல் தலித் கவிதைத் தொகுப்பு வெளிவந்தது. இதில் மராட்டிய இலக்கியவாதிகள் பலரின் கவிதைகள் இடம்பெற்றிருந்தன. இதைத் தொடர்ந்து பல தலித் இலக்கியப் படைப்புகள் தோன்றி தலித் மக்களுக்கு விழிப்புணர்வை ஏற்படுத்தின. அதோடு மராட்டியச் சிற்றிதழான 'சத்ய கதா' என்பது தலித் இலக்கியப் படைப்புகள் வளர உறுதுணை புரிந்தது. இந்த நிலையில் மராட்டியத் தலித் இலக்கியங்கள் பல கன்னடம், குஜராத்தி, இந்தி, தெலுங்கு, தமிழ் உட்பட பல மொழிகளில் மொழிபெயர்ப்பாக வெளிவந்தன.

## 2. தமிழ் மொழியில் தலித் இலக்கியம் தொடர்பான செய்திகள்

தமிழில் இடம்பெற்றுள்ள தலித் இலக்கியங்கள் தொடர்பான செய்திகளைத் தமிழில் தலித் இலக்கியங்களின் தோற்றம், தமிழில் தலித் இலக்கியங்களின் வளர்ச்சி, தமிழில் 'தலித் சமுதாயத்தைச் சார்ந்த' தலித் இலக்கியப் படைப்பாளர்கள், தமிழில் 'தலித் அல்லாத' தலித் இலக்கிய படைப்பாளர்களும் விமரிசகர்களும், தமிழில் தலித் இலக்கிய வடிவங்கள் எனத் தருவதாக இந்தப் பகுதி அமைகிறது.

### 1. தமிழில் தலித் இலக்கியங்களின் தோற்றம்

காந்தியடிகளின் தீண்டாமை இயக்கம், சிங்காரவேலரின் நாத்திக இயக்கம் ஆகியவற்றின் காரணமாக தாழ்த்தப்பட்ட மக்களின் வாழ்வு படைப்புப் பொருளானது. இந்த நிலையில் ஒடுக்கப்படும் மக்களின் வாழ்வு குறித்த நிகழ்வைப் கு.ப. ராவின் 'பறச்செங்கான்' என்ற கதையும் ஒடுக்கப்பட்டவர்கள் உண்டு என்பதை ந.பிச்சமூர்த்தியின் 'அடகு' என்ற கதையும் எடுத்தியம்புகின்றன. மேலும், புதுமைப்பித்தனின் 'கடவுளின் பிரதிநிதி', 'புதிய நந்தன்' போன்ற கதைகளும் குறிப்பிடத்தக்கன. ஆனால், ஆரம்பகாலத்தில் தமிழ் நாவல்களை ஆதிக்கச் சாதியினர் மட்டுமே படைத்துள்ளனர். எனவே, அவர்கள் தங்கள் சமுதாயத்தினரை மேன்மைப்படுத்தும் நோக்கில் அவற்றை எழுதியுள்ளனர். அவற்றில் 1925 இல் இடைக்காடரால் எழுதப்பட்ட 'நீலகண்டன் ஒரு சாதி வேளாளன்' என்ற நாவல் குறிப்பிடத்தக்கது. மேலும் 1927 இல் 'முருகன் ஓர் உழவன்' என்ற நாவலைக் கா.சி. வேங்கடரமணி படைத்தார். இதில் ஆதிக்கச் சாதிக் கதைமாந்தர் உயர்வான குணம் உடையவராகவும், தாழ்ந்த சாதி கதை மாந்தர் தாழ்வான குணம் உடையவராகவும் சித்தரிக்கப் பட்டுள்ளனர். தொடர்ந்து அவர் 1932 இல் 'தேச பக்தன் கந்தன்' என்ற மற்றொரு நாவலையும் படைத்துள்ளார். இந்த நாவலில் ஆதிக்கச் சாதியினரைப் படித்தவர்களாகவும், சமுதாய விடுதலையில் அக்கறை யுள்ளவர்களாகவும் படைத்துள்ளதோடு தலித் சமுதாயத்தினரைக் குடிகாரர்களாகவும், திருடர்களாகவும் படைத்து அவர்கள் மீது பரிதாபப்படுகிறார். 1937 இல் எச். நெல்லையப்பர் என்பவரால் 'காந்தமணி

அல்லது தீண்டாமைக்குச் சாவுமணி' என்ற புதினம் படைக்கப்பட்டுள்ளது. 1948 இல் 'சர்க்கா' என்ற பி.எம். இராஜகோபாலனின் நாவலில் சமுதாயச் சீர்திருத்தக் கருத்துகள் இடம்பெற்றன. பின்னர் கல்கி, வல்லிக்கண்ணன் போன்றோர் சமுதாயச் சமத்துவத்தைத் தங்கள் படைப்புகளில் முன்வைத்தனர். தொடர்ந்து டி. செல்வராஜின் 'மலரும் சருகும்' போன்ற நாவல்கள் தாழ்த்தப்பட்ட மக்கள் வாழ்க்கையை வர்க்கத்தின் அடிப்படையில் அணுகின. ராஜம் கிருஷ்ணனின் 'அலைவாய்க் கரையில்' (மீனவர் வாழ்வு), 'குறிஞ்சித்தேன்' (மலைவாழ் படகர் வாழ்வு) போன்றவை பாட்டாளி மக்களின் பிரச்சனைகளை எடுத்துக் கூறின. 1978 வரை படைப்பாளர்கள் தலித் மக்களின் வாழ்க்கையைப் பொருளாதாரச் சுரண்டலாக மட்டும் பார்த்தனர். மராட்டியத்தில் தலித் இலக்கியம் தோன்றின பின்பு தமிழிலும் 'தலித்' மக்களின் வாழ்வைக் கருவாகக் கொண்ட இலக்கியப் படைப்புகள் தோன்றின.

## 2. தமிழில் தலித் இலக்கியங்களின் வளர்ச்சி

தமிழில் தலித் இலக்கியம் அதன் முழுமையான பொருளில் இருபதாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் தோன்றியது. தலித்தியப் படைப்பாளர்கள் சேரிகளில் வாழும் தலித் மக்களின் அவல வாழ்க்கையை வெளிப்படுத்துவதுடன், ஆதிக்க எதிர்ப்புக் கருத்துகளைப் பரப்பி, தலித் மக்களுக்கு விழிப்புணர்வை ஏற்படுத்தும் நோக்கில் தங்கள் படைப்புகளைப் பல்வேறு இலக்கிய வடிவங்களில் எழுதி வருகின்றனர். தற்போது தலித் இலக்கியம் தனக்கென்று ஒரு தனி அடையாளத்தைப் பெற்றுள்ளது. தலித் அல்லாத விமரிசகர்களும், வெளியீட்டாளர்களும், வாசகர்களும் தற்போது தலித் அடையாளத்தை ஏற்பதிலும் தலித் இலக்கியத்தை அறிமுகம் செய்வதிலும் தன்முனைப்புக் காட்டி வருகிறார்கள் (சரண்குமார் லிம்பாலே, மகாராட்டிர தலித் எழுத்தாளரிடம் பேட்டி, தலித் முரசு, பிப்ரவரி, 2006, ப.39). இந்த நிலையில் தமிழிலும் தலித் இலக்கியப் படைப்பாளர் குறித்து இரு வேறு கருத்துகள் நிலவி வருகின்றன. அவை 1) தலித் இலக்கியத்தைத் 'தலித் படைப்பாளர்' மட்டுமே எழுத முடியும், 2) 'தன்னைத் தலித்தாக உணரும் எவரும்' தலித் படைப்பைப் படைக்கலாம் என்பன. "தலித்துகள்தான் தலித் இலக்கியத்தைப் படைக்க வேண்டும் என்றால் குழந்தை இலக்கியத்தைக் குழந்தைகள் தான் படைக்க வேண்டும் என்றாகிவிடும். இது வேடிக்கையாக உள்ளது" (பார்க்க : ஆ. ஜீவானந்தம், தமிழில் தலித் இலக்கியம், 2002, ப.34) என்று கோடாங்கி இதழ் குறிப்பிட்டுள்ளது. இதிலிருந்து தலித் சமுதாயச் சிக்கல்களில் அக்கறை உடைய தலித் அல்லாதவர்கள் தங்களைத் தலித்தாக உணர்ந்து தலித் இலக்கியப் படைப்புகளைப் படைக்கலாம் என்று தெரிகிறது. தலித் அல்லாத படைப்பாளி சாதி, மத பற்றுகள் அற்றவராகவும், எதார்த்தத்தை எழுதுபவராகவும் இருக்க வேண்டும். என்றாலும் தலித்துகளே தலித் இலக்கியத்தைப் படைப்பது மிகவும் பொருத்தமானது.

### 3. தமிழில் 'தலித் சமுதாயத்தைச் சார்ந்த' தலித் இலக்கியப் படைப்பாளர்கள்

தமிழில் 'தலித்' இலக்கியப் படைப்பாளர்கள் தங்கள் வாழ்வில் தாங்கள் அனுபவித்த கொடுமைகளையும், தங்களைச் சார்ந்தவர்களின் வாழ்வியல் அவலங் களையும் தங்கள் படைப்புகளாக்கியுள்ளார்கள். 'தலித்' எழுத்தாளர்களில் அழகிய பெரியவன் (தகப்பன்கொடி, தீட்டு), விழி.பா. இதய வேந்தன் (வதைபடும் வாழ்வு, கனவுகள் விரியும்), இமையம் (கோவேறு கழுதைகள்), கே.ஏ. குணசேகரன் (பலி ஆடுகள், வடு), சிவகாமி (பழையன கழிதல், ஆனந்தாயி), கே. டானியல் (பஞ்சமர், இருளில் கதிர்கள்), சோ. தர்மன் (தூர்வை, சோகவனம், ஈரம்), பாமா (கருக்கு, குசும்புக்காரன்), பூமணி (பிறகு, வெக்கை), ஸ்ரீதர கணேசன் (உப்புவயல்) போன்றோர் குறிப்பிடத் தக்கவர்கள் ஆவர்.

### 4. தமிழில் 'தலித் அல்லாத' தலித் இலக்கியப் படைப்பாளர்களும் விமரிசகர்களும்

தலித் இலக்கியங்களைத் தலித் சமுதாய விடுதலையை விரும்பும் மனிதநேய வாதிகளான அஸ்வகோஷ், இராமசாமி தனுஷ்கோடி, இன்குலாப் (இன்குலாப் கவிதைகள்), கோ. கேசவன் (சமூக விடுதலையும் தாழ்த்தப்பட்டோரும், தலித் இலக்கியம்), சு. சண்முக சுந்தரம் (தலித்தியம்), சு. சமுத்திரம் (ஒருகோட்டுக்கு வெளியே), தி.க. சிவசங்கரன்., சூரியதீபன், சோலை சுந்தர பெருமாள் (செந்நெல், தப்பாட்டம், மரக்கால்), ஞானி, இரா. நடராசன், பத்மாவதி விவேகானந்தன், பழமலய், பொன்னீலன் (கரிசல், புதிய தரிசனங்கள்), அ. மார்க்ஸ் (உடைபடும் புனிதங்கள்), ச. ராஜநாயகம், ஜெயகாந்தன் போன்றோர் படைத்துத் தலித் சமுதாய விடுதலைக்கு ஆதரவு அளிக்கின்றனர்.

### 5. தமிழில் தலித் இலக்கிய வடிவங்கள்

தமிழ் மொழியில் வெளிவந்துள்ள தலித் இலக்கிய வடிவங்களைத் தலித் கவிதைகள், தலித் சிறுகதைகள், தலித் நாவல்கள், தலித் நாடகங்கள், தலித் சுயசரிதைகள், தலித் மொழிபெயர்ப்புகள், தலித் ஒலிப்பேழைகள் என வகைப்படுத்தி விளக்கலாம்.

#### 1. தலித் கவிதைகள்

தலித் கவிதைகள் தலித் மக்களின் அவல வாழ்வு, ஆதிக்க எதிர்ப்புணர்வு ஆகியனவற்றைக் குறிப்பனவாக உள்ளன. அவற்றில் அழகிய பெரியவனின் ' நீ நிகழ்ந்த போது', அன்பாதவனின் 'நெருப்பில் காய்ச்சிய பறை', ஆதவன் தீட்சண்யாவின் 'பூஜ்ஜியத்திலிருந்து துவங்கும் ஆட்டம்', ஆலாவின் 'உயிர்வேலி', விழி.பா. இதயவேந்தன்

என்பவரின் 'எவரும் அறியாத நாம்', 'கனவுகள் விரியும்', இந்திரனின் 'சாம்பல் நிறம்', ஆதி திராவிடர் கவிதைகள் , கண்மணி குணசேகரனின் 'தலைமுறைக் கோபம்', தய். கந்தசாமியின் 'கோபம் சுமக்கும் கவிதைகள்', 'தனி இருட்டு', நட. சிவகுமாரின் 'உவர்மண்', சுகிர்த ராணியின் 'இரவு மிருகம்', தமிழன்பனின் 'அந்த நந்தனை எரித்த நெருப்பின் மிச்சம்', தலையாரியின் 'எங்கே எமது முகம்?', மதிவண்ணனின் 'நெரிந்து', மோகனப்ரியனின் 'மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்', யாழன் ஆதியின் 'செவிப்பறை', ராச முருக பாண்டியனின் 'சில தலித் கவிதைகள்', என்.டி. ராஜ்குமார் என்பவரின் 'ஒடக்கு', 'காட்டாளன்', 'ரத்த சந்தன பாவை', 'தெறி', கோ. வேதசுவாமிநாதன் என்பவரின் 'ஆடும் பெரிய ஆடும்', ஜீவாவின் 'ஊமச்சி' போன்ற தொகுப்புகள் குறிப்பிடத்தக்கவை. இவை தவிர மேலும் பல உதிரிக் கவிதைகளும் வெளிவந்துள்ளன. இவற்றோடு இன்றைய இயந்திர உலகில் ஹைகூ என்ற குறும்பா வடிவில் தலித் கருத்துகள் வெளிவந்துள்ளன. அவற்றில் புதுவை ஆலாவின் 'உயிர் வேலி' குறிப்பிடத்தக்க தலித் ஹைகூத் தொகுதி ஆகும். மேலும் மக்கள் களம், இருளர் செய்தி போன்ற இதழ்களிலும் தலித் ஹைகூக் கவிதைகள் வெளிவருகின்றன.

**2. தலித் சிறுகதைகள்**

தலித் மக்களின் வாழ்க்கைப் பிரச்சனைகளை விளக்குவனவாக சிறுகதைகள் பல வெளிவந்துள்ளன. அவற்றில் விழி.பா. இதயவேந்தனின் 'சகடை' என்ற சிறுகதைத் தொகுப்பில் சேரிமக்கள், மரமேறிகள், தெரு கூட்டுபவர்கள், பன்றி மேய்ப்பவர்கள், பிணத்துக்குச் சங்கு ஊதுபவர்கள், வண்டி மணல் அடிப்பவர்கள், செப்டிக் டாங்க் சுத்தம் செய்பவர்கள், குப்பைக் காகிதம் பொறுக்குபவர்கள், மாட்டுக்கு இலாடம் அடிப்பவர்கள், சலவைத் தொழில் செய்பவர்கள் போன்றோரின் அவலங்கள் சித்தரிக்கப்பட்டுள்ளன. மேலும் இவரது 'வதைபடும் வாழ்வு', தாய்மண், 'நந்தனர் தெரு' போன்ற சிறுகதைத் தொகுப்புகள் குறிப்பிடத்தக்கன. அபிமானியின் 'நோக்காடு', 'பனைமுனி', அழகிய பெரியவனின் 'தீட்டு', அருகனின் 'சாதிபாத்தியம்', இரத்தின புகழேந்தியின் 'மண் கவுச்சி', உஞ்சைராசனின் 'எகிறு', கண்மணி குணசேகரனின் 'உயிர்த்தண்ணீர்', சோ. தர்மன் என்பவரின் 'ஈரம்', 'சோகவனம்', பாப்லோ அறிவுக்குயிலின் 'கிளுக்கி', பாமாவின் 'குசும்புக்காரன்' போன்ற சிறுகதைத் தொகுப்புகளும், அன்பாதவனின் 'பூராசாமி', இந்திரனின் 'ஆடுகள்', இமயத்தின் 'உறவு', ' பிரபஞ்சபாதை', பூவும் இரவும்', தய். கந்தசாமி என்பவரின் 'சதை', 'டன்டனக்கு ... டனக்கு ... டனக்கு', கந்தர்வனின் துண்டு, சிவகாமியின் 'கடைசிக் காடு', 'அவள் மேகமாகிப் போனாள்', 'அம்முக்குட்டி என்றொரு பெண்', க.சீ. சிவகுமார் என்பவரின் 'பால் நெய் தண்ணீர்', சோலை சுந்தர பெருமாளின் 'பிழைப்பு', 'தலைமுறைகள்',

பாமாவின் 'எளக்காரம்', 'அண்ணாச்சி', பிரதிபா ஜெயச்சந்திரனின் 'சகோடி', பூமணியின் 'கலங்கல்', ரவிக்குமாரின் எட்டாந்துக்கம், 'உண்மை அறிதல்' போன்றவையும் குறிப்பிடத்தக்கவை.

### 3. தலித் நாவல்கள்

இலங்கையிலுள்ள இடதுசாரி இயக்கங்களில் பங்கு பெற்றிருந்த கே. டானியல் என்பவரை இந்தக் காலத் தலித் இலக்கியங்களின் முன்னோடி என அழைக்கலாம். இவரது 'பஞ்சமர்' என்ற நாவல் அடிநிலை மக்களின் வாழ்வையும், 'கானல்' என்ற நாவல் கிறிஸ்தவச் சமயம் தலித் மக்களுக்குக் கானல் நீராக மாறுவதையும், 'தண்ணீர்' என்ற நாவல் யாழ்ப்பாணம் வடமராட்சிப் பகுதியில் தலித் மக்கள் சந்தித்த குடிநீர்ப் பிரச்சனையையும், 'அடிமைகள்' என்ற நாவல் தலித் மக்கள் அனுபவிக்கும் பலவித தீண்டாமைக் கொடுமைகளையும் கூறுகிறது. மேலும் இவரது 'மையக்குறி', 'இருளில் கதிர்கள்' போன்ற குறுநாவல்களும் குறிப்பிடத்தக்கவை. பூமணியின் 'பிறகு', ' வெக்கை' ஆகிய இரு நாவல்களும் சக்கிலியர்களின் அவல வாழ்க்கையைப் படம் பிடித்துக் காட்டுகின்றன. சிவகாமியின் 'பழையன கழிதல்' என்ற நாவல் தலித் இயக்கத் தலைவர்களின் கீழ்த்தர மனநிலைகளையும், தலித் மக்களின் பிரச்சனைகளையும் கூறுகிறது. 'ஆனந்தாயி' என்ற நாவல் தலித் பெண்கள் தங்கள் வாழ்வில் தினமும் சந்திக்கும் அவலங்களைக் கூறுகிறது. அறிவழகனின் 'கழிசடை' என்ற நாவல் தோட்டிகளின் பரிதாப வாழ்க்கையை வெளிப்படுத்தி மனிதநேயமுடையவர்களின் மனவுணர்வுகளை எழுப்புகிறது. தலித் மக்கள் படித்து முன்னேறினால் தீண்டாமைக் கொடுமைகளிலிருந்து விடுபடலாம் என்ற கருத்து பாமாவின் 'கருக்கு' நாவலில் அமைந்துள்ளது. இவரது 'சங்கதி' என்ற நாவல் தாழ்த்தப்பட்ட பெண்கள் சந்திக்கும் துன்பங்களை வெளிப்படுத்துகிறது. இமையத்தின் 'கோவேறு கழுதைகள்' என்ற நாவல் பறையர், பறைவண்ணார் வாழ்நிலைகளைக் கூறி கீழ்ச்சாதி மக்களுள் காணப்படும் சாதிப்படிநிலையை விளக்குகிறது. சோ. தர்மனின் 'தூர்வை' என்ற நாவல் தலித்துகளின் வாழ்க்கைநிலையைக் கூறுகிறது. விமல் குழந்தைவேலின் 'வெள்ளாவி' என்ற நாவல் வண்ணார் சமுதாயப் பெண்களின் வாழ்க்கைச் சிக்கல்களை விளக்குகிறது. அழகிய பெரியவனின் 'தகப்பன் கொடி' என்ற நாவல் தலித் மக்களின் அடிப்படைத் தேவைகளில் ஒன்றான நிலப்பிரச்சனையை அடிப்படையாகக் கொண்டது. மேலும், மாற்குவின் 'யாத்திரை', கு. சின்னப்ப பாரதியின் 'சர்க்கரை', காளீஸ்வரனின் 'குருட்டுக் கிணறு' ஆகிய நாவல்களிலும், இராஜம் கிருட்டினன், சு. சமுத்திரம், பிரபஞ்சன், சோலை சுந்தர பெருமாள் போன்றோர் நாவல்களிலும் தலித் மக்களின் பிரச்சனைகள் கூறப்பட்டுள்ளன.

## 4. தலித் நாடகங்கள்

தமிழின் முதல் தலித் நாடகம் என்ற பெருமை உடையது கே.ஏ. குணசேகரனின் 'பலி ஆடுகள்' ஆகும். உண்மை நிகழ்வின் அடிப்படையில் எழுதப்பட்ட இந்த நாடகத்தின் உள்ளடக்கமாக 'ஆதிக்கச் சாதியினர் தங்களுக்கு அதிகாரம் வேண்டும் என்பதற்காக தெய்வத்திற்குச் சிங்கங்களை அல்ல ஆடுகளைப் பலியிடுகிறார்கள்' என்ற கருத்து அமைந்துள்ளது. மேலும் இவரது 'தொடு', 'அறிகுறி' போன்ற நாடகங்களும் குறிப்பிடத்தக்கவையாகும். சாதி ஒடுக்குதலில் தண்ணீரின் பங்கைக் கருப்பொருளாகக் கொண்டு அ. ராமசாமி 'தண்ணீர்' என்ற நாடகத்தைப் படைத்துள்ளார். ஆதிக்கச் சாதியினரால் தாங்கள் ஒடுக்கப்படுவதைத் தடுக்க இயலாதவர்களாகத் தலித் மக்கள் உள்ளனர் என்ற கருத்து ம. ஜீவாவின் 'தீ' என்ற நாடகத்தில் மையமாகியுள்ளது. இவரது 'சேரியின் தாலாட்டு' நாடகமும் குறிப்பிடத்தகுந்தது. அண்ணாமலை நகர் பத்மினிக்கு இழைக்கப்பட்ட கொடுமைகளைக் கூறுவதாக ரவிக்குமாரின் 'வார்த்தை மிருகம்' என்ற நாடகம் உள்ளது. பிரதிபா ஜெயச்சந்திரனின் 'கோப்பு' , அறிவொளி இயக்கத்தினரால் வெளியிடப்பட்ட 'ஏகலைவனின் பெருவிரல்' போன்ற தலித் நாடகங்களும் குறிப்பிடத் தகுந்தன.

## 5. தலித் சுயசரிதைகள்

ஒடுக்கப்பட்ட சாதிகளைச் சார்ந்தவர்களின் தனிப்பட்ட வாழ்க்கைகளைப் பற்றிய எளிமையான படைப்புகளாக தலித் சுயசரிதைகள் விளங்குகின்றன. முதல் தலித் சுயசரிதை என்று பெயர் பெற்றது திவான் பகதூர் இரட்டைமலை சீனிவாசனின் 'ஜீவிய சரித்தர சுருக்கம்' ஆகும். இது 1939 இல் வெளிவந்தது. அடுத்ததாக சுயசரிதை என்ற வடிவத்தில் கே.ஏ. குணசேகரனின் 'வடு' குறிப்பிடத்தக்கது. இந்த நூலின் என்னுரையில் ஆசிரியர் "கிராமங்களில் வாழும் சாதி இந்துக்கள் சொல்லி வைத்தாற்போல் கடைபிடித்து வரும் தீண்டாமையின் கொடுமைகளைத் தினுசு தினுசாக அனுபவித்த என் இளமைக்கால வாழ்க்கையை அசை போட்டேன். 'வடு' உருவானது" (கே.ஏ.குணசேகரன், வடு, 2005, ப.9) என்கிறார். தலித் சுயசரிதைகள் சமூகக் கொடுமைகளை எந்த விதமான மிகைப்படுத்தலும் இல்லாமல் அப்படியே வெளிப்படுத்துகின்றன.

## 6. தலித் மொழிபெயர்ப்புகள்

ஒரு மொழியில் அமைந்த கருத்துகளைப் பொருள் மாறுபடாமலும் மூலத்தின் சுவையும் தரமும் குறையாமலும் வேறொரு மொழிக்கு மாற்றி அமைப்பது மொழிபெயர்ப்பு ஆகும். பொதுவாக, தலித் இலக்கிய மொழிபெயர்ப்புகளின் நோக்கம் தலித் விடுதலையைத்

தூண்டுவதாக அமைகிறது. தலித் இலக்கிய மொழிபெயர்ப்புகளில் இந்திரனின் 'அறைக்குள் வந்த ஆப்பிரிக்க வானம்' , 'பிணத்தை எரித்த வெளிச்சம்', 'பசித்த தலைமுறை', பாவண்ணனின் 'புதைந்த காற்று', தி.சு. சதாசிவத்தின் 'எங்க சனங்களின் கதை' போன்ற கவிதைகளும் 'ஒரு தலித்திடமிருந்து ...' என்ற சுயசரிதையும் குறிப்பிடத் தகுந்தவை. மேலும் வசந்த்மூன் என்பவர் தன் சுயசரிதை மூலமாக மகர் சமூகத்தின் போராட்ட வரலாற்றையும் கலாச்சார மாற்றத்தையும் விரிவாக விவரித்துள்ளார் (வெ.கோவிந்த சாமி (மொழிபெயர்ப்பாளர் குறிப்பு), ஒரு தலித்திடமிருந்து, 2002, ப.5). இது மராத்தியிலிருந்து ஆங்கிலம் வழியாகத் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. இதைத் தவிர கவர்ன்மென்ட் பிராமணன், ஊரும் சேரியும் போன்றவையும் தலித் சுயசரிதைகளின் மொழிபெயர்ப்புகள் ஆகும்.

**7. தலித் இசை ஒலிப்பேழைகள்**

தலித் இசை வல்லுநர்களைக் கொண்டு தலித் முன்னேற்ற இயக்கங்களால் தலித் இசை ஒலிப்பேழைகள் வெளியிடப்படுகின்றன. இவை தலித் மக்களுக்கும், தலித் பெண்களுக்கும் ஆதிக்கச் சாதியினரால் இழைக்கப்படும் கொடுமைகள், தலித் மக்களின் எதிர்ப்புணர்வு, போராட்ட உணர்வு, விழிப்புணர்வு, தலித் மக்களின் ஒற்றுமை போன்றவற்றை வலியுறுத்துவனவாகவும், ஆதிக்கச் சாதியினரின் போலித்தனங்களைக் கேலி செய்வனவாகவும் அமைகின்றன. மக்கள் கலை இலக்கியக் கழகம் வெளியிட்டுள்ள 'அசுரகானம்', 'ஆண்ட பரம்பரையா அடிமைப்பரம்பரையா', தன்னானே இசைக்குழு வெளியிட்டுள்ள 'மனுசங்கடா', கனல் கலை இயக்கம் வெளியிட்டுள்ள 'நெருப்புக்கனல்', விடுதலைச் சிறுத்தைகள் வெளியிட்டுள்ள 'அத்துமீறுவோம்' ஆகிய ஒலிப்பேழைகள் தலித் இசை ஒலிப் பேழைகளாகும் (ஆ. ஜீவானந்தம், தமிழில் தலித் இலக்கியம், 2002, ப.256). இவை தவிர மனுசி (தலித் பெண் விடுதலைப் பாடல்கள்), தலித் முழக்கம், விடுதலை வேர்கள், வீரத்தழும்பு, விடுதலைச் சிறகுகள் (தலித் பெண் தலைவர்களைப் பற்றிய பாடல்கள்) போன்றவையும் குறிப்பிடத்தக்கவை. பறை, பம்பை, தவில் போன்றவை தலித் இசைக் கருவிகள் ஆகும். தன்னானே என்பது கே.ஏ. குணசேகரனால் அமைக்கப்பட்ட தனி தலித் இசைக்குழு ஆகும்.

**5. தலித் சார்பான நிறுவனங்கள்**

தலித் சமுதாய முன்னேற்றத்தை அடிப்படையாகக் கொண்ட நிறுவனங்களில் குறிப்பிடத்தக்கவை தென்னிந்திய பௌத்த சாக்கிய சங்கம், தலித் ஆதார மையம் ஆகியன ஆகும்.

### 1. தென்னிந்திய பௌத்த சாக்கிய சங்கம்

அயோத்தி தாசப் பண்டிதர் என்பவர் சென்னையில் 1902 ஆம் ஆண்டு தென்னிந்திய பௌத்த சாக்கிய சங்கத்தைத் தோற்றுவித்தார். அதோடு பௌத்த மதமான தங்களது பூர்விக மதத்திற்குத் தீண்டப்படாதவர்கள் திரும்ப வேண்டும் என்றும் வேண்டுகோள் விடுத்தார். இதற்குத் துணையாக 1917 இல் 'தமிழன்' என்ற இதழைத் தோற்றுவித்துச் செயல்படுத்தினார்.

### 2. தலித் ஆதார மையம்

1989 ஆம் ஆண்டு தலித் ஆதார மையம் பா. மோகன் லார்பீர் அவர்களால் மதுரையில் தொடங்கப்பட்டது. தமிழ்நாடு இறையியல் கல்லூரியின் தலித் விடுதலைக்கான செயல்பாட்டு அனுபவங்களின் விளைவாகத் தோன்றிய இந்த மையம் தலித் மக்களின் விடுதலைக்கான செயல்திட்டங்களை உருவாக்கிச் செயல்பட்டு வருகிறது. மேலும் இது தலித் மக்களின் சமூக ஒருங்கிணைப்பு, பொருளாதார விடுதலை, அரசியல் விடுதலை ஆகியவற்றை நோக்கங்களாகக் கொண்டுள்ளது. தலித் மக்களின் விடுதலைக்கான விழிப்புணர்வுகளைத் தூண்டும் நூல்கள், சிற்றேடுகள், துண்டறிக்கைகள், தள்ளுபடங்கள், புகைப்படங்கள், ஒலி-ஒளி பேழைகள், சுவரொட்டிகள், குறுந்தகடுகள், தலித் ஓவியங்கள், இரு திங்களிதழ் (தமுக்கு) ஆகியவற்றை இந்த நிறுவனம் வெளியிட்டு வருகிறது. மேலும் தலித் கலை விழாக்களை ஆண்டுதோறும் நடத்தி 'தலித் விடுதலைக்குக் கலைகளையும் கருவிகளாக்குவோம் ' என்று முழக்கமிடுகிறது.

### 6. தலித் இயக்கங்கள்

தலித் மக்களுக்கு எதிராக நடைபெற்றுவரும் பொருளாதாரச் சுரண்டலுக்கு எதிரான இயக்கங்களாகத் தலித் இயக்கங்கள் உள்ளன. இந்த இயக்கங்கள் தலித்துகளின் மதிப்பு, மரியாதையை உயர்த்தி அவர்கள் சமூக, பொருளாதார, அரசியல் நிலைகளில் மேம்பாடு அடைய உதவுகின்றன. அந்த வகையில் சாதி ஒழிப்புப் போராட்ட இயக்கங்களில் புத்தரின் சமத்துவ இயக்கம் குறிப்பிடத்தக்கது. புத்தர் 'எல்லாரும் சமம், எல்லாரும் நிர்வாண நிலையை அடைய முடியும்' என்பது போன்ற கருத்துகளைப் பரப்பினதால் தலித்துகள் புத்த மதத்தை ஏற்றனர். சித்தர்கள் சமூக மற்றும் சமய ஒடுக்குமுறைகளையும், சாதிப் படிமுறை அமைப்புகளையும் எதிர்த்தனர். இதனால் தலித்துகள் சித்தர்களின் கலக இயக்கத்தில் பங்கு பெற்றனர். தமிழகத்தில் இரட்டை மலை சீனிவாசர், அயோத்தி தாசப் பண்டிதர் போன்றோர் 1890 இல் பறையர் மகாஜன சபா, ஆதி திராவிட மகாஜன சபை போன்ற இயக்கங்களில் இடம்பெற்றனர். இவர்கள் காலத்தில் தோன்றிய அம்பேத்கர் சாதிப்பிரச்சனைக்குத் தீர்வு காண்பதோடு நின்றுவிடாமல் பெண்கள், விவசாயிகள், தொழிலாளர்கள்

போன்றோரின் ஒடுக்குமுறைக்கு எதிராகவும் குரல் கொடுத்தார். இவ்வாறு சமுதாய விடுதலைக்காகவும், அரசியல் விடுதலைக்காகவும் போராடிய அம்பேத்கர் சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் இவற்றை வலியுறுத்தியதோடு மூக்நாயக், பகிஷ்கரித் பாரத் இதழ்களின் வாயிலாகப் புரட்சிக் கருத்துகளைப் பரப்பினார். 1924 இல் சைமன் கமிஷனைச் சந்தித்துத் தாழ்த்தப்பட்ட மக்களுக்குக் கல்வி, வேலைவாய்ப்பு, ஓட்டுரிமை ஆகியவற்றில் இடஒதுக்கீடு கோரினார். 'மனுதர்மத்தை' இந்திரபுவனத்தில் 1927 இல் தீயிட்டுக் கொளுத்தினார். கல்வி அறிவில்லாமல் தாழ்த்தப்பட்டவர்கள் முன்னேற இயலாது எனக்கருதி 1928 இல் 'தாழ்த்தப்பட்டோர் கல்விக் கழகத்தை' நிறுவினார். சௌதார் குளத்து நீரைப் பருகும் போராட்டம், கோயில் நுழைவுப் போராட்டம் போன்றவற்றைத் தலைமையேற்று நடத்தினார். 1930 இல் சுதந்திரத் தொழிலாளர் கட்சியை நிறுவினார். மும்பைச் சட்டக் கல்லூரியில் முதல்வராகப் பணியாற்றிய அம்பேத்கர் 1930 இல் முதல் வட்டமேசை மாநாட்டில் கலந்து கொண்டு தீண்டாமைக்குத் தீர்வு காண வேண்டுகோள் விடுத்தார். 1932 இல் இரண்டாவது வட்டமேசை மாநாட்டில் தாழ்த்தப்பட்டவர்களுக்கு இடஒதுக்கீடு கூடாது என்று கூறிய காந்தியடிகளை விமர்சித்தார். பின்னர் மும்பைச் சட்டமன்ற உறுப்பினராகச் செயல்பட்டார். 1942 இல் இந்தியத் தேசியக்கொடி உருவாகத் தன் பங்களிப்பைச் செய்தார். 1944 இல் மக்கள் கல்விக் கழகத்தை மும்பையில் உருவாக்கினார். 1946 இல் சித்தார்த்தா கலை மற்றும் அறிவியல் கல்லூரியைத் தோற்றுவித்தார். இந்தியத் தேசியச் சட்டங்களை உருவாக்கிய ஒன்பது நபர் கொண்ட குழுவிற்குத் தலைவராய் விளங்கினார். 1956 இல் தனது ஆதரவாளர்களுடன் புத்தமதத்தைத் தழுவினார். அதோடு தமது மதமாற்றம் என்பது ஆன்மீக உயர்வை நோக்கமாகக் கொண்டதல்ல, மாறாக முற்றிலும் அது ஓர் அரசியல் செயல்பாடு என்றும் விளக்கினார் (அ. மார்க்ஸ், உலகமயம் எதிர்ப்பு அரசியல் தலித்துகள், 2002, ப.99). சமுதாயப் புரட்சியாளராகத் திகழ்ந்த அம்பேத்கர் 06-12-1956 இல் மரணமடைந்தார். 1980 இல் அவரது சமுதாயச் செயல்பாடுகளைப் பாராட்டி அவருக்குப் பாரத ரத்னா விருது வழங்கப்பட்டது. தீண்டாத மக்கள் விடுதலை பெற இறுதிவரை போராடின அம்பேத்கரின் புரட்சிக் கருத்துகள் இந்தியா முழுவதிலும் குறிப்பாக தமிழகத்திலும் பரவி தலித் ஆர்வலர்களின் சிந்தனைகளை வலுப்படுத்தின. அம்பேத்கர் நூற்றாண்டு விழாவிற்குப் பிறகு மதமாற்ற இயக்கம், கிளர்ச்சி செய்யும் இயக்கம், தலித் கிறித்தவ விடுதலை இயக்கம், விளிம்புகளை மையப்படுத்தும் இயக்கம், ஒருங்கிணைக்கும் இயக்கம் போன்றவை தோன்றின. மேலும் 1983 ஆம் ஆண்டு முதல் விடுதலைச் சிறுத்தைகள் இயக்கம் பறையர் சமுதாயத்தவரை முன்னிலைப்படுத்தி தொல். திருமாவளவன் தலைமையில் செயல்பட்டு வருகிறது. 1994 முதல்

ஈரோட்டில் ஆதித்தமிழர் பேரவை இரா. அதியமான் தலைமையில் செயல்பட்டு வருகிறது. தேவேந்திர குல சமுதாயத்தவரை முன்னிலைப் படுத்தி தியாகி இம்மானுவேல் சேகரன் பெயரில் 1990 இல் பூ. சந்திரபோசு என்பவர் தியாகி இம்மானுவேல் பேரவையைத் தோற்றுவித்தார். இது "சாதி ஒழிப்பு, தமிழ்த் தேசிய விடுதலை இவைகளை முதன்மைக் கருத்தாகக் கொண்டு செயல்படத் தொடங்கினது" (பூ. சந்திரபோசு என்பவரின் பேட்டி, விடுதலையின் நேர்காணல், 2006, ப.67). தற்போது இந்தப் பேரவை இருநூற்று ஐம்பதுக்கும் மேற்பட்ட கிராமங்களில் செயல்பட்டு வருகிறது. அரங்க. குணசேகரன் என்பவர் தமிழ்த் தேசிய மனித உரிமைக் கழகத்தை 1994 இல் தமிழக மனித உரிமைக் கழகமாக மாற்றி அதன் பொதுச் செயலாளராகச் செயல்பட்டு வருகிறார். டேனியல் ஞானசேகரன் என்ற தலித் ஞானசேகரன் 1989 இல் தலித் விடுதலை இயக்கத்தை ஆரம்பித்து தேவேந்திரர்கள், அருந்ததியர்கள் மத்தியில் செயல்பட்டு வருகிறார். ஜான் பாண்டியன் என்பவர் தமிழக மக்கள் முன்னேற்றக் கழகத்தை உருவாக்கி செயல்படுத்துகிறார். இவை தவிர கிருஷ்ணசாமி தலைமையில் தேவேந்திர குலத்தவரை முன்னிலைப்படுத்தி புதிய தமிழகம், எஸ்.டி. கல்யாண சுந்தரம் தலைமையில் தமிழ்நாடு அருந்ததியர் ஜனநாயகமுன்னணி, பூவை. மூர்த்தி தலைமையில் புரட்சிப் பாரதம், முகம்மது பிலால் தலைமையில் ஷெட்யூல்டு இனப் பேரவை போன்றவையும் அம்பேத்கர் மக்கள் இயக்கம், தமிழக மனித உரிமைக்கட்சி போன்றவையும் தலித்திய இயக்கங் களாகச் செயல்பட்டுச் சாதி ஒழிப்பு, நிலமீட்பு, மூடநம்பிக்கை எதிர்ப்பு ஆகிய பல காரணங்களுக்காகப் போராடுகின்றன. இவற்றோடு தலித் இயக்கங்கள் ஒரு குறிப்பிட்ட கொள்கையை உள்வாங்கிக் கொண்ட அங்கத்தினர் களுடன் அரசைச் சார்ந்து அல்லது அரசிற்கு எதிராகச் செயல்படுகின்றன. தங்கள் நோக்கத்தை அடைய குறிப்பிட்ட வழிமுறைகளைக் கொண்ட இந்த இயக்கங்கள் தங்களது எதிரியை அடையாளப்படுத்துகின்றன. மேலும் இதழ்கள் மற்றும் நூல்களை வெளியிட்டுத் தலித் படைப்புகளைப் பிரசித்தப்படுத்தி தலித் மக்களை விழிப்படையச்செய்கின்றன.

### 7. தலித் இதழ்கள்

தலித் படைப்பாளர்களின் படைப்புகளை வெளியிட ஏற்றவகையில் இதழ்கள் பல தொடங்கப்பட்டன. அத்தகைய இதழ்களில் அயோத்தி தாசப் பண்டிதரால் வெளியிடப்பட்ட 'தமிழன்' இதழ் அயோத்தி தாசரின் விழிப்புணர்வுச் சிந்தனைகளைத் தாங்கி வெளிவந்தது. இரட்டைமலை சீனிவாசனால் 1871 இல் 'பஞ்சமன்' என்ற இதழும் 1897 இல் 'பறையன்' என்ற இதழும் தொடங்கப்பட்டன. தலித் இயக்கம் தொடர்பான கருத்துகளை நிகழ், தாராமதி, மேலும், சுபமங்களா, ஆய்வு, சிலேட் போன்ற இதழ்கள் வெளியிட்டுள்ளன. தலித் சிறப்பிதழ் என்று அறிவித்துக்

கொண்டு நிறப்பிரிகை இதழ் வெளிவந்தது. பின்னர் கோடாங்கி தலித் இலக்கியக் காலாண்டிதழாக 1995 முதல் வெளிவந்தது. ஆறு இதழ்கள் வந்த நிலையில் நின்று விட்ட அந்த இதழ் 2001 முதல் 'புதிய கோடாங்கி' என்ற பெயரில் மாத இதழாகத் தொடர்ந்து சென்னையிலிருந்து வெளிவருகிறது. 'சமூகநீதித் திங்களிதழ்' என்ற முழக்கத்துடன் தலித் முரசு சென்னையிலிருந்து வெளிவருகிறது. 'தாய்மண்' என்ற இதழ் சமூகத்தைப் புரட்டிப் போடும் மாத இதழ். இது 'உன்னைப் படி! தாய் மண்ணைப் பிடி!' என்ற முழக்கத்துடன் சென்னையிலிருந்து வெளி வருகிறது. 'மக்கள் களம்' என்ற இதழ் 'மாண்பைக் காக்கும் மாத இதழ்' என்ற தொனியுடன் சென்னையிலிருந்து வெளிவருகிறது. 'மள்ளர் மலர்' என்னும் இதழ் தேவேந்திர குல வேளாளர் சங்கத்திற்காகக் கோவையிலிருந்து வெளியிடப்படுகிறது. சமூக நீதிக்கான புதுவித கருத்து வீச்சை நிகழ்த்திக் கொண்டிருக்கும் தலித் இயக்க இதழ்கள் வரிசையில் சென்னையிலிருந்து வெளிவரும் எழுச்சி மாத இதழும் ஒன்று. இவை தவிர தமுக்கு (இரு மாத இதழ் – மதுரை), தலித் வாய்ஸ் (பெங்களூர்), தமிழகப் பறையர் குரல் (சென்னை), நந்தன் (சென்னை), மருதமலர், உழைக்கும் மக்கள் தமிழகம், தலித் முழக்கம், மனஓசை, மானுடவிடியல் போன்றவை தலித் விடுதலைக்கான படைப்புகளை வெளியிட்டுத் தலித் விழிப்புணர்விற்கு உதவுகின்றன. இவற்றோடு 'காலச்சுவடு' என்ற மாதஇதழும் தலித் தொடர்பான கட்டுரைகளையும் விவாதங்களையும் வெளியிட்டு வருகிறது.

### 8. தலித் அழகுக் கூறுகள்

சமுதாயத்தில் எவையெல்லாம் அழகாகப் பார்க்கப்படு கின்றனவோ அவற்றை யெல்லாம் அழகற்றவையாக தலித் அழகியல் பார்க்கிறது. ஒடுக்கப்படுதலை மட்டுமே தங்கள் வாழ்க்கையில் தினமும் அனுபவிக்கும் தலித் மக்களின் வாழ்க்கையில் அழகுக் கூறுகள் இருந்தாலும் அவை அனைத்தும் சமுதாய மதிப்பீடாகக் கொள்ளப் படாமல் இழிவானவையாகக் கருதப்படுகின்றன. உணவு, இருப்பிடம், பழக்கவழக்கம், நாகரிகம் எல்லாம் ஏழ்மையில் எளிமை நிறைந்ததாய் இருப்பதால் அவை ஆதிக்கச் சாதியினரால் அழகானவையாகப் பார்க்கப்படாமல் ஏளனமாய்ப் பார்க்கப்படுகின்றன (விழி. பா. இதயவேந்தன், தலித் அழகியல், 2002, ப.6). இவற்றோடு வயிற்றிற்கு உணவு இல்லாமல் பட்டினியால் சாவது தலித் மக்களின் விதியாக அமைகிறது. முழு உழைப்பை வெளிப்படுத்தினாலும் பொருளாதார நெருக்கடி அவர்களை வதைக்கிறது. மேலும் கல்வியும் மறுக்கப்படுகிறது. செத்தமாடு உண்ணுதல், தனி சுடுகாடு, தனி குளம் மற்றும் துறை, செருப்புப் போட தடை, நகை அணிந்து கொள்ள மறுப்பு, சைக்கிளில் செல்லத் தடை, நேரில் வரத்தடை, குடிநீர் மொள்ளத் தடை, தனி தேநீர்க் குவளை, மலம் தின்ன வைக்கும் கொடுமைகள், கரும்புள்ளி

செம்புள்ளி குத்தி கழுதைமேல் ஏற்றுதல், குடிசைகளைத் தீக்கிரை யாக்குதல், ஆண்டைக்கு அடிமைப் பணி புரிதல், நிலமிழப்பு இப்படி பலவாறாகத் தலித் வாழ்க்கையின் அழகு சிதைந்து போயிருக்கிறது (விழி.பா. இதயவேந்தன், தலித் அழகியல், 2002, பக் 6, 7). ஆதிக்கச் சாதிப் பண்பாட்டின் அனைத்துக் கூறுகளும் மேலானவைகளாகப் பாவிக்கப்படுகின்றன. இந்த நிலையில் தலித் மக்கள் போலித் தன்மைக்குள் சிக்காமல் தங்களது மண், மொழி, கலை, நாகரீகம், பண்பாடு போன்றவைகளை வெளிப்படுத்த முன்வரவேண்டும். அதோடு தங்கள் சமுதாய மற்றும் பொருளாதார முன்னேற்றத்திற்காகப் புதிய அழகுக் கூறுகளை வெளிப்படுத்திப் பெருமிதம் கொள்ள வேண்டும்.

## 9. தலித் மொழி

ஆதிக்கச் சாதியினரால் இழிவின் குறியீடுகளாகக் கருதப்படும் தலித் மக்கள் அதிகார வன்முறைக்கு எதிராகப் பயன்படுத்தும் கலக மொழி தான் தலித் மொழி என அழைக்கப்படுகிறது. ஆதிக்கக் கட்டுப்பாட்டில் அவல வாழ்க்கை நடத்தும் மனித இனத்தினரிடம் இந்தக் கலக மொழி விழிப்புணர்வைத் தூண்டுகிறது. மரபுகள் வாயிலாக உருவாகியுள்ள ஆதிக்கச் சாதியினரின் மொழியைத் தலித் மொழி அலட்சியம் செய்கிறது. இதனால் நடைமுறை எதார்த்தங்கள் தலித் மக்களின் மொழியிலேயே படைக்கப்படுகின்றன. இவ்வாறான "தலித் இலக்கியம் சுகமான வாசிப்புக்கு உரியதல்ல. படிப்பவர்கள் சூடாக வேண்டும்., முகம் சுளிக்க வேண்டும். சாதி மதமெல்லாம் இல்லை என்று சொல்பவர்களிடம் புதைந்திருக்கிற சாதி, மதக் கருத்தியலைத் தோலுரித்துக் காட்டி அவர்களுக்குக் குமட்டலை ஏற்படுத்த வேண்டும். மேலும் நாகரிகமும் நாசூக்கும் பார்ப்பது மிதிபட்டவன் காரியமல்ல. எனவே படிப்பவனின் இதயமும் கண்களும் சிவக்க வேண்டும்" (ராஜ் கௌதமன், தலித்திய விமர்சனக் கட்டுரைகள், 2005, பக். 26, 27) என்ற அடிப்படையில் படைப்புகள் வெளிவந்தன. 'தலித் விடுதலை' ஒன்றுதான் எதார்த்தமான தலித் படைப்பு மொழியின் குறிக்கோளாகக் காணப்படுகிறது. "மொழி என்பது ஒரு சமூகத்தின் கூட்டு மனமாகும். அதுவும் இந்தியா போன்ற பல்வேறு படிநிலைகளைக் கொண்ட நாட்டில் புழங்கும் மொழி இன்னும் ஆழ்ந்த தன்மைகளைக் கொண்டது. பொதுவாக இலக்கியங்கள் சமூகத்தின் மனப்பதிவுகள். இந்த மனப்பதிவுகளில் விடுதலையைக் குறிக்கோளாகக் கொண்ட மனங்களின் வெளிப்பாடுகளாக தலித் இலக்கியங்கள் உள்ளன" (அழகிய பெரியவன், கலகம் செய்யும் எழுத்து, தலித்தியல், 2005, ப.150). இந்த இலக்கியங்களில் இடம்பெற்றுள்ள தலித் மொழி தொடர்புடைய அனைவருக்கும் புரிதலுக்குள்ளாகும் போதுதான் அதன் வீரியம் அதிகரித்து, விடுதலை உணர்வு கொழுந்து விட்டு எரியும். எனவே, தலித்

சமுதாய ஆர்வலர்கள் தலித் சமுதாயத்தில் நிலவிவரும் கலக மொழியைப் படைப்பாக்குவதில் மிகுந்த ஆர்வத்தைக் காட்டி வருகின்றனர்.

## 10. தலித் சார்ந்த கொள்கைப் படைப்புகள்

தலித் சார்ந்த கொள்கைப் படைப்புகளை 1. ஆய்வு நூல்கள், 2. கொள்கை நூல்கள், 3. கட்டுரை நூல்கள் என மூன்று வகைப்படுத்தலாம்.

### 1. ஆய்வு நூல்கள்

ஏதேனும் ஒன்றினை மிகக் கவனமாகவும், விடாமுயற்சியுடனும் நுட்பமாகத் தேடுவதை ஆய்வு எனக் கூறலாம். அந்த வகையில் தலித் தொடர்பான ஆய்வுகள் தலித் இலக்கியங்களையும் தலித் மக்களின் வாழ்நிலைகளையும் தலித் கலைகளையும், தலித்தியம் தொடர்பான செய்திகளையும் அடிப்படையாகக் கொண்டவையாக அமைகின்றன. இத்தகைய ஆய்வு நூல்களை வெளியிட்டவர்களாக ஐ. இரவி ஆறுமுகம் (தீண்டாமை ஒழிப்பில் காவல்துறை), ஆ. சிவசுப்பிரமணியன் (தமிழகத்தில் அடிமை முறை), கு. சின்னப்பன் (தமிழகத்தில் தலித் சிந்தனை மரபு), அரங்க மு. முருகையன் (சாதீயம்), ஆ. ஜீவானந்தம் (தமிழில் தலித் இலக்கியம்) ஆகியவர்கள் இங்குக் குறிப்பிடப்பட்டுள்ளனர். இவர்களில் ஐ. இரவி ஆறுமுகம், ஆ. சிவசுப்பிரமணியன், ஆ. ஜீவானந்தம் ஆகியவர்களின் ஆய்வு நூல்கள் குறித்த செய்திகள் பின்வருமாறு தரப்பட்டுள்ளன.

### 1. இரவி ஆறுமுகம். ஐ.

ஐ. இரவி ஆறுமுகம் என்பவரின் 'தீண்டாமை ஒழிப்பில் காவல்துறை' என்ற நூல் முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஆறு இயல்களைக் கொண்டுள்ளது. இந்த நூலில் தமிழ் நூல்களில் சாதி இடம்பெற்றுள்ள நிலை, தீண்டாமையின் தோற்றம் மற்றும் செயல்பாடு, சாதிச்சண்டைகளால் தீண்டத்தகாதோர் சந்திக்கும் பிரச்சனைகள் ஆகியனவற்றோடு தீண்டாமையை ஒழிக்க ஏற்படுத்தப்பட்டுள்ள பாதுகாப்புச் சட்டங்கள், தாழ்த்தப்பட்ட மற்றும் பழங்குடியினருக்கான தேசிய ஆய்வுக்குழு அறிக்கை, குடியுரிமைப் பாதுகாப்புச் சட்டம், காவல்துறை தீண்டாமை ஒழிப்பிற்கு ஆற்றும் பங்கு ஆகியன குறித்த செய்திகளும் இடம்பெற்றுள்ளன.

### 2. சிவசுப்பிரமணியன். ஆ

ஆ. சிவசுப்பிரமணியன் என்பரின் 'தமிழகத்தில் அடிமைமுறை' என்ற நூல் ஒன்பது இயல்களை உள்ளடக்கியது. இந்த நூலில் சங்க காலத்தில் மருதம், நெய்தல் நிலப்பகுதிகளில் வழக்கிலிருந்த அடிமைமுறை குறித்த செய்திகள் விளக்கப்பட்டுள்ளன. மேலும்

பதினெண்கீழ்க் கணக்கு மற்றும் பக்தி இலக்கியங்களில் கூறப்பட்டுள்ள அடிமை முறையையும் பிற்காலச் சோழர் காலத்தில் காணப்பட்ட போர் அடிமைகள், வீட்டு அடிமைகள், கோவில் மற்றும் மட அடிமைகளோடு தற்காலம் வரையுள்ள அடிமை முறையை விளக்கி, சாதியின் அடிப்படையில் ஒதுக்கப்பட்ட தொழிலை இலவசமாக அல்லது சிறிது உணவிற்கு அடிமை ஊழியர்கள் செய்து முடிக்கக் கட்டாயப்படுத்தப்படும் நிலையினையும் ஆசிரியர் பதிவு செய்துள்ளார்.

**3. ஜீவானந்தம். ஆ.**

ஆ. ஜீவானந்தம் என்பவரின் 'தமிழில் தலித் இலக்கியம்' என்ற இந்த நூலில் 1990 ஆம் ஆண்டிலிருந்து 1999 ஆம் ஆண்டு வரை வெளிவந்த தலித் சிறுகதைகள், புதினங்கள், நாடகங்கள், கவிதைகள், இசைப்பாடல்கள் ஆகியன ஆய்வு செய்யப்பட்டுள்ளன. மேலும், இந்த நூல் இலக்கிய மரபுகளை உடைத்தல், எதிர்ப்புணர்வு, சமரசமற்ற போர்க் குணம் என்ற சிந்தனைகளையும் ஏற்படுத்துதல் ஆகியவற்றைச் சுட்டிக் காட்டுகிறது. மேலும் இந்த நூல் தமிழிலுள்ள தலித் இலக்கியங்களைப் பிற மொழியிலுள்ள தலித் இலக்கியங்களோடு ஒப்பிட்டு ஆய்வு செய்ய வேண்டும் என்ற கருத்தையும் வலியுறுத்துகிறது.

**2. கொள்கை நூல்கள்**

தலித் தொடர்பான கொள்கைகளை உள்ளடக்கிய நூல்களைச் சி. சேம்ஜி (சமூக நீதியும் தலித் மக்களும்), தணிகைச் செல்வன் (தலித்தியம் தமிழியம் இந்தியம்), ஆ. பத்மநாபன் (தலீத்துகளின் இன்றைய நிலைமை) போன்றவர்கள் எழுதியுள்ளனர். இவை குறித்த செய்திகளைப் பின்வருமாறு தரலாம்.

**1. சேம்ஜி.சி.**

சேம்ஜி சி. என்பவரின் 'சமூக நீதியும் தலித் மக்களும்' என்ற நூல் தலித் மக்கள் சமூக நீதியைப் பெற அரசு சாரா சமூக அமைப்புகள் உதவ வேண்டும் என்ற கருத்தை வலியுறுத்துகிறது. மேலும், இந்த நூல் வருணங்களே சாதிகளின் அடிப்படை என்ற கருத்தையும் முன்வைக்கிறது.

**2. தணிகைச் செல்வன்**

தணிகைச் செல்வனின் 'தலித்தியம் தமிழியம் இந்தியம்' என்ற நூல் சமுதாய அணித்தலைமையில் தலித்துகளும், வர்க்க அணித் தலைமையில் தலித் பாட்டாளிகளும், தமிழ்த்தேச முன்னணித் தலைமையில் தலித் தமிழர்களும் தலித் விடுதலைக்குப் பொறுப்பேற்க வேண்டும் என்ற கருத்தை முன்வைக்கிறது. மேலும் தலித்துகள், இந்திய அளவில் அனைத்து மாநிலங்களிலும் வாழ்ந்து வரும் மக்கள் என்றும், அவர்களின் பிரச்சனை என்பது அனைத்திந்தியப் பிரச்சனை என்றும்

தலித்தியம் இந்தியத் தேசியத்தன்மை கொண்டதால் தீர்வுகளும் அனைத்திந்தியத் தன்மை கொண்டவையாகவே இருக்க முடியும் என்றும் (தணிகைச் செல்வன், தலித்தியம் தமிழியம் இந்தியம், 1998, ப.25) குறிப்பிட்டுள்ளது. இந்த நூலின் இறுதியில் 'போர்முனையும் வாள்முனையும்' என்ற கவிதை இடம்பெற்றுள்ளது. அதில் மகாபாரதம், இராமாயணம், சைவ வரலாறு, சிலம்பு, பெரியபுராணம், பக்தி இலக்கியம், தொல்காப்பியம் ஆகியவை இயற்றப்பட்ட காலங்களில் தீண்டத்தகாதவர் அனுபவித்த கொடுமைகள் விவரிக்கப்பட்டுள்ளன.

### 3. பத்மநாபன். ஆ

ஆ. பத்மநாபன் என்பவரின் 'தலீத்துகளின் இன்றைய நிலைமை' என்ற இந்த நூல் தலித்துகளுக்கான இடஒதுக்கீடு, அரசின் நிறைவேற்றப் படாத வாக்குறுதிகள், தாழ்த்தப்பட்டோருக்கான சட்ட விதிகள், சிவில் உரிமைகள் போன்ற பலவற்றை விளக்குகிறது. மேலும், அம்பேத்கரின் வாழ்வும் பணிகளும் குறித்த செய்திகளைக் கூறித் தலித் மக்களை விழிப்படையச் செய்கிறது. இந்த நூலின் பின்னிணைப்பில் தலித்து களோடு தொடர்புடைய அரசாணைகள் இடம்பெற்றுள்ளன. 'செடியூல்டு வகுப்பினரும், பழங்குடியினரும் தங்களுடைய நண்பர்கள் யார், பகைவர்கள் யார் என்பதைத் தெளிவாக அறிந்து கொள்ள முடியாதவர் களாக இருக்கிறார்கள். இதனால் அவர்கள் குழப்பத்திற்கும் தடுமாற்றத்திற்கும் உள்ளாகியுள்ளனர்" (ஆ. பத்மநாபன், தலீத்துகளின் இன்றைய நிலைமை, 2002, ப.7). என்று கூறும் இந்த நூலாசிரியர் தலித் பிரச்சனைகளின் வரலாற்றை எடுத்துக்கூறி விழிப்புணர்வைத் தூண்டியுள்ளார்.

## 3. கட்டுரை நூல்கள்

தலித் தொடர்பான கட்டுரைகளை ஓர் ஆசிரியரின் கட்டுரைகள் அடங்கிய தொகுப்புகள், பல ஆசிரியர்களின் கட்டுரைகள் அடங்கிய தொகுப்புகள், உதிரிக் கட்டுரைகள் எனப் பகுக்கலாம்.

### 1. ஓர் ஆசிரியரின் கட்டுரைகள் அடங்கிய தொகுப்புகள்

ஓர் ஆசிரியரின் கட்டுரைகள் அடங்கிய தொகுப்பு நூல்களில் அன்பு செல்வத்தின் 'கொடுமை முறியும்', விழி. பா.இதய வேந்தனின் 'தலித் அழகியல்', கே. ஏ. குணசேகரனின் 'தலித் அரங்கியல்', 'ஒடுக்கப்பட்டோர் அரங்கியல்', கோ. கேசவனின் 'சமூக விடுதலையும் தாழ்த்தப்பட்டோரும்', 'தலித் இலக்கியம்,' ' அ. சஜனின் 'தலித்தியம் இயக்கமும் இலக்கியமும்', ஏ.எம். சாலனின் 'தலித் பண்பாடு சில பார்வைகள்', 'சி.சொக்கலிங்கத்தின் 'தலித் மயமாக்கல்', தொல் திருமாவளவனின் 'அடங்கமறு', ரவிக்குமாரின் 'கொதிப்பு உயர்ந்து வரும்' ' ராஜ் கௌதமனின் 'தலித்திய விமர்சனக் கட்டுரைகள்' ஆகியன குறித்த செய்திகள் இங்குத் தரப்பட்டுள்ளன.

### 1. அன்பு செல்வம்

அன்பு செல்வத்தின் 'கொடுமை முறியும்' என்ற தொகுப்பில் தலித் மக்களுக்கு எதிராக நடத்தப்படுகின்ற உரிமை மீறல்கள், வன்கொடுமைகள் ஆகியனவற்றை உள்ளடக்கியதாக பதினெட்டு கட்டுரைகள் உள்ளன. "ஒடுக்கப்பட்ட மக்களுக்காக, இந்திய அரசியல் சட்டம் ஜனநாயக வழியில் கொடுத்திருக்கின்ற உரிமைகளை நடைமுறைப்படுத்தச் சொல்லிப் போராட அனைவருக்கும் உரிமை வேண்டும்" (அன்பு செல்வம், கொடுமை முறியும், 2004, ப.152) என்பது இந்தத் தொகுப்பின் மையக் கருத்தாகும். மேலும், தலித் மக்கள் தங்களிடையேயான உள்முரண்பாடுகளைக் களைந்து ஒன்றுபட வேண்டும் என்றும், நேரடியாகப் போராட்டங்களில் ஈடுபடத் தயங்குபவர்கள் தங்கள் ஆதரவை அஞ்சல் அட்டையில் எழுதி குறிப்பிட்ட இடங்களுக்கு அனுப்ப வேண்டும் என்றும் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

### 2. இதயவேந்தன்.விழி. பா.

விழி.பா. இதய வேந்தன் என்பவரின் 'தலித் அழகியல்' என்ற தொகுப்பில் பத்து கட்டுரைகள் உள்ளன. அவற்றில் 'தலித் அழகியல்' என்ற கட்டுரையில் 'ஒரு பக்கம் அழ்கானவையாகப் பார்க்கப்படுகிறவை மறுபக்கம் அழகற்றவையாகப் பார்க்கப்படுகிறது' என்ற கருத்து உள்ளது. தான் மற்றும் தன்னைச் சூழ்ந்துள்ளவர்களின் வாழ்க்கைத் தரத்தை 'என் சனங்களின் கதை' என்ற இரண்டாவது கட்டுரை விவரித்துள்ளது. மேலும் இந்தத் தொகுப்பில் தலித் இலக்கியப் போக்குகள், தலித் இலக்கியத்தின் வளர்ச்சி நிலைகள், தலித் சிறுகதைகள் : ஒரு பார்வை, இழிநிலைக்கு எதிரான கலகம், நூற்றாண்டின் கலகக்குரலாய்த் தலித்தியம் (ஒரு புறம் சுரண்டப்பட்டாலும் மறுபுறம் எழுச்சி ஏற்பட்டுள்ளது), தலித் நாவல்களில் பண்பாட்டுக் கூறுகள் (தலித் மக்களுக்கு மதிப்பீடு இல்லை). தலித்தியம் : நெஞ்சில் உறுதியோடு நேர்மைத் திறனோடு ...' (விடுதலை நோக்கி பயணப்பட வேண்டும்), தலித் இலக்கியம், எதை நோக்கி? (சாதி ஒழிப்பிற்கான ஆயுதமாய் பயன்படுவதுடன் தலித் மக்களின் வாழ்விற்கான உத்திரவாதமாய் அமைய வேண்டும்) ஆகிய தலைப்புகளில் அமைந்த கட்டுரைகளோடு "சாதி பார்த்து தான் பாராட்டுறாங்க" என்ற நேர்காணலும் அடங்கியுள்ளது. இந்தத் தொகுப்பு தலித் தொடர்பான புதிய சிந்தனைகளைத் தருவதாக உள்ளது.

### 3. குணசேகரன். கே.ஏ.

கே.ஏ. குணசேகரன் என்பவரின் (1995) 'தலித் அரங்கியல்' என்ற தொகுப்பில் ஆறு கட்டுரைகள் உள்ளன. அவற்றில் 'நாட்டுப்புற நாடக அரங்கு தலித் நாடக அரங்கை நோக்கி' என்ற கட்டுரை "நாட்டுப்புற நாடக அரங்கு என்பது சாமானியப்பட்ட மக்கள் அதாவது உழைக்கும் மக்களின்

பார்வையில் முக்கியமான தொடர்பு சாதனங்களில் முதன்மையான தாகிறது" (கே.ஏ. குணசேகரன், தலித் அரங்கியல், 1995, ப.1) என்ற கருத்து உள்ளது. மேலும் இந்தத் தொகுப்பில் தமிழ் நாடகங்களில் காணலாகும் சமூக நீதிக் கருத்துகள், பறையர் இன மக்களின் ராசா ராணி ஆட்டத்தில் 'நையாண்டித்தனம்', எழுதப்படாத வரலாறுகள் : தமிழ் நாடக வரலாறு பற்றிச் சில சிந்தனைகள், தமிழ் நாடக வரலாறு எழுதப்படாமை – ஒரு விவாதம், தலித் அரங்கியல் என்ற கட்டுரைகளும் உள்ளன. இந்த நூல் தமிழ் நாடகம் தொடர்பான மாற்றுச் சிந்தனையை முன்வைக்கிறது. மேலும் கே.ஏ. குணசேகரனின் (2005) 'ஒடுக்கப்பட்டோர் அரங்கியல்' என்னும் கட்டுரைத் தொகுப்பில் ஒடுக்கப்பட்டோர் அரங்கியல், தலித் அரங்கியலின் தேவை குறித்து ..., தலித் அரங்கியல் கோட்பாடு, பழங்குடி இளைஞர்கள் வருமான வாழ்வுக்கான வழிமுறைகள் - பரிந்துரைகள், தலித் கலை இலக்கியம் - இன்றைய சூழலில், பயன்பாட்டு நாட்டுப் புறக் கலையும் தலித் கலையும், சாதி மோதல்கள் – தடுக்கும் வழிமுறைகள் என்று எழு கட்டுரைகள் உள்ளன. இதில் தலித் அரங்கியல் கோட்பாடு என்ற கட்டுரையில் "பிரச்சனைகளை ஆராய்ந்து பார்த்துத் தேர்தல், மக்களுடன் பகிர்ந்து பொதுக் கருத்தியலை உருவாக்குதல், தீர்வை நோக்கி மக்களைச் சிந்திக்கவும் செயல்படவும் தூண்டுகோலாக அமைத்தல் என்னும்படியான நிலைகளில் தலித் அரங்கியல் இயங்க வேண்டும்" (கே.ஏ. குணசேகரன், ஒடுக்கப்பட்டோர் அரங்கியல், 2005, ப.76) என்று ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். இந்தியாவில் தலித் அரங்கியல் உருவாவதற்குச் சமுதாயச் சூழல்தான் காரணம் என்றும் கூறியுள்ளார். மாற்று அரங்கியல், சமுதாய விழிப்புணர்வு, நவீன கலை இலக்கியத் தேடல் இவைகளை எதிர்பார்ப்பவர்க்கு இந்தக் கட்டுரை நூல் புதிய தளத்தை உருவாக்கிக் கொடுக்கும்.

**4. கேசவன். கோ.**

கோ. கேசவன் என்வரின் (1994) 'சமூக விடுதலையும் தாழ்த்தப் பட்டோரும்' என்ற தொகுப்பில் தாழ்த்தப்பட்டோர், அட்டவணைச் சாதியினர், தீண்டத்தகாதவர், இழிசனர், அரிசன், தலித் என்று பல்வேறு பெயர்களால் அழைக்கப்படும் மனிதர்களை அரசியல், மதவாத, சாதிய இயக்கங்கள் பயன்படுத்திவரும் நிலை குறித்த விவரங்களை ஆசிரியர் கூறியுள்ளார். மேலும் 'பெயரிடலும் அரசியலும்' என்ற கட்டுரையில் எல்லாவிதமான சமுதாய நிகழ்வின் பின்னரும் அரசியல் உள்ளதையும் சங்ககாலம் முதல் கீழ்ச்சாதியினரைக் குறிக்கப் பயன்படுத்திய சொற்களையும் அவற்றின் அரசியல் பின்புலத்தையும் சுட்டுகிறார். 'தாழ்த்தப்பட்டோர் வாழ்வியல்' என்ற கட்டுரையில் தாழ்த்தப்பட்டோரின் வாழ்நிலை அவலங்களை விளக்கியுள்ளார். 'தாழ்த்தப்பட்டோரும் அரசியல் இயக்கங்களும்' என்ற கட்டுரையில் காங்கிரஸ், திராவிட மற்றும் பொதுவுடைமை இயக்கங்கள் குறித்துக் கூறியுள்ளார். தொடர்ந்து 'தமிழ் நாட்டில் உள்ள

தாழ்த்தப்பட்டோர் இயக்கங்களை' வரலாற்று முறையில் மதிப்பீடு செய்துள்ளார். 'மத அமைப்புகளும் தாழ்த்தப்பட்டோரும்', 'தமிழகத்தில் சாதிய மோதல்கள், சமூக விடுதலையும் தாழ்த்தப்பட்டோரும் என்ற கட்டுரைகளும் இந்தத் தொகுப்பில் சிறப்புக்குரியனவாக அமைந்துள்ளன. "தாழ்த்தப்பட்டோர் கோவிலில் நுழைவதற்கு இந்தியா முழுவதிலும் சட்ட ஏற்புடைமை உண்டு. ஆயின் கருவறை நுழைவுக்கு இல்லை. ..... ஆனால் இன்னமும் பெரும்பாலான கிராமங்களில் உள்ள ஊர்க் கோவில்களில் தாழ்த்தப்பட்டோர் நுழையக்கூடிய சமூக ஏற்புடைமை இல்லை" (கோ. கேசவன், சமூக விடுதலையும் தாழ்த்தப்பட்டோரும், 1994, ப.239) என்ற செய்தியைச் சுட்டிக்காட்டி இந்த நிலை மாற்றப்பட வேண்டும் என்ற கருத்து இந்த நூலில் வலியுறுத்தப்பட்டுள்ளது. மேலும் கோ.கேசவன் (1998) என்பவரின் 'தலித் இலக்கியம்' என்ற தொகுப்பில் 'தலித் மக்களின் எழுச்சிக்காக தலித் இலக்கியம் படைக்கப்பட வேண்டும்' என்ற கருத்துத் 'தலித் இலக்கியம்' என்ற முதல் கட்டுரையில் இடம்பெற்றுள்ளது. தலித் இலக்கியம் விமர்சனக் கண்ணோட்டத்தில் மட்டுமே மரபுகளை ஏற்கிறது என்ற கருத்தைத் 'தலித் இலக்கியம் - மரபுகள் – தொடர்ச்சியும் தொடர்ச்சியின்மையும்' என்ற இரண்டாவது கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார். ஒரு குறிப்பிட்ட காலத்தில் ஏற்பட்ட படைப்பாக்க முறையான எதார்த்த வாதம், மனிதனின் துன்ப துயரத்துக்கான அனுதாபத்தையும் மனித விடுதலை குறித்த கனவையும் அடிப்படையாகக் கொண்டுள்ளது என்ற செய்தி 'எதார்த்தவாதம் சோசலிச எதார்த்தவாதம் தலித் இலக்கியம் – சில குறிப்புரைகள்' என்ற மூன்றாவது கட்டுரையில் இடம் பெற்றுள்ளது. இவ்வாறு மொத்தம் மூன்று கட்டுரைகளுடன் இந்த நூல் நிறைவு பெறுகிறது.

**5. சஜன். அ.**

அ. சஜன் என்பவரின் 'தலித்தியம் இயக்கமும் இலக்கியமும்' என்ற தொகுப்பில் ஏழு கட்டுரைகள் உள்ளன. அவை தமிழகச் சூழலில் தலித்தியம், அரசியல் சூழலில் தலித்தியம், தற்காலத் தமிழ் இலக்கியத்தில் தலித்தியம், மார்க்சிய மற்றும் திராவிடப் பார்வையில் தலித்தியம், தலித் சிந்தனையும் தலித் இலக்கியமும், தலித் படைப்புகளும் படைப்பாளிகளும், தலித் பெண்ணியம் என்ற தலைப்புகளில் உள்ளன. அவற்றில் 'தலித் சிந்தனையும் தலித் இலக்கியமும்' என்ற கட்டுரையில் "தலித் இலக்கியப் படைப்பாக் கத்திற்குத் தலித் உணர்வே உயிர் மையமாகிறது என்றும் தலித் அல்லாதவர்களும் இந்த உணர்வை அடைய முடியும் என்றாலும், பிறப்பின் அடிப்படையில் தலித் இதனை இயல்பாகப் பெற முடியும்" (அ.சஜன், தலித்தியம் இயக்கமும் இலக்கியமும், 2004, ப.95) என்றும் குறிப்பிட்டுள்ளார். தலித்துகளின் நிலை குறித்த சிந்தனைகளைத் தூண்ட இந்த நூல் உதவும்.

**6. சாலன். ஏ.எம்.**

ஏ.எம். சாலன் என்பவரின் 'தலித் பண்பாடு சில பார்வைகள்' என்ற தொகுப்பில் தலித் பண்பாடு சில பார்வைகள், அய்யன்காளி, அய்யன்காளியும் கேரள தேசத்தில் தலித்துகள் நடத்திய முதல் விவசாயப் போராட்டமும், தலித்துகளின் பள்ளி நுழைவுப் போராட்டம், தாழ்த்தப்பட்ட பெண்களும் சாதிக் கொடுமைகளும், கல்மாலையறுப்புத் தன்மானப் போராட்டம், காந்தியுடன் ஓர் தீண்டாமை எதிர்ப்புப் போராளி, குமரன் ஆசானும் சண்டாளப் பிட்சுகியும், தெறிப்பாட்டு, புலைப்பேடி சம்பிரதாயம், வயநாட்டு (முத்தங்கா) மலைவாழ் மக்கள் போராட்டம், லட்சுமண் பாபுராவ் மானேயின் உபாரா — அந்நியன், தலித் இலக்கியத்தின் போக்கு, நெரிந்து ..., பொன்னீலனின் 'ஊற்றில் மலர்ந்தது' — ஒரு தலித்தியப் பார்வை என பதினைந்து கட்டுரைகள் உள்ளன. அவற்றில் 'அய்யன்காளி' என்ற கட்டுரையில் அம்பேத்கருக்கு முன்பே ஒடுக்கப்பட்ட மக்களுக்காகத் திருவிதாங்கூரிலிருந்து குரல்கொடுத்த அய்யன்காளியின் வரலாறு கூறப்பட்டுள்ளது. 'தாழ்த்தப்பட்ட பெண்களும் சாதிக் கொடுமைகளும்' என்ற கட்டுரையில் தோள்சீலைப் போராட்டம், தலித் மக்கள் நடத்திய கல்மாலையறுப்புத் தன்மானப் போராட்டம், ஈழவ மக்கள் தங்கள் உரிமைகளைப் பெற வேண்டி நடத்தின போராட்டங்கள் போன்றவை விளக்கப்பட்டுள்ளன. தலித் இலக்கியத்தின் போக்கு என்ற கட்டுரையில் 'பழையன கழிதலும்' , 'சங்கதி' , ' பழிக்குப்பழி', 'மனுசங்கடா நாங்க மனுசங்கடா', ' ஒடக்கு', ' 'உவர்ப்பு மண்' போன்ற படைப்புகளின் ஆவேசக் கருத்துகள் வெளிப்படுத்தப்பட்டுள்ளன. இவ்வாறு இந்த நூல் வெவ்வேறு நிலைகளில் வாழும் அடித்தட்டு மக்களின் பிரச்சனைகளைத் தகுந்த ஆதாரங்களுடன் விளக்குகிறது.

**7. சொக்கலிங்கம். சி.**

சி. சொக்கலிங்கம் என்பவரின் 'தலித் மயமாக்கல்' என்ற தொகுப்பில் பண்டைத் திருவிதாங்கூரில் குற்றவியல் சட்டமும் தண்டனை முறைகளும், வேதாளப் பாலூட்டிகள், வானியல் முகமூடியில் சோதிடப் பூதம், காஞ்சா அய்லய்யாவின் நான் ஏன் இந்து அல்ல' என நான்கு கட்டுரைகள் உள்ளன. இந்த நூலின் முதல் கட்டுரையில் 'திருவிதாங்கூர் நிலவுடைமைச் சமூகத் தண்டனை முறைகள் வருணாசிரம சாதி அமைப்பின் நலன்களைத் தக்க வைத்துக் கொள்ளும் நோக்கம் கொண்டதாகவே இருந்தன என்றும் ஒரே குற்றத்திற்கு ஆதிக்கச் சாதியினர் குறைந்த தண்டனையும், தாழ்த்தப்பட்ட சாதியினர் கொடூரமான தண்டனையும் பெற்றனர் (சி. சொக்கலிங்கம், தலித் மயமாக்கல், 2003, ப.19) என்றும் கட்டுரை ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். நான்காவது கட்டுரையில் சமத்துவத்தை அடைவதற்கு இந்தியாவை முழுவதுமாக தலித் மயமாக்க வேண்டும் என்ற செய்தி உள்ளது.

இவ்வாறு இந்த நூல் சாதி வேறுபாட்டைக் களைந்து புதிய சமூகத்தை அமைக்கத் தேவையான வழிமுறைகளைக் குறிப்பிடுகிறது.

**8. திருமாவளவன். தொல்**

தொல். திருமாவளவன் என்பவரின் 'அடங்கமறு' என்ற தொகுப்பில் முப்பத்து நான்கு கட்டுரைகள் உள்ளன. அவற்றில் முதல் கட்டுரை 'நாட்டை ஆளுவது சட்டமா? சாதியமா?' என்பதாகும். இதில் மதுரை, கும்பகோணம் உட்பட தமிழ்நாட்டின் பல பகுதிகளில் சாதி வெறியர்களால் சேரி மக்களுக்கு ஏற்பட்ட உயிர் மற்றும் பொருள் இழப்புகள் கூறப்பட்டுள்ளன. பதின்மூன்றாவது கட்டுரை 'சனநாயகமே மதம்! மனிதநேயமே வேதம்!' என்பதாகும். இருபத்து இரண்டாவது கட்டுரையில் 'விலங்குகளே உயர்ந்தவர்கள்' என்கிறார். இதில் 'தமது கழிவைத் தாமே தின்னாத – தின்ன வைக்காத விலங்குகளே உயர்ந்தவைகள்' (தொல். திருமாவளவன், அடங்கமறு, 2004, ப. 89) என்ற கருத்து பதிவாகியுள்ளது. திருச்சி மாவட்டத்தைச் சார்ந்த திண்ணியத்தில் தலித்துகளை மலம் தின்ன வைத்த கொடுமை அம்பலமாகியுள்ள நிலையைக் கூறி, இதற்கு முன் இது போன்ற நிகழ்வு வெளிவராமல் நடந்திருக்கலாம் என்று கருத்துத் தெரிவித்துள்ளார். சாதியின் பிடியில் உள்ள மக்களுக்கு விழிப்புணர்வை ஏற்படுத்துவதாக இந்தக் கட்டுரை நூல் அமைந்துள்ளது.

**9. ரவிக்குமார்**

ரவிக்குமாரின் 'கொதிப்பு உயர்ந்து வரும்' என்ற தொகுப்பில் கடலூர் பகுதியைச் சார்ந்த புலியூர் சேரியில் ஏற்பட்ட கலவரம், விழுப்புரம் - திருச்சி சாலையில் அமைந்துள்ள அனுக்கூரில் ஏற்பட்ட கலவரம், திருநெல்வேலியில் புதிய தமிழகம் கட்சியைச் சேர்ந்த தலித் மக்கள் படுகொலை, சிதம்பரம் நாடாளுமன்றத் தொகுதி வன்முறை, சிதம்பரம் புளியங்குடி படுகொலை, மேலவளவு படுகொலை உட்பட பல கலவரங்கள் கட்டுரைகளின் கருப்பொருள்களாகியுள்ளன. இவை தவிர பிற கட்டுரைகள் இட ஒதுக்கீட்டை வலியுறுத்துவனவாகவும், அநீதியை விமரிசிப்பனவாகவும் எழுதப்பட்டுள்ளன. "தலித்துகளுக்கு உதவ யாரும் கிடையாது ... அவர்கள் தங்களைத் தாங்களே காத்துக் கொள்ள வேண்டும். அது தவிர வேறு வழியில்லை" (ரவிக்குமார், கொதிப்பு உயர்ந்து வரும், 2001, ப.108) என்ற கருத்து நூலில் இடம்பெற்றுள்ளது. மொத்தம் நாற்பத்தொன்று கட்டுரைகளை உள்ளடக்கிய இந்த நூலிலுள்ள பெரும்பான்மையான கட்டுரைகள் தலித் பத்திரிகைகளில் எழுதப்பட்டவை ஆகும்.

**10. ராஜ் கௌதமன்**

ராஜ் கௌதமனின் 'தலித்திய விமர்சனக் கட்டுரைகள்' என்ற இந்தத் தொகுப்பில் தலித்தியம் தொடர்பான ஏழு கட்டுரைகளும், மூன்று

நூல் விமர்சனங்களும் இடம்பெற்றுள்ளன. அவற்றில் 'தலித்தியப் பார்வையில் பாரதி' என்ற கட்டுரையில் "தலித்திய விடுதலை என்பது மேலிருந்து அவர்களுக்கு வழங்கப்படுகிற வரம் அல்ல என்றும், தங்களை ஒடுக்கியவர்களுக்கு இணையாகவோ அல்லது அவர்களுக்கும் மேலானவர்களாகவோ நிலைநிறுத்துவதற்காக ஒடுக்குமுறையை எதிர்த்துத் தலித்துக்களே நடத்தும் தொடர்ச்சியான போராட்டங்களால் தான் விடுதலை சாத்தியமாகும்" (ராஜ் கௌதமன், தலித்திய விமர்சனக் கட்டுரைகள், 2005, ப.157) என்றும் குறிப்பிட்டுள்ளார். 'தலித் பண்பாடு', 'தலித் பார்வையில் தமிழ்ப்பண்பாடு' ஆகிய நூல்கள் இவரது குறிப்பிடத்தக்க பிற விமர்சனப் படைப்புகளாகும்.

## 2. பல ஆசிரியர்களின் கட்டுரைகள் அடங்கிய தொகுப்புகள்

பல ஆசிரியர்களின் கட்டுரைகள் அடங்கிய தொகுப்புகளில் அருட்கடலாரின் 'தலித் அடையாளத் தேடல்', இராம. குருநாதன், பத்மாவதி விவேகானந்தன் ஆகியோரின் 'தலித்தியல்', சு. சண்முக சுந்தரத்தின் 'தலித்தியம்', மோகன் லார்பீரின் 'தலித் விடுதலைக்கான அரசியல்', 'கலகமொழி' ஆகியன இங்கு விளக்கப்பட்டுள்ளன.

### 1. அருட்கடலார்

அருட்கடலாரின் 'தலித் அடையாளத் தேடல்' என்ற கட்டுரைத் தொகுப்பில் அ. ஜெர்லின் என்பவரின் 'தலித் மானிடவியல்', ச. அருள் ஒளி என்பவரின் 'தலித் பண்பாடு', அ. அமல்ராஜ் என்பவரின் 'தலித் பொருளாதாரம்', ம. டாம்னிக் ஜெயக்குமார் என்பவரின் 'தலித் இயக்கங்கள்', அ. கிங்ஸ்லி என்பவரின் 'தலித் அரசியல்', சி. மரியநாதன் என்பவரின் 'தலித் உள்ளுணர்வு', ஏ. எம்மா, ஜஸ்டின் இம்மானுவேல் ஆகியவர்களின் 'தலித் ஆன்மீகம்' என ஏழு கட்டுரைகள் உள்ளன. இவற்றில் தலித் மானிடவியல் என்ற கட்டுரையில் தலித் மக்கள் ஒன்றுபடுதல், சாதி மறுப்புத் திருமணங்கள் ஊக்கவிக்கப்படுதல், திருமண விளம்பரங்கள் சாதிவாரியாகச் செய்வது தடை செய்யப்படுதல், வெளிப்படையாகச் சாதி கூறுவது தடுக்கப்படுதல் போன்ற கருத்துகளை ஆசிரியர் முன்வைத்துள்ளார். 'தலித் பண்பாடு' என்ற கட்டுரையில் 'ஒவ்வொரு மானிடரும் மானிடத் தன்மைக்குக் கீழாக உள்ள நிலையிலிருந்து, மானிடத் தன்மை வாய்ந்த நிலைக்கு உயர்வதே உண்மையான முன்னேற்றத்தின் குறிக்கோள்' என்ற கருத்து உள்ளது. 'தலித் பொருளாதாரம்' என்ற கட்டுரையில் தலித் மக்களுக்கு கல்வி இன்றியமையாதது என்று வலியுறுத்தப்பட்டுள்ளது. 'தலித் இயக்கங்கள்' என்ற கட்டுரையில் தலித்துகளின் உரிமைகளுக்காகப் போராடும் புத்தனின் சமத்துவ இயக்கம், சித்தர்களின் கலக இயக்கம், பெரியாரின் சுயமரியாதை இயக்கம், அம்பேத்கரின் இயக்கம், இந்திய தலித் சிறுத்தைகள் இயக்கம், மதமாற்ற இயக்கம், கிளர்ச்சி செய்யும் இயக்கம்,

ஒருங்கிணைக்கும் இயக்கம் போன்ற இயக்கங்கள் சமுதாயத்தில் சிறந்த தாக்கங்களை ஏற்படுத்தியுள்ளதைச் சுட்டிக்காட்டியுள்ளார். இந்த நூல் தலித் விழிப்புணர்வைத் தூண்டுவதாக அமைந்துள்ளது.

**2. குருநாதன். இராம., பத்மாவதி விவேகானந்தன்**

இராம. குருநாதன், பத்மாவதி விவேகானந்தன் ஆகியோரின் தொகுப்பான 'தலித்தியல்' என்ற நூலில் இந்திரன் என்பவரின் 'பெண்ணும் தலித்தும்', ப்ரதிபா ஜெயச் சந்திரன் என்பவரின் 'தமிழ் தலித் இதழ்கள்', உஞ்சைராஜன் என்பவரின் 'தலித் இலக்கிய அரசியல்', விழி. பா. இதயவேந்தன் என்பவரின் தலித் சிறுகதைகள் ஒரு பார்வை, கமலி என்பவரின் 'தலித்தியம்', பத்மாவதி விவேகானந்தன் என்பவரின் 'தலித் இலக்கியத்தில் தலித் பெண்கள்', இரா. பிரேமா என்பவரின் 'தலித் இலக்கியங்கள் – புரிதல்களும் எதிர்பார்ப்புகளும்', ரா.ச. ராஜநாயகம் என்பவரின் 'திருநாளைப் போவார் புராணம் - சமகாலச் சூழலில் ஒரு வாசிப்பு' அழகிய பெரியவன் என்பவரின் 'கலகம் செய்யும் எழுத்து' என ஒன்பது கட்டுரைகள் உள்ளன. இந்தக் கட்டுரைகள் முறையே 1. பெண்ணும் தலித்தும் பிறப்பின் காரணத்தால் அடிமையானவர்கள், இவர்களின் விடுதலையே மொத்த இந்தியச் சமுதாயத்தின் விடுதலை ஆகும் 2. தமிழில் தலித் இதழ்கள் குறிப்பிட்டுச் சொல்லும்படியான பங்களிப்பை நிகழ்த்தியுள்ளன 3. 'தலித்' என்ற சொல் 'போராளிகள்' என்ற நிலைக்கு உயர்ந்துள்ளது 4. தலித் சிறுகதைகள் தலித் இலக்கியம் இயக்கமாய் மாறத் தன் பங்களிப்பை நல்கியுள்ளது 5. தலித்தியம் என்பது மீறுவதையும், சேருவதையும் பிரதானமாகக் கொண்டுள்ளது. 6. தலித் இலக்கியத்தில் தலித் பெண்களின் அவலநிலை சித்தரிக்கப்பட்டுள்ளது 7. தலித் இலக்கியங்கள் தலித் மக்களின் இருப்பை அடையாளப்படுத்த உதவுகின்றன 8. நாயன்மார் காலத்தில் சாதி பேதம் இருந்தது 9. போர்க்குணம் உடைய தலித் எழுத்துகள் இழந்த அடையாளத்தை மீட்டுருவாக்கம் செய்ய உதவுகின்றன என்ற மையக்கருத்துகளைக் கொண்டுள்ளன. மொத்தத்தில் தலித் இலக்கியம் குறித்த சிந்தனை நூலாக இந்த நூல் திகழ்கின்றது.

**3. சண்முக சுந்தரம். சு .**

சு. சண்முக சுந்தரம் என்பவரின் தொகுப்பாக வெளிவந்த 'தலித்தியம்' என்ற நூலில் தமிழவன் என்பவரின் 'தமிழில் தலித் இலக்கியம் தோன்றுமா?,' சுந்தர ராமசாமி என்பவரின் 'தலித் இலக்கியம் பற்றி', ஞானி என்பவரின் 'மார்க்சியமும் தலித் இலக்கியமும்', இ. முத்தையா என்வரின் 'நாவல்களில் தலித் நிலைப்பாடுகள்' எம். வேத சகாய குமார் என்பவரின் 'தற்காலத் தமிழ் இலக்கியத்தில் தலித் பங்களிப்பு', தி.க.சி. என்பவரின் 'தலித் இலக்கியம் - சில கேள்விகளும் பதில்களும்', இரா. நடராஜன் என்பவரின் 'இது தலித்துகளின் காலம்',

முகில் என்பவரின் 'தமிழில் தலித் இலக்கியம்', தே. ஞானசேரகன் என்பவரின் 'தலித் என்னும் சொல் எதற்கு?', சு. சண்முக சுந்தரம் என்பவரின் 'தமிழ் நாட்டுப்புற இலக்கியம் - ஒரு தலித்தியல் பார்வை', வீ. அரசு என்பவரின் 'தமிழகச் சூழலில் தலித்தியம்' என்று பதினொரு கட்டுரைகளும் தலித்தியம் தொடர்பான கேள்விகளுக்கான பதில்களும் உள்ளன. அவற்றில் வேத சகாய குமாரின் கட்டுரையில் தலித் மக்களின் உரிமைகள் குறித்த விழிப்புணர்வை இன்று தமிழில் தலித் இலக்கியம் உறுதி செய்கிறது என்ற கருத்து உள்ளது. தே. ஞானசேகரன் தனது கட்டுரையில் பட்டினி கிடந்தாலும் சாதி, குலப் பெருமைகளைப் பேசும் நாடு இது. இந்த நாட்டில் அவரவர் தம்மை எப்படி அழைக்க விரும்புகிறார்களோ அதன்படியே அவர்களை அழைக்க வேண்டும். மாறாக அவர்களைப் பொதுவான சொல்லால் அழைப்பது அவர்களின் சமூக, அரசியல் எழுச்சிக்குத் தடையாக அமையும் என்று கூறியுள்ளார். இவ்வாறு பல்வேறுபட்ட சிந்தனைகளைத் தருவதாக இந்தத் தொகுப்பு உள்ளது.

**4. மோகன் லார்பீர். பா.**

பா. மோகன் லார்பீர் என்பவரின் 'தலித் விடுதலைக்கான அரசியல்' (1998) என்ற நூல் தலித் ஆதார மையத்தின் தலித் விடுதலைக்கான பங்களிப்பாகத் திகழ்கின்றது. இதில் மோகன் லார்பீர் என்பவரின் 'தலித் அரசியல்' - நூல் விமர்சனம், மணிக்குமார் என்பவரின் 'தென் தமிழக தலித் மக்கள் மீதான வன்முறைகள்', அ. மார்க்ஸ் என்பவரின் 'தேசிய, தமிழகச் சூழலும் தலித் மக்களும்', கோ. கேசவன் என்பவரின் 'தலித் அரசியலில் மார்க்சியப் பங்கு', மல்லிகா என்பவரின் 'தலித் பெண்கள் விடுதலையே தலித் அரசியல்', எம்.சி.ராஜ் என்பவரின் 'தலித்துக்களுக்கான அரசியல் தளம்' விடிவெள்ளி என்பவரின் 'புரட்சி – கலகம் செய் – ஒன்றுபடு', ரூபன் என்பவரின் '21 ஆம் நூற்றாண்டில் தலித் அரசியல்', சந்திரபோசு என்பவரின் 'பாராளுமன்றப் பாதையும் புரட்சிப் பாதையும்', தே. ஞானசேகரன் என்பவரின் 'தலித் அரசியல் – ஓர் சித்தாந்த அரசியல்', கருணா மனோகரன் என்பவரின் 'தலித் அரசியல் ஓர் சமுதாய அரசியல்', இரா. திருமாவளவன் என்பவரின் 'தேர்தலுக்குப் பிறகு தலித் மக்களின் அரசியல் நிலைப்பாடு' என்று பன்னிரெண்டு கட்டுரைகள் உள்ளன. இவற்றில் 'தலித் அரசியலில் மார்க்சியப் பங்கு' என்ற கட்டுரையில் ஒடுக்கப்பட்ட மக்களின் விடுதலைக்கான ஆயுதம் மார்க்சியம் என்ற கருத்து உள்ளது. 'தலித் பெண்கள் விடுதலை பெற்றால்தான் ஒட்டுமொத்த சமுதாயப் புரட்சி வெற்றி பெறும்' என்பது 'தலித் பெண்கள் விடுதலையே தலித் அரசியல்' என்ற கட்டுரையின் கருவாகியுள்ளது. புரட்சி - கலகம் செய் - ஒன்றுபடு என்ற கட்டுரை தீண்டாமையிலிருந்து இந்திய மண்ணை மீட்டு, இந்தியப் பண்பாட்டைக் காத்து, மனித மாண்பை நிலைநிறுத்தி, ஆண் பெண் மானிட உயர்வை

வளர்ப்பதற்கு தலித் அரசியல் இன்றியமையாதது என்ற கருத்தை முன்வைக்கிறது. தலித் அரசியல் சமுதாய அரசியல் என்ற நிலைக்கு உயரும் போது தலித் மக்கள் எழுச்சி கொள்வார்கள் என்ற கருத்துத் 'தலித் அரசியல் ஓர் சமுதாய அரசியல்' என்ற கட்டுரையில் மையம் கொண்டுள்ளது. மோகன் லார்பீர் என்பவரின் 'கலகமொழி' (2007) என்ற தொகுப்பில் 'போர்க்குணமுடைய தலித் கலைகள் தலித் மக்களின் விடுதலைக்கான கருவிகள் ஆகும்' என்ற கருத்து மையம் கொண்டுள்ளது. இந்த நூலில் அழகிய பெரியவன் என்பவரின் 'தலித் கலைகளின் அழகியல்', பா. மோகன் லார்பியர் என்பவரின் 'தலித் கலை விழா ஓர் வரலாற்றுப் பின்னணி', யாக்கன் என்பவரின் 'கலகமொழி பேசும் தலித் கலைகள்', கே.ஏ. குணசேகரன் என்பவரின் 'தலித் அரங்கியலின் தேவை குறித்து', 'குறவன் குறத்தி ஆட்டம்', 'அம்பது வயதான நாலு பேர் ஆட்டம் என்னும் ராசா ராணி ஆட்டம்', தலித் சுப்பையா என்பவரின் 'தலித் கலைகளும் கலைஞர்களும்', கு. முருகேசன் என்பவரின் 'பறையாட்டம்', 'கரகாட்டம்', கே.எஸ் முத்து என்பவரின் 'தலித் கலைகள் ஒரு வரலாற்றுப் பார்வை', ஜீவா என்பவரின் 'தலித் கலைகளின் வெளிப்பாடுகள்', பரட்டை என்பவரின் 'தலித் கலைகளை விடுதலைக் கருவியாக்குவோம்', இ.எஸ். ஜோஸ் என்பவரின் 'தலித் கலை விழாக்களும் தலித் இயக்கங்களும்' என்று பதின்மூன்று கட்டுரைகள் உள்ளன. இவற்றில் கே.ஏ. குணசேகரன் மூன்று கட்டுரைகளையும், கு. முருகேசன் இரண்டு கட்டுரைகளையும் படைத்துள்ளனர். பிறர் தலா ஒரு கட்டுரை வீதம் படைத்துள்ளனர். ஜீவா தனது கட்டுரையில் "தலித் கலை வெளிப்பாடுகள் ஏற்கனவே தீர்மானிக்கப்பட்டதாக இல்லாமல் உண்மையானதாக, உண்மை வாழ்வோடு இணைந்ததாக நம்பப்படுகிறது" (மு. ஜீவா, தலித் கலை வெளிப்பாடுகள், கலகமொழி, 2007, ப.126) என்கிறார். தலித் இயக்கங்கள் தங்களது செயல்பாட்டில் கலை, இலக்கிய, பண்பாட்டின் வேர்களை ஆழப்படுத்த வேண்டும் என்று இந்த நூல் வேண்டுகோள் விடுக்கிறது.

### 3. உதிரிக் கட்டுரைகள்

தலித்துகளையும் அவர்கள் வாழ்க்கைப் பிரச்சனைகளையும் அடிப்படையாகக் கொண்ட கட்டுரைகளாக அழகரசன் என்பவரின் 'தலித் விமர்சனம் - சில குறிப்புகள்', இளவரசன் என்பவரின் 'இரா. நடராசனின் தலித் என்னும் விளிம்புநிலை மனிதர்கள்', க. கலாகோபியின் 'புனைகதை இலக்கியங்களில் தலித் கதையாடல்' , கி. அ. கீதாவின் 'விரிவுபெறும் பொருளும் மாறுபாடும் அடையாளமும்', சா. சவரிமுத்துவின் 'கதைப் பாடல்கள் வழி அறியலாகும் சாதிப் போராட்டம்', தேவி செந்தில் குமாரின் 'தலித் பண்பாடு' , க.பால முருகனின் 'செந்நெல் புதினம் காட்டும் தலித்திய மக்களின் வாழ்வியல் சிக்கல்கள்', வே. பொன்ராஜின் 'விழி.பா. இதயவேந்தனின் 'எவருமறியாத நாம்! கவிதைகளில் – தலித் விடுதலையுணர்வு', அரச. முருகுபாண்டியனின் 'தலித் என்னும் சொல்லாடலின் அரசியல்', அரங்க மு. முருகையனின் 'மநுதர்ம

அடிப்படையில் வர்ணமும் சாதிய அமைப்பும்', சா. மேகலின் சந்திராவின் 'தப்பாட்டம் நாவலில் தீண்டாமை வடிவங்கள்', ஆ. ரந்திர் குமாரின் 'அருந்ததிய சாமியாடிகளும் சாதிய மதிப்பீடுகளும்', அ. ராமசாமியின் 'தலித் இலக்கியம் 2000க்கு முன்னும் பின்னும்', எஸ் ராஜேஸின் 'தகனம் நாவல் காட்டும் வெட்டியான் இன மக்களின் வாழ்க்கைப் போராட்டங்கள்', செ. ரீனாபாயின் 'தலித் இலக்கியம் - ஓர் ஆய்வு', வறீதையா கான்ஸ்தந்தின் 'சிக்கல்களின் பெருமூச்சு', பா. வைடூரியம்மாளின் 'சோ. தர்மனின் ம(னி)தம் ஒரு தலித்திய பார்வை', ஆ. ஜான் துரையின் தலித் – ஓர் இறையியல் பார்வை', க. ஜெயந்தியின் 'நாவல்களில் தீண்டாமை', அ. ஜோசப் சார்லி ஆரோக்கிய தாஸின் 'தலித் அரங்கியல்', ஸ்டாலின் ராஜாங்கத்தின் 'சென்னகரம் பட்டி – அதிகாரத்தின் ஓலம்' மற்றும் 'தலித் அடையாளம் - அங்கீகாரத்தின் நிறங்கள்' முதலான கட்டுரைகள் குறிப்பிடத்தக்கவை ஆகும். இவற்றில் செ. தேவி செந்தில் குமார், க. ஜெயந்தி, ஆ. ஜோசப் சார்லி ஆரோக்கிய தாஸ் ஆகியவர்களின் கட்டுரைகள் இங்கு சிறப்பித்துச் சொல்லப்படுகின்றன.

**1. தேவி செந்தில் குமார்.செ.**

செ.தேவி செந்தில் குமார் என்பவரின் 'தலித் பண்பாடு' என்னும் கட்டுரை ஒருங்கிணைந்த நிலையில் பண்பாட்டுத்தன்மை, பாதுகாப்புத் தன்மை, தன்னிச்சை அதிகாரம் மற்றும் தொடர்நிலை ஆகிய நான்கு கூறுகளை நோக்கிய ஒரு தேடலாக தலித் பண்பாடு உள்ளது என்று விளக்கம் தருகிறது. மேலும் தலித் மக்களின் பண்பாடு அவர்களின் வாழ்க்கையைப் பிரதிபலிப்பதுடன் அவர்கள் விரும்பும் விடுதலையையும் பறைசாற்றுகின்றது என்ற செய்தியையும் இந்தக் கட்டுரை கூறியுள்ளது.

**2. ஜெயந்தி. க.**

க. ஜெயந்தி என்பவரின் 'நாவல்களில் தீண்டாமை' என்ற கட்டுரை சாதிப் பெருக்கத்தின் தீய விளைவுகளில் ஒன்று 'தீண்டாமை' என்கிறது. மேலும் ஊர் கலைஞ்சு போச்சு, கடம்பவனம், காலச்சுமை, சித்தரக்கூடு, தகப்பன் கொடி, தழல், வன்மம், வாங்கல், வேரடிமண் ஆகிய ஒன்பது நாவல்கள் குறிப்பிடும் தீண்டாமைக் கொடுமைகளை வசிக்கும் இடங்களில், பணிபுரியும் இடங்களில், கடைகளில் மற்றும் கோயில்களில் எனப் பாகுபடுத்தி விளக்குகிறது. மேலும் போராட்டங்கள், சட்டங்கள் எனத் தீண்டாமைக்கு எதிரான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்ட போதும் தீண்டாமை தீர்க்கப்படாத ஒன்றாக இருக்கிறது என்பதையும் இந்த நாவல்கள் மூலம் அறியமுடிகிறது என்ற செய்தியையும் தருகிறது.

**3. ஜோசப் சார்லி ஆரோக்கிய தாஸ். ஆ.**

ஜோசப் சார்லி ஆரோக்கிய தாஸ். ஆ. என்பவரின் 'தலித் அரங்கியல்' என்னும் கட்டுரை இந்தியாவில் தலித் மக்களுக்கென தனி அரங்கு தேவைப்படுகிறது என்றும், அது ஆதிக்கச் சாதியினரின் வாழ்வு

முறைகளையும், பண்பாட்டு முறைகளையும் விமர்சிக்கும் நோக்கில் அமைவதோடு, தலித் மக்களின் வாழ்க்கையில் மாற்றத்தை ஏற்படுத்தும் நோக்கிலும் செயல்படுதல் வேண்டும் என்றும் குறிப்பிட்டுள்ளது.

## தொகுப்புரை

'தலித்தியம் தொடர்பான செய்திகள்' என்று விளக்கப்பட்டு வந்த அடிப்படையில் பின்வரும் செய்திகளைத் தொகுத்துத் தரலாம்.

1. 'தலித்' என்ற சொல் ஒடுக்கப்பட்டோரைக் குறிப்பதற்காக முதன்முதலில் மாராட்டிய மொழியில் பயன்படுத்தப்பட்டது. இது 'உரிமை எங்களுக்குத் தேவை, சலுகை எங்களுக்குத் தேவை இல்லை' என்ற கருத்தை மையமாகக் கொண்டது. 'தலித்' என்பதற்குப் 'பிற்படுத்தப் பட்டோர் அனைவரும் உணர்வு அடிப்படையில் இணையும் புள்ளி' என்று விளக்கம் கூறலாம். தீண்டாமையை உடைத்தெறிந்து சமூக மற்றும் பொருளாதாரத்தில் முன்னேறுவதே இதன் நோக்கம். மேலும் 'தலித்' என்பது 'தல்' என்ற எபிரேய மொழிச் சொல்லை அடிப்படையாகக் கொண்டது என்றும் தமிழ் மொழி 'தலித்' என்ற சொல்லை மராட்டியத் திலிருந்து வாங்கிப் பயன்படுத்துகின்றது என்றும் அறியமுடிகிறது. ஆகவே தலித்தைப் பற்றி இயம்புவது தலித்தியம் ஆகும்.

2. தமிழ் நூல்களில் சாதி குறித்த சொற்கள் மிகப்பழங்காலம் முதற்கொண்டே பதிவாகியுள்ளன. தமிழ் இலக்கண நூலான தொல்காப்பியம் நால்வருணத்தார்க்கும் கீழானோரை இழிந்தோர் என்கிறது. மேலும் தொல்காப்பிய அகத்திணையியலில் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை ஆகிய ஐவகை நிலங்களுக்குமான தாள இசைச்கருவிகளாக முறையே ஏறுகோட்பறை, வெறியாட்டுப்பறை மற்றும் தொண்டகப் பறை, நெல்லரிபறை, நாவாய்ப்பறை, ஆறலைப் பறை மற்றும் சூறை கொண்ட பறை ஆகியன குறிக்கப்பட்டுள்ளன. புலையன், அரும்பறை வினைஞர், இழிசினன், இழிபிறப்பாளர், புலைத்தி, துடியன், பாணன், பறையன், கடம்பன் போன்ற சாதிச் சொற்கள் சங்க இலக்கியங்களில் இடம்பெற்றுள்ளன. அரசின் ஆணைகளை அறிவிக்க 'பறை' பயன்படுத்தப்பட்ட செய்தியைப் பரிபாடல் கூறுகின்றது. திருக்குறள், நாலடியார், நல்வழி போன்ற நீதிநூல்களில் சாதி எதிர்ப்புக் கருத்துகள் உள்ளன. பக்தி இலக்கியங்களான நாலாயிர திவ்ய பிரபந்தம், திருநாளைப் போவார் புராணம், பேரூர் புராணம் போன்றவைகளிலும் சாதி குறித்த செய்திகள் உள்ளன. சிற்றிலக்கியங்களான பள்ளு மற்றும் குறவஞ்சி இலக்கியங்களில் பள்ளர் மற்றும் குறவர் இனத்தவர் எள்ளி நகையாடப்பட்டுள்ளனர். மேலும் அவர்களின் பேச்சு தரமற்றதாகப் படைக்கப்பட்டுள்ளது. சித்தர் பாடல்களில் சாதி அமைப்பு இல்லை என்ற கருத்து உள்ளது. அதோடு பிறப்புவழி அனைவரும் சமம், பிழைப்பதற்கு ஏற்படுத்தின அமைப்புதான் சாதி என்பது போன்ற கருத்துகளும் உள்ளன.

மறுமலர்ச்சிக் கவிஞரான பாரதியாரைத் தலித் நேயப் படைப்பாளி எனக் கூறலாம்.

3. சாதி இயக்கங்களில் ஒன்றான பிராமணர் அல்லாதார் இயக்கம் பிராமணர்களின் ஆதிக்கத்தையும், சமயச் சடங்குகளையும் எதிர்த்தது. நீதிக் கட்சியில் பிராமணர் அல்லாத மேல்சாதியினர் உறுப்பினர்களாக இருந்தனர். இவர்கள் தாழ்த்தப்பட்டோரின் முன்னேற்றத்திற்கு உதவவில்லை என்ற கருத்து உள்ளது. இந்து சமயத்திலிருந்து முழுமையாக வெளியேறாத காந்தியடிகள் தீண்டாமையை ஒழிப்பதன் வாயிலாகச் சாதியை ஒழிக்க முற்பட்டார். ஆனால், அம்பேத்கர் சாதியை ஒழிப்பதன் வாயிலாகத் தீண்டாமையை ஒழிக்க விரும்பினார். என்றாலும் காந்தியடிகளின் அரிசன இயக்கம் செல்வாக்குடன் விளங்கியது. சாதி ஒழிப்புப் போராட்டங்களில் நேரடியாக ஈடுபட்ட பெரியார் சுயமரியாதை இயக்கத்தைத் தோற்றுவித்தார். அமெரிக்க நீக்ரோக்களைப் பின்பற்றி மராட்டிய தலித் போராளிகள் 'தலித் பாந்தர்' இயக்கத்தை 1972 இல் பம்பாயில் தோற்றுவித்தனர். தமிழகத்திலுள்ள மதுரையில் 1978 இல் இந்த இயக்கம் தோன்றியது.

4. மராட்டியத்தில் காந்திய மற்றும் மார்க்சியக் கொள்கைப் படைப்பாளிகளோடு தலித் இலக்கியப் படைப்பாளிகளால் ஒன்றுபட இயலவில்லை. இதனால் அவர்கள் 'தலித் இலக்கியம்' என்ற ஒரு புது பிரிவைத் தோற்றுவித்தனர். 'அகார்' என்பது தலித் மக்களின் ஆதங்கத்தை வெளிப்படுத்தும் முதல் கவிதைத் தொகுப்பு ஆகும். தலித் இலக்கியங்கள் மாராட்டிய மொழியிலிருந்து இந்தி, கன்னடம், குஜராத்தி, தமிழ், தெலுங்கு எனப்பல மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டன. தமிழ் மொழியில் மறுமலர்ச்சிக் காலத்திலேயே தாழ்த்தப்பட்ட மக்களின் வாழ்வு படைப்புப் பொருளானது. ஆனால் அந்தக் காலத்தில் தமிழ் நாவல்களை ஆதிக்கச் சாதியினர் படைத்துள்ளதால் ஆதிக்கச் சாதி கதை மாந்தரைப் பண்புள்ளவர்களாகவும், கீழ்ச்சாதி கதை மாந்தரைப் பண்பற்றவர் களாகவும் படைத்துவிட்டு அவர்கள் மீது பரிதாபப்படும் நிலை காணப்படுகிறது. 1948 ஆம் ஆண்டிற்குப் பிறகு பாட்டாளி மக்களின் பிரச்சனைகள் கருப்பொருள்களாகியுள்ளன. மராட்டியத்தில் தலித் இலக்கியம் தோன்றின பின்பு 'தலித்' மக்களின் வாழ்வைக் கருவாகக் கொண்ட இலக்கியப் படைப்புகள் தமிழில் தோன்றின.

5. தமிழில் தலித் இலக்கியம் அதன் முழுமையான பொருளில் இருபதாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் தோன்றியது. தலித் இலக்கியத்தைத் 'தலித் படைப்பாளர்' தான் எழுத முடியும், 'தன்னைத் தலித்தாக உணரும் எவரும்' படைக்கலாம் என்பன தலித் இலக்கியப் படைப்பாளர் குறித்த இருவேறு கருத்துகள் ஆகும். தலித் இலக்கியப் படைப்பாளி எதார்த்தத்தை எழுதுபவராக இருக்க வேண்டும் என்றாலும்

தலித்துகள் தலித் இலக்கியத்தைப் படைப்பது சாலச் சிறந்தது. தமிழில் அழகிய பெரியவன், விழி.பா. இதயவேந்தன், இமையம், கே.ஏ. குணசேகரன், சிவகாமி, கே. டானியல், சோ. தர்மன், பாமா, பூமணி, ஸ்ரீதர கணேசன் போன்றோர் 'தலித் சமுதாயத்தைச் சார்ந்த' தலித் இலக்கியப் படைப்பாளர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவர். மேலும் அஸ்வகோஷ், இராமசாமி தனுஷ்கோடி, இன்குலாப், கோ. கேசவன், சு. சண்முக சுந்தரம், சு. சமுத்திரம், தி.க.சிவசங்கரன், சூரியதீபன், சோலை சுந்தர பெருமாள், கோவை ஞானி, இரா. நடராசன், பத்மாவதி விவேகானந்தன், பழமலய், பொன்னீலன், மேலாண்மை பொன்னுசாமி அ. மார்க்ஸ், ச.ராஜநாயகம், ஜெயகாந்தன், போன்றோர் 'தலித் அல்லாத' தலித் இலக்கியப் படைப்பாளர்கள் மற்றும் விமரிசகர்கள் ஆவர்.

6. தலித் இலக்கியப் படைப்பு வடிவங்களைத் தலித் கவிதைகள், தலித் சிறுகதைகள், தலித் நாவல்கள், தலித் நாடகங்கள், தலித் சுயசரிதைகள், தலித் மொழிபெயர்ப்புகள், தலித் ஒலிப்பேழைகள் எனப் பாகுபடுத்தலாம். தலித் கவிதைகள் தலித் மக்களின் அவல வாழ்வை வெளிப்படுத்துவதுடன் ஆதிக்க எதிர்ப்புணர்வைத் தூண்டுவனவாகவும் உள்ளன. ஹைகூ என்ற குறும்பா வடிவிலும் தலித் கருத்துகள் வெளிவந்துள்ளன. தலித் சிறுகதைகள் மற்றும் தலித் நாவல்கள் தலித் மக்களின் வாழ்க்கைப் பிரச்சனைகளை விளக்குவதுடன், சில தீர்வுகளையும் வெளிப்படுத்துகின்றன. தலித் நாடகங்கள் தலித் மக்களுக்கு விழிப்புணர்வைத் தூண்டுகின்றன. தலித் சுயசரிதைகள் ஒடுக்கப்பட்ட மக்களின் தனிப்பட்ட வாழ்க்கையைப் பற்றிய பதிவுகளாக உள்ளன. அவை அவர்கள் அனுபவித்த சமூகக் கொடுமைகளை மிகைப் படுத்தல் இல்லாமல் கூறுகின்றன. தலித் இலக்கிய மொழிபெயர்ப்புகள் தலித் விடுதலையைத் தூண்டுவனவாக அமைகின்றன. தலித் இசை ஒலிப்பேழைகள் தலித் முன்னேற்ற இயக்கங்களால் வெளியிடப் படுகின்றன. இவை தலித் மக்கள் அனுபவிக்கும் கொடுமைகள் மற்றும் தலித் மக்களின் எதிர்ப்புணர்வு, போராட்ட உணர்வு, விழிப்புணர்வு மற்றும் ஒற்றுமையுணர்வு இவைகளை வலியுறுத்துவனவாகவும், ஆதிக்கச் சாதியினரின் போலித்தனங்களைக் கேலி செய்வனவாகவும் அமைகின்றன.

7. தலித் சார்பான நிறுவனங்களில் அயோத்தி தாசப் பண்டிதர் என்பவரால் சென்னையில் 1902 இல் தோற்றுவிக்கப்பட்ட தென்னிந்திய பௌத்த சாக்கிய சங்கமும், பா. மோகன் லார்பீர் என்பவரால் மதுரையில் 1989 இல் தோற்றுவிக்கப்பட்ட தலித் ஆதார மையமும் குறிப்பிடத் தக்கவை ஆகும்.

8. தலித் இயக்கங்கள் தலித் மக்களுக்கு எதிராக நடைபெற்று வரும் பொருளாதாரச் சுரண்டலுக்கு எதிரான இயக்கங்களாகச் செயல்படுகின்றன. மேலும் அம்பேத்கரின் புரட்சிக் கருத்துகள் தமிழகம்

உட்பட உள்ள தலித் ஆர்வலர்களின் சிந்தனையைத் தூண்டினதால் தலித் இயக்கங்கள் பல புதிதாகத் தோன்றின. இவை தங்கள் நோக்கத்தை அடையத் தேவையான வழிமுறைகளைக் கையாளு கின்றன. மேலும் தலித் படைப்புகளை இதழ்கள் மற்றும் நூல்கள் வாயிலாகப் பிரசித்தப்படுத்தி தலித் மக்களின் விழிப்புணர்வைத் தூண்டுகின்றன.

9. தலித் இதழ்கள் தலித் விடுதலைக்கான படைப்புகளை வெளியிட்டுத் தலித் மக்களின் விழிப்புணர்விற்கு உதவுகின்றன.

10. தலித் மக்களின் வாழ்க்கையில் அழகுக்கூறுகள் இருந்தாலும் அவை அனைத்தும் இழிவானவையாகக் கருதப்படுகின்றன. எனவே சமுதாயத்தில் அழகாகப் பார்ப்பனவற்றைத் தலித் அழகியல் அழகற்றவையாகப் பார்க்கிறது.

11. தலித் மக்கள் அதிகார வன்முறைக்கு எதிராகப் பயன்படுத்தும் கலகமொழி தான் தலித் மொழி என்று அழைக்கப்படுகிறது. இந்த மொழி தலித் மக்களின் விழிப்புணர்வைத் தூண்டுகிறது. மேலும், 'தலித் விடுதலை' தலித் மொழியின் குறிக்கோளாகக் காணப்படுகிறது. எனவே கலகமொழியைப் படைப்பாக்குவதில் தலித் ஆர்வலர்கள் மிகுந்த ஆர்வத்தைக் காட்டுகின்றனர்.

12. தலித் சார்ந்த கொள்கைப் படைப்புகளாக ஆய்வு நூல்கள், கொள்கை நூல்கள், கட்டுரை நூல்கள் போன்றவை உள்ளன. இவற்றில் ஆய்வு நூல்கள் தலித் மக்களின் வாழ்நிலைகளையும், தலித் கலைகளையும், தலித்தியம் தொடர்பான செய்திகளையும் ஆராய்வனவாக விளங்குகின்றன. தலித்தியக் கொள்கைகளை உள்ளடக்கியனவாகத் தலித் கொள்கை நூல்கள் அமைகின்றன. தலித் தொடர்பான கட்டுரை நூல்களை ஓர் ஆசிரியரின் கட்டுரைகள் அடங்கிய தொகுப்புகள், பல ஆசிரியர்களின் கட்டுரைகள் அடங்கிய தொகுப்புகள், உதிரிக் கட்டுரைகள் எனப் பாகுபடுத்தலாம். தலித் கொள்கைச் சார்ந்த படைப்புகள் தலித் மக்களின் வாழ்க்கை நிலைகளை அலசி விழிப்புணர்வைத் தூண்டுகின்றன. மேலும், அவை பல புதிய சிந்தனைகளை வெளிப்படுத்துவதுடன் வாழ்வு சார்ந்த களம் அமையவும் உறுதுணைபுரிகின்றன.

இவ்வாறு 'தலித்தியம் தொடர்பான செய்திகள்'
தலித்துகளின் வாழ்க்கை மேம்பாடு தொடர்பான புதிய சிந்தனைகளைத் தரும் நோக்கில் உள்ளது.

# 2. சோலை சுந்தர பெருமாள் படைப்புகள்

தற்காலப் புனைகதை இலக்கியப் படைப்பாளர் வரிசையில் சிறப்புக்குரிய நபராக சோலை சுந்தர பெருமாள் கருதப்பட்டு வருகிறார். அவரது படைப்புகளை மையமாகக் கொண்ட இப்பகுதியில் சோலை சுந்தரபெருமாள் குறித்த அறிமுகம், சோலை சுந்தரபெருமாள் படைப்புகள், சோலை சுந்தர பெருமாள் படைப்புகளின் தன்மைகள், சோலை சுந்தர பெருமாள் படைப்புகளில் தலித் தொடர்பானவை என்ற அடிப்படையில் விளக்கங்கள் தரப்பட்டுள்ளன.

## 1. சோலை சுந்தர பெருமாள் குறித்த அறிமுகம்

சோலை சுந்தர பெருமாள் தற்போதைய திருவாரூர் மாவட்டத்தைச் சார்ந்த காவனூரில் 09-05-1953 இல் சுப்பிரமணியப் பிள்ளை, கமலம் தம்பதியினருக்கு மகனாகப் பிறந்தார். அவரது இயற்பெயர் சுந்தர பெருமாள். காவனூரின் முந்தைய பெயர் சோலைவனம். எனவே, அவர் தனது ஊரின் பெயரைத் தன்பெயருடன் இணைத்துக் கொண்டார். இளம் வயதில் தாயை இழந்த அவருக்கு அம்சவள்ளி என்பவர் வளர்ப்புத்தாய் ஆனார். பிறப்பால் சோழிய வெள்ளாளர் சமூகத்தைச் சார்ந்த அவர் சாதியில் உடன்பாடு அற்றவர். பதினொன்றாம் வகுப்பு வரை பள்ளியில் படித்த பின்பு, கலையியல் மற்றும் கல்வியியல் படிப்புகளை அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் அஞ்சல் வழியாகக் கற்றார். அவர் பத்மாவதியைத் தன் இல்லறத் துணைவியாக்கிக் கமலநாதன், கீதாஞ்சலி என்ற இரு பிள்ளைகளுக்குத் தந்தையானார். தற்போது அவர் அம்மையப்பன் என்ற ஊரில் உள்ள அரசு மேல்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணியாற்றி வருகிறார். அவர் "இருபது வயது வரை எழுத வேண்டும் என்ற உந்துதல் இல்லாமல் உடுத்துற துணிக்கும், உண்ணுகிற உணவுக்கும் வழியில்லாமல் காணப்பட்டேன்" (சோலை சுந்தர பெருமாள், தமிழ் மொழியை வளர்க்கப் போகிறவர்கள் மக்கள்தான், புதிய பார்வை, ஜூலை 1-15:2006: ப.64) என்கிறார். அதற்குப் பின்னர் எழுதத் தொடங்கிய அவர் முதன் முதலாக "தெற்கே ஒரு இமையம்" என்ற கவிதைத் தொகுப்பை வெளியிடும் முயற்சியில் ஈடுபட்டபோது, கவிஞர் பாலா 'இந்தக் கவிதைத் தொகுப்பில் உங்கள் முகம் இல்லை' என்று விமர்சனம் கூற அத்தனைக் கவிதைகளையும் தீ வைத்து எரித்தார். அதன் பின்னர் அவர் எழுதிய படைப்புகள் எதார்த்த வாழ்க்கையை விளக்குவனவாக அமைந்ததோடு, மாறுபாடான அணுகுமுறையையும் கொண்டதாகக் காணப்பட்டன. அவரது படைப்புகளில் பாத்திரங்களின் பேச்சு வழக்கிலும்,

படைப்பாளியின் மொழிநடையிலும் வட்டார வழக்குச் சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. மேலும், சடங்குகள், நம்பிக்கைகள் போன்றவற்றோடு பழமொழிகள், மரபுத் தொடர்கள், உவமைகள், நாட்டுப்புறப் பாடல்கள் ஆகியவை களையும் சேர்த்து இலக்கியப் படைப்புகளுக்கு மெருகேற்றம் செய்து வருகிறார்.

## 2. சோலை சுந்தர பெருமாள் படைப்புகள்

சோலை சுந்தர பெருமாள் படைப்புகளைச் சிறுகதைத் தொகுப்புகள், குறுநாவல்கள், நாவல்கள் என வகைப்படுத்தலாம்.

### 1. சிறுகதைத் தொகுப்புகள்

சோலை சுந்தர பெருமாள் படைப்புகளாக ஐந்து சிறுகதைத் தொகுப்புகள் வெளிவந்துள்ளன. அவை ஓராண்காணி (2000), மண் உருவங்கள் (2000), ஒரு ஊரும் சில மனிதர்களும் (2000), வண்டல் (2000), மடையான்களும் சில காடைகளும் (2006) என்பன. இந்தத் தொகுப்புகளில் மொத்தம் அறுபத்தைந்து சிறுகதைகள் இடம்பெற்றுள்ளன.

#### 1. ஓராண்காணி

திருப்பூர் தமிழ்ச் சங்க விருதினைப் பெற்ற இந்தத் தொகுப்பில் இறுக்கம் (புதிய பார்வை, டிசம்பர் 1994), பொறுத்திரு (மாலைக்கதிர்-இலக்கிய மலர், 1995), ரணம் (1995), கணைப்பு (தாமரை 1996), புத்தி (1994), தூண் (குமுதம், 1995), ஓராண்காணி (சுபமங்களா, 1995), இருப்பு (தாமரை, 1994), பொலி (தமிழரசி 1994), அக்கறை (கல்கி, 1995), வேலி (அமுதசுரபி-தீபாவளி மலர், 1994), வைக்கப்போரும் கடாவடிக்கு வாக்கப்பட்டவளும் (1995), புயல் (1994) ஆகிய பதின்மூன்று சிறுகதைகள் உள்ளன.

#### 1. இறுக்கம்

வேலுப்பிள்ளையை வள்ளி இரண்டாம் தரமாகச் சேர்த்துக் கொண்டாள். இவர்களுக்கு மகனாக முத்துக்கண்ணு பிறந்தான். ஊர் மக்கள் வியந்து பார்க்கும் அளவில் முத்துக்கண்ணுவை ஆளாக்கினாள் வள்ளி. ஆனால் அவன் தன் திருமணச் சடங்கு நிகழ்ச்சிகளில் 'அறுத்தவள்' என்று கூறித் தாயைப் புறக்கணித்தான். இதனால் வள்ளிக்கும், வேலுப்பிள்ளைக்கும் மனவருத்தம் ஏற்பட்டது. விதவை என்ற காரணத்தால் தன் திருமண விழாவில் தாயைப் புறக்கணித்த இளைஞனின் மனநிலை இந்தச் சிறுகதையில் இடம்பெற்றுள்ளது.

#### 2. பொறுத்திரு

விவசாயி கணேசம் பிள்ளை வீடு கட்டும் சங்கத்தில் கடன்வாங்கி தன் கூரை வீட்டை மாற்றி ஓடுபோட நினைத்தார். வீடு கட்டும் சங்கத்தின் அதிகாரி நல்லவராக இருந்த போதும் கிராம நிர்வாக அதிகாரியிடம்

இலஞ்சம் கொடுக்க வேண்டியிருந்தது. பல இன்னல்களைச் சந்தித்தபின் மனுவை நிரப்பிக் கொடுத்தார். கடன் வாங்க வந்த அன்று அலுவலகத்தில் எம்.எல்.ஏ. வந்து தன் சாதிக்காரர்களுக்கு முதலில் கடன் கொடுக்க வேண்டும் என்று கட்டளையிட்டார். அதிகாரி கணேசம் பிள்ளையைப் பார்த்துப் 'பொறுத்திரு' என்றார். ஏழை மக்களின் உரிமைகள் ஆட்சியாளர்களால் பறிக்கப்படுவதால் நேர்மையான அதிகாரிகளால் உதவ முடியாத நிலை இந்தக் கதையில் குறிக்கப்பட்டுள்ளது.

**3. ரணம்**

சாமிக்கண்ணு என்பவரும் அவரது மகனும் விவசாய வேலை மட்டுமில்லாமல் கிடைக்கும் வேலைகள் அனைத்தையும் செய்து பணம் சேமித்துக் கோலடியில் நிலம் வாங்கினர். மரம் முறிக்கும் வேலைக்குச் சென்ற இடத்தில் சாமிக்கண்ணுவின் மகனின் கால் ஒடிந்தது. நகர மருத்துவமனையில் அதிக பணம் தேவைப்பட்டது. எனவே, சாமிக்கண்ணு தான் வாங்கின நிலத்தை விற்க முடிவு செய்தார். எதிர்பாராமல் நடந்த விபத்தால் ஆசைப்பட்டதை அனுபவிக்க முடியாமல் போன நிலையை இந்தக் கதை விளக்குகிறது.

**4. கணப்பு**

முத்தையா ஆசாரி தன் இளைய மகள் காமாட்சியை நகரத்தில் உள்ள பள்ளியில் சேர்க்க அவள் காதில் அண்மையில் செய்து போட்ட இரண்டு கிராம் கம்மலை விற்றார். பள்ளியில் கட்டிடம் கட்டுவதற்கான நிதிக்காக ஆறு ஐம்பது ரூபாய்ச் சீட்டுகளை அவளுக்குக் கொடுத்தனர். இதனால் பள்ளிக்குச் சென்ற முத்தையா ஆசாரி தன் ஏழ்மை நிலையை விளக்கிக் கூறினார். உடனே பெற்றோர் ஆசிரியர் சங்கத் தலைவர், "பணத்தோட பொண்ணை அனுப்பு. இல்லாட்டா அம்பது ரூவாயக் கொடுத்து டி.சி.யை வாங்கிட்டுப் போ" (சோலை சுந்தர பெருமாள், ஓராண்காணி, 2000, ப. 54) என்றார். மாத்திரை வாங்க மருந்துகடை வந்த முத்தையா ஆசாரியின் காதுகளில் "ஏழை எளிய மக்களுக்கு உயர்கல்வி கிடைக்க தீட்டப்பட்ட திட்டத்திற்கு உலக வங்கி இரண்டாம் தவணையாக இருநூறு கோடி ரூபாயை விடுவித்து இருக்கிறது" (சோலை சுந்தர பெருமாள், ஓராண்காணி, 2000, ப. 55) என்ற வானொலிச் செய்தி கேட்கவில்லை. இந்தச் சிறுகதையில் ஏழைப் பிள்ளைகளின் கல்விக்கு அரசு நிதி ஒதுக்கினாலும், அது அவர்களைச் சென்று அடையாததால் அவர்களுக்குக் கல்வி 'எட்டாக்கனி'யாகக் காட்சியளிக்கின்றது என்ற கருத்து வலியுறுத்தப்பட்டுள்ளது.

**5. புத்தி**

முதியவளான செங்கம்மா என்பவள் நகரப் பேருந்து நடத்துநர் தன்னை ஒருவிதமாகவும், நல்ல ஆடைகள் அணிந்தவர்களை இன்னொரு

விதமாகவும் நடத்துவதைக் கவனித்தாள். நடத்துநர் செங்கம்மாவிற்குப் பயணச்சீட்டின் மீதிப் பணத்தைக் கேட்டும் கொடுக்கவில்லை. கண்முன் நடக்கும் அநியாயத்தைத் தட்டிக் கேட்காதவர்களுக்கு "ஏன் இந்த வெள்ளை சட்டை? படிப்பு ..." (சோலை சுந்தர பெருமாள் ஓராண்காணி 2000, ப. 64) என்று நினைத்தாள். கல்வி கற்றவர்கள் அநியாயத்தைத் தட்டிக் கேட்க வேண்டும் என்ற கருத்தை ஆசிரியர் இந்தக் கதையில் செங்கம்மா வாயிலாக வலியுறுத்தியுள்ளார்.

### 6. தூண்

கல்யாணசுந்தரம் வாத்தியார் ஊர் மாணவர்களுக்கு மட்டுமல்லாமல் ஊர் மக்களுக்கும் எழுத்து அறிவித்தவர். அவரது மருமகன் பாண்டியன் ஆசிரியர் அனைவராலும் இளைய சோழன் என்று அழைக்கப்பட்டார். மந்திரி வரை செல்வாக்கில் உள்ள அவர் விடியற்காலையில் எழுந்து தன் விளைநிலங்கள் அனைத்திற்கும் சென்று பார்வையிட்ட பின்னர் ஆசிரியர் ஓய்வு அறைக்கு வந்து பிள்ளைகளின் கட்டுரைப் புத்தகக் கட்டைத் தலைக்கு வைத்து, காலை நீட்டித் தூங்கினார். ஓய்வு பெற்ற கல்யாண சுந்தரம் வாத்தியார் மருமகனைப் பார்க்க பள்ளிக்கு வந்து, இந்தக் காட்சியைக் கண்டு மனம் வருந்தினார். இந்தக் கதையில் மாணவர்களுக்கு எடுத்துக்காட்டாக இருக்க வேண்டிய ஆசிரியரின் கீழ்த்தரமான நிலை சித்தரிக்கப்பட்டுள்ளது.

### 7. ஓராண்காணி

மலர் என்ற பெண் திருமணமான சில நாட்களில் கணவனின் ஆதிக்க மனப்பான்மையை உணர்ந்தாள். புடவை கட்டுவதிலும் அவள் ஆசை நிராகரிக்கப்பட்டுக் கணவனின் ஆதிக்கம் மேலோங்கியது. இதனால், "வாழ்க்கை என்கிறது புருஷனுக்கு மட்டும்தானா? நமக்குன்னு ஆசை இருக்கே. அவருக்கு அது தெரியலியே" (சோலை சுந்தர பெருமாள், ஓராண்காணி, 2000, ப. 93) என்று ஏக்கம் அடைந்தாள். இந்தச் சிறுகதையில் ஆணாதிக்க மனப்பான்மையால் மனைவியின் உணர்வுகள் மதிக்கப்படாத நிலை விளக்கப்பட்டுள்ளது.

### 8. இருப்பு

பொன்னுசாமியின் மகன் மோகன் ஏழையாக இருந்த காரணத்தால் அவன் வாங்கின 'மெடல்' வேலைக்கு உதவவில்லை. பொன்னுசாமியின் தம்பி மகன் தோல்வியுற்றுப் படித்தவன். ஆனால், பணம் இருந்ததால் அந்த ஊரிலுள்ள பள்ளியில் நியமன உத்தரவு வாங்கினான். எம்.எல்.ஏ. இருவருக்கும் உறவு. எனினும், பணத்திற்கு அடிமையானார். பணமும், செல்வாக்கும் உடையவர்கள் கல்வியில் பின்தங்கி இருந்தாலும் அரசியல்வாதிகளின் துணையுடன் அரசாங்க வேலை பெறுவதை இந்தச் சிறுகதையில் காணலாம்.

## 9. பொலி

காசிக்கோனார் கிடை மேய்த்துச் சேகரித்த பணத்தை அவர் மகன் குடித்து அழித்தான். மேலும், அவன் தன் மகளுக்குப் பள்ளியில் படிக்கப் பணம் கொடுக்க வேண்டும் என்ற சிந்தை இல்லாமல் தன் தகப்பன் வளர்த்த இரண்டு ஆட்டுக்கிடாக்களை விற்றான். அந்தப் பணத்தின் பெரும்பகுதியை வேறு பெண்ணிடம் இன்புறுவதற்குக் கொண்டு போனான். இதனால், காசிக்கோனார் தன் மகனைச் சார்ந்திருந்து ஓய்வு எடுக்க வேண்டிய முதிய வயதில் தான் வளர்த்த பொலி காளையைச் சார்ந்திருந்தார். அவர் பணத்திற்கு ஆசைப்பட்டு விலங்குகளைத் துன்புறுத்தாதவர். ஆனால், மகன் செய்யும் தவறுகளைத் தட்டிக் கேட்க இயலாதவராகத் தன் பேரப்பிள்ளைகளுக்காக மகனின் அடியையும் தாங்கி காலம் கடத்தினார். குடிப்பழக்கத்தால் கடமை தவறியவர்களின் குடும்பத்தினர் துன்புறும் நிலை இந்தக் கதையில் விளக்கம் பெற்றுள்ளது.

## 10. அக்கறை

நகரத்திற்கு வேலை தேடிச் சென்ற முப்பது வயது கிராமத்துப் பட்டதாரி நகரத்தில் பல அவலங்களைச் சந்தித்தான். பள்ளிப் பருவத்தில் உழவுத் தொழிலைச் செய்த அவன் கல்லூரிப் பருவத்தில் செய்யாமல் இருந்தான். மீண்டும் நகரத்திலிருந்து வந்த பின்பு அந்தத் தொழிலைச் செய்ய முயன்றான். நகரத்தில் இயந்திர வாழ்க்கை, தண்ணீர் மற்றும் இடம் ஆகியவற்றின் பற்றாக்குறை, படிப்பிற்கு ஏற்ற வேலையின்மை போன்றவை இருப்பதை இந்தக் கதை காட்டுகிறது.

## 11. வேலி

ரகுபதி வாத்தியார் வெங்கிட்டுச் சாமிப் பிள்ளையிடம் ஐம்பது குழி வீட்டுமனை வாங்கினார். அந்த வீட்டுமனையின் தென்பகுதி என்னுடையது என்று கூறி சாமிநாதன் அந்த நிலத்திலிருந்து இரண்டு தப்புடி நிலத்தை அபகரித்து வேலி போட்டான். வாத்தியாரால் சாமிநாதனை எதிர்க்க இயலவில்லை. பெரிய மனிதர்கள் ரகுபதி வாத்தியாருக்கு உதவவில்லை. கிராமத் தலைவர் “இந்த எடம் எல்லாம் ‘நத்தம் சாரி'. அது யாருக்கிட்ட அனுபவத்தில் இருக்கோ அது அவங்களுக்குன்னு தான் என்று யாரும் சொல்லுவாங்க" (சோலை சுந்தர பெருமாள், ஓராண்காணி, 2000, ப. 136) என்றார். வெங்கிட்டுச் சாமிப் பிள்ளையைச் சென்று பார்த்தால் ஏதாவது வழி கூறுவார் என்று நினைத்த வாத்தியார் அவர் வீட்டிற்குச் சென்றார். அங்கு வெங்கிட்டுச் சாமிப் பிள்ளையின் தம்பி பிள்ளைகள் அவரை அடித்தனர். இரத்தம் வடியும் நிலையில் வேறு சிலர் அவரை வண்டியில் ஏற்றினர். இந்தச் சிறுகதையில் நியாயமும், மனிதநேயமும் இல்லாமல் எளியவர்கள் ஒடுக்கப்படும் நிலை சித்தரிக்கப்பட்டுள்ளது.

## 12. வைக்கப்போரும் கடாவடிக்கு வாக்கப்பட்டவளும்

வேலுச்சாமி என்பவன் மனைவி பாக்கியத்தையும், கைக்குழந்தை தங்கத்தையும் விட்டுவிட்டு டீக்கடைக்காரன் மகளுடன் சென்றான். பாக்கியம் மனம் தளராமல் செட்டியார் பண்ணையில் வைக்கோல் போர் அடித்தும், கடாவடி ஓட்டியும் பணம் சேமித்து மகளைப் படிக்க வைத்தாள். இந்த நிலையில் வேலுச்சாமியுடன் இருந்தவள் பாத்திரக்காரனோடு போனதால் வேலுச்சாமி மீண்டும் பாக்கியத்தைத் தேடி வந்தான். தந்தையைக் குறித்துப் பேசின மகளிடம் "இப்பதான் ஒப்பன கண்டிருக்கியாடி. சரிதான் போடி ..." (சோலை சுந்தர பெருமாள், ஓராண்காணி, 2000, ப. 158) என்று கூறி அவனைக் கண்டு கொள்ளாமல் தன் வழியில் சென்றாள். அரும்பாடுபட்டுக் கூலி வேலை செய்து வாழ்ந்தாலும் தன்மானத்தோடு வாழும் பெண்ணின் நிலையை இந்தச் சிறுகதை காட்டுகிறது.

## 13. புயல்

சிங்காரம் பிள்ளை மரம் வளர்ப்பதில் ஆர்வம் கொண்டவர். புயல் அடித்ததால் அவருக்கும், அவ்வூரினருக்கும் இழப்பு ஏற்பட்டது. சிங்காரம் பிள்ளையின் வீட்டிற்குப் பக்கத்தில் உள்ள ஓட்டு வீட்டின் மேல் புளியமரம் விழுந்தது. அந்த வீட்டுக்காரர்கள் அங்கு இல்லை. எனவே, திருடர்கள் கிடைத்ததைச் சுருட்டினர். இதைக் கண்ட சிங்காரம் பிள்ளையின் மனது இயற்கையின் சீற்றமான புயலைப் போல் சீற்றம் கொண்டது. 'எரிகிற வீட்டில் பிடுங்கினது வரை இலாபம்' என்று கருதும் தீய மனநிலையால் ஏற்படும் மனித நேயமின்மை இந்தச் சிறுகதையில் விளக்கம் பெற்றுள்ளது.

"ஓராண்காணி" என்ற தொகுப்பிலுள்ள சிறுகதைகள் இளைஞனின் மூடத்தனமான மனநிலை, ஆட்சியாளர்களால் மனித உரிமைகள் பறிக்கப்படுதல் (பொறுத்திரு, இருப்பு), ஆசைப்பட்டதை அனுபவிக்க இயலாத நிலை, ஏழைகளுக்குக் கல்வி எட்டாக்கனி ஆகும் நிலை, கற்றவர்கள் அநியாயத்தைத் தட்டிக் கேட்க வேண்டும் என்ற கருத்து, ஆசிரியரின் இழிவுநிலை, ஆணாதிக்கம், மகனின் குடிப்பழக்கத்தால் துயருறும் குடும்பத்தினர் நிலை, கிராமத்து இளைஞன் படிப்பிற்கு ஏற்ற வேலை இன்மையால் துன்புறுதல், மனித நேயமின்மை (வேலி, புயல்), தன்மானத்துடன் வாழும் பெண்ணின் தன்மை ஆகிய செய்திகளைக் கருப்பொருள்களாகக் கொண்டுள்ளன.

## 2. மண் உருவங்கள்

ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியாவும், தமிழ் எழுத்தாளர் நல நிதியமும் இணைந்து வழங்கின விருதினைப் பெற்ற இந்தச் சிறுகதைத் தொகுப்பில் ஆசை (1990), எதிர்பார்ப்புகள் (1989), வீட்டில் இல்லை (1989), வேர் (1990), காத்திருக்கிறாள், உழைப்பு (1990), நிஜங்கள் (1989), வேலை (1990), மண் உருவங்கள் (1990) என ஒன்பது சிறுகதைகள் உள்ளன.

**1. ஆசை**

உழைப்பு என்றும் வீணாகப் போகாது என்ற நம்பிக்கை கொண்ட பொன்னுசாமி சிறிது சலனப்பட்டு லாட்டரிச் சீட்டு எடுத்தான். அந்தச் சீட்டிற்குப் பரிசு கிடைக்கவில்லை. எனவே, பரிசு விழுந்ததாகக் கருதப்பட்ட முதியவரின் சீட்டை ஏமாற்றி வாங்கினான். இறுதியில் அந்தச் சீட்டுப் போலி என்று அறிந்து வருந்தினான். பின்பு 'உழைப்பே உயர்வு' என்பதை உணர்ந்து மிளகாய்க் கொல்லையில் வேலைக்குச் சென்றான். இந்தச் சிறுகதை உழைப்பின் நிம்மதி வேறு எதிலும் கிடைக்காத நிலையை உணர்த்துகிறது.

**2. எதிர்பார்ப்புகள்**

தையம்மா என்பவள் சின்னப்பண்ணை அம்மாவிடம் அரிசி வாங்கலாம் என நினைத்துப் பண்ணை வீட்டிற்குச் சென்றாள். அங்கு வேதாசலம் தொடர்ச்சியாகப் பல வேலைகளைக் கொடுத்தார். அவள் இளமையைச் சுட்டிப் பலவாறாகப் பேசினார். அவள் அஞ்சினாலும் பணத்தை எதிர்பார்த்து அனைத்து வேலைகளையும் செய்தாள். இறுதியில் கூலியாக இரண்டு ரூபாயை அவள் கையில் தூக்கிப் போட்டார். அவள் "என்னங்கைய்யா ரெண்டு ரூபா தானா? இம்மா நாழி வேலப் பாத்துருக்கேன் ..." (சோலை சுந்தர பெருமாள், மண்உருவங்கள், 2000, ப.30) என்றாள். அப்போது அவள் கணவன் அய்யாவு வந்து வேதாசலத்தைக் கும்பிட்டுத் தையம்மாவை அழைத்துச் சென்றான். தையம்மா என்பவள் வறுமையின் காரணமாக மனதில் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு அனைத்து வேலைகளையும் செய்தாலும், வேலைக்கு ஏற்ற கூலி இல்லாத நிலை இந்தச் சிறுகதையில் கருப்பொருளாக அமைந்துள்ளது.

**3. வீட்டில் இல்லை**

சிவானந்தத்தின் மாமியார் குடும்பப் பிரச்சனையைப் பெரிதாக்கித் தன் மகள் தனிக்குடித்தனம் செல்ல வழிவகுத்தாள். தன் மகள் கர்ப்பம் தரிக்காததற்குக் காரணம் வீடு என்று கூறி சிவானந்தத்தின் அம்மா மனதைப் புண்படுத்தினாள். சிறிது காலத்தில் அந்த வீட்டில் மூத்த மருமகளுக்குக் குழந்தை பிறந்தது. தனிக்குடித்தனம் சென்ற இளைய மருமகளை நோய் தாக்கியது. இந்தச் சிறுகதையில் பிரச்சனை வீட்டில் இல்லை. வீட்டில் வசிக்கிறவர்களுக்குத் தான் என்ற கருத்து வலியுறுத்தப்பட்டுள்ளது.

**4. வேர்**

சித்திரை மாதக் கடுங்கோடையின் அகோரத்தால் குப்பம்மாளின் பேத்தி செல்லாச்சி இறந்தாள். தானும் சாக வேண்டும் என நினைத்த குப்பம்மா மனம்மாறி, தன் பேத்தியின் நிலை யாருக்கும் வராமல் இருக்கக்

கருவை மரங்கள் நட்டாள். மரங்களின் பயன்களைத் தெரியாத பாவிகள் மரக்கிளைகளை வெட்டினர். மனம் ஒடிந்த குப்பம்மா, "நான் காப்பாத்தியே தீருவேன். இங்கேயே குடியிருப்பேன்" (சோலை சுந்தர பெருமாள், மண் உருவங்கள், 2000, ப.46) என்று தீர்மானித்துத் தூக்கில் தொங்கினாள். அந்த ஊரில் அளவுக்கு அதிகமாக மழை பெய்தது. காட்டாற்றுக் கரையை உடைத்துக் கொண்டு வந்த நீரை ஊரில் விடாமல் குப்பம்மாள் நட்ட தோப்புத் தடுத்துநின்றது. இந்தக் கதையில் இயற்கை வளங்களை அழிக்கக்கூடாது என்ற கருத்து உள்ளது.

### 5. காத்திருக்கிறாள்

சிங்காரம் இந்த மகசூலிலாவது தன் மகள் சரோஜாவின் திருமணத்தை முடிக்க நினைத்தான். கடனுக்கு உரம் வாங்கிப் போட்டுக் கோவில் மானிய நிலத்தில் உழைத்தான். முதலில் மழை ஏமாற்றினாலும் பின்பு பெய்து அவன் மனதில் மகிழ்ச்சியை ஏற்படுத்தியது. அறுவடையின் போது ஏராளமாகப் பதர் இருப்பதைக் கண்டு மனம் வருந்தினான். இந்த மகசூலை நம்பிக் காத்துக்கொண்டிருக்கும் மகளின் திருமணம், கூட்டுறவுக்கடன், வட்டிக் கடையில் வைத்து மீட்க இயலாத பாத்திரங்கள், தாலி, உரக்கடைக் கடன் மற்றும் வட்டி, பண்ணையின் விதை நெல் கடன் இவைகளை நினைத்துக் கொண்டு சிங்காரம் கிடைத்த நெல்லை வண்டியில் ஏற்றி அரசு கொள்முதல் நிலையத்திற்குச் சென்றான். கொள்முதல் நிலையத்தார் கேட்ட இலஞ்சப் பணத்தைக் கொடுப்பதாகக் கூறிய சிங்காரம் எஞ்சிய பணத்தைப் பெற்றுக் கொண்டான். கடன்களை அடைத்தான். மூன்று நூறு ரூபாய்த் தாள்களும், சிறிது சில்லறைகளும் மீதி இருந்தன. கடுமையாக உழைத்த பிறகும் குடும்பத்தின் தேவைகளை நிறைவு செய்ய இயலாத நிலையும், பாடுபட்ட வருமானத்தில் இலஞ்சம் கொடுக்கும் சிறு விவசாயியின் அவல நிலையும் இந்தக் கதையில் விளக்கம் பெற்றுள்ளன.

### 6. உழைப்பு

பெரியான் என்பவன் பயிர், மிளகு போன்றவைகளை நட்டுப் பராமரித்தான். அன்று ஊரிலுள்ள சிலர் மரங்களை வெட்டிப் பணம் சம்பாதித்தனர். அவன் இதைத் தன் மனைவி அம்மாக்கண்ணுவிடம் கூற, அவள் 'இது ஒரு பிழைப்பா?' என்றாள். அடுத்த நாள் அம்மாக்கண்ணு கோடரியை மறைத்து வைத்தாள். மைத்துனன் வீட்டிற்குக் கோடரியைத் தேடிச் சென்ற பெரியான் வரும் வழியில் மரம் வெட்டியவர்களைக் காவல் துறையினர் கைது செய்த செய்தியை அறிந்தான். தான் தப்பியதை நினைத்து மகிழ்ந்தான். உழைப்பின் மேன்மையை உணர்ந்து மிளகாய்க் கொல்லைக்குப் போனான். அங்கு அவனைத் தேடிவந்த அவன் மனைவி, "பாட்டன் தலைமுறையா நாம ஒழச்சுப் பொழப்பு நடந்தறோம் மறந்து போகாதே" (சோலை சுந்தர பெருமாள், மண் உருவங்கள், 2000, ப.67)

என்றாள். இந்தக் கதையில் நேர்மையான முறையில் செய்யும் முயற்சியால் வாழ்க்கையில் துன்பம் நேராது என்ற கருத்து உள்ளது.

**7. நிஜங்கள்**

பேருந்து தொழிலாளர் பிரச்சனையால் மூர்த்தி உட்பட அனைத்துப் பயணிகளின் பயணமும் தடைபட்டது. தன் அம்மாவின் இருமலுக்கு மருந்து வாங்க வந்தவனைப் பசி தாக்கியது. சோடா விற்கும் சிறுவனிடம் ஒரு சோடா வாங்கிக் குடித்தான். பணம் கொடுக்க கால்சட்டையில் வைத்திருந்த பர்ஸைத் தேடினான். சம்பளம் இருந்த பர்ஸ் தொலைந்ததை அறிந்து அதிர்ந்தான். உண்மையை உணராது அனைவரும் அவனை இழிவாகப் பேசித் தாக்கினர். மூர்த்தியிடமிருந்து பிச்சை வாங்கின பிச்சைக்காரன் "ஏன் சார் ... ஏமாத்துறது ஒரு பொளைப்பா? இப்படி ஏமாத்திப் பொளைப்பு நடத்துறதோட மானமரியாதையோட பிச்சை எடுத்துச் சாப்பிடலாம் சார்" (சோலை சுந்தர பெருமாள், மண் உருவங்கள், 2000, ப.73) என்று புத்தி கூறினான். கவனக்குறைவால் ஏற்படும் பாதிப்பை இந்தச் சிறுகதை சித்தரிக்கிறது.

**8. வேலை**

நேர்முகத் தேர்வுகள் பலவற்றிற்குச் சென்றும் வேலை கிடைக்காத காரணத்தால் கிராமத்து இளைஞன் சேகர் கூலி வேலைக்குச் சென்றான். அங்கு அவன் பனியனையும், காலணியையும் கழற்றவில்லை. செட்டியார், "இவனைப் பாத்தா கூலி வேலை பார்க்குற ஆளாகவாத் தெரியுது. ஆபீஸ் உத்தியோகம் பாக்க வந்தவ மாதிரியில்ல நிக்கிறான்" (சோலை சுந்தர பெருமாள், மண் உருவங்கள், 2000, ப.73) என நினைத்து வேலை செய்ய அனுமதிக்கவில்லை. உழைப்பதாக நினைத்தாயிற்று. இனி இந்த இடத்தில் யாரும் வேலை தரமாட்டார்கள். அதனால் வேறு இடத்திற்குச் செல்லலாம் என்று முடிவெடுத்த சேகர், சிவகாசியில் சரக்குந்து கொட்டகையில் சரக்குத் தூக்கி வீட்டிற்குப் பணம் அனுப்பினான். ஒரு தொழிலுக்குச் சென்றால் அந்தத் தொழிலைச் செய்யும் தொழிலாளி போல் மாறவேண்டும் என்ற கருத்தை ஆசிரியர் இந்தச் சிறுகதையில் வலியுறுத்தியுள்ளார்.

**9. மண் உருவங்கள்**

வீரபத்திரனும் அவன் மனைவி கோதையும் குழந்தைப் பேற்றிற்காக வீரபத்திரனின் தாய் அங்காளம்மை கூறியபடி வெள்ளிக்கிழமை திருஷ்டி சுற்றிப் போட்டு நாற்பத்து எட்டு நாட்கள் விரதம் இருந்தனர். குலதெய்வத்திற்குப் பூஜையிட்ட பின்பு அய்யனாருக்குக் குதிரை விட்டுக் களியாட்டம் போடுகையில் "அங்காளம்மையும், கோதையும் அய்யனாரை மனதில் பதித்துக் கொண்டு ஆண் குழந்தை உருவத்தை வீரபத்திரனின் தலையில் பயபக்தியுடன் ஏற்றி

வைத்தார்கள்" (சோலை சுந்தர பெருமாள், மண் உருவங்கள், 2000, ப.94). நம்பிக்கை மற்றும் வழிபாட்டு முறைகள் சார்ந்த செய்திகள் இந்தச் சிறுகதையில் இடம் பெற்றுள்ளன.

'மண் உருவங்கள்' என்ற இந்தச் சிறுகதைத் தொகுப்பில் உழைப்பின் மேன்மை, வேலைக்கு ஏற்ற கூலியின்மை, குடும்பப் பிரச்சனை, இயற்கைப் பாதுகாப்பு, தொழிலாளியின் தேவைகள் சந்திக்கப்படாத நிலை, நேர்மையால் ஏற்படும் மனநிம்மதி, கவனக்குறைவால் இளைஞன் சந்திக்கும் அவலங்கள், வேலையில்லாத் திண்டாட்டத்தால் பட்டதாரி இளைஞன் சந்திக்கும் பிரச்சனைகள், நம்பிக்கை மற்றும் வழிபாட்டு முறைகள் ஆகியனவற்றைக் கருப்பொருள்களாகக் கொண்ட சிறுகதைகள் உள்ளன.

### 3. ஒரு ஊரும் சில மனிதர்களும்

பாரத ஸ்டேட் வங்கியின் இலக்கிய விருதினைப் பெற்ற இந்தச் சிறுகதைத் தொகுப்பில் பொன்கூடு (தமிழரசி, 1995), பட்டா (தமிழரசி, 1996), உழவு (தாமரை, 1995), நாளைய .... (ஜூன் 1994), நிலாக்காலம் (புதியபார்வை, 1995), ஒரு ஊரும் சில மனிதர்களும் (திருச்சி வானொலி - இலக்கியச் சோலை, 1996), பிழைப்பு (புதிய பார்வை, 1996), காத்திருக்கிறாள், வெள்ளாடுகளும் சில கொடி ஆடுகளும் (மாலைக்கதிர் – நாவல்கதிர், 1996) ஆகிய ஒன்பது சிறுகதைகள் உள்ளன.

#### 1. பொன்கூடு

சிவகுருநாதன் என்பவன் சரசுவைத் திருமணம் முடித்த மூன்றாம் மாதம் அயல்நாட்டில் வேலைக்குச் சென்றான். சரசுவின் "மாமியாருக்குத் தங்கமான மனசு. மாமனார் பெத்த மகளை விடவும் சிறப்பாக மருமகளைக் கவனித்துக் கொண்டார். டி.வி பெட்டியிலிருந்து போட்டுக் குளிக்கிற சோப்பு வரைக்கும் அவள் கணவன் அயல்நாட்டிலிருந்து கொண்டு வந்ததுதான்" (சோலை சுந்தர பெருமாள், ஒரு ஊரும் சில மனிதர்களும், 2000, ப. 8). இப்படி அனைத்து வசதிகளுடன் சரசு சிறப்பாக வாழ்ந்தாள். எனினும் கணவனின் பிரிவு அவளை வாட்டியது. 'கணவனின் இடத்தை எந்தப் பொருளாலும் நிரப்ப இயலாது' என்ற கருத்தை ஆசிரியர் இந்தச் சிறுகதையில் வெளிப்படுத்தியுள்ளார்.

#### 2. பட்டா

தன்மானம் உடைய சின்னக்குஞ்சான், செங்கம்மா தம்பதியினர் இரவுபகலாக உழைத்துப் புன்செய் நிலம் வாங்கப் பணம் சேகரித்தனர். பத்திரப்பதிவு அலுவலகத்தில் கடைநிலை ஊழியர் முதல் மேல்நிலை ஊழியர் வரை அனைவரும் இலஞ்சம் வாங்கினர். அன்று அலுவலகத்திற்கு வந்த இலஞ்ச ஒழிப்பு அதிகாரிகளும் இலஞ்சத்திற்கு

மயங்கினர். கேட்ட இலஞ்சத்தில் குறைவு பட்டபோது கிராம நிர்வாக அதிகாரி, "பட்டா வாங்க எங்கிட்டத்தான் வந்தாவணும் ... வா பாத்துக்கிறேன் ..." (சோலை சுந்தர பெருமாள், ஒரு ஊரும் சில மனிதர்களும், 2000, ப.24) என்றார். அரசு ஊழியர்கள் நியாய உணர்வு இல்லாமல் செயல்படும் நிலையை இந்தச் சிறுகதை சுட்டிக்காட்டியுள்ளது.

**3. உழவு**

காத்தமுத்துவிற்கு மூன்று பெண்கள். ஓர் ஆண் மகன். மூத்த மகளைத் திருமணம் செய்து கொடுத்தான். மருமகனின் குடிப் பழக்கத்தால் மகள் அன்றாடத் தேவைக்குப் பாடுபட்டாள். காத்தமுத்து உழைத்த பணத்தின் பெரும்பகுதி மூத்தமகளின் குடும்ப முன்னேற்றத் திற்குச் சென்று, அதுவும் பலனில்லாமல் போனது. மகன் போதைப் பாக்கிற்கு அடிமையானான். தன் வீட்டில் திருடினான். இதை அறிந்த காத்தமுத்து, "நீயாவது நல்லா இருப்பேன்னுதாண்டா நான் இப்படி வேகாத வெயில்ல நின்னு சம்பாதிச்சு ஒன்னப் பள்ளிக்கூடம் அனுப்புறேன். என்னோட ஆசையில மண்ண அள்ளிப் போட்டுக்கிட்டு நீ போதைக்கான பாக்கு திங்கப் போயிட்டியாடா? படுபாவி" (சோலை சுந்தர பெருமாள், ஒரு ஊரும் சில மனிதர்களும், 2000, ப.35) என்று கதறினான். வெயிலில் நின்று உழைக்கும் தொழிலாளி குடும்பத்தினரின் பரிதாப நிலை இந்தச் சிறுகதையில் சித்தரிக்கப்பட்டுள்ளது.

**4. நாளைய ...**

பள்ளி வாத்தியார் கதிரேசன் தன் மகன் சிவசங்கரனை ஓடி ஆடி விளையாட வேண்டிய சிறுவயதில் பள்ளிக்கு விடாமல் தடுத்தார். இதனால், "சின்னப் புள்ளங்களுக்குச் சொல்லிக் கொடுக்கிற வாத்திதானே, அதுவும் இருக்கிறதுலேயே மட்டமான வாத்தி. அதுக்கு ஏத்தாப்போலத்தானே புத்தி இருக்கும் .... வாத்தி புள்ள மக்கு, வைத்தியன் புள்ள சீக்கு" (சோலை சுந்தர பெருமாள், ஒரு ஊரும் சில மனிதர்களும், 2000, ப.42) என்று பல வசைச் சொற்களுக்கு ஆளானார். சிறுவயதில் பள்ளிக்கு விடாமல் தன் குழந்தையைத் தடுக்க முடிந்த அவரால் பிற குழந்தைகளைத் தடுக்க இயலவில்லை. பெற்றோரின் ஆங்கில மோகத்தால் அதிக பணம் செலவழித்துப் பள்ளிக்குச் செல்ல முதுகில் சுமையுடன் நிற்கும் குழந்தைகளிடம் வெறுப்புணர்ச்சியும், இயலாமையும் மண்டிக் கிடப்பதைக் கதிரேசன் கவனித்தார். இந்தச் சிறுகதையில் 'கல்வி வியாபாரம்' ஆக்கப்பட்டுள்ள இன்றைய நிலை விவரிக்கப்பட்டுள்ளது.

**5. நிலாக்காலம்**

மாரிமுத்துப் பிள்ளை மற்றும் அஞ்சலை இருவரும் ஒருவர் பாரத்தை ஒருவர் சுமக்கும் முதிய தம்பதியினர். இவர்கள் மகனாலும்,

மருமகளாலும், ஊர் மக்களாலும் புரிந்து கொள்ளப்படாது இழிவுபடுத்தப்பட்டனர். இந்தச் சிறுகதையில் எதார்த்தமான பாசத்தை அனைவரும் கொச்சைப்படுத்தும் நிலை சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.

### 6. ஒரு ஊரும் சில மனிதர்களும்

பொன்னுசாமி நாடார் ஊர் விட்டு ஊர்வந்து கடை வைத்து வியாபாரம் செய்தார். அந்த ஊரிலுள்ள மக்களிடம் இனிமையாகப் பழகினார். அவர் பொன்போலப் பாதுகாத்த மிதிவண்டியைக் கார்த்தி என்பவன் இரவல் கேட்டான். அவர் கொடுக்காததால் "எலே ஊரு விட்டு ஊரு பொழக்க வந்த பயலுக்கெல்லாம் இந்த ஊரு மண்ணு ரொம்பதான் ஒட்டிப் போச்சிதாடா .. எனக்கு இல்லாத சைக்கிளு ஒருத்தருக்கும் ஒதவப்படாது என்று சொல்லி திரும்பிய வேகத்துல சைக்கிளைத் தலைக்கு மேலத் தூக்கித் தொபேர்ன்னு போட்டான்" (சோலை சுந்தர பெருமாள், ஒருஊரும் சில மனிதர்களும், 2000, ப.66). சிறிது நேரத்தில் அவனைச் சார்ந்த சிலர் வந்து அவரையும், அவர் மகனையும் தாக்கிக் கடையையும் சேதப்படுத்தினர். இந்தச் சிறுகதையில் 'அழிந்து வரும் மனிதநேயம்' கருவாக இடம்பெற்றுள்ளது.

### 7. பிழைப்பு

தாடிக்கார ராசுப்பிள்ளையின் இறுதிச்சடங்கில் வண்ணான் சீனிவாசனிடம் நடராசு என்பவன் சாதியைக் கூறித் தரக்குறைவாக நடந்தான். சரியான கூலியும் கொடுக்கவில்லை. கூலி கேட்டவுடன் சீனிவாசனை மிதித்து, "எங்க உப்ப தின்னுட்டு வளர்ந்த பய ... எங்களுக்கே மாப்பா விடுற? (சோலை சுந்தர பெருமாள், ஒரு ஊரும் சில மனிதர்களும், 2000, ப.79) என்று கேட்டு அடித்தனர். இதனால் மனம் உடைந்த சீனிவாசன் அந்தத் தொழிலை விட்டுவிட்டுப் பிழைப்பிற்காகத் தன் அண்ணன் மகனுடன் திருவாரூரிலுள்ள சலவைக் கடைக்குச் செல்ல நினைத்தான். மனிதர்களைச் சாதியைக் கூறி இழிவுப்படுத்தி அடித்தல், அவர்களுக்குச் சேரவேண்டிய கூலியைக் கொடுக்காமல் அவமானப்படுத்துதல் போன்ற தீய இயல்புகள் நீங்கினால்தான் இந்தச் சமுதாயம் முன்னேறும் என்ற கருத்தை இந்தச் சிறுகதையில் ஆசிரியர் முன்வைத்துள்ளார்.

### 8. காத்திருக்கிறாள்

சாமிகண்ணு இந்த முறை வயல் நெல்லை விற்றுத் தன் மூத்த மகள் திருமணத்தை முடிக்க வேண்டும் என நினைத்தான். நாற்று நட்டபின்னர் கடன் வாங்கி உரம் போட்டான். அறுவடையின் போது பாதிக்கு மேல் பதர் என்று அறிந்தான். மனதைப் பக்குவப்படுத்திக் கொண்டு நல்ல நெல்லை அரசு கொள்முதல் நிலையத்தில் கொடுத்தான். கொள்முதல் நிலையத்தினர் இலஞ்சமாக நெல்லையும், பணத்தையும் பறித்தனர்.

சாமிக்கண்ணு "ஒருபிடி நெல்லைப் பாக்க என்னப்பாடு? உசுரவுட்டு இங்க கொண்டு வந்து சேத்தா நாயும், பேயும் பங்குப் போட்டுக்குதே" (சோலை சுந்தர பெருமாள், ஒரு ஊரும் சில மனிதர்களும், 2000, ப.106) என்று புலம்பினான். மீதி கிடைத்த பணத்தைக் கொண்டு கடன்களை அடைத்து, பாத்திரங்களை மீட்டான். மூன்று நூறு ரூபாய் நோட்டுகளும், சிறிது சில்லறைகளும் மீதியிருந்தன. மகளின் திருமணம் கேள்விக்குறியானது. சிறுவிவசாயிகள் பணம் செலவழித்து, உழைத்து, பல நாட்கள் காத்திருந்து, பலனை அறுவடை செய்து விற்க முயலும் போது ஏமாற்றம் மிஞ்சுகிறது. இதனால் விவசாயத் தொழிலாளர்கள் குடும்பத் தேவைகளை நிறைவேற்ற இயலாத நிலையில் இருப்பதை இந்தச் சிறுகதை கருவாகக் கொண்டுள்ளது (மண் உருவங்கள், என்ற சிறுகதைத் தொகுப்பில் காத்திருக்கிறாள் என்ற தலைப்பில் ஒரு கதை உள்ளது. இந்த இரண்டு கதைகளிலும் கதைக்கரு ஒன்றாகவும், பாத்திரங்களின் பெயர்கள் வேறுபட்டும் உள்ளன).

### 9. வெள்ளாடுகளும் சில கொடி ஆடுகளும்

ஊரில் ஒற்றை வாத்தியாராக வேலைக்குச் சேர்ந்த நாச்சிமுத்து வாத்தியார் அவ்வூர் மக்களின் முன்னேற்றத்திற்காக அரும்பாடுபட்டார். தன்னிடம் படிக்கும் பிள்ளைகளும், தன் மகன்கள் மூவரும் நன்கு படித்து அவ்வூரின் முன்னேற்றத்திற்குப் பாடுபட வேண்டும் என்று விரும்பினார். தன்னிடம் படித்த பல மாணவர்கள் அவர்களின் தற்போதைய தகுதிக்கு ஏற்ப திருமணம் செய்ததை அறிந்து மனம் கலங்கினார். மூத்த இரு மகன்களும் ஆதிக்கச் சாதிப் பெண்களைத் திருமணம் செய்ததால் தன் இளைய மகன் பிரபுவாவது ஏழையான மைத்துனன் மகள் ஜெயாவைத் திருமணம் செய்ய வேண்டும் என விரும்பினார். அது இயலாமல் போகவே பிரபுவிடம், "நீங்கள்லாம் சுத்தமான ஆம்பளையா இருந்தா நம்ம சனங்களுக்கு உள்ள கோட்டாவில் வாங்கின வேலைய விட்டுப்புட்டுப் பொதுக்கோட்டாவில் வேலைய வாங்கிட்டு வாங்கடா பாப்போம்" (சோலை சுந்தர பெருமாள், ஒரு ஊரும் சில மனிதர்களும், 2000, ப.134) என்று சினம் கொண்டார். ஜெயாவைச் சட்டப்படித் தன்னுடைய நாமினியாக்கிக் கொண்டார். வெள்ளை மனம் கொண்ட நாச்சிமுத்து வாத்தியார், ஜெயா போன்றோரை வெள்ளாடுகளுக்கும் சாதி ஒதுக்கீட்டில் வேலை வாங்கிக் கொண்டு வசதிக்கு ஏற்ப ஆதிக்கச் சாதிப் பெண்களைத் திருமணம் செய்தவர்களைக் கொடி ஆடுகளுக்கும் சமமாக்கி வசதிக்கு ஏற்ப மாறும் மனிதர்களின் மனநிலையைப் படம் பிடித்துக் காட்டுவதாக இந்தக் கதையை அமைத்துள்ளார் ஆசிரியர்.

'ஒரு ஊரும் சில மனிதர்களும்' என்ற சிறுகதைத் தொகுப்பிலுள்ள சிறுகதைகள் கணவனைக் குறித்த பெண்ணின் மனநிலை, இலஞ்சம், குடும்பப் பிரச்சனை, கல்வியை வியாபாரமாக்கும்

நிலை, உண்மையான அன்பைப் புரிந்து கொள்ளாத நிலை, மனிதநேய மின்மை, சாதியைக் கூறி இழிவுபடுத்திக் கூலி கொடுக்காத நிலை, குடும்பத் தேவையை நிறைவு செய்ய இயலாத விவசாயியின் நிலை, மனிதர்களின் மாறுபட்ட மனநிலை ஆகியவைகளைக் கருப்பொருள்களாகக் கொண்டுள்ளன.

**4. வண்டல்**

கோவை லில்லி தேவசிகாமணி அறக்கட்டளை இலக்கிய விருதையும், தமிழ்நாடு கலை இலக்கியப் பெருமன்ற விருதையும் பெற்ற இந்தச் சிறுகதைத் தொகுப்பு வண்டல் (புதிய பார்வை, சனவரி, 1993), பொறம்போக்கிகள் (தாமரை, 1992), இன்னார்க்கு இன்னார் என்று ... (குங்குமம், மேய் 1993), மடை (தாமரை, 1993), தலைமுறைகள் (தாமரை, மேய் 1992), கட்டில் (தாமரை, மேய் 1992), கண்கள் (தாமரை, பிப்ரவரி 1992), நிஜமனிதர்கள் (செம்மலர், 1993), புதுயுகம் (தாமரை, மார்ச் 1993), ஃப்ராக் (புதிய பார்வை, 1993), தேடல் (மேய் 1989), காவிரியிலிருந்து கூவம் வரை (மேய் 1990) என பன்னிரண்டு சிறுகதைகளை உள்ளடக்கியது.

**1. வண்டல்**

சிவசாமி என்ற விவசாயி தன் மகனைப் படிக்க வைத்தார். அவன் ஒன்பதாம் வகுப்பில் மூன்று வருடம் தோற்றான். பின்னர் அவன் விருப்பப்படி மகிழ்வுந்து ஓட்டப்படித்தான். தினமும் தன் தாயிடம் பணம் வாங்கினான். நாளடைவில் அவன் செலவு செய்யும் தொகை அதிகரித்தது. தகப்பன் பார்வையில் படுவதைத் தவிர்த்தான். இறுதியில் ஓட்டுநர் உரிமம் பெறவேண்டும் என்று கூறி ஐந்நூறு ரூபாயை எடுத்துக் கொண்டான். அன்று இரவு கணேசனுக்குப் பெண் தொடர்பும், அளவிற்கு அதிகமான குடிப்பழக்கமும் உண்டு என்ற செய்தியைக் கேள்விப்பட்டுச் சிவசாமி தம்பதியினர் பேசவும் விரும்பாமல் இருந்தனர். இந்தச் சிறுகதையில், விவசாயியான தந்தையின் எதிர்பார்ப்பும் அதற்கு மாறாக அமையும் மகனின் நடத்தையும், அதைக் கண்டு பெற்றோர் அடையும் அதிர்ச்சியும் நுட்பமாக வெளியிடப்பட்டுள்ளன.

**2. பொறம்போக்கிகள்**

அம்மாசியும், குப்பம்மாவும் ஆற்றுக்கரைப் புறம்போக்கில் மிளகாய் விவசாயம் செய்து வாழ்ந்தனர். அம்மாசியின் உறவினரான எம்.எல்.ஏ. தென்னந்தோப்பு வைப்பதற்கு அந்த இடத்தைக் கேட்டார். அம்மாசி ஒத்துக்கொள்ளாததால் அந்த நிலம் அவரிடமிருந்து பறிக்கப்பட்டது. கிராம நிர்வாக அதிகாரி உட்பட யாரிடமும் நியாயம் கேட்க முடியவில்லை. அவர்கள் பல நாட்கள் இரவு பட்டினி இருந்து மகனைப் படிக்க வைத்தனர். பெரிய வேலை கிடைத்துத் திருமணம் ஆனபின்பு பெற்றோரை மகன் மதிக்கவில்லை. இந்தச் சிறுகதையில் பொருளாதார நிலையில் ›பின்தங்கியவர்களின் துன்பமும், முன்னேறி யவர்களின் மனநிலையும் படம்பிடித்துக் காட்டப்பட்டுள்ளன.

**3. இன்னார்க்கு இன்னார் என்று ...**

சங்கரன் பிள்ளைக்கு ராகவன், ரமணி என்று இரு மகன்களும், மதிவதனி என்று ஒரு மகளும் உண்டு. மூவரும் குடும்பமாகத் தத்தமது தேவைகளை நிறைவு செய்தனர். சங்கரன் பிள்ளை மூன்று ஆண்டுகளாக நோயால் பாதிக்கப்பட்டுப் படுக்கையில் இருந்தார். அவரைச் சொக்கன் என்ற வேலைக்காரன் கவனித்தான். பக்கத்து வீட்டில் வசித்த அலங்காரம் என்ற மாமி அவருக்குத் தேவையான உதவிகளைச் செய்தாள். அவர் இறக்கும் நேரத்தில் மூத்த மகன் தன் குடும்பத்துடன் தந்தையைப் பார்க்க வந்தான். ஆனால் சங்கரன் பிள்ளை "மாமி அலங்காரத்தின் கையாலேயே துளசித் தண்ணீர் பெற்றுக் கொண்டு தன் வாழ்வின் இறுதியை முடித்துக் கொண்டார்" (சோலை சுந்தர பெருமாள், வண்டல், 2000, ப.37). இறுதிக் காலத்தில் பிள்ளைகளால் புறக்கணிக்கப்படும் பெற்றோரின் நிலை இந்தச் சிறுகதையில் சித்தரிக்கப்பட்டுள்ளது.

**4. மடை**

முருகையா தன் மருமகன் செல்லதுரையிடம் பணம் கேட்டார். செல்லதுரை பணம் கொடுக்காததால் அவனைப் பழிதீர்க்க நினைத்தார். ஊரில் செல்வாக்குமிக்க கண்ணுநாடார் என்பவர் செல்லதுரையின் நிலத்தைக் கேட்டார். அவன் "இல்லங்க .. என் அப்பாரு கூலிக்குப் போய்த் தேங்கா வெட்டினதுல இதுதான் மிச்சம். இதை விக்றாப்பல இல்ல ..." (சோலை சுந்தர பெருமாள், வண்டல், 2000, ப.42) என்றான். எனவே கண்ணுநாடாரும் அவனைப் பழிவாங்க நினைத்தார். மடையில் நீர் விடும்போது கண்ணுநாடார் என்பவர் முருகையாவுடன் இணைந்து சூழ்ச்சி செய்து செல்லதுரைக்கு உணவில் தூக்க மாத்திரை கலந்து கொடுத்தனர். இதனால் அவனால் மடையில் வந்த நீரைத் தன் நிலங்களுக்குப் பாய்ச்ச இயலவில்லை. உழைத்து வாழ்பவர்கள் வஞ்சகம் நிறைந்த மனிதர்களால் படும் பாட்டை இந்தச் சிறுகதையில் ஆசிரியர் காட்டியுள்ளார்.

**5. தலைமுறைகள்**

சாலைப் பணியாளர் தோட்டாண்டி தன் இளைய மகள் செல்லாச்சியைப் படிக்க வைக்க முயன்றார். அன்றாடச் செலவிற்குப் பாடுபடும் அவரால் அவளை ஏழாம் வகுப்பில் சேர்க்கத் தொண்ணூற்று ஒன்று ரூபாய் புரட்ட இயலவில்லை. காண்டிராக்டரிடம் கடன் கேட்டார். நூறு ரூபாயைக் கடனாகப் பெற்றார். காண்டிராக்டரின் மகள் மகிழ்வுந்தில் பள்ளிக்குச் செல்வதைப் பார்த்து வியந்தார். அவர் மனதில் "...ப்பா .... நாளைக்கு என்னப் பள்ளிக்கூடத்துல சேத்து வுட்றுப்பா. வேற ஒண்ணும் நான் கேட்க மாட்டேம்பா ... " (சோலை சுந்தர பெருமாள், வண்டல், 2000, ப.53) என்று கூறிக் கொண்டு கிழிந்து தொங்கிய பாவாடையைத் தைத்துக் கொண்டிருந்த அவரது மகள் தோன்றினாள். ஏழை மக்களின்

குழந்தைகள் படிக்க வசதியின்றி படும் துன்பத்தையும், பணக்காரர்களின் குழந்தைகள் படிக்கச் செல்வச் செழிப்புடன் செல்வதையும் ஆசிரியர் இந்தச் சிறுகதையில் சித்தரித்துள்ளார்.

**6. கட்டில்**

விசுவநாதன் ஆசாரிக்குக் கிடைக்கும் கூலி குடும்பம் நடத்தப் போதுமானதாக இருக்கவில்லை. எனினும், இரண்டு வருடங்களாகக் கட்டில் செய்ய வேண்டும் எனக் கனவுகள் பல கண்டார். எனவே, உடலை வருத்தி இரவு வேலை செய்ய ஒப்புக் கொண்டு பலகை வாங்கப் பணம் சேர்த்தார். நல்ல பலகைகளை வாங்கினார். மூன்று இரவுகள் விழித்திருந்து கட்டிலைச் செய்து முடித்தார். ஓய்வு இல்லாமல் தொடர்ந்து உழைத்ததால் உடல் வலியால் அவதிப்பட்டார். அன்று பகல் வேலை இடத்தில் வயிற்று வலி ஏற்பட்டு அலறினார். பெரிய கொத்தனாரும், கட்டிடத்தின் சொந்தக்காரரும் விரைந்து செயல்பட்டு அவரைத் தனியார் மருத்துவமனையில் சேர்த்தனர். அறுவை சிகிட்சைக்குப் பணம் தேவைப்பட்டதால் கட்டிலை விற்க நேர்ந்தது. அறுவை சிகிட்சை முடிந்து எட்டுமணி நேரம் கழித்து விசுவநாதன் ஆசாரி விழித்துப் பார்க்கையில் மருத்துவமனைக் கட்டிலில் படுத்திருந்தார். இந்தச் சமுதாயத்தில் ஏழை உழைப்பாளிக்கு ஆசைப்படவோ, ஆசைப்பட்டதை அனுபவிக்கவோ உரிமையில்லாத அவலநிலையை இந்தச் சிறுகதை காட்டுகிறது.

**7. கண்கள்**

ஞானசம்பந்தன் என்ற கிராமத்து மாணவனின் அறிவுத்திறனைப் பள்ளியில் எவரும் மதிக்கவில்லை. தேசபக்தி நிறைந்த அவனது உண்மையான தேடல் பள்ளி வாயிலாக நிறைவு செய்யப்படவில்லை. ஆசிரியர்கள் அவனைக் குற்றம் கூறினர். அவன் தந்தை "... உன்னோட அறிவும், திறமையும், நடப்பும் இந்த நாட்டுக்கு ஏதாச்சும் நல்லதைச் செஞ்சாப் போதும். அதுதான் எனக்குப் பெருமை ... எல்லா மட்டத்திலயும் உண்மை கொறைஞ்சுக்கிட்டு வர்றது எனக்குப் புரியுது ... மகனே ! உன் மீது எனக்கு முழு நம்பிக்கை உண்டு. உனக்கு என் அன்பான ஆசிகள்" (சோலை சுந்தர பெருமாள், வண்டல், 2000, ப.86) என்று எழுதிய கடிதம் அவனை ஆறுதல்படுத்தினது. கிராமத்தில் அறிவும், விவேகமும் உடைய மாணவர்கள் உருவாகி வருவதையும், அதைப் புரிந்து கொள்ள இயலாத சில ஆசிரியர்களின் நிலையையும் இந்தச் சிறுகதையில் காட்டியுள்ளார் ஆசிரியர்.

**8. நிஜமனிதர்கள்**

தங்கவேலு தன் மகள் ராசாத்திக்குத் திருமணம் செய்ய மூன்று ஆண்டுகளாக முயற்சி செய்தார். அவரது சம்பாத்தியம் அனைத்தும் குடும்பத்திற்கென கரைந்தது. ஒருநாள் மகளுக்குக் கொலுசு வாங்க பேருந்தில் அவனும், அவன் மனைவி முத்துக்கண்ணுவும் சென்றனர்.

பயணச்சீட்டு வாங்க இயலாதபடி நெரிசல் இருந்தது. எனவே அவர் இறங்கும் போது பயணத் தொகையான ரூபாய் இரண்டைக் கொடுத்தார். அப்போது நடத்துநர் தங்கவேலுவிடம் எரிந்து விழுந்தார். முகம் தெரியாத மூன்றாவது மனிதர், "ம் .... இந்த ஆளுதான் அரிச்சந்திரன் வீட்டுக்குப் பக்கத்து வீட்டுக்காரன் ... பொழைக்கத் தெரியாத மனுசனய்யா ... " (சோலை சுந்தர பெருமாள், வண்டல், 2000, ப.93) என்றார். கபடம் படியாத கிராமத்து மனிதனின் மனநிலை இந்தச் சிறுகதையின் கருவாக அமைந்துள்ளது.

### 9. புதுயுகம்

கிராமத்தில் பெண்களைப் படிக்க வைக்காத இயல்பு, உணவில் பெண்களுக்குக் கட்டுப்பாடு, பெண்களை எல்லா இடங்களிலும் பின்தள்ளிப் பார்க்கும் தன்மை, சிறுவயதில் திருமணம் செய்து வைக்கும் பழக்கம் இவைகளை இந்தச் சிறுகதையில் பாஸ்கர், பானுமதி என்ற அண்ணன் தங்கையின் வாயிலாகக் காட்டியுள்ளார் ஆசிரியர். பாஸ்கர் தன் தாயிடம், "ரெண்டு பேரும் ஒண்ணுதாம்மா ... ஒன் புள்ளங்கதான். இப்ப பானுவுக்கு மாப்பிள்ளை வேண்டாம். படிப்புக்கொடு போதும் ..." (சோலை சுந்தர பெருமாள், வண்டல், 2000, ப.104) என்றான். இவ்வாறு சிந்தனை செய்யும் இளந்தலைமுறையினரின் வாயிலாகப் புதுயுகம் மலர்வதைச் சுட்டியுள்ளார் ஆசிரியர்.

### 10. ஃப்ராக்

சீதாம்மா உறவு முறையை மதிக்கும் குணம் உடையவள். அவள் தன் அண்ணன் சாமிப்பிள்ளையிடம் பேத்தி லெட்சுமியின் சடங்கில் வைக்க வேண்டிய மாமன் வரிசையைத் தன் மகன் சிவராமன் செய்வான் என்று உறுதி பூண்டாள். தன் தாய் கூறியபடி சிவராமன் செய்தான். சடங்கு அன்று லெட்சுமி பட்டுப் புடவையைத் தவிர்த்து விட்டு அவள் விரும்பும் ஃப்ராக்கை அணிந்தாள். அது சாமிப்பிள்ளையின் தன்மானத்தைப் பாதித்தது. சாமிப்பிள்ளை தனது சுற்றத்தவர் இருப்பதை மறந்து, "என் பரம்பரையில இதுபோல உண்டாய்யா?" (சோலை சுந்தர பெருமாள், வண்டல், 2000, ப.125) என்று கோபம் கொண்டார். சடங்கு, சம்பிரதாயத்தைக் காரணம் காட்டிப் பிள்ளைகளின் விருப்பம் நிறைவேற்றப்படாத நிலையும், சுயகௌரவத்தின் விளைவும் இந்தச் சிறுகதையில் காட்டப்பட்டுள்ளன.

### 11. தேடல்

அழகேசன் என்பவர் பிடாரிக் கோவிலின் அருகில் அமர்ந்து தன் கதைக்கான கருவைச் சிந்தனை செய்தார். அழகேசனின் அப்பா "அவன் கையால நாலுகாசு கொண்டு வந்து கொடுக்கிற வரைக்கும் சோறு போடாத. ஊரு ஒலகத்தில் புள்ளைங்க எப்படி நிக்குது ... என் ஜென்மம்

வரைக்கும் நான் கல்லு ஒடைச்சுதான் சோறு திங்கணும்னு என் தலையில எழுதி இருக்கு ... " (சோலை சுந்தர பெருமாள், வண்டல், 2000, ப. 131) என்று தன் மனைவியிடம் கூறினார். ஆனால், நல்ல எதிர்காலம் உனக்கு இருக்கிறது என்பது போன்று நண்பன் கூறிய ஆறுதல் வார்த்தைகள் அழகேசனுக்கு நம்பிக்கை கொடுத்தன. வறுமையின் மத்தியிலும் அமைதியான இயற்கைச் சூழலில் அமர்ந்து கதைக்கருவைத் தேடும் இளைஞனின் இயல்பு இந்தச் சிறுகதையில் இடம்பெற்றுள்ளது.

**12. காவிரியிலிருந்து கூவம் வரை**

கிராமத்து மனிதன் தனபாலு தன் மனைவியிடம் உண்மையாக இருக்க விரும்பினான். மனைவியின் மருத்துவத்திற்காக அவன் நகரத்திலுள்ள தன் மாமி வீட்டில் தங்கினான். அங்கு அவன் கொழுந்தியாள் தவறான செயல்களில் ஈடுபட முயன்றாள். தனபாலு அவளை ஒதுக்கித் தள்ளினான். மேலும் நகர நெருக்கடி, நகர கலாச்சாரச் சீர்கேடு, நீர்ப்பற்றாக்குறை போன்றவைகளையும், அந்தச் சீர்கேடுகளை விரும்பும் சில மனிதர்களையும் இந்தச் சிறுகதை காட்டுகிறது. கிராம, நகர நாகரிகங்களை உரசிப் பார்த்துச் சீர்தூக்கி எடைபோட்டுக் காட்டும் ஆசிரியர் நாகரிகத்தில் கிராமியமே மேலோங்கி நிற்கிறது என்று காட்டும் விதம் சிறப்பாக உள்ளது.

'வண்டல்' என்னும் தொகுப்பிலுள்ள சிறுகதைகளின் மூலம் மகனின் எதிர்காலம் குறித்துக் கவலைப்படும் பெற்றோரின் மனநிலை, பொருளாதாரத்தில் பின்தங்கியவர்களின் துன்பம் மற்றும் முன்னேறியவர் களின் மனநிலை, முதியோர் நிலை, வஞ்சகம் கொண்ட மனிதர்களின் இயல்பு, ஏழைகள் கல்வி பெற முடியாமல் அவதிப்படும் நிலை, ஏழைகள் ஆசைப்பட்டதை அனுபவிக்க இயலாத நிலை, கிராமத்தில் வாழும் அறிவுடைய மாணவனின் நிலை, கபடம் படியாத கிராமத்து மனிதனின் மனநிலை, இளந் தலைமுறையினரின் உயர்ந்த சிந்தனை, சுய கௌரவத்தால் பிறர் உணர்வுகள் மதிக்கப்படாத நிலை, வறுமையின் மத்தியிலும் நல்ல எதிர்காலத்தைக் கருத்தில் கொண்டு கதை எழுத முன்வரும் இளைஞனின் மனநிலை, நகர வாழ்க்கையின் சீர்கெட்ட நிலை ஆகியவைகளை அறிந்து கொள்ளலாம்.

**5. மடையான்களும் சில காடைகளும்**

இந்தச் சிறுகதைத் தொகுப்பில் மண்ணாசை (கணையாழியில் பிப்ரவரி 1999 இல் வெளிவந்த இந்தக் கதை 2004 ஆம் ஆண்டு முதல் பத்தாம் வகுப்பிற்கான தமிழ்த் துணைப்பாடத்தில் இடம்பெற்றுள்ளது), சர்க்கரை (புதிய பார்வை, 16-31 மேய் 1998), திணிப்பு (மார்ச் 2000 இல் திருச்சிராப்பள்ளி வானொலியில் சிறப்புச் சிறுகதையாகத் தேர்வு பெற்றதோடு தாமரையிலும் வெளிவந்தது), உதயவாசல் (தாமரை, 1998), குறி (கணையாழி, 2000), நாற்றங்கால் (செம்மலர், டிசம்பர் 1996),

மடையான்களும் சில காடைகளும் (கணையாழி), முன்னத்தி ஏர் (செந்நெல் நாவலின் முற்பகுதி, 1999), வட்டத்தை மீறி (செம்மலர், அக்டோபர் 1999), மனு (தாமரை, அக்டோபர் 1999), கோணங்கி (தமிழரசி, 1998), வலி (கல்கி-தீபாவளி மலர், 1997), மலையேறி (தாமரை, சூலை 1998), அடகு (தாமரை), மேலாக்கு (உழைப்பவர் ஆயுதம், ஜனவரி 2006), கோக்காழி (கணையாழி, மார்ச் 2001), நம்பிக்கை (தீக்கதிர், பொங்கல் மலர், 2005), இலையுதிர்காலம் (புதிய பார்வை, அக்டோபர் 2005), வியர்வை (புதிய பார்வை, மார்ச் 2005), மானம் (செம்மலர், டிசம்பர் 2003), பூக்கும் காலம் (தினமலர் - வாரமலர், ஜனவரி 1, 2006), தாவணி (செம்மலர், ஆகஸ்ட் 2004) என இருபத்து இரண்டு சிறுகதைகள் உள்ளன.

**1. மண்ணாசை**

கோவிந்தம் பிள்ளை தன் மூன்று மா நிலத்தில் பயன்தரும் மரங்களை நட்டார். அவர் மகன் சுபாஷ் அவரிடம், “அப்பா! நம்ம வீட்டச்சுத்தி ஐம்பது குழிய ஒதுக்கிட்டு, மீதம் பத்து லட்ச ரூவா வெலைக்கு வருதப்பா. அவங்க வாங்கி பிளாட்டுப் போடப் போறாங்களாம் ... நான் எல்லாத்தையும் பேசி முடிச்சிட்டேன்" (சோலை சுந்தரபெருமாள், மடையான்களும் சில காடைகளும், 2006, ப.8) என்றான். பத்திரத்தில் கையெழுத்துப் போட்டு வீட்டிற்கு வந்த தகப்பனார் வெட்டப்பட்ட மரங்களைப் பார்த்ததும் சரிந்தார். மூன்று மாதங்களாகக் கோமாவில் இருந்த அவரின் வாயில் தோட்டத்து மண் கரைசலை ஊற்றியவுடன் அவர் மூச்சு நின்றது. உழைப்பின் பலனை அனுபவிக்க இயலாத ஏக்கம் அவர் உயிரைப் பறித்தது என்ற கருத்து இந்தச் சிறுகதையில் வெளிப்படுத்தப்பட்டுள்ளது.

**2. சர்க்கரை**

அங்கம்மாவிற்கு மகன் வயிற்றுப் பேத்திகள் நால்வர். இவர்களில் முதல் மூவரும் திருமணத்திற்குத் தயாராக நின்றனர். வெல்லக்கட்டியைத் தின்றால் இறுதிப் பேத்தியும் விரைவில் வயதிற்கு வருவாள் என நினைத்து அங்கம்மா அவளை விரட்டினாள். மகனின் குடிப்பழக்கத்தால் ஏற்பட்ட வறுமை காரணமாக பிள்ளைகள் ஆசைப்பட்டதைச் சாப்பிடக் கொடுக்காத நிலை இந்தச் சிறுகதையின் கருவாக அமைந்துள்ளது.

**3 . திணிப்பு**

அமுதா நன்கு படிக்கும் மாணவி. பெண்களுக்கு உரிய பிரச்சனையால் அவள் சோர்வாகக் காணப்பட்டாலும் டியூசன் சென்றாள். காலையில் உணவு உண்ண நேரமில்லாது வகுப்பிற்குச் சென்று பல இன்னல்களைச் சந்தித்தாள். மாலை டியூசன், கணினி வகுப்பு என்று அனைத்தையும் முடித்து ஏழரை மணிக்கு வீடு சேர்ந்தாள். அவளுக்குப்

பிடித்த திரட்டுப்பால் சாப்பிட மனமின்றி பெஞ்சில் படுத்தாள். "அவள் முகத்தில் படிந்திருக்கும் ஏக்கத்தையும், அசதியையும் அவள் பாட்டியால் பார்த்துக் கொண்டு தான் இருக்க முடிந்தது" (சோலை சுந்தர பெருமாள், மடையான்களும் சில காடைகளும், 2006, ப.27). பள்ளிப்பருவத்தில் திணிக்கப்படும் படிப்புச்சுமை அவர்கள் மனதையும், உடலையும் பாதிக்கும் நிலையை இந்தச் சிறுகதையில் விளக்கியுள்ளார் ஆசிரியர்.

**4. உதயவாசல்**

நேர்மையான நாடக வாத்தியார் தங்கமுத்து என்பவர் தன் இளைய பேத்தி லெட்சுமியைப் பெரிய பள்ளியில் சேர்க்கச் சென்றார். ப்யூன் வேலுவை அழைக்க ஆசிரியர் ஓய்வு அறைக்குச் சென்றபோது அங்குச் சாதி ஏற்றத்தாழ்வு இருப்பதைக் கண்டார். தன் பேத்தி இந்தப் பள்ளியில் படிக்கக்கூடாது என நினைத்தார். தேநீரிலிருந்து வெளிப்பட்ட ஆவி, "நீ மட்டும் இந்தப் படிப்ப நிராகரிச்சிட்டா என்னா ஆவப் போவுது தங்கமுத்து? இந்தச் சமூகத்தோட தானே நீயும், உன்னோட பேத்தியும் நின்று வாழ்ந்தாகணும். சமூகத்த மாத்தி அமைக்க விதையா இருந்து முடிஞ்சத செய் ..." (சோலை சுந்தர பெருமாள், மடையான்களும் சில காடைகளும், 2006, ப.34) என்று அறிவுரை கூறியது. சமுதாயம் இழிவானது எனக்கூறி தனிமனிதன் ஒதுங்க முடியாது. அதில் வாழ்ந்து சமுதாயத்தை மாற்ற முயற்சி செய்ய வேண்டும் என்ற கருத்து இந்தச் சிறுகதையில் உள்ளது.

**5. குறி**

இருளப்பிள்ளையின் குடும்பத்தினர் குலதெய்வ வழிபாட்டில் நம்பிக்கை கொண்டிருந்தனர். குலதெய்வத்தின் பெயர் மனைவி பெயராகையால் இருளப்பிள்ளை தன் மனைவியை 'ஆச்சி' என்று அழைத்தார். ஆச்சி இறந்தபின் தன் உறவினர்களுக்குச் செய்தி சொல்ல அவர் 'அங்காள பரமேஸ்வரி' என்ற பெயரைப் பயன்படுத்தினார். அப்போது பலகையில் கிடத்தியிருந்த அங்காளம்மையின் உருவம் திடீரென்று எழுந்து "... இத்தனை வருசமா அங்காளம்மையா இருந்த என் பேர பரமேஸ்வரியா மாத்தி வைக்க யாரு சொன்னது?" (சோலை சுந்தர பெருமாள், மடையான்களும் சில காடைகளும், 2006, ப.41) என்று கூறிச் சாய்ந்ததாக இந்தச் சிறுகதை குறிப்பிடுகிறது.

**6. நாற்றங்கால்**

கூலி வேலை செய்யும் நடராசு தன் சொந்த வேலைக்காகவும், மாலை நேரத்தில் மனைவியுடன் சர்க்கஸ் பார்க்கச் செல்லவும் தன் முதலாளியிடம் ஒருநாள் விடுப்புக் கேட்டான். நான் வடபாதிமங்களம் வரை சென்று, விரைவில் வந்து உன்னை அனுப்புகிறேன் என்று கூறிச் சென்ற முதலாளி அன்று இரவு வந்தார். இதனால் நடராசு தன் விருப்பங்களை

நிறைவேற்ற இயலாதவன் ஆனான். முதலாளியின் அதிகாரத்திற்குக் கூலித் தொழிலாளி கட்டுப்பட்டு இருப்பதை இந்தச் சிறுகதை சுட்டிக்காட்டுகிறது.

**7. மடையான்களும் சில காடைகளும்**

விவசாய வேலை செய்யும் சுப்பிரமணியை அவனது மாமன் மகள் ராகினி விரும்பினாள். ஒரு நாள் சுப்பிரமணி உழைப்பின் வருத்தம் தீர கள் குடித்தான். இதனால் இருவருக்கும் வாக்குவாதம் ஏற்பட்டுப் பிரிந்தனர். இறுதியில் சுப்பிரமணியின் மனதை அறிந்த சீதை, “இந்தாப்பாரு மச்சான் ! நீ ஒடம்பப் போட்டுத் தெண்டிச்சி உழைக்கிற, அதுல ஏற்படுற நோவ போக்கிக்க குடிக்கிற. குடிச்சிட்டு நீ யாரு கையையும் பிடிச்சி இழுக்கப் போறதில்லை ... குடி மச்சான் நம்ம சாதி ஒத்துக்கும்" (சோலை சுந்தர பெருமாள், மடையான்களும் சில காடைகளும், 2006, ப. 58) என்று கூறினாள். இதனால் சீதை அவனது மனைவியாகும் வாய்ப்பைப் பெற்றாள். வசதி வாய்ப்பு இருந்தாலும் மனதைப் புரிந்து கொள்ளாதவளை மனைவியாக அடைவதைவிட மனதைப் புரிந்து கொண்டவளை மனைவியாக அடைவது நல்லது என்ற கருத்து இந்தச் சிறுகதையில் அமைந்துள்ளது.

**8. முன்னத்தி ஏர்**

உறவினர் வீட்டிற்குத் தந்தையுடன் சென்ற சிறுவன் அழகேசனுக்கு ஏழை – பணக்காரன் என்ற பாகுபாட்டின் காரணமாக மனக்கசப்பு ஏற்பட்டது. கனத்த இதயத்துடன் வீட்டிற்கு வர இருவரும் பேருந்தில் ஏறினர். பேருந்து ஆழியூர் அருகில் வந்து நின்றது. இரண்டு பக்கங்களிலும் மக்கள் கூட்டமாக நின்று எதிரே வரும் காவலர் வாகனத்தையும், மாட்டு வண்டியையும் பார்த்து நின்றனர். பேருந்தின் ஓரத்தில் இருந்த அழகேசன் மாட்டு வண்டியில் குவித்திருந்த எரிந்து கரிக்கட்டையாகிப் போன உடல்களைப் பார்த்ததும் பயந்து அலறினான். பத்து வருடம் கழிந்து அவன் வலிவலம் தேசிகர் பள்ளியில் ஆசிரியராகச் சேர்ந்தான். வீட்டிற்கு வரும் வழியில் எதிர்பாராமல் தன் மாமன் மகள் குடும்பத்தைச் சந்திக்க நேர்கிறது. அவர்களிடம் தான் இப்போது சோலை சுந்தர பெருமாள் என்ற பெயரில் இலக்கியப் பணியில் ஈடுபட்டிருப்பதைக் கூறுவதாக இந்தச் சிறுகதை உள்ளது.

**9. வட்டத்தை மீறி**

ராதாமணிக்கு மூன்று பெண்பிள்ளைகள். ‘ஆண் வாரிசு வேண்டும்' என்று கணவன் குடும்பத்தினர் கூற மீண்டும் அவள் கருவைச் சுமந்தாள். அப்போதும் அவளுக்குப் பெண் குழந்தை பிறந்தது. அவள் நாத்தியார் ‘ஐந்தாவது பிறப்பது அரசாளும்' என்றாள். ராதாமணி ‘நான் எத்தனை பெற்றாலும் அனைத்தும் பெண்ணாகத்தான் இருக்க வேண்டும்'

என மனதில் நினைத்துக் கணவனை வெறித்தாள். பெண் குழந்தையை வெறுத்து, ஆண் குழந்தையை விரும்பும் சமுதாய மனநிலை இந்தச் சிறுகதையில் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.

**10. மனு**

செம்பவம் என்பவள் புறம்போக்கு நிலத்தில் தேநீர்க்கடை வைத்து வியாபாரம் செய்து தன் மகளைப் படிக்க வைத்தாள். மாவட்ட ஆட்சியாளர் ஊரில் வந்து மனு வாங்கும் போது அந்த இடத்தைப் பட்டா போட்டுத்தர மனு கொடுக்கலாம் என நினைத்தாள். மறுநாள் கிராம நிர்வாக அதிகாரி, "செம்பவம் உன்னோட கடைய பிரிச்சிடும்படியா கலெட்டரு உத்தரவு போட்டுருக்காரு. புள்ள வீட்டுத் தெரு இளைஞர் சங்கம் பிள்ளையாருக்குக் கோயில் கட்டனுன்னு மனுக்கொடுத்திருக்காங்க" (சோலை சுந்தர பெருமாள், மடையான்களும் சில காடைகளும், 2006, ப. 81) என்றார். நிலமில்லாத ஏழைகள் பயன்படுத்தும் புறம்போக்கு நிலத்தைச் செல்வாக்குப் பெற்றவர்கள் பறிக்கும் நிலையை இந்தக் கதை காட்டுகிறது.

**11. கோணங்கி**

பன்னீர் என்பவன் கற்று முன்னேற வேண்டும் என்ற வெறியுடன் படித்தான். தொடர் மழையால் அவன் சீருடை உலரவில்லை. பள்ளிக்கு விடுப்பு எடுத்த அவனைத் தமிழ் ஆசிரியர் மாற்றுச்சட்டை போட்டுவரக் கூறினார். இதைக் கண்ட தலைமையாசிரியர் அவனை வகுப்பை விட்டு வெளியேற்றினார். இயற்கையின் சீற்றத்தால் ஏழை மாணவர்கள் கல்வி கற்க இயலாத நிலையில் இருப்பது இந்தக் கதையின் கருவாக அமைந்துள்ளது.

**12. வலி**

மனைவியை இழந்த பெத்தன்னா தனது இரண்டு குழந்தைகளையும் வளர்த்தார். மூத்த மகனுக்கு வங்கியில் வேலை கிடைத்தது. திருமணமும் ஆயிற்று. அவனிடம் பண உதவி கேட்டபோது ஊரிலுள்ள வீடு உட்பட அனைத்தையும் விற்று விட்டுத் தன் மாமன் வீட்டில் தங்கக் கூறினான். கோபம் கொண்ட அவர் தனது நிலத்திலுள்ள பனைமரத்தின் மத்தளங்களை இரண்டாவது மகன் உதவியுடன் வெட்டிப் பணமாக்க முயன்றார். வேலை செய்யும் போது அவர் விழுந்ததால் அவரின் முதுகுத்தண்டில் விலகல் ஏற்பட்டது என்றாலும் மீண்டும் மத்தளம் பெயர்க்க வந்த அவர் சமதரையில் சாய்ந்து விழுந்தார். சிறிது நேரத்திற்குப் பிறகு வலியிலிருந்து விடுதலை பெற்றதை உணர்ந்தார். உடலில் ஏற்படும் வலி நீங்கிவிடும். ஆனால் மனதில் ஏற்படும் வலி நீங்காது என இந்தச் சிறுகதை கூறுகிறது.

## 13. மலையேறி

ஊரிலுள்ள விடுவெட்டிகளால் 'மாவீரன் முத்து' என்று அழைக்கப்பட்ட செல்லமுத்து என்பவன் கோவிந்தராசுவிடம் பொதுவடை நிலத்தைக் கேட்டான். வேறு வழியில்லாமல் கோவிந்தராசு நிலத்தைக் கொடுத்தான். அந்த நிலத்திற்கான பணத்தைச் செல்லமுத்து கொடுக்கவில்லை. மலைக்குச் சென்று வந்த பிறகு பணத்தைத் தரலாம் என்றான். மிகுந்த பணத்தேவையுடன் இருந்த கோவிந்தராசுவின் நிலை பரிதாபத்திற்கு உரியதாக மாறியது. பாடுபட்டு உழைப்பவர்களிடமிருந்து நிலத்தைப் பறிப்பதோடு பணத்தையும் மோசடி செய்யும் வலிமை உடையவர் நிலை இந்தச் சிறுகதையில் விளக்கப்பட்டுள்ளது.

## 14. அடகு

மருத்துவமனையில் செவிலியர் பணிக்குச் சேர்ந்த கீர்த்தி அங்கு ஆண்களின் குத்தல் பேச்சுகள், திருட்டுத்தன ரசிப்புகள், பொறுப்பிலுள்ளோரின் இழிவான பேச்சுகள் போன்றவற்றால் நிலைகுலைந்தாள். மேலும், பெரிய மருத்துவரின் செய்கைக்கு ஈடுகொடுக்காமல் வெளியேறினாள். பின்னர் அவள் ஒரு முதியவரைப் பராமரிக்கும் பணியில் தன்னை ஒருமுகப்படுத்திக் கொண்டாள். செவிலியர் பணியில் பெண்கள் சந்திக்கும் பிரச்சனைகள் இந்தச் சிறுகதையில் படம்பிடித்துக் காட்டப்பட்டுள்ளன.

## 15. மேலாக்கு

சாதிக்கு மதிப்பு வேண்டும் என்று நகரத்தில் வேலைக்குச் சென்ற இளைஞர்கள் செய்யும் கடினமான வேலைகளைக் கண்டு சிவசாமி மனம் பதறினார். ஊருக்கு வந்த அவர் பழைய நிகழ்வுகளை அசைபோட்டார் "... வயசுப்பிள்ளைங்களை அரவணைச்சிப் பக்குவப்படுத்தி வர்க்கமாகத் திரட்டினால் இப்படிச் சாதியச் சொல்லி, சாதிக்குச் சாதி கச்சைக் கட்டிக்கிட்டுக் கேவலப்படுவாங்களா?" (சோலை சுந்தர பெருமாள், மடையான்களும் சில காடைகளும், 2006, ப.118) என்று ஆதங்கம் கொண்டார். சாதியைக் கூறி ஒன்றுபடுத்துவதை விட வர்க்கத்தைக் கூறி ஒன்றுபடுத்தினால் உட்சாதிப் பூசல்களைத் தவிர்க்கலாம் என்ற கருத்தை ஆசிரியர் இந்தச் சிறுகதையில் வலியுறுத்தியுள்ளார்.

## 16. கோக்காழி

மதியழகு என்பவன் இளவயதில் இறந்தான். எனவே, அவன் ஆவி அடிக்கடி வந்து குடும்பத்தினரைத் தொந்தரவு செய்யும் என்று கருதி அவன் மாமியார் சில சடங்குகளைச் செய்தாள். ஆசிரியர் இந்தக் கதையில் ஆவி பற்றிய நம்பிக்கையைக் கேலி செய்துள்ளார்.

## 17. நம்பிக்கை

சுந்தரமூர்த்தி என்ற தமிழ் வாத்தியார் கொடுத்த நம்பிக்கையால் ஆறுமுகசாமி பத்தாம் வகுப்பை முடித்தான். பின்பு பேருந்து ஓட்டுநர் வேலைக்குச் சென்றான். ஒருமுறை அவன் தமிழ் வாத்தியாரை எதிர்பாராதவிதமாகச் சந்திக்க நேர்ந்தது. பழைய நன்றியை மறவாமல் ஆசிரியருக்கு மரியாதை செலுத்தினான். மாணவர்கள் முன்னேற ஆசிரியரின் நம்பிக்கை நிறைந்த வார்த்தைகள் தூண்டுகோலாயிருக்கின்றன என்பதை இந்தக் கதை வலியுறுத்துகிறது.

## 18. இலையுதிர் காலம்

குண்டுகண்ணு என்பவர் சாகுபடி வேலையிலிருந்து கொல்லை மராமத்து வேலை வரை அனைத்தையும் ஓர் ஆசிரியருக்குச் செய்து கொடுத்தார். குண்டுகண்ணு இறந்த செய்தியைக் கேட்டதும் அந்த ஆசிரியர் மனக்கவலையுடன் குண்டு கண்ணுவின் கடைசி மகன் வீட்டிற்குச் சென்றார். அங்கு எலும்பும் தோலுமாய்க் கிடந்த குண்டுகண்ணுவைப் பார்த்து அதிர்ந்த அவர், இளைய மகள் சின்னச் சாதிக்காரனுடன் சென்றதால் ஏற்பட்ட பிரச்சனையில் மகன்கள் அடித்ததால் உணவில்லாமல் புறம்போக்கில் தங்கினார் என்ற செய்தியைக் கேட்டு வருந்தினார். குண்டுகண்ணுவின் இறப்புச் சடங்குகளை மகன்கள் தெரு அமர்க்களப்படும்படி செய்தனர். வாழும்போது கவனிக்காமல் இறந்தபின் செய்யும் சடங்குகளால் பயனில்லை என்ற கருத்து இந்தச் சிறுகதையில் கூறப்பட்டுள்ளது.

## 19. வியர்வை

தண்ணீர் இல்லாததால் கோபால்பிள்ளை தன் மகனிடம் நிலங்களை விற்றுப் பணத்தை வங்கியில் போடக்கூறினார். ஆனால், மகன் வங்கிக் கடனில் ஆழ்குழாய்க் கிணறு வெட்டலாம் என நினைத்தான். விதை தெளிப்பிற்கான வேலைகளைக் கோபால்பிள்ளை செய்து கொண்டிருந்தார். அப்போது கடன் தொகையை வங்கி அங்கீகரிக்கவில்லை என்ற செய்தியைக் கேட்டுக் கோபால்பிள்ளையின் மகன் நிலைகுலைந்தான். வியர்வை சிந்தி தந்தை செய்த வேலை வீணானதைக் கண்டு வருந்தினான். நீரின்மையால் விவசாயிகள் படும் அவலத்தை இந்தச் சிறுகதை காட்டுகிறது.

## 20. மானம்

பெற்றோரை இழந்தவனும் மனவளர்ச்சிக் குன்றியவனுமான அப்புனு என்பவன் ராமு என்ற வேலைக்காரனின் பராமரிப்பில் வாழ்ந்து வந்தான். அவன் ஓடியாடி விளையாடின இடத்தை அவன் அக்கா வாடகைக்குக் கொடுத்துவிட்டு, அப்புனுவை ஒரு சிறு இடத்தில்

அடைத்தாள். அது முதல் அவனது பேச்சு, சாப்பாடு, நடை என அனைத்தும் தடைபட்டது. மூன்று நாட்கள் கழிந்து அப்புனு இறந்தான். உடனே ராமு, "சின்னையா! நீங்க ரோஷத்தோட போயிட்டீங்களேய்யா ..." (சோலை சுந்தரபெருமாள், மடையான்களும் சில காடைகளும், 2006, ப.169) என்று விடியலே அதிரும்படி அலறினார். மனவளர்ச்சி குன்றியவர்களுக்கும் மானம் உண்டு என்ற கருத்து இந்தச் சிறுகதையின் கருவாக அமைந்துள்ளது.

## 21. பூக்கும் காலம்

திருமணத்திற்குச் செல்ல வண்ணான் மூர்த்தியிடமிருந்து ஒரு சோடித் துணியைச் சுப்பிரமணி இரவல் வாங்கினான். அது தன் துணி என அறிந்த சுப்பிரமணியின் முதலாளி அவனுடன் திருமணத்திற்குச் செல்வதைத் தவிர்த்தார். திருமணம் முடிந்து மூர்த்தியிடம் துணியைக் கொடுக்கச் சென்றபோது முதலாளி மூர்த்தியை அடிப்பதைக் கண்டு, '.இது முதலாளியின் துணியா?' என்று சுப்பிரமணி அதிர்ந்தான். ஏழையாக வாழ்க்கை நடத்தும் கூலிக்காரனின் பரிதாப நிலையை இந்தச் சிறுகதை வெளிப்படுத்துகின்றது.

## 22. தாவணி

'ஒன்பதாம் வகுப்பு மாணவிகள் தாவணி போட வேண்டும்' என்று பார்வதி படிக்கும் பள்ளியில் கூறினதால் வேறுவழியில்லாமல் அவள் புத்தக மூட்டையைக் கொக்கியில் மாட்டினாள். தாவணி போட்டவர்களைத் தான் பருத்தி எடுக்க அனுமதிப்பர் என்பதால் அவள் கொடியில் கிடந்த துண்டுப் புடவையைத் தாவணியாகக் கட்டிக்கொண்டு வேலைக்குச் சென்றாள். ஏழைகளைப் படிக்கவிடாமல் வறுமை தடுக்கிறது என்ற கருத்து இந்தச் சிறுகதையில் வெளிப்படுத்தப்பட்டுள்ளது.

'மடையான்களும் சில காடைகளும்' என்ற இந்தச் சிறுகதைத் தொகுப்பில் இடம்பெற்ற சிறுகதைகள் உழைப்பின் பலனை அனுபவிக்க இயலாத ஏக்கம், குடிப்பழக்கத்தால் ஏற்பட்ட வறுமையின் விளைவு, படிப்புச்சுமையின் விளைவு, சமுதாயத்தோடு இணைந்து வாழும் தனிமனிதனின் நிலை, குலதெய்வ வழிபாடு, முதலாளியின் கட்டிற்குள் இருக்கும் தொழிலாளியின் நிலை, மனதைப் புரிந்து கொண்டவளை மனைவியாக அடைய வேண்டும் என்ற கருத்து, ஏழை – பணக்காரன் பாகுபாடு, ஆண் குழந்தையை விரும்பும் சமுதாய நிலை, ஏழைகள் பயன்படுத்தும் நிலத்தைச் செல்வாக்கு உடையவர்கள் பறிக்கும் நிலை, ஏழை மாணவ-மாணவியர் கல்வி கற்க இயலாத நிலை (கோணங்கி, தாவணி), மகனால் மனதில் ஏற்பட்ட வலி, வலிமையுடையோர் உழைப்பவர்களிடமிருந்து நிலத்தைப் பறிப்பதோடு பணத்தையும் மோசடி செய்யும் நிலை, செவிலியர் பணியில் பெண்கள் சந்திக்கும் அவலங்கள்,

இளைஞர்களைச் சாதியைக் கூறி ஒன்று சேர்க்காமல் வர்க்கத்தைக் கூறி ஒன்று சேர்க்க வேண்டும் என்ற கருத்து, ஆவி பற்றிய நம்பிக்கை, மாணவர்களின் முன்னேற்றத்திற்கு ஆசிரியரின் நம்பிக்கை நிறைந்த வார்த்தைகளின் தேவை, முதியோர் நிலை, நீர் இல்லாமையால் விவசாயிகள் சந்திக்கும் துன்பங்கள், மனவளர்ச்சி குன்றியவர்களுக்கும் மானம் உண்டு என்ற சிந்தனை, தொழிலாளியின் வறுமை நிலை ஆகிய செய்திகளைக் கொண்டுள்ளன.

**2. குறுநாவல்கள்**

சோலை சுந்தர பெருமாள் படைப்புகளாக இரண்டு குறுநாவல் தொகுப்புகள் வெளிவந்துள்ளன. அவை மனசு (2000), குருமார்கள் (2006) என்பன. இந்தத் தொகுப்புகளில் மொத்தம் ஆறு குறுநாவல்கள் இடம்பெற்றுள்ளன.

**1. மனசு**

இந்தக் குறுநாவல் தொகுப்பில் ஆசை, மனசு, பொதி என மூன்று குறுநாவல்கள் உள்ளன (இவற்றில் 'ஆசை' என்ற குறுநாவல் 'குருமார்கள்' என்ற தொகுப்பிலும் இடம்பெற்றுள்ளது).

**1. ஆசை**

சாம்பசிவக்குருக்கள் வரை அவரது முன்னோர் சொக்கநாதர் கோயில் அர்ச்சகர் உரிமையையும், அதை நிர்வகிக்கும் பொறுப்பையும் பெற்றிருந்தனர். தங்கள் மகன் கணேசும் இந்தப் பணியைச் செய்ய பெற்றோர் விரும்பினர். ஆனால், கணேஷ் என்பவன் பெற்றோர் சொல்லைக் கேட்காமல் சினிமாக் கொட்டகையில் அனுமதிச் சீட்டு விற்றான். தன் அத்தை மகள் சியாமளாவிடம் "நான் படிச்ச படிப்புக்கும், தகுதிக்கும், திறமைக்கும் முன்னுரிமை கொடுக்காத இந்தச் சமுதாய அமைப்பால் இதைக் குற்றம் என்று சொல்ல முடியாது" (சோலை சுந்தர பெருமாள், மனசு, 2000, ப.23) என்று வாதிட்டான். வைத்தியநாதன் பிறப்பால் சூத்திரன். எட்டு வயதிலிருந்து இருபத்துநான்கு வயதுவரை குருக்களுடன் இணைந்து தெய்வ சேவைக்குத் துணை செய்தான். அவன் தன் குருவிடம் தீட்சை பெற்றதால் அடைந்த மந்திர சக்தியை விட, தானாக மன அப்பியாசத்தால் கற்று, அதில் பதிந்து நித்யகர்ம அனுஷ்டானங்கள் செய்தான். குருக்களின் வீடு வறுமையில் வாடியதை அனுபவப்பூர்வமாக உணர்ந்த அவன் இதற்கு ஒரு நல்ல முடிவைத் தன்னால் எதிர்காலத்தில் ஏற்படுத்த முடியும் என்று நம்பினான். கணேஷிற்கு வேலையில்லை என்று அறிந்த குருக்களின் நண்பன் காசிநாதன் அவனைத் தன்னுடன் சென்னைக்கு அழைத்துச் சென்று வேலை கொடுத்தார். நாளடைவில் கணேஷ் பெற்றோருடன் வைத்திருந்த

கடிதத் தொடர்பை விட்டான். இதனால் குருக்களும், அவர் மனைவி கல்யாணியும் மகனைப் பார்க்கச் சென்னை வந்தனர். அங்குக் காசிநாதனின் தங்கை மகள் ஜனனியைக் கணேஷ் அறிமுகப்படுத்தியதோடு 'இவளைத் தான் திருமணம் செய்வேன்' என்றான். மனவருத்தத்துடன் வீட்டிற்கு வந்த குருக்கள் நெஞ்சுவலியால் உயிரை விட்டார். இறுதிச் சடங்கிற்குக் கணேஷ் வரவில்லை. வைத்தியநாதன் இறுதிச் சடங்குகளை முறைப்படிச் செய்ததோடு, ஈஸ்வர சேவையைத் தொடர்ந்து செய்து, வீட்டுப் பொறுப்பையும் ஏற்றான். சில நாட்கள் சென்ற பின்பு காசிநாதனைக் கணேஷ் சந்தித்தான். அப்போது கணேஷிடம் ஜனனியைத் திருமணம் செய்ய இயலாது என்று காசிநாதன் கூறினார். அதோடு அவன் மீது சுமத்தப்பட்ட பொய்க்குற்றம் மற்றும் பணி இடமாற்றம் போன்ற செய்திகளையும் தெரிவித்தார். அதிர்ந்த அவன் ஊருக்குச் சென்று வந்த பின் புதிய பணியிடத்தில் சேரலாம் என நினைத்துப் பயணப்பட்டான். ஜனனியை மறந்து திருவாரூர் ரயில் நிலையத்தில் வந்த கணேஷின் மனதில் சியாமளாவுடன் பழகிய நாட்கள் நினைவில் வந்தன. ஆனால் சியாமளா மற்றும் வைத்தியநாதன் திருமணப் பேச்சு உறுதியானதால் வீட்டை நோக்கி வந்த அவனைச் சியாமளா அறியாத ஒருவனைப் பார்ப்பது போல் பார்த்துக் கடந்து சென்றாள். "பிறப்பு மட்டும் ஒருவனின் மேதைமையைத் தீர்மானிக்க இயலாது" (சோலை சுந்தர பெருமாள், 2000, மனசு, ப.6) என்று இந்த நாவல் குறித்து நாவல் ஆசிரியர் கூறியுள்ளார். இந்தக் குறுநாவலில் கணேஷ் ஆச்சாரமான பிராமணக் குடும்பத்தில் பிறந்தவனானாலும் அவன் அதிக ஆசையால் குடும்பத்திற்கு அந்நியமாகிப் போனதையும், வைத்தியநாதன் பிறப்பால் சூத்திரன் ஆனாலும் அமைதியாலும், பண்பாலும், கீழ்ப்படிதலாலும் பிராமணக் குடும்பங்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டதையும் காணலாம்.

**2. மனசு**

கலைமகள் நடத்திய குறுநாவல் போட்டியில் பரிசு பெற்ற இந்தக் குறுநாவலில் விவசாயத் தொழிலாயின் குடும்பப் பிரச்சனை கருப்பொருளாக உள்ளது. எல்லம்மா தன் கணவன் வீரப்பனுடன் விவசாயத் தொழிலில் ஈடுபட்டால்தான் சராசரியான கூலி கிடைக்கும். அதனால் அவள் வீட்டிலுள்ள பிரச்சனைகளை ஒதுக்கி வைத்து விட்டுச் செல்லத்துரையின் வயலில் வேலைக்கு விரைந்தாள். செல்லத்துரை தன் ஐந்துமா நிலத்தில் தானும் பாடுபட்டு விவசாயத் தொழிலாளர்களையும் வாழ வைத்தான். தங்கைக்குத் திருமணம் செய்ததால் கடனில் மூழ்கின செல்லத்துரை வீடு உட்பட தன் அனைத்துச் சொத்துகளையும் விற்றுக் கடனை அடைத்தான். அவன் கடனில் மூழ்கியிருந்த போது எல்லம்மா தன்னால் இயன்ற உதவியைத் தன் கணவனின் அனுமதியுடன் செய்தாள். ஊரில் அறுவடை இல்லாத போது வேலைக்காக ஐந்து கிலோ மீட்டர்

தொலைவில் ஜோடியாகச் செல்ல எல்லம்மா, வீரப்பன் தம்பதியினர் அழைக்கப்பட்டனர். கைக்குழந்தை இருப்பதால் எல்லம்மாவால் வீரப்பனுக்குச் சோடியாகச் செல்ல இயலவில்லை. வாய்ப்பேச்சில் வல்லவளான சரோஜா வீரப்பனுக்குச் சோடியானாள். இவளைப் பலர் வீரப்பனுடன் இணைத்துக் கூறினர். வேலை முடிந்து கூலியை வீட்டில் கொடுக்காத வீரப்பன் எல்லம்மாவுடன் சண்டையிட்டுச் சரோஜாவுடன் சென்றான். எல்லம்மா ஆலமரத்துக் களத்தில் திருடர்களைக் காட்டிக்கொடுத்ததால் வெறுப்படைந்த ஊர்த்தலைவர் வீரப்பனைத் தூண்டி விட்டார். இதனால் செல்லத்துரையை எல்லம்மா வைத்துக் கொண்டிருப்பதாக வீரப்பன் பழி கூறினான். எல்லம்மாவிற்கு ஆதரவாகப் பேச யாரும் முன்வரவில்லை. எல்லம்மாவை வீரப்பன் ஒதுக்கவும், சரோஜாவைத் திருமணம் செய்து கொள்ளவும், குழந்தையை வீரப்பன் வைத்துக் கொள்ளவும் ஊர்த்தலைவர்கள் முடிவு செய்தனர். எல்லம்மா தனித்தவள் ஆனாள். ஆற்றுப்படுகையில் குடிசை கட்டிக் கொண்டிருந்த செல்லத்துரை தன் பெயரால் எல்லம்மாவிற்கு ஏற்பட்ட பழியை நினைத்து வருந்தி இறந்தான். மூன்று நாட்கள் கழித்து இரவில் ஒருவன் எல்லம்மாவிடம் தவறாக நடக்க முயன்றான். எல்லம்மா அவனை அடித்து வீழ்த்தினாள். இனி, எதிர்வரும் பிரச்சனைகள் அனைத்தையும் சமாளித்து வெற்றி பெற வேண்டும் என்ற மனதிடம் அவளுக்கு எற்பட்டது. வீரப்பனைச் சரோஜா விட்டுச் சென்றதால் அந்த வெறியில் அவன் தன் குழந்தையைக் கொல்ல முயன்றான். அதனைப் பார்த்தவர்கள் குழந்தையை மீட்டு எல்லம்மாவிடம் சேர்த்தனர். பின்பு எல்லம்மாவைத் தேடி வந்த வீரப்பனை அவள் கண்டுகொள்ளவில்லை. எல்லம்மாவால் அன்புடன் அத்தை என்று அழைக்கப்படும் ஆராயி பல நேரங்களில் எல்லம்மாவிற்காகப் பரிந்து பேசினாள். ஆனால், சில சூழ்நிலைகளில் அவளால் பரிந்து பேச இயலவில்லை. திருமணமான புதிதில் எல்லம்மாவைச் செல்லத்துரை அடைய விரும்பின போது எதிர்த்துத் தன்னையும் களங்கப்படுத்தாமல், அவனும் மனம் திருந்த மன்னித்தாள். செல்லத்துரையிடம் தன் கணவன் வட்டி கேட்டபோதும், நஷ்ட ஈடு கேட்ட போதும் எதிர்த்தாள். செல்லத்துரைக்குக் கடன் ஏற்பட்ட போது மனிதநேயமாக உதவினாள். களத்து மேட்டில் திருடினவர்களைக் காட்டிக் கொடுத்தாள். தன் கணவன் தனக்கு மட்டும்தான் என்று எண்ணினாள். அது முடியாது போனபோது கிராம பஞ்சாயத்திற்குச் சென்றாள். இவ்வாறு இந்தக் குறுநாவலில் எல்லம்மா, வீரப்பன், செல்லத்துரை, ஆராயி இவர்களின் மனநிலை சித்தரிக்கப் பட்டுள்ளது.

### 3. பொதி

நகர நாகரீகம் நிழலளவும் எட்டாத ஒட்டர்களின் வாழ்க்கைக்கு ஒரு புளியந்தோப்புப் புகலிடமாகிறது. கிராமம், நகரம், மாநகரம்

இவைகளில் இல்லாத நீதி, நேர்மை போன்றவை புளியந்தோப்பில் குடிகொண்டிருக்கின்றன. உழைப்பை மூலதனமாகக் கொண்ட புளியந்தோப்பு மக்களான ஒட்டர்களின் வாழ்வு முறைகள், சுகதுக்கங்கள், ஏக்கங்கள் ஆகியன இந்தக் குறுநாவலில் பதிவு செய்யப்பட்டுள்ளன. கறுத்தம்மாவை அவள் மாமன் ரெங்கு திருமணம் செய்ய வேலைத் தலத்தில் வைத்துப் பரிசப் பணம் கொடுத்தனர். பின்னர் பாலம் கட்டும் வேலை தொடர்ந்தது. பாலத்தின் மேல் தளத்தில் கறுத்தம்மாவின் தாத்தா தோட்டாண்டியுடன் கறுத்தம்மாவின் தோழி செல்லாயி நின்று வேலை செய்தாள். தோட்டாண்டி எதிர்பாராமல் சவுக்குமரத்தில் வழுக்கினார். அவரைப் பிடிக்கச் சென்ற செல்லாயியும் தூணில் மோதி தோண்டாண்டியுடன் கீழே விழுந்தாள். தோட்டாண்டியின் தலையில் அடிபட்டதால் அவர் சுயநினைவை இழந்தார். செல்லாயிக்குக் காலில் முறிவு ஏற்பட்டது. மருத்துவமனையில் இருவரும் கவனிக்கப்படாமல் வராண்டாவில் படுக்கவைக்கப்பட்டனர். கண்காணி பலமுறை கெஞ்சின பின்பு செவிலியர் கவனித்தனர். மருத்துவர் வந்த பின்னர் இரத்தக்கசிவு நின்றது. மருத்துவமனை ஊழியர்கள் ரெங்குவிடமும், அவன் தாய் வெள்ளையிடமும் கைக்கூலி வாங்கினர். இருவரும் படுக்க வைக்கப்பட்டிருந்த இடத்தின் தூய்மையின்மையை முதலாளி ராஜவேலு கண்டு செவிலியரையும், மருத்துவரையும் கைக்கூலி கொடுத்துக் கவனித்தார். அதன் பின்பு அவர்கள் நல்ல இடத்திற்கு மாற்றப்பட்டனர். ஆறு வாரங்களுக்குப் பிறகு தோட்டாண்டியும், நொண்டியான செல்லாயியும் மருத்துவமனையிலிருந்து வரும்போது பாலம் கட்டி முடிக்கப்பட்டிருந்தது. செல்லாயியின் தாய் நானும், செல்லாயியும் இனி இந்த ஊரில் இருந்து பயனில்லை என்றும் எனவே, பிறந்த ஊருக்குச் செல்கிறோம் என்றும் அதன் முன் கறுத்தம்மா - ரெங்கு திருமணத்தை முடியுங்கள் என்றும் கூறினாள். கறுத்தம்மாவிடம் செல்லாயி நொண்டியான தன்னைத் தன் குடிகார மாமா இரண்டாவதாகத் திருமணம் செய்யக் கேட்டதாகவும், தாயார் அதற்கு ஒத்துக் கொண்டதாகவும் கூறித் தனக்கு இதில் விருப்பமில்லை என்றும் கூறினாள். பரிசப் பணம் கொடுக்க செல்லாயியின் மாமா ஏற்பாடு செய்ததால் அனைவரும் வந்து சேர்ந்தனர். திருமணக்காரியம் பேச பெண்களும் வரலாம் எனக்கூற செல்லாயியையும் அழைத்து வந்தனர். அழுது கொண்டிருந்த அவளை அவள் தாய்த் தேற்றினாள். தோட்டாண்டி, "ஒரு பெண்ணோட வாழ்வ சட்டுபுட்டுன்னு பேசி முடிச்சுப்புடாதியோ, அந்தப் பொண்ணு தப்பா ஏதனாச்சும் பண்ணிக்கிட்டுன்னா பொண்ணு பாவம் பெரும் பாவமே" (சோலை சுந்தர பெருமாள், மனசு, 2000, ப.65) என்றார். இதைக் கேட்ட செல்லாயியின் மாமா "அந்த ஆளு நல்ல ஆம்பளயா இருந்துச்சுன்னா இந்த நொண்டிப் பொண்ண மொவனுக்குக் கட்டிக்குமா... ன்னு கேளுக" என்றான். இதைக் கேட்ட கறுத்தம்மா "என் அப்புச்சி நல்ல ஆம்பளதான்னு நான் நிருபுச்சிக் காட்டுரேன் ..." (சோலை சுந்தர பெருமாள், மனசு, 2000, பக். 165, 166)

எனக் கூறி எழுந்து ரெங்குவை இழுத்து வந்து செல்லாயியைத் திருமணம் செய்யும்படிக் கூறினாள். வெள்ளையும் சம்மதித்தாள். ரெங்குவும் 'நான் செல்லாயியைத் திருமணம் செய்கிறேன்' என்று உணர்ச்சி வசப்பட்டுக் கூறினான். அந்தப் புளியந்தோப்பு மக்களுக்கு அன்று சந்தோஷமான பொழுதாக இருந்தது. மங்களமாகத் திருமணம் நடந்தது. இரவு நெருங்கியது. கருமேகங்கள் திரண்டன. மழை சாரலாக வெளிப்பட்டது. செல்லாயியை முதலாளி சாமி திண்ணைக்குப் போகலாம் என ரெங்கு அழைத்துச் சென்றான். புளியந்தோப்பு மக்கள் வாழ்வதற்கு ஆறடி நிலம் கூட கிடைக்காமல் நிழல்களோடு போராடுகிறார்கள். பல நேரங்களில் மழை, காற்று போன்ற இயற்கையில் சீற்றங்களுக்கும் பலியாகின்றார்கள். உழைப்பை மூலதனமாகக் கொண்ட இந்த மக்கள் ஒருவர் துயரத்தை ஒருவர் ஏற்றுக்கொள்ளுதல், வாக்கு மாறாமல் செயல்படுதல் போன்றவைகளை வாழ்க்கை முறைகளாகக் கடைபிடித்து வாழ்கின்றனர்.

## 2. குருமார்கள்

இந்தக் குறுநாவல் தொகுப்பில் ஆசை, குருமார்கள், அடிக்கல் என மூன்று நாவல்கள் உள்ளன.

### 1. ஆசை

'மனசு' தொகுப்பிலுள்ள முதல் குறுநாவலான 'ஆசை' இந்தத் தொகுப்பிலும் முதல் குறுநாவலாக இடம்பெற்றுள்ளது (இது குறித்த செய்திகளுக்கு 'மனசு' என்ற தலைப்பின் கீழ் இடம்பெற்ற 'ஆசை' என்ற துணைத் தலைப்பில் அமைந்த பகுதியைப் பார்க்கவும்).

### 2. குருமார்கள்

பஞ்சநாதம் பிள்ளையின் கருமாந்திரச் சடங்கின் போது வண்ணான் சீனிவாசன், பரியாரி ராமுபண்டிதன், மருத்துவச்சி ஏலாம்பா ஆகியோர் முன்னின்று பல முக்கியமான சடங்குகளைச் செய்தனர். ஆனால், அவர்கள் பஞ்சநாதம் பிள்ளையின் மகன் சிங்காரவேலுவாலும், மைத்துனர் தங்கவேலுப்பிள்ளையாலும் மரியாதையின்றி நடத்தப் பட்டனர். பஞ்சநாதம் பிள்ளையின் இறப்பின் போது சிதைக்கு எரியூட்ட சீனிவாசன் முன்னின்றார். மேலும் அவர் பூஜை மற்றும் படித்துறையில் நடந்து முடிந்த கர்மச்சடங்குகள் ஆகியவைகளுக்குத் தலைமையேற்று நடத்தியதோடு, கருமாந்திர வீட்டையும் கட்டினார். இறுதியில் "பாவ யோனிக்குப் பொறந்து பாவப் பட்டவன்கள் ..." (சோலை சுந்தர பெருமாள், குருமார்கள், 2006, ப. 82) என்று அய்யரின் பரிதாபத்திற்கு உள்ளானார். "இன்று கிராமத் தொழிலாளர்களாக விளிம்பு நிலைக்குத் தள்ளப்பட்டுக் கிடக்கும் வண்ணார் மற்றும் மருத்துவர் சாதியினர் தான் அன்றைய காலச் சமுகத்தில் குருமார்களாய் மக்களின் வாழ்க்கையோடு

பின்னிப்பிணைந்து இருந்திருக்கிறார்கள். அவர்களை ஆரிய புரோகிதர்கள் வர்ணாசிரமத்தைப் பயன்படுத்தியும், தங்களின் தோற்றத்தைக் கொண்டும் மிகவும் தந்திரமாக அடிமைத்தொழில் புரிபவர்களாக இறக்கியுள்ளார்கள்" (சோலை சுந்தர பெருமாள், குருமார்கள், 2006, ப.5). சிங்காரவேலுவின் திருமணத்தின் போது மூன்று புரோகிதர்களும், தலைமையேற்ற வெங்கடேச சாஸ்திரியும் மறந்துவிட்ட மந்திரத்தை அவர் காதில் மட்டும் கேட்கும் படியாக சீனிவாசன் எடுத்துக்கூறி பாராட்டுப் பெற்றார். இவ்வாறு அறிவும், விவேகமும் செயல்திறனும் உடையவர்கள் சாதியின் பெயரால் புறந்தள்ளப்பட்டுள்ளனர் என்ற செய்தி இந்தக் குறுநாவலில் இடம்பெற்றுள்ளது.

### 3. அடிக்கல்

உத்தண்டிச் சாம்பானும், அவரது மூத்த மகன் குப்பான் சாம்பானும் அம்மையப்ப நல்லூர் ராஜாங்க அறக்கட்டளையிலும், ராசா நாராயண சத்திரத்துக் கட்டளையிலும் சேவை செய்பவர்கள். நீசர்களான இவர்களுக்குச் சிவபெருமானை வழிபட உரிமை இல்லை. ஆனால், குப்பான் சாம்பான் எப்போதும் 'சிவ சிவ' என்று கூறி, திருநீறு பூசி சிவ பெருமானை வழிபடுவான். தாசியான நீலாம்பரிக்குப் பிறந்தவள் ஆரமுது. இவள் மகாராஜா சகஜியின் நேசத்திற்குரியவளானாள். வாலவாய்க்காலில் ஊற்றுத் தோண்டும் போது செப்புத் தோண்டி, ஆதிதியாகேசர் திருமேனி, சிவிகை மற்றும் ஐஸ்வரியங்கள் ஆகியவற்றைப் புதையலாகக் கண்டெடுத்த இந்த நீசர்கள் பாராட்டப்பட வேண்டும் என்ற வேண்டு கோளை ஆரமுது மன்னரிடம் கூறினாள். மன்னரும் ஏற்றுக்கொண்டார். ஆனால், தலைமைச் சிவாச்சாரியார் இதை மறுத்தார். மன்னர் ஆகம முறையில் தலையிடாமல் மானிய நிலம் அளிக்க ஆணையிட்டார். பங்குனி உத்திரத் திருவிழாவிற்குப் பறை அறிவிக்கும் உரிமை, முதல் மண்டகப்படி செய்யும் உரிமை, அதற்கென தனி மானிய நிலம் ஆகியவற்றை அளிப்பதற்கான கட்டளைகள் நிறைவேற்றப்பட்டன. இந்தக் குறுநாவல் குப்பான் சாம்பான் என்பவன் அரசரின் துணையோடு புதிய நந்தனாக உருப்பெற்றான் என்று குறிப்பிடுகிறது.

### 3. நாவல்கள்

சோலை சுந்தர பெருமாள் படைப்புகளாக ஏழு நாவல்கள் வெளிவந்துள்ளன. அவை உறங்க மறந்த கும்பகர்ணர்கள் (2000), ஒரே ஒரு ஊர்ல (2001), தப்பாட்டம் (2002), செந்நெல் (2003), பெருந்திணை (2005), நஞ்சை மனிதர்கள் (2006), மரக்கால் (2007) ஆகியன.

### 1. உறங்க மறந்த கும்பகர்ணர்கள்

இந்த நாவல் 1990 இல் வெளிவந்த சிறந்த நாவல் என்று சுபமங்களாவால் தேர்வு செய்யப்பெற்றது. சின்னசாமி, தங்கம்

தம்பதியினருக்குச் சிவராமன், அப்புனு என்று இரு மகன்கள் உண்டு. அப்புனு மன வளர்ச்சி குன்றியவன். இதனால், உடன்பிறந்தவனாலேயே புறக்கணிக்கப்படுகிறான். அய்யாவு, அவன் மனைவி பொன்னுக்கண்ணு, மகள் மருதாயி, கொங்காணிக்குளத்துச் செவத்தி மற்றும் பலர் சின்னசாமியின் பண்ணையில் வேலை செய்தனர். அப்புனு விவசாய வேலைகளில் சிறிய வேலைகளைச் செய்வான். செவத்தி பல நேரங்களில் அப்புனுவைக் கேலி செய்தாலும், அவனுக்குத் தீங்கு என்றால் துடித்தாள். தாழ்ந்த சாதி என்பதாலும் பண்ணையாள் என்பதாலும் அய்யாவின் மகள் சடங்கிற்குச் செல்ல வேண்டாம் என்று சின்னசாமியிடம் அவர் மகன் சிவராமன் எச்சரித்தான். சின்னசாமி மகன் சொன்னதைக் கேட்காததால் வீட்டில் பிரச்சனை ஏற்பட்டது. ராஜாமணி வாத்தியார் ஒருநாள் அய்யாவிடம், “அப்புனுவுக்கு ஒண்ணும் பெரிய வியாதி இல்லை. உடல் வளர்ந்த அளவு மூளை வளராம நின்னு போச்சு ... நாம காட்டுற பாசமும் பரிவும் நாளா வட்டத்துல அவனைச் சரியாக்கி விடும். பொறுமையா இதமா நாம சொல்லிக்கொடுத்துப் பழக்கினா சீக்கிரமே எல்லாரையும் போல அதுவும் ஆயிடும் ... “ (சோலை சுந்தர பெருமாள், உறங்க மறந்த கும்பகர்ணர்கள், 2000, ப.68) என்று கூறினதிலிருந்து அய்யாவு, பொன்னுக்கண்ணு, மருதாயி, செவத்தி போன்றோர் அப்புனுவிடம் மனித நேயமாக நடந்து கொண்டனர். இதனால் அப்புனுவிடம் நல்ல மாற்றம் தெரிந்தது. அறுவடை முடிந்தபின் களம் கூட்டும் வேலையில் செவத்தி ஈடுபட்டிருந்தாள். வைக்கோற்போருக்கு இடையில் அவள் கூட்டும்போது அப்புனு உதவினான். நெளிந்து கூட்டும்போது இருவரும் முதலில் எதிர்பாராமல் இடித்தனர். அதன்பின்னர் அந்த நெருக்கத்தை இரண்டு உடல்களும் விரும்பி ஏற்றுக்கொண்டு ஒன்றாயின. தலையாரி இதைக் கண்டு பஞ்சாயத்தைக் கூட்டினார். நாவங்குடியில் கூடின பஞ்சாயத்தில் கொங்காணிக்குளத்துத் தலைவர்களும், மக்களும் கலந்து கொண்டனர். இருவரும் திருமணம் செய்து கொள்ளும்படி தீர்ப்பு வழங்கப்பட்டது. திருமணத்தில் சாதிக்கலப்பு ஏற்றுக்கொள்ளப்பட்டது. இந்த நாவலில் நாற்று நடுதல் முதல் அறுவடை வரையுள்ள செய்திகள் வரிசையாகக் கூறப்பட்டுள்ளன. சில இடங்களில் சாதி தொடர்பான கருத்துகள் வந்தாலும் சாதி அமைப்புத் தகர்க்கப்படுகிறது.

**2. ஒரே ஒரு ஊர்ல**

இயற்கையோடு இணைந்த இனிய காதல் கதை இந்த நாவலில் உள்ளது. “ஒரே ஒரு ஊர்ல என்ற நாவல், நாகதோஷம் என்கிற மூடநம்பிக்கையால் ஒரு பெண்ணின் வாழ்க்கை எவ்வாறு சீரழிக்கப்படுகிறது என்பதைக் கருவாகக் கொண்டது" (சோலை சுந்தர பெருமாள், வெண்மணி தீயில் கருகிய 44 உடல்களை நேரில் பார்த்தேன் ..., புதிய புத்தகம் பேசுது, டிசம்பர் 2004, ப.20). ஆச்சியம்மா என்ற தன் பாட்டியுடன் வாழ்ந்து வந்த பேத்தி வள்ளி, மாமன் மகன் சண்முகத்தை

விரும்பினாள். இவர்கள் திருமணம் செய்து கொள்ள முதலில் குடும்பப் பகை தடையாக அமைந்தது. அந்தத் தடை நீங்கின பின்பு மாணிக்கராஜ் என்ற முரடன் தடையாக வந்தான். எதிர்பாராமல் அவன் இறந்த பின்னர் சண்முகம் மற்றும் வள்ளி ஜாதகத்தில் தடை வந்தது. பிற தடைகளைக் கண்டு அஞ்சாத வள்ளி 'நாகதோஷம்' என்ற ஜாதகத்தடையைக் கண்டு அஞ்சினாள். இருவரும் இறுதிவரை ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டு வாழலாம் என்று முடிவு செய்தனர். ஊரில் காமன் பண்டிகை அன்று மன்மதன் உயிர்ப்பின் பின்னணியில் சண்முகமும், வள்ளியும் இணைந்து தங்கள் வாழ்வின் புது அத்தியாயத்தைத் தொடங்கினர். சண்முகம் வள்ளியிடம், "... சாந்தி முகூர்த்தத்திலேயே ரெத்தனம்புள்ள மொவன் மாதிரி நான் இன்னும் சாகலியே ! இதுக்குப் பயந்து தானே என்ன நீ கல்யாணம் பண்ணிக்க மாட்டேன்னு மறுத்தே ...?" (சோலை சுந்தரபெருமாள், ஒரே ஒரு ஊர்ல, 2001, ப.159) எனக் கேட்டான். உடற்கூறு ரீதியாகத் திருமணப் பொருத்தம் பார்க்கும் செய்தி இந்த நாவலில் கூறப்பட்டுள்ளது. மேலும், இந்த நாவலில் வள்ளியின் கிராமமான எட்டியலூர் இயற்கையாகக் காட்டப்பட்டுள்ளது. சோளக்கொல்லை, மிளகாய்க்கொல்லை, மீன்பிடித் தொழில், ஆடுமேய்த்தல் மற்றும் இவை தொடர்பான செயல்கள் கதையில் விரவி வந்துள்ளன.

### 3. தப்பாட்டம்

தஞ்சை மாவட்டத்திலுள்ள கிராமமான ரெட்டிப்பாளையம் 'தப்பாட்டம்' நாவலில் கதைக்களனாக அமைந்துள்ளது. மூப்பனார் சாதிக்காரர்கள் பறையர் சமூகத்தையும், சேர்வைக்காரர் சாதிக்காரர்கள் சக்கிலியச் சமூகத்தையும் தங்களது அடிமைகளாகக் கொண்டுள்ளனர். மூப்பனார், அம்பலக்காரர் ஆகிய சாதியினர் தங்களது நன்மைக்காக பள்ளர், பறையர், சக்கிலியர் இன மக்கள் ஒன்றுபடுவதைப் பல வழிகளில் தடுக்கின்றனர். இதனால் தோழப்பன் (சக்கிலியன்) மற்றும் வள்ளி (பறையர்) திருமணம் பல பிரச்சனைகளுக்குப் பின்பு புரட்சித் திருமணமாக நடைபெறுகிறது. அம்பலக்காரர்களில் விவசாயக் கூலிகள் இருந்த போதிலும் அவர்கள் தலித் மக்களுடன் பேசுவதையும், பழகுவதையும், அவர்களுடன் இணைந்து உழைக்கும் வர்க்கமாகத் திரள்வதையும் விரும்பவில்லை. இந்தச் சூழ்நிலையில் மைலப்ப சேர்வையின் சாவிற்குத் தப்பு அடிக்கப் போவதில்லை என்றும் வேலைக்கு ஏற்ற கூலி தந்தாலொழிய சாவுச் செய்தி சொல்லப் போவதில்லை என்றும் தம்புராயன் பகடை கூறினார். கோயில் சடங்கில் உரிமை கேட்க தலித் மக்கள் நடத்தின போராட்டம் வலுவடைந்தது. சுந்தரமூர்த்தி வாத்தியார் கம்யூனிஸ்ட் கட்சியில் தன்னை இணைத்துக் கொண்டு தலித் மக்களின் சமூக விடுதலைக்காகப் பாடுபடுகிறார். ஆண்டைகள் தலித் மக்களின் குடிசைகளுக்குச் செல்லும் வழியை அதிகாரவர்க்கத்தின் உதவியுடன் அடைக்கின்றனர். உழைக்கும் வர்க்கத்தினருக்குக் கூலி உயர்வு

நிராகரிக்கப்படுகிறது. தலித் பெண்கள் ஆண்டைகளின் அகோரமான காமப்பசிக்கு இரையாகின்றனர். ஆண்டைகளைச் சிறிது எதிர்த்தாலும் கொடூரமான தண்டனைகள் நிறைவேற்றப்படுகின்றன. கம்யூனிஸ்ட் கட்சியின் உதவியால் தேநீர்க்கடையில் நடைமுறையில் இருந்த இரட்டைக்குவளை முறை ஒழிக்கப்படுகிறது. 'ஆண்டைகளை எதிர்த்தால் எப்படி வாழ முடியும்? என்ற கருத்துக் குளுந்தான் சாம்பான் போன்றோர் வாயிலாகப் பரப்பப்படுகிறது. இழிவான இசைக்கருவியாகப் பயன்படுத்தப்படும் 'தப்பு' போர்க்கருவியாக மாற்றம் பெற சுந்தரமூர்த்தி வாத்தியார் முயற்சி செய்கிறார். இறுதியில் தாழ்த்தப்பட்ட மக்கள் தங்களுக்குள் கடைபிடித்த தீண்டாமையாலும், ஆண்டைகளுடனான அச்ச உணர்வாலும் சுந்தரமூர்த்தி வாத்தியார், தோழப்பன், அய்யாசாமி, உத்தராசு, கோவிந்தன், விசாலம் ஆகியோர் கம்யூனிஸ்ட் கட்சியுடன் இணைந்து செய்த முயற்சிகள் பலனற்றன. சுந்தரமூர்த்தி வாத்தியாரை 'இனக் கலவரம் மூட்டினார்' என்ற பொய்க் குற்றச்சாட்டுடன் காவல்துறையினர் கைது செய்தனர். சுந்தரமூர்த்தி வாத்தியாரின் விடுதலையைத் தோழப்பனின் தோழர்கள் 'வாழ்க!' என்ற வாழ்த்தொலியோடு, போர்ப்பறையும் முழங்க ஊர் உலகம் அதிரும்படி கொண்டாடினர். இவ்வாறு தாழ்த்தப்பட்டோர் தங்கள் வாழ்வில் சந்திக்கும் பலதரப்பட்ட கொடுமைகளையும், அதை எதிர்த்து அவர்கள் மேற்கொள்ளும் போராட்டங்களையும் சோலை சுந்தர பெருமாள் 'தப்பாட்டம்' நாவலில் விவரித்துள்ளார். மேலும் இந்த நாவல் 'சாதி ஒடுக்கு முறைக்கு எதிரான போராட்ட நாவல்' என்று ஆசிரியர் கூறியுள்ளார். 'அகமும் புறமும்' என்பது இந்த நாவலைக் குறித்த விமரிசன நூலாகும். அதில் "சாதிச் சங்கங்களைப் பிரச்சாரம் மூலம் வர்க்கரீதியாக ஒன்றிணைக்க வேண்டும். கட்சியால் அது முடியும் என்பதுதான் இந்த நாவல் மூலம் கதைச்சொல்லி கூறவரும் செய்தியாக இருக்கிறது" (க. பஞ்சாங்கம், சாதிச் சங்கக் கலாச்சாரமும் இடது சாரிகளின் எதிர்கொள்ளலும், அகமும் புறமும், 2006, ப.135) என்று பஞ்சாங்கம் குறிப்பிட்டுள்ளார்.

**4. செந்நெல்**

அரைப்படி நெல் கூலி உயர்வு கேட்டுக் கீழவெண்மணியில் விவசாயத் தொழிலாளர்கள் நிலவுடைமையாளர்களுக்கு எதிராகச் செய்த போராட்டம் வலுவடைந்தது. இதன் விளைவாக 1968 ஆம் ஆண்டு டிசம்பர்த் திங்கள் 25 ஆம் நாள் 44 தலித்துகள் ஒரு குடிசைக்குள் வைத்துத் தீயிட்டுக் கொளுத்தப்பட்டனர். எரிந்து கரிக்கட்டைகளான உடல்களை 13 வயதில் பார்த்த சோலை சுந்தர பெருமாள் 30 வருடம் கழிந்து அந்த நிகழ்வை மையமாக வைத்துச் செந்நெல் நாவலைப் படைத்துள்ளார். வேலுநாடார் என்ற பண்ணையார் நெல் உற்பத்தியாளர் சங்கத் தலைவர் கோபால கிருஷ்ண நாயுடுவிற்கு அஞ்சி நடந்து வந்தார். இந்த நிலையில் வெண்மணியில் வாழும் ரெங்கபாஷ்ய நாயுடு என்பவர்

கோபால கிருஷ்ண நாயுடுவிற்குப் பக்கபலமாக இருந்து சிகப்புக் கொடியேற்றும் விவசாயத் தொழிலாளர்களின் ஒற்றுமையைக் குலைக்கச் சூழ்ச்சி செய்தார். இதனால் குடியானவர்த் தெருவில் வாழும் தொழிலாளர்கள் பிரிந்தனர். தலித் தொழிலாளர்கள் மட்டும் தங்களை அடிமை நிலையிலிருந்து மாற்ற உதவி செய்து வரும் கம்யூனிஸ்ட் கட்சியைப் பற்றிக் கொண்டு செங்கொடியை ஏற்றி வந்தனர். தொடர்ந்து அவர்கள் முதலில் எட்டணா கூலி உயர்வு கேட்டுப் பெறுகின்றனர். வடிவேலு என்பவர் மேல் சாதிக்காரராக இருந்தாலும் விவசாயத் தலித் தொழிலாளர்களின் முன்னேற்றத்திற்குப் பாடுபடுகின்றார். இதனால் பல நேரங்களில் பொய்க் குற்றச்சாட்டுக்கு ஆளாகி சிறையில் அடைக்கப்படுகிறார். பெரியானின் இரண்டாவது மகன் கண்ணுசாமி என்பவர் வடிவேலுவுடன் இணைந்து மக்களை ஒருங்கிணைக்கப் பாடுபட்டார். இறுதியில் வேலுநாடாரின் எட்டாம் எண் பயிர் அறுவடையின் போது கலத்துக்கு ஆறுபடி கூலி கேட்டுத் தலித் தொழிலாளர்கள் போராடினர். போராட்டம் தேக்கமடைய அதிகாரவர்க்கத்தினர் வடிவேலுவையும், கண்ணுசாமியையும் சிறை வைத்தனர். ஊர்மக்கள் இருவரையும் மீட்டனர். கோபால கிருஷ்ண நாயுடுவின் அடியாளாக விளங்கின வீரப்பன் கொல்லப்படுகிறான். இதனால் போராட்டம் வலுவடைகிறது. எந்தச் சூழ்நிலையிலும் கைது செய்யப்படலாம் என்ற நிலை ஏற்பட தலித் தொழிலாளர்கள் பலர் தலைமறைவாகின்றனர். இந்த நேரத்தில் கோபால கிருஷ்ண நாயுடு, ரெங்கபாஷ்ய நாயுடு போன்றோர் குண்டர் படையுடன் தலித் தொழிலாளர் வசிப்பிடங்களுக்கு வந்து குடிசைகளைக் கொளுத்தினர். தீக்கும், அடிக்கும் பயந்து பெண்கள், குழந்தைகள் அனைவரும் அந்த ஊரிலேயே வீடு என்று அழைக்கத் தகுதியுள்ள ராமையனின் வீட்டினுள் புகுந்தனர். அந்த வீடு எரிக்கப்படுகிறது. மக்களின் அலறல் அடங்கி ஒடுங்குகிறது. பெரியானின் மூத்த மருமகள் வள்ளி கருவக்காட்டில் ஓர் ஆண்குழந்தையைப் பெற்றாள். இந்தக் குழந்தை புதிய தலைமுறையின் தோற்றமாகத் திகழ்கிறது. 'வெண்மணியும் 44 பிடிச்சாம்பலும்' என்பது செந்நெல் நாவல் குறித்து வந்த விமரிசனங்களின் தொகுப்பு நூலாகும். இதில் செந்நெல் நாவல் ஓர் ஆவணம், ஒரு நிஜமான வரலாற்று நாவல், சேற்று மனிதர்களின் போராட்ட வரலாறு, செங்கோலம் எனப் பல்வேறு பாராட்டு மொழிகளைப் பெற்றுள்ளது. மேலும், கோவை ஞானி என்பவர் "தமிழ் நாவல்களில் ஓர் அழியாத வரலாற்றுச் சின்னமென இந்த நாவல் திகழ முடியும்" (கோவை ஞானி, செந்நெல்லுக்கு முன்னும் பின்னும், வெண்மணியும் 44 பிடிச்சாம்பலும், 2001, ப.19) என்று குறிப்பிட்டுள்ளார். இந்த நாவல் விஜயகுமார் என்பவரால் மலையாளத்திலும், டி. தோமஸ் என்பவரால் ஆங்கிலத்திலும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. மேலும் பல பரிசுகளைப் பெற்றுள்ளதோடு பல பல்கலைக் கழகங்களில் பாடநூலாகவும் உள்ளது.

## 5. பெருந்திணை

தமிழ்நாட்டின் நெற்களஞ்சியம் என்று அழைக்கப்படும் தஞ்சை வட்டாரப் பகுதியில் வேலை இழப்பால் துன்பப்படும் விவசாயத் தொழிலாளர்களும், உற்பத்திப் பொருளை விற்பனை செய்தால் உற்பத்திச் செலவை ஈடுகட்ட இயலாமல் தவிக்கும் விவசாயிகளும் இயற்கையின் சீற்றத்தால் பாதிக்கப்பட்டுக் கடனிலும், வறுமையிலும் மூழ்கியுள்ள அவலநிலையை இந்த நாவலில் காணலாம். “மருத நிலப் பகுதியான சுற்று வட்டாரக் கிராமங்களில் நடக்கும் இந்தக் கதை மண்ணுக்கும் மனிதனுக்கும் நடுவிலான பொருந்தாக் காதலாக காலப்போக்கில் விவசாயம் மாறிவரும் ஆபத்தான நிலையைக் குறிக்கின்றது" (பத்மாவதி விவேகானந்தன், பெருந்திணை-சோலை சுந்தர பெருமாள், கணையாழி, ஆகஸ்ட் 2006, ப.25) என்று பத்மாவதி விவேகானந்தன் கூறியுள்ளார். சிவசங்கரன் பிள்ளை என்ற பண்ணை மாகாணத்திடம் ஆறுமுகம் என்பவர் பண்ணை அடிமையாக வேலை செய்து வந்தார். ஆனால் இந்த இருவரும் சாதி மற்றும் பண வேறுபாடுகள் இன்றி மனித நேயத்துடன் பழகுகின்றனர். இரண்டு வருடங்களாக மழை இல்லாததால் கர்நாடகமும் நீர்விட மறுத்தது. பண்ணைகள் வாடும் பயிர்களைக் காப்பாற்ற பல இலட்சங்கள் செலவில் ஆழ்குழாய்க் கிணறுகளைத் தோண்டினர். விளைச்சலை வாங்குவோர் அடிமட்ட விலைக்கு வாங்கினதால் பண்ணைகள் ஆட்டம் கண்டனர். கடனுக்கான வட்டி அதிகரித்ததால் அவர்களால் முன்னேற முடியவில்லை. மேலும் மாடுகளைப் பராமரிக்க இயலாததால் அவைகளையும் விற்க வேண்டியதாயிற்று. கடனிலிருந்து மீள இயலாமல் சிவசங்கரன் பிள்ளையின் மருமகன் பழனிக்குமார், தங்கவேலுப்பிள்ளையின் மகன் ஆகியோர் தற்கொலை செய்து கொண்டனர். பின்னர் புயல், மழை என அவர்கள் நம்பிக்கை குலைந்தது. ஆறுமுகம் வசித்த அம்பேத்கர் நகரில் ராசா போன்றோர் வறுமையின் கோரப்பிடியில் சிக்கி இறந்தனர். ஆறுமுகம் என்பவர் மக்கள் படும் துன்பங்களை அரசிற்கு வலியுறுத்த கம்யூனிஸ்ட் கட்சியைத் தேர்ந்தெடுத்து உழைத்தார். ஆளும் கட்சியும், கம்யூனிஸ்ட் கட்சியும் மக்களுக்குச் சிறு உதவிகளைச் செய்தன. ஆறுமுகத்தின் மகன் சாமிக்கண்ணு, சிவசங்கரன் பிள்ளையின் மகன் சிவநேசன் ஆகியோர் இறுதிக்காலத்தில் பெற்றோருக்கு உதவாமல் தங்கள் சமூக, பொருளாதார நிலையை உயர்த்துவதில் குறியாய் இருந்தனர். இவ்வாறு இந்த நாவல் விவசாயிகளின் துயர நிலையை விளக்குவதோடு, பண்ணை அடிமைகளின் வறுமை வாழ்வையும் சித்தரிக்கிறது. வறுமையின் கொடுமையால் எலிக்கறி உண்ணுதல், அதன் விளைவால் ஏற்பட்ட சாவு போன்றவைகளையும் நாவல் விவரித்துள்ளது. மேலும், சிவசங்கரன் பிள்ளை தன் பண்ணை அடிமையின் படிப்பை ஆதரித்தது, செம்மங்குடி அய்யர் தன் அடிமையின் மகன் படிக்க விரும்பினதால் அவனைத் திருட்டு

வழக்கில் சிக்க வைத்தது போன்ற செய்திகளையும் இந்த நாவலில் காணலாம். பெருந்திணை அடிமைப் பெண்களின் துயர நிலையைக் கூறுவதோடு, அடிமைகள் தாங்கள் வளர்க்கும் ஆடுகளை விற்க பண்ணையார் அனுமதியைப் பெறும் நிகழ்வுகளையும் சுட்டுகின்றது. மேலும், இந்த நாவலில் குலவழிபாட்டுச் செய்திகள் அழுத்தம் பெற்றுள்ளதோடு, மழை பெய்தால் பச்சை நிறத்தைப் பார்க்கலாமே என்று மழைக்காக ஏங்கும் உழைக்கும் மக்களின் வெள்ளை மனமும் குறிக்கப்பட்டுள்ளது. இவ்வாறு பெருந்திணை நாவல் மேல்தட்டு, அடித்தட்டு மக்களின் துன்பங்களை வெளிப்படுத்துவதில் வெற்றி பெற்றுள்ளது.

### 6. நஞ்சை மனிதர்கள்

செல்வந்தரான கந்தையா பிள்ளையின் மகன்கள் இருவரும் பங்காளிப் பிரச்சனையால் பகையாயினர். மூத்தவர் கோவிந்தசாமிப் பிள்ளைக்கு மகன் இல்லாததால் தன் சொத்து மகள்களைவிட்டுச் சென்றுவிடுமோ என்று அச்சம் கொண்டார். பகையாளியாக இருந்தாலும் தன் தம்பியின் இரண்டாவது மகன் வெள்ளைச் சாமிக்குத் தன் பேத்தி அங்கம்மாவைத் திருமணம் செய்யலாம் என நினைத்தார். எதிர்ப்புகள் இருந்தாலும் திருமணம் நடந்தது. அங்கம்மாவின் பெற்றோரால் கோவிந்தசாமிப் பிள்ளையை மீறி சம்பந்தியான சோமுப் பிள்ளையிடம் உறவாட இயலவில்லை. அங்கம்மாவிற்குப் பிறந்த முதல் மூன்று குழந்தைகள் இறந்ததால் நான்காவது குழந்தை நீண்ட ஆயுளுடன் வாழ 'தத்தெடுத்தல்' சடங்கு நடத்தப்படுகிறது. அந்தக் குழந்தைக்குக் குப்புசாமி என்ற பெயர் சூட்டப்படுகிறது. கோவில் உரிமைப் பிரச்சனையால் சோமுப்பிள்ளை வெட்டப்பட்டு இறந்தார். குப்புசாமிக்குச் சாவித்திரி என்பவள் மனைவியாகி ஐந்து பெண் குழந்தைகளைப் பெற்றாள். 'பரணியில் பிறந்தால் தரணியாள்வான்' என்ற வாக்குப் பொய்க்கும் படியாகக் குப்புசாமி தன் பாட்டன் சோமுப்பிள்ளையைப் போல பெண் தொடர்பில் ஈடுபட்டான். மேலும், குடிப்பழக்கத்தாலும், அரசியல் தொடர்பாலும் சொத்துகள் அனைத்தையும் இழந்தான். நிறைமாதமாயிருந்த தன் மனைவியை அடித்துக் கொன்றான். அவனது மூத்த மகள் காயத்திரி என்பவள் தன் பெயருக்கு முன் தந்தை பெயரைப் பயன்படுத்துவதைச் சட்டப்படித் தடுத்தாள். இறுதியில் குப்புசாமியின் தீய குணங்களால் அவன் தந்தை வெள்ளைச்சாமியும், அவன் மகள்களும் தங்கள் நிலத்தில் தாங்களேப் பயிரிடும் நிலைக்கு ஆளாயினர். இறுதியில் காயத்திரி தன் தந்தையை எதிர்த்துப் போராடுகிறாள். "இவள் தான் இந்தச் சமூகத்துக்குத் தேவையான பெண்" (சோலை சுந்தர பெருமாள், வெண்மணி தீயில் கருகிய 44 உடல்களை நேரில் பார்த்தேன், புதிய புத்தகம் பேசுது, டிசம்பர், 2004, ப.21) என்று கூறியுள்ளார் சோலை சுந்தர பெருமாள். தஞ்சை மண்ணில் ஆணாதிக்கம் இருந்ததைப் "பொம்பளச்

செருக்கியோளுக்குக் கொஞ்சம் எடம் கொடுத்துட்டாப் போதும், தலைமேல ஏறிக்கிட்டுத்தான் பேனு பாப்பாளுங்க" (சோலை சுந்தர பெருமாள், நஞ்சை மனிதர்கள், 2006, ப. 40) இதுபோன்ற தொடர்களால் அறியலாம். மேலும் சோமுப்பிள்ளை, குப்புசாமி போன்றோர் தவறான நிலைகளில் உறவுகள் கொள்வதைப் பெருமையாக நினைக்கின்றனர். நாவலின் முற்பகுதியில் மேலோட்டமாக உள்ள அரசியல் பிற்பகுதியில் அழுத்தம் பெற்றுள்ளது. நீதிக்கட்சி, காங்கிரஸ், தி.மு.க., அ.தி.மு.க. ஆகிய கட்சிகளில் நிலவுடைமையாளர்கள் தொடர்பு கொண்டுள்ள நிலை குறிக்கப்பட்டுள்ளது. மேலும் தனக்குக் கீழ் வேலை பார்ப்பவரின் உழைப்பைப் பிழிவது, கோவில் வேலைகளில் முன்னிற்பது, சடங்கு நிகழ்ச்சிகளில் பிறந்த வீட்டு உறவுகளின் இன்றியமையாமையைக் குறிப்பது, விதை நெல் கோட்டைக் கட்டுவது ஆகிய செய்திகளோடு, தீண்டாமைக்கு எதிராகப் போராடின மணலூர் மணியம்மா கொலை, தலித்தாகிய குண்டுகண்ணு தன் உடலுழைப்பால் முன்னேறி நிலவுடைமையாளர் விற்ற நிலத்தை வாங்கி முன்னேறின நிகழ்வு போன்றவையும் கூறப்பட்டுள்ளன. 'பல தலைமுறைகளாகச் சேர்த்த பெரும் சொத்து என்றாலும் உடையவர்குணம் தீயதானால் அழிந்து விடும்' என்ற செய்தியை மூன்று தலைமுறைகள் வாயிலாகக் கூறியுள்ளார் ஆசிரியர்.

### 7. மரக்கால்

ஆதனூர் பிரமதேய அடிமைகளான செவலைச் சாம்பான், வளத்தி ஆகியோரின் இரண்டாவது மகனான நந்தன் சிவபெருமானைத் தரிசிக்க விரும்பினதால் தில்லை தீட்சிதர்களின் சூழ்ச்சிக்குச் சம்மதித்துப் பலியாகிப் போனதை மரக்கால் என்ற நாவல் எடுத்துரைக்கிறது. வேதத்தில் சண்டாளன் என்று ஒதுக்கப்பட்ட நீசப்பறையன் சிவ மந்திரங்களை மனதில் கூட சொல்லக்கூடாது. இந்த நிலையில் நந்தன் கச்சலையைத் திருமணம் செய்தபின்பும் அவளுடன் இணைந்து வாழாமல் சாம்பலைப் பூசிக் கொண்டு சிவபித்துப் பிடித்து நின்றதால் கச்சலை 'நீ பூசிக்கிட்டு அலையிற சாம்பல்லேயே நீ அழியப் போறீயா இல்லையான்னு என் கண்ணாலப் பார்க்கத்தான் போறேன்' என்று கூறிக் கொண்டு இன்னொருவனுடன் சென்றாள். 'சிவதரிசனம் பார்க்காத மனிதப் பிறவியும், மந்தை மாடும் ஒன்று. நீசப் பறைசாதியில் பொறந்த பாவத்தைப் போக்க பரமபதத்தைத் தேடிப் போயிட்டா நம்மளப் பிடிச்சிருக்கிற தீட்டு கழிஞ்சிடும்' என்று கூறிய நந்தன் பிரமதேய அடிமைப் பணி முடிந்து நாள் தோறும் இரவு நேரங்களில் மூங்கில் குத்தில் அமர்ந்து சிவமந்திரங்களை ஓதினான். நாளடைவில் பகலில் வேலையிடத்திலும் சிவமந்திரங்களை ஓதி ஆடிப்பாடினான். வேலையைச் சரியான நேரத்தில் முடித்ததால் கார்வாரிகள் போன்றோரால் அவனை அடக்க இயலவில்லை. இந்த நிலையில் திருப்பரங்கூர் திரிலோகநாதர் தரிசனம் பெற்ற ஆதனூர்

பண்ணை அடிமைகளான பறையர்கள் விரும்பினர். ஆதனூர் பிரமதேய அதிபரான முத்துசாமி தீட்சிதர் என்பவர் நந்தன் உட்பட நால்வருக்கு அனுமதி வழங்கினார். சமணமதம் பிரமதேய அடிமைகள் வாழ்வில் குறுக்கிடாமல் இருப்பதற்குத்தான் இந்த அனுமதி வழங்கப்பட்டது. இந்த நிலையில் திருப்பரங்கூரில் வாரியத்தலைவர் ஞானசம்பந்தம் பிள்ளை என்பவர் தேவதான உறுப்பினரான சாம்பசிவக்குருக்கள் போன்றோரிடம் கலந்து பேசியதின் விளைவாக அடிமைப் பறையர்கள் தேரடியில் நின்று தரிசனம் செய்தவற்கு அனுமதி வழங்கப்பட்டது. சோமவார நாளில் திருப்பரங்கூர் சன்னதியில் நந்தனும் அவனது கூட்டாளிகளும் தீப ஆராதனையின் போது சிவதரிசனம் காண முற்பட்டனர். 'அரோகரா','சிவ சிவ' என்றவர்கள் 'நந்தி மறைக்குதே ! அய்யனே உங்கள் தரிசனம் காண வந்த நீசர்களான பண்ணை அடிமைகளுக்கு அந்தப் பாக்கியம் இல்லையே' என்று அழுது புலம்பினார்கள். ஆதனூர் பண்ணை அடிமைகள் எதிர்காலத்தில் திருப்பரங்கூருக்கு விசுவாசமான ஆட்களாக இருப்பதற்கு ஏற்ற வகையில், ஊர் மன்ற வாரியக்கூட்டம் முடிந்த பின் சில முக்கியத் தலைவர்கள் நந்தி பகவானை இரவு நேரத்தில் வடக்குப் பக்கமாக ஒரு முழம் தள்ளி வைக்க முடிவு செய்தனர். இறுதியில் 'சிவபெருமானின் அருளால் நந்தி விலகி சிவதரிசனம் கிடைக்கப் பெற்றனர்' என்ற செய்தி எங்கும் பரவியது. திருப்பரங்கூர் தரிசனத்திற்குப் பிறகு பெரியகுப்பான், தீக்கொளுத்தி போன்ற நீராணிக்கக் கார்வாரிகள் உட்பட பலர் சிவ பித்து உடையவர்களாக மாறினர். பின்னர் நந்தனும் அவன் கூட்டாளிகளுமாக மொத்தம் பன்னிரண்டு பேர் தைமாதப் பிறப்பில் வரும் பூசத்திருநாளில் தில்லை கனகசபைக்குப் போய் மகாதேவபாத தரிசனம் காண வேண்டும் என விரும்பி அதற்கான முயற்சிகளில் ஈடுபட்டனர். ஆதனூர் பிரமதேய அதிபர் முத்துசாமி தீட்சிதர் பண்ணை அடிமைகளின் விருப்பத்திற்கு நேரடியாக எதிர்ப்புத் தெரிவிக்காமல் அறுவடைக்குத் தயாராக இருக்கிற பத்து வேலி முதல் சம்பா அறுவடையை முடித்துக் களத்தில் பட்டறை இருப்புக் கட்டிப் போட்ட பின்பு போகலாம் என்று தெரிவித்தார். ஆனால் ஆதனூர் பண்ணை அடிமைகளுடன் இணைந்து அயலூர் பறை பண்ணை அடிமைகளும் இரவு பகல் பாராமல் உழைத்ததால் குறிப்பிட்ட காலத்தில் அனைத்து வேலைகளும் முடிந்தன. பிரமதேயமே ஆச்சரியத்தில் மிதந்தது. தலையாரி பிரமதேய முத்திரையுடைய அடையாளக் கைச்சாத்தைக் கொண்டு கொடுத்தான். பல இடர்களைத் தாண்டிச் சென்ற ஆதனூர் பறையர்களான பண்ணை அடிமைகள் தங்கள் சாதியினருக்கு முன்மாதிரியாகத் திகழ்ந்தார்கள். சிலர் இவர்களின் நிலை பூனை புலி வேடம் போட்டது போல்தான் என்று நினைத்துப் பரிதாபப்பட்டார்கள். தில்லை பிரமதேய பரிபாலனசபாவில் மந்தியானந்த தீட்சிதர் 'நாம் தந்திர உபாயத்தால் நீசச்சண்டாளர்களை ஒடுக்கி வைக்க வேண்டும் என்று கூறி, மேற்கு மதில் திருவாசலுக்கு வந்து நந்தனிடம் "பெரியோர்கள்

இருக்கும் இடத்திற்குப் போய், பாவப்பட்ட நீசச் சென்மத்தில் பிறவி எடுத்து அடிமையாய் சேவகம் செய்ய வேண்டிய நீ, அவர்கள் பாதம் பட்டுக் கொண்டு இருக்கும் கருவறையில் நின்று அருள் வேண்ட நினைக்கிறாய்! இந்த நீசப் பிறவியில் உனக்கு இது அருகதையே இல்லை. எனவே நீ நீசப் பிறவி நீங்கி புனிதப் பிறவி பெற்றுத் தவ சிரேஷ்டர்கள் வாழும் திருத்தலத்திற்கு வர செந்தீ இறங்கிடு. அப்போது முப்பிரிநூல் மார்புடன் அம்பலத்தே பக்தி செய்ய அருள் கிட்டும். அதை ஏற்றுவா. வசிஸ்டர் புகழ்ந்த தில்லையில் செழித்து வாழும் வேதியர்களின் இஷ்டமும் இதுவே" (சோலை சுந்தர பெருமாள், மரக்கால், 2007, ப.265) என்றார். தங்கள் சொல்லைத் தலைமேல் தாங்கிச் செந்தீ இறங்குவேன் என்று பித்துப் பிடித்துக் கூறிய நந்தனிடம் அவன் நண்பர்கள் உண்மையை விளக்க முயன்றனர். இதனால் உமணனின் உதவியுடன் நடராச தரிசனம் பார்க்க வேறுவழியில் நந்தனும், மருதனும் ஆலயத்தினுள் புகுந்து சன்னதி வந்தனர். உணர்ச்சிப் பெருக்கின் மிகுதியால் நந்தன் வாய்விட்டு இறைவனைத் துதிக்க, இருவரும் பிடிபட்டனர். மருதன் தலையில் அடிபட்டு இறந்தான். நந்தன் தனது பித்தால் அக்கினியில் பிரவேசமானான். இந்தச் செய்திகளைக் கேள்விப்பட்ட அனைவரும் யாக குண்டத்திலிருந்து மனுச உடம்பு பொசுங்கும் நாற்றத்தை உணர்ந்து முகத்தைச் சுழித்தனர். இந்த நாவலில் உழைப்பு தவிர வேறு எதையும் தெரியாத தீண்டத்தகாதவர் களான அடிமைகளின் அவல வாழ்வு சித்தரிக்கப்பட்டுள்ளது. மேலும் நாவலில் பல இடங்களில் கொடுமையான தண்டனைகள் கூறப்பட்டுள்ளன. அதோடு ஆதனூர் ஆலயப் பொறுப்பில் உள்ளவர்கள் ஆலயச் சொத்தை அபகரிக்கும் நிலையும் கூறப்பட்டுள்ளது. அன்றைய காலத்தில் வழக்கத்தில் இருந்த தேவதாசி முறையும் கூறப்பட்டுள்ளது (நாட்டுப்புறச் சிறுகதைகள் என்ற நூலில் இடம்பெற்றுள்ள 'மரக்கா நந்தன்' என்ற கதை இந்த நாவலின் சாயலில் உள்ளது).

### 4. தொகுத்த நூல்கள்

சோலை சுந்தர பெருமாள் 'தஞ்சைச் சிறுகதைகள் – ஓர் ஆய்வு', 'தஞ்சைக் கதைக் களஞ்சியம்', 'நாட்டுப்புறச் சிறுகதைகள்' என்ற மூன்று நூல்களைத் தொகுத்து வெளியிட்டுள்ளார்.

#### 1. தஞ்சைச் சிறுகதைகள் ஓர் ஆய்வு

இந்த நூலில் சோலை சுந்தர பெருமாளின் 'வைக்கப்போரும் கடாவடிக்கு வாக்கப்பட்டவளும்' என்ற சிறுகதை உள்ளது. இது 'ஓராண்காணி' என்ற சிறுகதைத் தொகுப்பிலுள்ள பன்னிரண்டாவது சிறுகதை ஆகும்.

#### 2. தஞ்சைக் கதைக் களஞ்சியம்

இந்த நூலில் தஞ்சை மாவட்டத்திலுள்ள குறிப்பிடத்தக்க பிற படைப்பாளர்களின் சிறுகதைகள் இடம்பெற்றுள்ளன.

## 3. நாட்டுப்புறச் சிறுகதைகள்

சோலை சுந்தர பெருமாளின் நாட்டுப்புறச் சிறுகதைகள் என்ற தொகுப்பில் இடம்பெற்றுள்ள சிறுகதைகள் அனைத்தும் வாய்மொழி வாயிலாகச் சேகரிக்கப்பட்டு எழுத்துருவம் பெற்றவை ஆகும். கம்பங்கொழுக்கட்டை (கலியம்மாள்), மச்சக்காவடி (சீதையம்மாள்), முட்டாள் திருடன் (கலியம்மாள்), ஒரு குடம் தண்ணி ஊத்தி ஒரு பூ பூக்க (சாத்தனூர் அலமேலு), சமத்து (கலியம்மாள்), சொரக்காய் (கலியம்மாள்), தொம்பை (கலியம்மாள்), தரித்திரம் (கலியம்மாள்), தென்னை புடுங்கி (கலியம்மாள்) மரக்கா நந்தன் (ஆலங்குடி கோவிந்தம்மாள்), தூண்டில்காரன் (தங்கச்சியம்மாள்), குட்டிச் செல்லான் (வைரக்கண்ணுபிள்ளை, கட்டைக்குப்பான்), மயிலு பொண்ணு (கலியம்மாள்), அத்திரிபாட்சா கொழுக்கட்டை (சு. பத்மாவதி) என பதினான்கு கதைகள் உள்ளன. இந்த நூலிலுள்ள வடிகால் என்ற பகுதியில் பசியை மறக்க வைக்க குழந்தைகள், பேரப்பிள்ளைகள், கொள்ளுப் பேரக்குழந்தைகள் ஆகியோருக்குப் பெற்றோர்களும், பாட்டிகளும், தாத்தாக்களும் உணவிற்குப் பதிலாக கதையைச் சொல்லுவார்களாம். கதையைக் கேட்கும் அவர்கள் பசியை மறந்து தூங்கி விடுவார்களாம். அந்த மாதிரியான இக்கட்டான காலங்களில் கதையைச் சொல்ல வேண்டிய கட்டாயம் இருந்தது என சோலை சுந்தர பெருமாள் குறிப்பிட்டுள்ளார்.

### 1. கம்பங்கொழுக்கட்டை

கம்பங்கொழுக்கட்டை உண்ண ஆசைப்பட்ட கணவனுக்கு அவனது பங்கை வேலையிடத்தில் எடுத்துச் சென்ற மனைவி 'புல் தடுக்கினதால் புருஷனுக்கு ஆகாது' எனக் கருதி அவனது பங்கைத் தின்றாள். கணவன் ஏமாந்தான். பசித்த அவனுக்குத் தனது அக்கா வீட்டிற்குச் சென்று கறிச்சோறு வாங்கி வரும் வழியில் கல்தடுக்கினது. 'கல் தடுக்கினால் காணவனுக்கு ஆகாது' எனக் கருதி கறிச்சோறு முழுவதையும் தின்றாள். அதன்பின் நடந்தவைகளைக் கணவனிடம் கூறிய பின்பு இருவருமாக வீட்டிற்கு நடந்து வரும் வழியில் வெள்ளரித் தோட்டத்தைப் பார்த்த அவள் வெள்ளரிப் பிஞ்சுகளை வாரித் தின்றாள். வயிற்றோட்டம் ஏற்பட்டுத் துவண்டாள். கணவன்காரன் காட்டாற்றிற்கு அவளைத் தூக்கிச் சென்று உடம்பை அலசிவிட முற்படுகையில் இருவரும் தண்ணீரில் அடித்துச் செல்லப்பட்டனர். இவர்களின் மூன்று பெண் குழந்தைகளும் ஆற்றுக்கரையில் நின்று அழுது புலம்பினர். இந்தக் காட்சியைக் கண்ட பார்வதிதேவி பரிதாபப்பட்டுப் பரமசிவனிடம் கெஞ்சினாள். அவர் வசதிபடைத்த மூவருக்கு அவர்கள் வாழ்க்கைப்பட வரம் வழங்கினார். கணவர்களுடன் பொருந்தி வாழப் பிடிக்காத அடங்காப்பிடாரிகளான அவர்கள் மூவரும் தங்கள் கணவன்மார்களை

விட்டுப் பிரிந்து ஒன்றுகூடி மீண்டும் காட்டாற்றுக் கரையிலேயே வந்து அமர்ந்தனர். அந்த நேரத்தில் வந்த பரமசிவனும் பார்வதியும் அவர்களைப் பன்றி ஜென்மமாக ஆக்கினர். அந்தப் பன்றிகள் ஆற்றுக்கரையில் இப்போதும் அலைந்து கொண்டு இருப்பதாக குறவர் இனத்தைச் சார்ந்த கலியம்மாள் குறிப்பிடுவதாக இந்தக் கதை உள்ளது.

**2. மச்சக்காவடி**

சிங்காரம் எந்த வேலையைக் கொடுத்தாலும் சளைக்காமல் செய்வான். தான் வேலை செய்யும் வீடுகளில் கூலி வாங்குவதுடன் மதிய உணவிற்கு மரக்காச் சோறும் உண்பான். அவ்வாறு மரக்காச் சோறு கொடுக்காத வீடுகளில் மீண்டும் வேலைக்குச் செல்லமாட்டான். இதனால் அவனை 'மரக்காச்சோறு' என்று அனைவரும் அழைத்தனர். சிங்காரத்தை ஊரார் சீத்துக்கழிப்பாக நடத்துவதைக் கண்ட அவன் மனைவி தனக்கு ஆத்திரம் வரும்போதெல்லாம் புருஷனை அடித்து உதைத்தாள். அவன் தன் மனைவியின் அடியைத் தாங்குவதுடன் அவளிடம் "நீ தானே அடிப்பே. வேண்டியதை அடிச்சிக்கன்னு' இருந்துவிடுவானாம்" (சோலை சுந்தர பெருமாள், நாட்டுப்புறச் சிறுகதைகள், 2007, ப.28). சிங்காரத்தின் ஊரினர் ஒவ்வொரு ஆண்டும் காவடியைத் தூக்கி முருகனுக்குப் பால் செலுத்துவது வழக்கம். சிங்காரத்தின் மனைவி அவனிடம் இந்த வருடம் 'பால் காவடித் தூக்கு. முருகன் உனக்கு நல்ல புத்தியைக் கொடுப்பான்' என்றாள். மறுத்த அவனைப் பணிய வைத்தாள். கறி இல்லாமல் உண்பதற்கு வருந்தும் சிங்காரம் வேறு வழியில்லாமல் பால் சோறு உண்டான். முருகனைத் தரிசிக்கச் செல்லும் வழியில் உடன் வந்தவர்களுடன் சண்டையிட்டுப் பிரிந்தான். இரவு முழுவதும் நடந்த அவன் சற்று நேரம் கண் அயர்ந்தான். விடியலில் எழுந்து குளத்தில் குளிக்க இறங்கினான். மீனைக் கண்ட அவன் நாவில் எச்சில் ஊறினது. மீனைத் தீயில் வாட்டுவதற்காக வெட்டிக் கொண்டு இருக்கும் போது நேரம் ஆகும் என்று நினைத்து பால்காவடிச் செம்பினுள் அள்ளிப் போட்டுப் புறப்பட்டுச் சென்றான். சிங்காரம் தான் கொண்டு வந்த பால் செம்பைப் பண்டாரத்திடம் கொடுத்தான். அவர் முருகன் தலையில் அபிஷேகம் செய்யும்போது அதிலிருந்து மீன்துண்டுகள் விழுந்ததும் அதிர்ந்தார். பயந்து பாவநிவிர்த்திக்காகத் தனது நாக்கை அறுத்து முருகன் முன் வைத்தார். சிங்காரம் அதைக் கண்டு கொள்ளாமல் கண்மூடி வேண்டுதலில் ஈடுபட்டிருந்தான். அப்போது துண்டுகளான இரு மீன்களும் ஒன்று சேர்ந்து உயிர்பெற்று குளத்தில் சென்று விழுந்தனவாம். இரத்தம் கொட்ட நின்ற பண்டாரத்தின் நாக்கு ஒட்டிக் கொண்டதாம். பண்டாரம் மற்றும் சிங்காரம் இருவருக்கும் அந்த நேரம் முருகன் காட்சி கொடுத்தாராம். வீட்டில் தூங்கிக் கொண்டிருந்த சிங்காரத்தின் மனைவியிடம் முருகன் அந்த நேரம் வெளிப்பட்டு "உன் புருஷன் என்கிட்ட நெருங்கிவிட்டான் .... அடுத்த வருஷம் ஒரு புள்ளையைப் பெத்துக்கிட்டு

என்னோட வீட்டுக்கு வந்துவிட்டுப் போங்க' (சோலை சுந்தர பெருமாள், நாட்டுப்புறச் சிறுகதைகள், 2007, ப.35) என்று கூறினதாக சோழிய வெள்ளார் சாதியைச் சார்ந்த சீதையம்மாள் கூற்றில் இந்தக் கதை உள்ளது.

### 3. முட்டாள் திருடன்

முட்டாள் ஒருவன் திருடன் சொல்லுக்குக் கீழ்ப்படிந்து வேறு இரண்டு திருடர்களைக் கொன்றான். அதன் பின்னர், அவன் அரசனின் வேடமணிந்து வந்தான். அவனைப் பார்த்த முதல் திருடன் உண்மையான அரசன் என்று அஞ்சி திருட்டுப் பொருட்கள் அனைத்தையும் போட்டுவிட்டுக் கிணற்றிற்குள் குதித்தான். உடனே அரசனின் வேடத்தில் இருந்த முட்டாள் அனைத்தையும் சொந்தமாக்கினதாகக் குறவர் சாதியைச் சார்ந்த கலியம்மாள் கூறியுள்ளார்.

### 4. ஒரு குடம் தண்ணி ஊத்தி ஒரு பூ பூக்க

பிச்சடைப் பாட்டியின் பேத்தி பூந்தோட்டம் வைத்துப் பராமரித்தாள். அவள் தினமும் முதல் பூவைச் சிவபெருமானுக்குச் சாத்தி விட்டுப் பிற பூக்களைத் தானேச் சூடி அழகு பார்ப்பாள். ஒரு நாள் திருமாலும் அவர் மனைவியும் அந்தப் பூந்தோட்டத்திற்கு வந்தனர். அவள் திருமாலைக் கண்டு கொள்ளாமல் இருக்கவே திருமால் கோபம் கொண்டு 'இந்த பூந்தோட்டம் வாடிக்கிடக்க' என்று சாபம் கொடுத்துவிட்டு கருட வாகனத்தில் மனைவியை ஏத்திக்கிட்டுப் போய்விட்டார் (சோலை சுந்தர பெருமாள், நாட்டுப்புறச் சிறுகதைகள், 2007, ப.44). பூந்தோட்டம் வாடிப்போகவே பிச்சடைப்பாட்டி பூந்தோட்டத்தில் ஒரு தென்னம் பிள்ளையை நட்டு வளர்க்க ஆரம்பித்தாள். அவள் பேத்தி விரதம் இருந்து நீண்ட தூரம் போய்த் தண்ணீர் தூக்கி வந்து ஊற்றினதோடு, வாடின பூந்தோட்டத்திற்காக சிவபெருமானிடம் முறையிட்டாள். சிவபெருமான் அருள்பார்வை வீசி பூந்தோட்டம் சுபிட்சம் அடையவும், அவள் மனதில் இடம்பெற்ற ராஜகுமாரன் அவளுக்குச் சொந்தமாகவும் வரம் கொடுத்தார். அவள் பூந்தோட்டத்திற்குச் செல்லும் போது பூந்தோட்டம் செழித்துப் பூத்திருந்ததைக் கண்டாள். அவள் பாட்டி நட்ட தென்னம்பிள்ளை ராஜகுமாரனாக மாறி நின்றான். பிச்சடைப்பாட்டி அவர்களை மலர்தூவி வாழ்த்தி அனுப்பினாள் என்று சோழிய வெள்ளாளர் சமுதாயத்தைச் சார்ந்த அலமேலு என்பவர் குறிப்பிட்டுள்ளார்.

### 5. சமத்து

கோயிலுக்குச் சென்ற இளையராஜாவும், மந்திரி மகனும் அழகான ஒரு சிலையைப் பார்த்து வியந்தனர். பூசாரியிடம் இந்தச் சிலையை வடித்த சிற்பி யார்? எனக் கேட்டு அறிந்து அவரைப் பார்க்கச் சென்றனர். அவர் செம்மலை ராஜாங்கத்திலுள்ள ஒரு பெண்ணைப் பார்த்து அந்தச் சிலையை வடித்ததாகக் கூறினார். இளையராஜாவும்,

மந்திரி மகனும் செம்மலை நாட்டிற்குச் சென்று அந்தப் பெண்ணைப் பார்த்ததோடு அவள் அங்கு வாழும் ஒரு ஏழைப் பெண்ணுக்குப் பிறந்தவள் எனவும் அறிந்தனர். ஆனால் அவள் தனக்குத் தகுதியான ஒருவனைக் கண்டுபிடித்துத்தான் திருமணம் செய்வேன் என்றிருக்கிறாள் என்ற செய்தியை அறிந்த இளையராஜா அவளிடம் தன் விருப்பத்தைக் கூறின பின்பும் அவள் உடன்படவில்லை. இதனால் இளையராஜாவும், மந்திரி மகனும் கடலில் விழுந்து சாகத் துணிந்தனர். உடனே கடவுள் இதைப் பார்த்து தேவதை வடிவில் வந்து அவர்களைத் தடுத்தார். பின்பு பிச்சைக்காரச் சாமியார் வேடம் தரித்து அவள் பெற்றோரைச் சந்தித்து விவரம் கூறினார். அவர்கள் தங்கள் மகளின் பிடிவாத நிலையைக் கூற கடவுள் சோதி வடிவம் கொண்டு அவளைச் சம்மதிக்க வைத்து ஆசி கூறி மறைந்தார் என்று குறவர் சாதியைச் சார்ந்த கலியம்மாள் கூறியதாகக் கதை உள்ளது.

### 6. சொரக்காய்

குழந்தையில்லாத ஒரு தாத்தாவிற்கும் பாட்டிக்கும் கடவுளின் வரத்தால் சுரைக்காய் வெடித்து ஒரு மகன் பிறந்தான். ஊரினர் 'சொரக்காய்க்குப் பிறந்த பயல்' என்று கூற, வருந்தின அவன் வேறு ஊருக்குச் சென்று பிழைப்பு நடத்தி உங்களைக் காப்பாற்றுவேன் என்று கூறிச் சென்றான். சுரைக்காய் மனிதன் பிறந்த தோட்டத்தில் ஒரு சுரைக்காய் நன்றாக முற்றின பின் தங்கமாகவும், வெள்ளியாகவும் வெடித்துச் சிதறினது. இதைக் கண்ட வழிப்போக்கன் அதை அள்ளிச் சென்றான். அதன் பின்னர் அவன் அந்தத் தோட்டத்திலுள்ள அனைத்துச் சுரைக்காய்களையும் தாத்தாவிடம் விலை கொடுத்து வாங்கினான். இரண்டு, மூன்று நாட்கள் கழிந்து வந்த சுரைக்காய் மனிதனிடம் அவன் அம்மாவும் அப்பாவும் நிகழ்ந்தவைகளைக் கூறினர். காய்களின் விதைகள் தங்கமாகவும், வெள்ளியாகவும் இருப்பதைக் கடவுள் மூலம் அறிந்த சுரைக்காய் மனிதன் வழிப்போக்கனைக் கண்டுபிடித்துக் கடவுளின் உதவியால் பணத்தைத் திருப்பிக் கொடுத்து அனைத்துக் காய்களையும் மீட்டு வீட்டிற்கு வந்தான். இவ்வாறு அவன் ஏராளமான செல்வத்திற்கு அதிபதியான பின்பும் அவனுக்கு யாரும் பெண் கொடுக்கவில்லை. எனவே கடவுள் உதவியுடன் அரசனிடம் பெண் கேட்டுச் சென்றான். அரசன் சொன்ன கட்டளைக்குக் கீழ்ப்படிந்து எட்டாவது கடலில் இருக்கும் கடுங்கோ சேவலைப் பிடிக்கச் சென்ற இடத்தில் பிணம் தின்னும் ராக்காயி என்பவளுடைய மகளின் அழகில் மயங்கினான். அவளும் அவனுடன் செல்ல உடன்பட்டாள். அவளும், சேவலும், மனிதனும் கரைக்கு வந்ததும் களைப்பில் அவள் மடியில் படுத்துத் தூங்கினான். தாகம் எடுத்ததால் வெகுதூரம் சென்ற அவளது கண்ணில் ஒரு கேணி தென்பட்டது. அங்கு ஆடு மேய்க்கும் பெண் அவளை அடித்துத் தள்ளி கிணற்றில் போட்டாள். பின்பு அவள் போட்டிருந்த துணிகளைத் தான் அணிந்து கொண்டாள்.

அதன்பிறகு சேவல்காரி உயிருடன் வந்தாள். உண்மை வெளிவரும் எனப் பயந்த ஆடுமேய்க்கும் பெண் ஓடிப்போனாள். சேவல்காரியைச் சுரைக்காய் மனிதனின் பெற்றோர் ஏற்றுக் கொண்டனர். இவைகளைக் கேள்விப்பட்ட கடுங்கோ சேவலைப் பிடித்து வரச்சொன்ன அரசன் தன் மனைவி மற்றும் மகளுக்கு அரளி விதையை அரைத்துக் கொடுத்துத் தானும் தின்றான். மூவரும் இறந்தனர். உடனே சுரைக்காய் மனிதன் அரசன் ஆனான். அவன் தனக்கு மாம்பழம் வெட்டித் தருமாறு சேவல்காரியான ராணியிடம் கேட்டான். அவள் மாம்பழம் வெட்டும் போது அதிலிருந்து சுரைக்காய் மனிதன் ஆசைப்பட்டவளும் அரளிவிதை தின்று இறந்தவளுமான இளையராணி வெளிப்பட்டாள். அவள் இந்த வீட்டிலேயே ஒரு மூலையில் நான் இருக்கிறேன் என்று கேட்க அரசனாக மாறின சுரைக்காய் மனிதன் ஏற்றுக் கொண்டான். ஒரு நாள் கூந்தல் வளருவதற்காக இளையராணி கூறின மருந்தைப் பயன்படுத்திய சேவல்காரியின் தலை வழுக்கை ஆனது. எனவே அவள் ஆத்திரம் கொண்டு இளையராணியை வெட்டிக் குளத்தில் வீசினாள். அரளி விதை தின்று தற்கொலை செய்த அரசன் மற்றும் அரசியிடம் எமதர்மராஜன் "அவசரத்தில் உங்களோட ஏட்டைக் கிழிச்சிட்டேன். நீங்க பொழைச்சிப் போங்க என்று கூறி அவர்களை அனுப்பி வைத்தார்" (சோலை சுந்தர பெருமாள், நாட்டுப்புறச் சிறுகதைகள், 2007, ப.68). தங்களது மகளைப் பற்றி எமனிடம் கேட்காததால் வருத்தமுற்று வந்த அவர்கள் தண்ணீர் குடிப்பதற்காக வாழை மரத்தில் வாளைச் சாய்த்து வைத்து விட்டு நீரெடுக்க வந்ததும் நீர் இரத்தமாக மாறினது. ஆத்திரம் அடைந்த அரசன் வாளை எடுத்து அந்த வாழை மரத்தை வெட்டித்தள்ளினார். விழுந்த அடிவாழையில் இருந்து அவர்களின் மகள் இளையராணி வெளிப்பட்டாள். மகள் வாயிலாக நடத்தவை அனைத்தையும் அரசன் அறிந்து சேவல்காரியைக் கொன்று மகளுக்குச் சுரைக்காய் மனிதனைக் கட்டி வைத்துப் பட்டமும் கட்டினார். மேலும், 'நீங்க வாழையடி வாழையா சந்தோசமா வாழுங்கன்னு' வாழ்த்தினார் என்று கலியம்மாள் கூறியதாக இந்தக் கதை உள்ளது.

## 7. தொம்பை

அரண்மனையில் அரசியிடம் ராக்காயி, மூக்காயி, கண்ணாயி போன்றோர் சேடிப்பெண்களாய் இருந்தனர். அந்த அரண்மனையில் ஆண்களை வேலைக்குச் சேர்க்கமாட்டார்கள் என்றாலும் கண்ணாயி தன் கணவனை அரண்மனையில் ஒரு சிறு வேலையிலேனும் சேர்க்க முயற்சி செய்தாள். அது முடியாது போகவே மந்திரம் கற்றால் அரண்மனையில் இடம்பிடிக்கலாம் என நினைத்துத் தன் கணவனை மந்திரம் கற்க அனுப்பி வைத்தாள். அவன் எந்த குருவிடமும் செல்லாமல் ஓலையில் தெப்பைப்புல் வைத்து 'எலி வரட் வரட் என்று அறுக்கக் கண்டேன்', 'இரண்டு பனைமரங்கள் நிற்கக் கண்டேன்', 'நரிகள் ஓடக்கண்டேன்' என்று தான் பார்த்த மூன்று நிகழ்வுகளைக் குறித்தான். ஒரு நாள் திடீரென்று

அரண்மனையில் இருந்த தங்கத் தாம்பாளம் திருட்டுப் போனது. அதைக் கண்டறியும்படி அவனைப் பிடித்துச் சேவகர்கள் அரசன் முன் இழுத்து வந்து நிறுத்தினர். அரச கட்டளையை ஏற்காவிட்டால் 'கண்ணையும் தோண்டி, மூக்கையும் அறுத்து விடுவோம்' என்றனர். பயந்த அவன் 'கண்ணுக்கும் மூக்குக்கும் கேடு' என்று கூறியபடி வந்தான். இதைக் கேட்ட ராக்காயியும், மூக்காயியும் அவனைத் தனிமையில் சந்தித்துத் தாங்கள் திருடினதை ஒப்புக்கொண்டனர். எனவே அவன் அரசன் முன்னின்று தங்கத் தாம்பாளம் கிடக்கும் இடத்தைக் கூறினான். இதனால் அரசனிடமிருந்து ஏராளமான பொன்னும் பொருளும் பெற்று வீட்டிற்கு வந்தான். தான் மந்திரம் கற்ற விதத்தைத் தன் மனைவியிடம் கூறும் போது திருடர்கள் அவன் வீட்டில் திருடும் முயற்சியில் ஈடுபட்டிருந்தனர். அவர்கள் அவன் கூறுவதைக் கேட்டுத் தங்களைத் தான் கூறுகிறான் என நினைத்து அவன் காலில் வந்து விழுந்து மன்னிப்புக் கேட்டனர். மேலும், தாங்கள் இனித் திருடும் அனைத்திலும் ஒரு பகுதியைத் தருவோம் என்றும் கூறினர். இவற்றைப் பார்த்த அவன் மனைவி தன் கணவனை மெச்சிக் கொண்டாள் என்று குறவர் சாதியைச் சார்ந்த கலியம்மாள் கூறியதாகக் கதை உள்ளது.

### 8. தரித்திரம்

ஒரு நாள் ஊர் மக்கள் அரசனிடம் வந்து எங்கள் ஊரில் வாழும் மூதேவிப் பயல் எதைப் பார்த்தாலும் கெட்டுப் போகிறது. அபசகுனம் பிடித்த அவனை ஊரை விட்டு விரட்டிவிட வேண்டும் என்றனர். உடனே அரசன் அவனை இங்கே கொண்டு வாருங்கள். நான் அவனுக்கான தண்டனையை நிறைவேற்றுகிறேன் என்று கூறி அவனை அரண்மனைக்கு அருகில் தங்க வைத்தார். அடுத்த நாள் அரசன் அந்தத் தரித்திரம் பிடித்தவன் முகத்தில் விழித்தார். அதன்பின் அரசன் மந்திரி மகள் திருமணத்தில் கலந்து கொள்ள இருந்தார். திருமணம் சிறப்பாக நடைபெற்றது. விருந்து உண்ணும் இடத்தில் அரசனுக்கு உட்கார இடம் கிடைக்கவில்லை. எனவே, மக்கள் எழுந்து அரசனுக்கு உட்கார இடம் கொடுத்தனர். ஆனால் வேறொருவர் அமர்ந்த இடத்தில் தான் அமர விரும்பாமல் அரசன் மிகுந்த கோபத்துடன் அரசவைக்கு வந்தார். அவர்முன் தரித்திரம் பிடித்த மனிதனைப் பிடித்து நிறுத்தினார்கள். அரசன் அவனைத் தூக்கிலிடக் கூறினார். மந்திரி அரசனிடம் 'அவனை விட தப்பு செய்தவர்கள் நம் அரசவையில் இருக்கிறார்கள்' என்று கூறினார். அவர் யார்? என்ற அரசனின் கேள்விக்கு மந்திரியிடமிருந்து நீர்தான் என்ற பதில் வந்தது. எப்படி? என்று கேட்க மந்திரி, அரசே ! இவன் இன்று உங்கள் முகத்தில் விழித்ததால் தான் தனக்கு மரணத்தண்டனை கிடைத்தது. எனவே, இதற்கு நியாயம் செய்யுங்கள் என மக்களிடம் முறையிட்டால் நீதி செய்யும் அரசனான உங்களால் என்ன பதில்கூற முடியும்? என்றார். மன்னன் திருந்தி யாரும் தரித்திரம் பிடித்தவர்களாக இருக்க முடியாது என அறிவித்துத் தரித்திரம் பிடித்தவனுக்கு 'ராஜாங்க விசுவாசி' என்ற

மரியாதையைக் கொடுத்துப் பாராட்டினார் என்று குறவர் சாதியைச் சார்ந்த கலியம்மாள் கூறுயதாக இந்தக் கதை உள்ளது.

### 9. தென்னை புடுங்கி

ஓர் அரசனும் அரசியும் தங்கள் இரு மகன்களில் யாருக்கு நாட்டை ஆளும் திறமை இருக்கிறது என்று சோதிக்க முடிவு செய்தனர். அதன்படி தங்களது மூத்த மகனை அழைத்துப் பத்துப் பொற்காசுகளைக் கொடுத்து நீ அரசன் மகன் என்று யாரிடமும் கூறக்கூடாது. அப்படித் தெரியும்படி நடக்கவும் கூடாது என்று கூறி அனுப்பி வைத்தனர். அவன் நீண்ட தூரம் பயணப்பட்டு ஒரு விவசாயியிடம் வேலைக்குச் சேர்ந்தான். பல கட்டுப்பாடுகளுடன் அவர் சொல்லும் வேலைகள் அனைத்தையும் செய்தான். ஒரு நாள் விவசாயி அவனை அழைத்து 'வாசலில் நிற்கும் தென்னை மரத்தை வீட்டிற்குள் பிடுங்கி நடு' என்று கூறினார். அவன் அதிர்ந்து 'முடியாது' என்று கூறி பொற்காசுகளை அவரிடம் கொடுத்து விட்டுத் தனது வீட்டிற்கு வந்தான். அவனைக் கண்ட பெற்றோர் மேலும் பத்துப் பொற்காசுகளைக் கொடுத்து தங்கள் இளைய மகனை அனுப்பி வைத்தனர். எதிர்பாராமல் அவனும் தன் அண்ணன் வேலை பார்த்த விவசாயியிடமே வந்து சேர்ந்தான். அவர் கூறிய அனைத்து வேலைகளையும் சிறப்பாகச் செய்து முடித்தான். விவசாயி 'தென்னை மரத்தை வேர் அறுபடாமல் பிடுங்கி வீட்டினுள் நடக் கூறினார்.' சரி என்று கூறின அவன் வீட்டுத் திண்ணையை உடைத்து அகலமாகவும், ஆழமாகவும் குழி வெட்டினான். வீட்டுக்காரம்மா வீடு இடிந்து விழுமே என்று பயந்து அவனிடம் கேட்க அவன் இந்தக் குழி போதாது. இன்னும் இரண்டு குழிகள் இதுபோல் வெட்டி தென்னை மரத்தைக் குழிக்குள் இறக்க வேண்டும் என்றான். அவள் பதறிப்போய்த் தன் கணவனிடம் விவரத்தைக் கூற அவரும் பதறினார். அவன் "ஏழைச் சொல்லுறது அம்பலம் ஏறுமாங்க? நீங்கசொன்னதைச் செஞ்சிக்கிட்டு இருக்கிறேங்க. நான் அடிமைங்க. எஜமானுங்க சொல்லுறதைச் செஞ்சிக் காட்டுறது தானுங்க என்னோடக் கடமை. அது தானுங்க எங்களுக்கு மௌவுசு" (சோலை சுந்தர பெருமாள், நாட்டுப்புறச் சிறுகதைகள், 2007, பக். 86, 87) என்றான். விவசாயி நீ எனக்குச் சரியான புத்தியைப் புகட்டிவிட்டாய் என்று கூறி அவனது அண்ணனிடம் பறித்த பத்துப் பொற்காசுகளையும் சேர்த்துக் கொடுத்து அனுப்பினார். வீட்டிற்கு வந்த அவன் ஆட்சியைப் பெற்றுக் கொள்ளத் தயாரானான் என்று குறவர் சாதியைச் சார்ந்த கலியம்மாள் கூறியதாக இந்தக் கதை உள்ளது.

### 10. மரக்கா நந்தன்

ஆதனூர் பார்ப்பான் பண்ணையில் பண்ணையாளாக இருந்த பறை சாதியில் பிறந்த நந்தன் எப்போதும் நடராச பெருமானை நினைத்துக் கொண்டு வாழ்ந்து வந்தான். ஒரு நாள் நந்தனின் கனவில்

வந்த நடராசர் 'நந்தா ! என்னைப் பார்க்க எப்போது வருவாய்? என்று கேட்டார். நந்தன் 'என் ஆண்டை ஊரைவிட்டு அடி எடுத்து வைக்க விடமாட்டார்' என்று கூறி அழுதான். நடராசர் அக்கினி பகவானிடம் கூறி பார்ப்பானைச் சம்மதிக்க வைக்கிறேன் என்றார். சில நாட்கள் ஆன பின்பும் காரியம் கைக்கூடாததால் அவன் தினந்தோறும் சிவ பெருமானை வேண்டிக் கொண்டே விரதம் இருந்தான். 'நீச சாதியானதால் தான் சிவபெருமானும் வரவில்லை' என்று நினைத்தான். ஒரு நாள் திடீரென சிவபெருமான் தோன்றி 'நீ இப்போது போய் ஆண்டையிடம் கேள்' எனக் கூறி மறைந்தார். ஆனால் மிகுந்த கட்டுப்பாடுகளால் நீச சாதிக்காரன் எனப்பட்ட நந்தனால் பார்ப்பனர்களின் தெருவினுள் போக முடியவில்லை. ஆண்டை பண்ணை மாகாணத்துக்குப் பிரவேசனம் பண்ணும் போது நந்தன் வந்து நாற்பத்தெட்டு முழம் தள்ளி நின்று அவர் முன்னால் நெடுஞ்சாணாய் விழுந்து கேட்டான். பார்ப்பான் இரங்கவில்லை. அக்கினி பகவான் தோன்றி 'பறையன் நந்தனை தில்லை வலம் செல்ல அனுமதிப்பாயாக!' என்று கட்டளையிட்டார். பார்ப்பான் கையைப் பிசைந்து கொண்டு நிற்கும் போது பகவான் 'சரியான சுருக்கு உன்கிட்ட இருக்கு. நாற்பது வேலி நிலத்தின் விளைச்சலை அறுத்துக் களம் புழங்கிட்டு நீ தைப்பூசத்தன்று போகச் சொல்' என்றார். பார்ப்பானும் அப்படியேச் சொன்னான். பூசத்திற்கு நான்கு நாட்கள் இருக்கும் நிலையில் நந்தன் பார்ப்பானிடம் இரக்கம் காட்டக் கூறவே பார்ப்பான் தான் கூறியதில் உறுதியாக இருந்தான். வேறு வழியில்லாமல் நந்தன் தன் ஆட்களுடன் அரிவாளை எடுத்துக் கொண்டு சென்றான். தொட்ட வேலையில் பத்தில் ஒரு பங்கும் முடியவில்லை. தூக்கம் இல்லாமல் வருந்திக் கிடந்த அவன் வேலை அலுப்பில் கண்ணை மூடினவுடன் நடராசன் தோன்றி 'உன் வேலைகள் அனைத்தையும் முடித்து விட்டேன். நீ பண்ணை மாகாணங்களுடன் களத்துக்குப் போய் முதல் மரக்காலைச் சாத்திப் பொலியை அளந்துவிட்டு பூசத்தன்று என் கிரகத்துக்கு வா' என்றார். நந்தனை அவன் சாதியினர் தலையில் வைத்துக் கொண்டாடினர். பார்ப்பான் எதுவும் கூற முடியாமல் நின்றான். சிதம்பரம் போன நந்தனை அங்குள்ள பார்ப்பான்கள் சிவபெருமானைத் தரிசிக்க விடவில்லை. வருத்தமாக மரத்தடியில் படுத்திருந்த அவனைச் சித்தர் ஒருவர் கண்டு "நந்தா ! குளத்தில் இறங்கி கழுத்துவரை தண்ணியில் நின்னு சிவ சிவ ஓம் நமச்சிவாய'ன்னு திருமந்திரத்தைச் சொல்லிக்கிட்டு இரு. உனக்கு சிவபெருமான் அருள் கொடுக்கிறவரா இருந்தா நடுசாமத்தில் வந்து அருள்பாலிப்பார்" (சோலை சுந்தர பெருமாள், நாட்டுப்புறச் சிறுகதைகள், 2007, ப.94) என்றார். நந்தன் அப்படியேச் செய்ததும் பல நாழிகழித்து நடராசன் வந்து தன் ஊர்தியிலேயே நந்தனை வானுலகத்துக்கு அழைத்துச் சென்றார் என்று கோவிந்தம்மாள் என்ற சோழிய வெள்ளாளர் பெண் கூறுவதாகக் கதை உள்ளது.

### 11. தூண்டில்காரன்

காட்டாற்றுக் கரையின் இந்தப் பக்கம் வாழ்பவர்கள் தங்கள் ஊரில் நீர்புகாமல் ஊர்க்கரையை மண் அணைத்துப் பெலப்படுத்தினர். நாணல் குத்துகளையும் நட்டுப் பராமரித்தார்கள். எதிர்க்கரையில் வாழ்பவர்கள் தங்கள் ஊரைக் காப்பாற்ற எந்த முன்னெச்சரிக்கை நடவடிக்கைகளையும் மேற்கொள்ளவில்லை. ஒவ்வொரு முறையும் காட்டாற்றில் வெள்ளம் வரும்போது இந்தப் பக்கம் உள்ள ஊர்க்கரையை உடைத்துவிட்டு அவர்கள் கரையைத் தந்திரமாகக் காப்பாற்றுவர். இந்த முறை ஒரு மாத அளவு மழை பெய்ததால் காட்டாற்றில் நீர் பெருக்கெடுத்து ஓடினது. எதிர் ஊரினர் இந்த ஊர்க்கரையை உடைக்க வரும் செய்தியை மீன் பிடித்து வாழும் தூண்டில்காரன் அறிந்தான். தன் இளைய மகனை ஊருக்குச் செய்தி சொல்ல அனுப்பினான். பின்னர்த் தானும், தன்னுடன் இரண்டு ஆட்களையும், தன் பெரிய மகனையும் அழைத்துக் கொண்டு கலுங்கிற்கு வந்தான். தூண்டில்காரன் நாணல் குத்தில் படுத்துக் கொண்டு எதிர்க்கரையினரை விரட்ட முயன்றான். வரும்போதே திட்டம் தீட்டி வந்த அவர்கள் வீச்சரிவாளைத் தூண்டில்காரன் மேல் வீசிக் கொண்டு திரும்பி ஓடும் போது சுழலில் சிக்கினர். தூண்டில்காரன் போராடாமல் இருந்திருந்தால் பதினெட்டு ஊர்களும் மனிதர்கள் இல்லாமல் அழிந்திருக்கும். பின்னர் தூண்டில்காரனைக் காவல்தெய்வமாக வைத்து வழிபட்டனர். "வலைக்கார நீசச்சாதிக்காரனாகப் பிறந்த தூண்டி, செஞ்ச சாகசத்தால் பெரிய சாதிக்காரவங்களும் அவனைக் கடவுளாக ஏற்றுக்கொண்டனர்" (சோலை சுந்தர பெருமாள், நாட்டுப்புறச் சிறுகதைகள், 2007, ப.99) என்று தங்கச்சியம்மாள் என்ற இசை வேளாளர் பெண் கூறுவதாகக் கதை உள்ளது.

### 12. குட்டிச் செல்லான்

வெள்ளாக்குடி பண்ணைக்காரரிடம் குட்டியான் என்ற பறையன் தலையாரியாய் இருந்தான். நாடு மழையில்லாமல் பஞ்சத்தில் இருந்த காலத்தில் பண்ணைக்காரர் ஊருக்குள் நீருள்ள இடங்களைக் கண்டுபிடித்துத் துறவு வெட்டச் சொல்லி விவசாயம் குறைபட்டுப் போகாமல் மகசூலை எடுத்தார். இதனால் அரசர் தலையாரியான குட்டியான் மேல் பிரியமாய் இருந்தார். அதற்குச் சாட்சியாய் ஊருக்குள் பெரிய சிவன் கோவில் கட்டிக் கொடுத்து அதற்கு ஏராளமான ஐஸ்வரியங்களை அள்ளிக் கொடுத்தார். அந்த நேரத்தில் கள்ளக்கும்பல் ஒன்று ஊரைக் கொள்ளையடிக்கக் கிளம்பினது. அரசர் உடனே அந்தந்த ஊர்க்காரர்களைக் காவல் போடவும், அந்தக் கும்பலை அழிக்கவும் அதிகாரம் கொடுத்தார். சிவன் கோவிலிலுள்ள ஐஸ்வரியங்களை அந்தக் கள்ளக்கும்பல் கொள்ளையடிக்கத் திட்டம் போட்டதை அறிந்த

குட்டியான் சாமர்த்தியமாகச் செயல்பட்டுப் பறையர் தெருவினரைத் திரட்டிச் சுற்றி வளைத்துத் திருட்டுக் கும்பலைப் பாதிக்கு மேல் வெட்டிச் சாய்த்தனர். அந்தச் சண்டையில் பறையரில் குட்டியான் மட்டும் தலையில் பலத்த காயம் ஏற்பட்டு இறந்தார். "குட்டியானே கடவுளா நின்னுதான் காவல் பண்ணியிருக்கார் என்று மக்கள் நினைத்தனர்" (சோலை சுந்தர பெருமாள், நாட்டுப்புறச் சிறுகதைகள், 2007, ப.105). எனவே குட்டியானின் உருவம் செய்து அதைக் குலதெய்வம் ஆக்கி, கள்ளர்களைக் காவு கொண்ட நாளில் பால்குடம் எடுத்து வழிபட்டு வருகின்றனர் என்று வைரக்கண்ணு பிள்ளையும் கட்டைக்குப்பான் என்ற பறையர் இனத்தவரும் கூறுவதாகக் கதை உள்ளது.

### 13. மயிலு பொண்ணு

எட்டாவதாகவும் பெண் குழந்தை பிறந்ததால் அதன் தாய் அதைக் காட்டில் தொட்டில் கட்டி அதில் போட்டாள். கிளி, தேனீ போன்றவை ஆரம்பத்தில் அந்தக் குழந்தைக்கு உணவூட்டின. பின்னர் அந்தக் குழந்தையை மயில்கள் தங்கள் வீட்டிற்கு எடுத்துச் சென்று வளர்த்தன. அப்படி உயரமாக வளர்ந்த அந்த மயில் பெண் ஒரு நாள் சமையல் செய்ய குச்சி நெருப்பை எடுத்தபோது அது நீரில் விழுந்து அணைந்தது. எனவே கொள்ளிக்கட்டை வாங்க பிணம் தின்னியான ராக்காயி வீட்டிற்குச் சென்றாள். அவள் குணம் அறிந்தவுடன் மயில் பெண் அங்கிருந்து தப்பி ஓடினாள். ராக்காயியின் மகன்கள் அவளைத் துரத்தினர். அவள் தன் வீட்டிற்குள் புகுந்து கதவைத் தாழிட்டாள். கதவைத் திறக்க முடியாத ராக்காயியின் மகன்கள் தங்கள் விரல் நகத்தை ஒடித்து நிலையில் வைத்துச் சென்றனர். மயில் அண்ணன்கள் வந்ததும் கதவைத் திறந்த மயில் பெண் நகத்தின் மீது காலை வைத்து மயக்கமடைந்தாள். அவள் இறந்ததாகக் கருதிய அண்ணன்கள் மரப்பெட்டியில் அவளை வைத்து மூடி ஆற்றில் விட்டனர். வேட்டைக்கு வந்த அரசன் பெட்டியைத் திறந்து அழகான பெண்ணைப் பார்த்துப் பச்சிலையைப் பறித்துக் கசக்கி அவள் மூக்கில் காட்டினார். எழுந்த அவளைத் திருமணம் செய்தார். இதனைத் தன் நாட்டார் அறிய விருந்திற்கு ஏற்பாடு செய்தார். அதில் மயில் பெண்ணின் அண்ணன்கள் கலந்து கொண்டனர். ராஜாவிடம் அவள் அவர்களை அறிமுகப்படுத்தி ராஜமாளிகையில் தங்க வைத்தாள் என்று கலியம்மாள் என்ற குறவர் பெண் கூறுவதாகக் கதை உள்ளது.

### 14. அத்திரிபாட்சா கொழுக்கட்டை

தான் வைத்த பொருளை வைத்த இடத்திலிருந்து எடுக்கத் தெரியாத மறதிகாத்த பெருமான் தன் ஊர் பண்ணைக்காரருக்காக மாட்டை விலைபேசி முடித்தான். திரும்பும் வழியில் மாமியார் வீட்டிற்குச் சாப்பிடச் சென்றான். அவன் மச்சினி கொழுக்கட்டை செய்து கொடுத்தாள்.

அதன் ருசி பிடித்துப் போகவே அதன் பெயரைக் கேட்டுக் கொண்டான். மனதில் கொழுக்கட்டை, கொழுக்கட்டை என்று சொல்லிக் கொண்டு வீட்டிற்குக் கிளம்பினான். சவாரி வண்டி உழையில் சிக்கினது. சிரமப்பட்டு உழையிலிருந்து கிளம்பினான். ஆனால் பலகாரத்தின் பெயரை மறந்தான். பெயரைக் கூறினால் செய்து தருவதாக அவன் மனைவி கூறினாள். அவள் "அதுதான் ஊரில் மறதி காத்த பெருமான்னு கூப்புடுறது பொருத்தமாத்தான் இருக்கு' என்று ஏகதாளமாச் சொன்னதும் அவனுக்குக் கோபம் வந்தது" (சோலை சுந்தர பெருமாள், நாட்டுப்புறச் சிறுகதைகள், 2007, ப.122). அவன் அவளை ஆத்திரம் தீரும் வரை அடித்துப் போட்டான். அவள் கன்னமெல்லாம் வீங்கி இரத்தம் சுண்டிப் போனது. அதன்பின்னர் அவளைச் சமாதானப்படுத்த வந்த அவனிடம் அவன் மனைவி அடிபட்ட இடத்தைக் காட்டி கொழுக்கட்டை கொழுக்கட்டையா வீங்கியிருக்கு என்றாள். உடனே அவன் பலகாரத்தின் பெயரைக் கண்டு பிடித்து விட்டேன் என்று கூச்சலிட்டான் என்று காவனூர் சு. பத்மாவதி கூறுவதாகக் கதை உள்ளது.

நாட்டுப்புறச் சிறுகதைகள் என்ற தொகுப்பிலுள்ள 'வடிகால்' என்ற பகுதி பசியை மறக்க வைக்க கதை பயன்படுவதைக் கூறுகிறது. கம்பங்கொழுக்கட்டை, முட்டாள் திருடன், ஒரு குடம் தண்ணி ஊத்தி ஒரு பூ பூக்க, சமத்து, சொரக்காய், தொம்பை, மயிலு பொண்ணு ஆகியன பொழுதுபோக்குச் சிறுகதைகளாக உள்ளன. இவைகளில் தாழ்த்தப்பட்ட மக்களின் மனதில் புதைந்து கிடக்கும் ஆடம்பர வாழ்வு மோகம், வீரச்செயல்கள் செய்வதில் விருப்பம், கடவுளர்கள் காட்சி தருதல் போன்ற செய்திகள் உள்ளன. மச்சக்காவடி, அத்திரிபாட்சா கொழுக்கட்டை ஆகியன நகைச்சுவை நிரம்பிய சிறுகதைகளாகும். தரித்திரம் என்ற சிறுகதைப் பார்வைக்குத் தீங்கு தருபவன் என்று ஒருவன் இருக்க முடியாது என்ற கருத்தை உட்பொருளாகக் கொண்டது. அனைத்துச் செயல் களையும் செய்யும் ஆற்றல் உடையவன்தான் அரசனாகத் தகுதி உடையன் என்ற கருத்து 'தென்னைபுடுங்கி' என்ற சிறுகதையில் உள்ளது. இயற்கையை இகந்த நிகழ்ச்சி மரக்காநந்தன் சிறுகதையில் உள்ளது. கீழ்ச்சாதியினராகப் பிறந்தாலும் தங்களது வீரச்செயல்களால் கடவுளராக மாறின இருவரைக் குறித்து தூண்டில்காரன், குட்டிச் செல்லான் சிறுகதைகள் கூறுகின்றன. இதில் கலியம்மாள் என்பவர் எட்டு நாட்டுப்புறக் கதைகளையும் பிறர் தலா ஒரு கதை வீதமும் கூறியுள்ளனர்.

### 3. சோலை சுந்தர பெருமாள் படைப்புகளின் தன்மைகள்

சோலை சுந்தர பெருமாள் படைப்புகள் சேரிகளில் வாழும் மக்களின் வாழ்க்கைப் பிரச்சனைகளை மையமிட்டதாக அமைந்துள்ளன. அவற்றை ஒடுக்கப்பட்ட மக்களின் பிரச்சனைகள், பெண்களின் பிரச்சனைகள், விவசாயிகளின் பிரச்சனைகள், தொழிலாளர்

பிரச்சனைகள், அரசியல்வாதிகளால் ஏற்படும் பிரச்சனைகள், தவறான செயல்களால் ஏற்படும் பிரச்சனைகள், கல்விபெறத் தடையாக அமையும் பிரச்சனைகள், மனித நேயமின்மையால் ஏற்படும் பிரச்சனைகள், மூடநம்பிக்கையால் ஏற்படும் பிரச்சனைகள், வேலையின்மையால் ஏற்படும் பிரச்சனைகள், பெற்றோரைப் பிள்ளைகள் கவனிக்கா மையால் ஏற்படும் பிரச்சனைகள் என வகைப்படுத்தி விளக்குவதாக இந்தப் பகுதி அமைகிறது.

## 1. ஒடுக்கப்பட்ட மக்களின் பிரச்சனைகள்

வண்ணார் சமூகத்தைச் சேர்ந்த சீனிவாசனுக்கு உழைப்பிற்கு ஏற்ற கூலி வழங்கப்படவில்லை. மேலும், சீனிவாசன் என்பவர் சாதி பெயரால் இழிவுபடுத்தப்பட்டு, அடியும் வாங்கினார் என்ற செய்தி 'பிழைப்பு' என்ற சிறுகதையில் உள்ளது. ஒட்டர் சமுதாயத்தினர் அன்றாடம் உழைத்தாலும் அவர்கள் அடிப்படைத் தேவைகளான நிலம் உட்பட எதையும் சொந்தமாக அனுபவிக்க இயலாதவர்களாக பொருளாதார நிலையில் மிகவும் பின்தங்கி இருப்பதைப் 'பொதி' என்ற குறுநாவல் விளக்குகின்றது. சீனிவாசன், ராமுபண்டிதர், ஏலாம்பா ஆகியோர் அறிவும், விவேகமும், செயல்திறனும் உடையவர்களாய் இருந்தாலும் சாதியைக் கூறி புறந்தள்ளப்படும் நிலையை 'குருமார்கள்' என்ற குறுநாவல் வெளிப்படுத்தியுள்ளது. அடிமைத்தொழில் செய்பவர்களின் பணிவு, நாவடக்கம் ஆகியவைகளை 'அடிக்கல்' என்ற குறுநாவல் படம்பிடித்துக் காட்டுகின்றது. மேலும், மரியாதையின்றி நடத்துதல், கூலியைக் குறைத்தல், பால் சார்ந்த கொடுமை மற்றும் சித்ரவதை செய்தல், தனிக்குவளை முறையைக் கடைபிடித்தல், மிதிவண்டியில் செல்லவும் ஆடை அணியவும் பொதுக்குளங்களில் நீராடவும் பெருந்தெய்வங்களை வழிபடவும் கல்விகற்கவும் தடை செய்தல் எனப் பல நிலைகளில் தடைகளைத் தலித்துகள் அனுபவித்தலையும் தலித் ஒற்றுமைக் குலைப்பு, பறைத்தெரு பாதை அடைப்பு போன்ற ஒடுக்குதல்களையும் 'தப்பாட்டம்' நாவல் குறிப்பிட்டுள்ளது. அடிமைநிலையை வலியுறுத்தல், வேலைப்பளு, வல்லுறவுக்கொடுமை, மரியாதையின்மை, வறுமை, கோவில் உரிமை மறுப்பு, கல்விக்குத் தடை, பொய்வழக்குப் போடுதல், கூலி கொடுக்காமை, சித்ரவதை எனப் பல செய்திகள் 'செந்நெல்' நாவலில் இடம்பெற்றுள்ளன. படித்ததால் பொய் வழக்குப் போடுதல், சேரியில் தெய்வம் வருவதைத் தடுத்தல், இழிவுபடுத்துதல், பால் சார்ந்த கொடுமை, வறுமை, ஆடை அணிவதில் கட்டுப்பாடுகள், சித்ரவதை, அடிமைத்தனம் போன்றவை 'பெருந்திணை' நாவலில் சுட்டப்பட்டுள்ளன. அடிமை வேலை, ஒதுக்கி வைக்கத் தூண்டுதல் போன்றவற்றை 'நஞ்சை மனிதர்கள்' நாவல் சுட்டிக்காட்டுகிறது.

## 2. பெண்களின் பிரச்சனைகள்

மலர் என்ற பெண்ணின் ஆசைகள் அனைத்தும் நிராகரிக்கப்பட்டு அவள் கணவனின் வார்த்தைகள் நிறைவேற்றப்படும் ஆணாதிக்க நிலையை 'ஓராண்காணி' என்ற சிறுகதை விளக்குகின்றது. கணவன் விட்டுச் சென்றதால் குடும்பத்தை மீட்க மனைவி அதிகப்படியான உடலுழைப்புச் செய்வதை 'வைக்கப்போரும் கடாவடிக்கு வாக்கப்பட்டவளும்' என்ற சிறுகதை சுட்டுகின்றது. பெண் குழந்தைகளை வெறுக்கும் மனநிலையை 'வட்டத்தை மீறி' என்ற சிறுகதை கூறுகிறது. செவிலியர் பணியில் பெண்கள் சந்திக்கும் அவலங்களை 'அடகு' என்ற சிறுகதை வெளிப்படுத்துகிறது. 'பெண்ணாகப் பிறந்தால் ஆணிற்கு அடிமை' என்ற சமுதாயச் சூழலில் தலித் பெண் எல்லம்மா சந்திக்கும் அவலங்களை 'மனசு' என்ற குறுநாவல் கூறுகிறது. ஒடுக்கப்பட்ட பெண்கள் பாலியல் கொடுமைக்கு ஆளாதல், பெண்களுக்குக் கூலி குறைவாகக் கொடுத்தல் ஆகிய செய்திகளைத் 'தப்பாட்டம்', 'செந்நெல்', 'பெருந்திணை' ஆகிய நாவல்கள் கூறுகின்றன. தஞ்சை மண்ணில் பரவியிருந்த ஆணாதிக்கம், பாலியல் கொடுமை ஆகியவைகளை 'நஞ்சை மனிதர்கள்' நாவல் சுட்டுகிறது.

## 3. விவசாயிகளின் பிரச்சனைகள்

பயிர் செய்வதால் ஏற்படும் நஷ்டம், விளைபொருள்களை விற்கும் போது அதிகாரிகளின் சுரண்டல் ஆகியவைகளால் ஏற்படும் மனவேதனையைக் 'காத்திருக்கிறாள்' என்ற சிறுகதை விளக்குகின்றது. வேலையின்மையால் விவசாயத் தொழிலாளர்களும், உற்பத்திச் செலவை ஈடுசெய்ய இயலாமல் விவசாயிகளும் படும் அவலங்களைப் 'பெருந்திணை' நாவல் கூறுகின்றது. கூலியின்மை மற்றும் வேலையின்மையால் தலித் விவசாயத் தொழிலாளர்கள் சந்திக்கும் அவலங்களைச் 'செந்நெல்' நாவல் விவரிக்கின்றது.

## 4. தொழிலாளர் பிரச்சனைகள்

பலநாட்கள் கடினமாக உழைத்தும் ஆசைப்பட்டதை அனுபவிக்க இயலாத நிலையை 'ரணம்', 'கட்டில்' ஆகிய சிறுகதைகள் விளக்குகின்றன. முதலாளிக்குக் கட்டுப்பட்டதால் தன் சொந்த விருப்பங்களை நிறைவேற்ற இயலாத நிலையில் தொழிலாளி இருப்பதை 'நாற்றங்கால்' என்ற சிறுகதை கூறுகின்றது.

## 5. அரசியல்வாதிகளால் ஏற்படும் பிரச்சனைகள்

அரசியல்வாதியின் அதிகாரத்தால் ஏழை மக்களின் உரிமைகள் பறிக்கப்படுவதை 'பொறுத்திரு' என்ற சிறுகதை வெளிப்படுத்துகின்றது. கல்வியில் சிறந்த நிலை அடைந்த போதிலும் ஏழைக்கு

அரசியல்வாதியால் அரசாங்க வேலை மறுக்கப்படுவதை 'இருப்பு' என்ற சிறுகதை கூறுகிறது.

**6. தவறான செயல்களால் ஏற்படும் பிரச்சனைகள்**

குடிப்பழக்கத்தால் குடும்ப அங்கத்தினர்கள் சந்திக்கும் அவலங்களைப் 'பொலி', 'சர்க்கரை', 'உழவு' ஆகிய சிறுகதைகள் விளக்குகின்றன. மகனின் தவறான நடத்தையால் மனம் வருந்தும் பெற்றோரின் மனநிலையை 'வண்டல்' என்ற சிறுகதை கூறுகின்றது. சுயகௌரவத்தின் விளைவை '.'.ப்ராக்' என்ற சிறுகதை விளக்குகின்றது. வலிமையுடையவனால் ஏழை படும் துயரநிலையை 'மலையேறி' என்ற சிறுகதை சுட்டுகிறது.

**7. கல்விபெறத் தடையாக அமையும் பிரச்சனைகள்**

பொருளாதார வசதியின்மையால் ஏழைகளுக்குக் கல்வி எட்டாக்கனியாகக் காட்சியளிப்பதை 'கணப்பு', 'தலைமுறைகள்' (ஒட்டர்), 'கோணங்கி', 'தாவணி' ஆகிய சிறுகதைகள் விளக்குகின்றன. அடிமைகள் கல்வி கற்பதற்கு ஆண்டைகள் எதிர்ப்பு தெரிவிக்கின்றதைச் 'செந்நெல்', 'தப்பாட்டம்', 'பெருந்திணை' ஆகிய நாவல்கள் குறிப்பிடுகின்றன.

**8. மனிதநேயமின்மையால் ஏற்படும் பிரச்சனைகள்**

எளியவர்களின் நியாயம் புரட்டப்படுவதை 'வேலி' என்ற சிறுகதை கூறுகிறது. மரம் விழுந்து வீடு இடிந்ததைக் குறித்துக் கவலைப்படாமல் அந்தச் சூழ்நிலையிலும் கிடைக்கும் பொருட்கள் அனைத்தையும் திருடும் மனிதர்களைப் 'புயல்' என்ற சிறுகதை குறிப்பிடுகிறது. ஏழைகளிடம் இலஞ்சம் வாங்குவது குறித்துப் 'பட்டா' என்ற சிறுகதை கூறுகிறது. பிழைக்க வந்த நேர்மையான மனிதனை அடித்துத் துன்புறுத்தும் நிகழ்வை 'ஒரு ஊரும் சில மனிதர்களும்' என்ற சிறுகதை வெளிப்படுத்துகிறது. வஞ்சகம் கொண்ட மனிதர்கள் ஏழையின் உழைப்பைக் கெடுப்பது குறித்து 'மடை' என்ற சிறுகதை குறிப்பிடுகிறது. ஏழையிடமிருந்து புறம்போக்கு நிலத்தைப் பறிக்கும் செய்தியை 'மனு' என்ற சிறுகதை கூறுகிறது. அடிமை வேலை செய்பவர்களிடம் ஆண்டைகள் மனிதநேயமாக நடந்து கொள்ளாமல் அவர்கள் உழைப்பைப் பிழிவதில் மட்டும் குறியாக இருப்பதைச் சோலை சுந்தர பெருமாளின் நாவல்கள் அனைத்தும் குறிப்பிடுகின்றன.

**9. மூடநம்பிக்கையால் ஏற்படும் பிரச்சனைகள்**

விதவை என்ற காரணத்தால் தன் திருமண விழாவில் தாயைப் புறக்கணிக்கும் இளைஞனைக் குறித்து 'இறுக்கம்' என்ற சிறுகதை கூறுகிறது. இறந்த நபரின் ஆவி மீண்டும் வந்து தொந்தரவு செய்யும் என்ற

நம்பிக்கையைக் 'கோக்காழி' என்ற சிறுகதையில் ஆசிரியர் கேலி செய்துள்ளார். நாகதோஷம் என்ற நம்பிக்கையை மையமாக வைத்து 'ஒரே ஒரு ஊர்ல' நாவலை ஆசிரியர் படைத்துள்ளார்.

**10. வேலையின்மையால் ஏற்படும் பிரச்சனைகள்**

படிப்பிற்குத் தகுந்த வேலையின்மையால் ஏற்ற காலத்தில் திருமணம் செய்யாமை, நகரத்திற்கு வேலை தேடிச் சென்று உணவின்மை, இடவசதியின்மை, பொருளாதார நெருக்கடி போன்ற பல துன்பங்களை அனுபவித்தல், நகரத்திலிருந்து ஊருக்குத் திரும்ப வந்து விவசாய வேலை செய்ய மனதை நிலைப்படுத்துதல் ஆகியவற்றை 'அக்கறை' என்ற சிறுகதை விளக்குகிறது.

**11. பெற்றோரைப் பிள்ளைகள் கவனிக்காமையால் ஏற்படும் பிரச்சனைகள்**

பிள்ளைகள் கவனிக்காததால் பெற்றோர் மனவருத்தம் அடைதல், நல்ல நிலைகளில் இருக்கும் பிள்ளைகள் தங்கள் பொருளாதார முன்னேற்றத்தை மட்டும் குறிக்கோளாகக் கொண்டு செயல்படுவதால் பெற்றோருடன் சேர்ந்து இருக்கவும், அவர்கள் பொருளாதாரத் தேவைகளைச் சந்திக்கவும் தயங்குதல் ஆகியவற்றைப் 'பொறம்போக்கிகள்', 'இன்னார்க்கு இன்னார் என்று...', 'இலையுதிர் காலம்' என்ற சிறுகதைகள் விளக்குகின்றன. ஆறுமுகம், சிவசங்கரன் பிள்ளை ஆகியோரின் மகன்கள் பெற்றோரைக் கவனிக்காத நிலையைப் 'பெருந்திணை' நாவல் கூறுகின்றது.

இவ்வாறு சோலை சுந்தர பெருமாள் படைப்புகள் மக்களின் வாழ்க்கை நிலைகளை விளக்கிக் காட்டுவனவாக உள்ளன.

**4. சோலை சுந்தர பெருமாள் படைப்புகளில் தலித் தொடர்பானவை**

சோலை சுந்தர பெருமாள் படைப்புகளான சிறுகதைகள், குறுநாவல்கள், நாவல்கள் ஆகியவற்றில் தலித் தொடர்பான செய்திகள் இடம்பெற்றுள்ளன. அவற்றை விளக்குவதாக இந்தப் பகுதி அமைகிறது.

**1. சிறுகதைகள்**

சோலை சுந்தர பெருமாள் சிறுகதைகளில் 'பிழைப்பு' என்ற கதையில் சாதிப்பெயர் கூறி இழிவுபடுத்தி அடித்தல், வேலைக்கு எற்ற கூலியின்மை, குலத்தொழிலை விட்டுச் சென்றால் வாழ்வில் முன்னேற்றம் எற்படும் எனக் கருதுதல் என்ற செய்திகள் கூறப்பட்டுள்ளன. தலித் சாதியைச் சார்ந்த இளைஞர்கள் முன்னேறிய பிறகு தன் சாதியினரை முன்னேற்ற முயலாமல் செயல்படும் சுயநலமான தன்மை 'வெள்ளாடுகளும் சில கொடி ஆடுகளும்' என்ற சிறுகதையில் கூறப்பட்டுள்ளது. 'இன்னார்க்கு

இன்னார் என்று...' 'மானம்' ஆகிய இரண்டு சிறுகதைகளிலும் தாழ்த்தப்பட்ட சாதியைச் சார்ந்தவர்கள் முதியவர் மற்றும் மனநிலை பாதித்தவரைக் கவனிக்கும் பொறுப்பில் ஈடுபடுத்தப்பட்டுள்ளனர் என்ற செய்தி உள்ளது. 'தலைமுறைகள்' சிறுகதையில் ஒட்டர் சமுதாயத்தவரின் தாழ்ந்த பொருளாதார நிலை விளக்கப்பட்டுள்ளது. 'உதய வாசல்' என்ற சிறுகதையில் எதிர்காலச் சமுதாயத்தினரைச் சாதிவேறுபாடற்ற நிலையில் உருவாக்க வேண்டிய ஆசிரியர்கள் பள்ளியில் சாதிப்படிநிலையைக் கடைபிடிக்கும் அவலநிலை விளக்கப்பட்டுள்ளது. 'மேலாக்கு' என்ற சிறுகதையில் தலித் சாதிக்கு மதிப்பு வேண்டும் என்ற இளைஞர்களின் மனநிலை விளக்கப்பட்டுள்ளது. 'பூக்கும் காலம்' என்ற சிறுகதையில் வண்ணான் அடிவாங்கும் நிகழ்வு சுட்டப்பட்டுள்ளது. மேலும், 'இலையுதிர் காலம்', 'தாவணி', 'எதிர்பார்ப்புகள்' ஆகிய சிறுகதைகளிலும் தலித் பற்றிய செய்திகள் உள்ளன.

## 2. குறுநாவல்கள்

'மனசு' என்ற குறுநாவலில் தலித் பெண் எல்லம்மா தன் வாழ்வில் சந்திக்கும் பிரச்சனைகள் விளக்கப்பட்டுள்ளன. 'பொதி' என்ற குறுநாவலில் ஒட்டர் சமுதாயத்தினர் சமுதாயம் மற்றும் பொருளாதாரம் ஆகிய நிலைகளில் மிகவும் பின்தங்கியுள்ள செய்தி கூறப்பட்டுள்ளது. 'குருமார்கள்' என்ற குறுநாவலில் சாதியின் பெயரால் புறந்தள்ளப்பட்டு அடிமைத் தொழில் செய்பவர்களின் மன ஏக்கங்கள் அலசப்பட்டுள்ளன. 'அடிக்கல்' என்ற குறுநாவலில் அடிமைகள் சிவபெருமானை வழிபட ஆதிக்கச் சாதியினர் மேற்கொண்ட எதிர்ப்பும், இறுதியில் குப்பான் சாம்பான் என்பவர் அரசரின் துணையுடன் புதிய நந்தனாக உருப்பெறும் செய்தியும் கூறப்பட்டுள்ளது.

## 3. நாவல்கள்

'உறங்க மறந்த கும்பகர்ணர்கள்' நாவலில் அப்புனு மற்றும் செவத்தி திருமணம் வாயிலாகச் சாதி அமைப்பு தகர்க்கப்படுகிறது. 'தப்பாட்டம்' என்ற நாவலில் 'ஆதிக்கச் சாதியினரின் தவறான செயல்பாடுகள் ஒழிக்கப்பட வேண்டும்' என்ற செய்தி உள்ளது. 'செந்நெல்' நாவல் கீழவெண்மணியில் கூலி உயர்வுப் பிரச்சனையால் 44 தலித் விவசாயத் தொழிலாளர்கள் எரிக்கப்பட்ட நிகழ்வை மையப்படுத்துகிறது. வேலை இழப்பால் துன்பப்படும் தலித் விவசாயத் தொழிலாளர்களின் நிலை 'பெருந்திணை' நாவலில் உள்ளது. 'நஞ்சை மனிதர்கள்' நாவலில் விவசாய வேலைகளில் தலித் தொழிலாளர்கள் முன்னிற்கும் நிலையைக் காணலாம். மேலும் இந்த நாவலில் தலித் மக்கள் தங்கள் உடலுழைப்பால் முன்னேறினாலும் சமுதாயத்தினரால் மதிக்கப்படாத நிலையும் விளக்கப்பட்டுள்ளது. 'மரக்கால்' என்ற நாவல் ஆதனூர் பண்ணை அடிமையான பறையர் சாதியைச் சார்ந்த நந்தன்

சிவதரிசனம் செய்ய முயன்றதால் அக்கினிக்கு இரையான செய்தியைக் கூறுகிறது.

## 4. தொகுப்பு நூல்

'நாட்டுப்புறச் சிறுகதைகள்' என்ற தொகுப்பு நூலில் 'தரித்திரம்' என்ற கதை 'பார்வைக்குத் தீட்டுத் தருபவன்' என்று ஒருவன் இருக்க முடியாது என்று அறிவுறுத்துகிறது. தூண்டில்காரன், குட்டிச் செல்லான் ஆகிய கதைகள் தங்கள் வீரச் செயல்களால் கடவுளராக மதிக்கப்பட்ட கீழ்ச்சாதியினரின் இயல்பை எடுத்துரைக்கின்றன.

இவ்வாறு சோலை சுந்தரபெருமாள் படைப்புகள் தலித் தொடர்பான செய்திகளை அதிக முக்கியத்துவம் தந்து விளக்குகின்றன.

## தொகுப்புரை

'சோலை சுந்தர பெருமாள் படைப்புகள்' என்ற பொருண்மையை அடிப்படையாகக் கொண்டு பின்வரும் செய்திகளைத் தொகுத்து தரலாம்.

1. சோலை சுந்தர பெருமாள் தற்போதைய திருவாரூர் (முன்னர் தஞ்சை) மாவட்டம் காவனூரில் 09-05-1953 இல் பிறந்தார். இவர் பிறப்பால் சோழிய வெள்ளாளர் சமுதாயத்தைச் சார்ந்தவர். தற்போது இவர் அம்மையப்பன் என்ற ஊரில் உள்ள அரசு மேல்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணியாற்றி வருகிறார். இவருடைய படைப்புகள் எதார்த்த வாழ்க்கையை விளக்குவனவாக அமைவதோடு, நடைமுறைக்கு ஏற்ற அணுகு முறையையும் கொண்டனவாகக் காணப்படுகின்றன.

2. சோலை சுந்தர பெருமாள் படைப்புகளாக சிறுகதைத் தொகுப்புகள் ஐந்தும் குறுநாவல் தொகுப்புகள் இரண்டும் நாவல்கள் ஏழும் தொகுப்பு நூல்கள் மூன்றும் வெளிவந்துள்ளன.

3. சோலை சுந்தர பெருமாளின் சிறுகதைத் தொகுப்புகள் ஐந்திலும் மொத்தம் அறுபத்தைந்து சிறுகதைகள் இடம்பெற்றுள்ளன. அவை மூடநம்பிக்கை (இறுக்கம், கோக்காழி), ஆட்சியாளர்களால் மனித உரிமைகள் பறிக்கப்படுதல் (பொறுத்திரு, இருப்பு), ஏழைகள் ஆசைப்பட்டதை அனுபவிக்க இயலாத நிலை (ரணம், கட்டில்), ஏழைகளுக்குக் கல்வி எட்டாக்கனி ஆகும் நிலை (கணப்பு, தலைமுறைகள், கோணங்கி, தாவணி), கற்றவர்கள் அநியாயத்தைக் தட்டிக் கேட்க வேண்டும் என்ற கருத்து நிலை (புத்தி), மாணவர்களுக்கு எடுத்துக்காட்டாக இருக்க வேண்டிய ஆசிரியரின் நிலை (தூண்), ஆணாதிக்கத்தின் போக்கு (ஓராண்காணி), குடிப்பழக்கத்தால் துயருறும் குடும்பத்தினர் நிலை (பொலி, சர்க்கரை), கிராமத்து இளைஞன் படிப்பிற்கு ஏற்ற வேலையின்மையால் துன்புறும் நிலை (அக்கறை), மனித

நேயமின்மை (வேலி, புயல், ஒரு ஊரும் சில மனிதர்களும்), தன்மானத்துடன் வாழும் பெண்ணின் தன்மை (வைக்கப்போரும் கடாவடிக்கு வாக்கப்பட்டவளும்), உழைப்பின் மேன்மை (ஆசை), பெண்ணிற்கு வேலைக்கு ஏற்ற கூலியின்மை (எதிர்பார்ப்புகள்), குடும்பப் பிரச்சனைகள் (வீட்டில் இல்லை, உழவு), இயற்கைப் பாதுகாப்பு (வேர்), தொழிலாளியின் தேவைகள் சந்திக்கப்படாத நிலை (காத்திருக்கிறாள், காத்திருக்கிறாள் ('மண் உருவங்கள்', 'ஒரு ஊரும் சில மனிதர்களும்' ஆகிய இரு சிறுகதைத் தொகுப்புகளிலும் காத்திருக்கிறாள் என்ற தலைப்பில் இரண்டு கதைகள் உள்ளன), பூக்கும் காலம்), நேர்மையால் ஏற்படும் மனநிம்மதி (உழைப்பு), கவனக்குறைவால் இளைஞன் சந்திக்கும் அவலங்கள் (நிஜங்கள்), வேலையின்மையால் பட்டதாரி இளைஞன் சந்திக்கும் துன்பங்கள் (வேலை), நம்பிக்கை மற்றும் வழிபாட்டு முறைகள் (மண் உருவங்கள்), கணவனைக் குறித்த பெண்ணின் மனநிலை (பொன்கூடு), இலஞ்சம் (பட்டா), கல்வியை வியாபாரம் ஆக்கும் நிலை (நாளைய ...), உண்மையான அன்பைப் புரிந்து கொள்ளாத நிலை (நிலாக்காலம்), சாதியைக் கூறி இழிவுபடுத்திக் கூலி கொடுக்காத நிலை (பிழைப்பு), மனிதர்களின் மாறுபட்ட மனநிலை (வெள்ளாடுகளும் சில கொடி ஆடுகளும்), மகனின் எதிர்காலம் குறித்துக் கவலைப்படும் பெற்றோரின் மனநிலை (வண்டல்), பொருளாதார நிலையில் பின்தங்கியவர்களின் துன்பம் மற்றும் முன்னேறியவர்களின் மனநிலை (பொறம்போக்கிகள்), முதியோர் நிலை (இன்னார்க்கு இன்னார் என்று, இலையுதிர் காலம்), வஞ்சகம் கொண்ட மனிதர்களின் மனநிலை (மடை), கிராமத்தில் வாழும் அறிவுடைய மாணவனின் நிலை (கண்கள்), கபடம் படியாத கிராமத்து மனிதனின் மனநிலை (நிஜ மனிதர்கள்), இளந்தலைமுறையினரின் உயர்ந்த சிந்தனை (புதுயுகம்), சுயகௌரவத்தால் பிறர் உணர்வுகள் மதிக்கப்படாத நிலை (ஃபிராக்), நல்ல எதிர்காலத்தைக் கருத்தில் கொண்டு வறுமையின் மத்தியிலும் கதை எழுத முன்வரும் இளைஞனின் மனநிலை (தேடல்), நகரவாழ்க்கையின் சீர்கெட்ட நிலை (காவிரியிலிருந்து கூவம் வரை), உழைப்பின் பலனை அனுபவிக்க இயலாத ஏக்கம் (மண்ணாசை), படிப்புச்சுமையின் விளைவு (திணிப்பு), சமுதாயத்துடன் இணைந்து வாழும் தனிமனிதனின் நிலை (உதய வாசல்), குலதெய்வ வழிபாடு (குறி), தன் விருப்பங்களை நிறைவேற்ற இயலாமல் முதலாளியின் கட்டிற்குள் இருக்கும் தொழிலாளியின் நிலை (நாற்றங்கால்), மனதைப் புரிந்து கொண்டவளை மனைவியாக அடைய வேண்டும் என்ற கருத்து (மடையான்களும் சில காடைகளும்), ஏழை – பணக்காரன் பாகுபாடு (முன்னத்தி ஏர்), ஆண் குழந்தையை விரும்பும் சமுதாய நிலை (வட்டத்தை மீறி), ஏழைகள் பயன்படுத்தும் நிலத்தைச் செல்வாக்கு உடையவர்கள் பறிக்கும் நிலை (மனு), மகனால் மனதில் ஏற்பட்ட வலி

(வலி), வலிமையுடையோர் உழைப்பவர்களிடமிருந்து நிலத்தைப் பறிப்பதுடன் பணத்தையும் மோசடி செய்யும் நிலை (மலையேறி), செவிலியர் பணியில் பெண்கள் சந்திக்கும் அவலங்கள் (அடகு), சாதியைக் கூறி ஒன்று சேர்க்காமல் வர்க்கத்தைக் கூறி ஒன்று சேர்க்க வேண்டும் என்ற கருத்து (மேலாக்கு), மாணவர்களின் முன்னேற்றத்திற்கு ஆசிரியரின் நம்பிக்கை நிறைந்த வார்த்தைகளின் தேவை என்ற கருத்துநிலை (நம்பிக்கை), நீரின்மையால் விவசாயிகள் சந்திக்கும் துன்பங்கள் (வியர்வை), மனவளர்ச்சி குன்றியவர்களுக்கும் மானம் உண்டு என்ற கருத்து (மானம்) ஆகியவைகளைக் கருப்பொருள்களாகக் கொண்டுள்ளன.

4. மனசு, குருமார்கள் ஆகியன சோலை சுந்தர பெருமாளின் குறுநாவல் தொகுப்புகளாகும். இவைகளில் மொத்தம் ஆறு குறுநாவல்கள் இடம்பெற்றுள்ளன.

5. 'மனசு' என்ற தொகுப்பில் ஆசை, மனசு, பொதி என மூன்று குறுநாவல்கள் உள்ளன. ஆச்சாரமான பிராமணக் குடும்பத்தில் பிறந்த கணேஷ் அதிக ஆசையால் குடும்பத்திற்கு அந்நியமாகிப் போன நிகழ்வை ஆசை என்னும் குறுநாவல் விளக்குகிறது. விவசாயத் தொழிலாளியின் அவலவாழ்வைச் சித்தரிக்கும் 'மனசு' குறுநாவலில் எல்லம்மா, செல்லத்துரை, ஆராயி, வீரப்பன் ஆகியோரின் மனநிலை விளக்கப் பட்டுள்ளது. அடிப்படை வசதிகள் இல்லாத ஒட்டர்களின் துயர வாழ்வு 'பொதி' என்ற குறுநாவலில் இடம்பெற்றுள்ளது.

6. 'குருமார்கள்' என்ற தொகுப்பில் ஆசை, குருமார்கள், அடிக்கல் என மூன்று குறுநாவல்கள் உள்ளன. இவற்றில் 'ஆசை' என்ற குறுநாவல் 'மனசு' தொகுப்பில் இடம்பெற்ற குறுநாவலாகும். அறிவும், விவேகமும், செயல்திறனும் உடையவர்கள் சாதியின் பெயரைக் கூறிப் புறந்தள்ளப்பட்டுள்ள நிலையைக் 'குருமார்கள்' என்ற குறுநாவல் கூறுகிறது. குப்பான் சாம்பான் என்பவன் அரசரின் துணையுடன் புதிய நந்தனாக உருப்பெற்ற செய்தியை 'அடிக்கல்' என்ற குறுநாவல் தெரிவிக்கிறது.

7. உறங்க மறந்த கும்பகர்ணர்கள், ஒரே ஒரு ஊர்ல, தப்பாட்டம், செந்நெல், பெருந்திணை, நஞ்சை மனிதர்கள், மரக்கால் ஆகியன சோலை சுந்தர பெருமாளின் நாவல்களாகும்.

8. அப்புனு மற்றும் செவத்தி ஆகியவர்களின் திருமணத்தின் வாயிலாகச் சாதி அமைப்புத் தகர்க்கப்படும் செய்தி 'உறங்க மறந்த கும்பகர்ணர்கள்' என்ற நாவலில் உள்ளது. 'நாகதோஷம்' என்ற நம்பிக்கை தகர்க்கப்படும் செய்தியை 'ஒரே ஒரு ஊர்ல' என்ற நாவல் வெளிப்படுத்துகிறது. தாழ்த்தப்பட்டோர் தங்கள் வாழ்வில் சந்திக்கும் பலதரப்பட்ட கொடுமைகளையும், அதை எதிர்த்து அவர்கள்

மேற்கொள்ளும் போராட்டங்களையும் 'தப்பாட்டம்' நாவல் விவரிக்கிறது. கூலி உயர்வு கேட்டதால் தலித் விவசாயத் தொழிலாளர்களுக்கும், நிலவுடைமையாளர்களுக்கும் இடையே ஏற்பட்ட போராட்டத்தைச் 'செந்நெல்' நாவல் கூறுகிறது. மண்ணுக்கும், மனிதனுக்கும் இடையேயான பொருந்தாக் காதலாக விவசாயம் மாறி வருவதைப் 'பெருந்திணை' நாவல் சுட்டுகிறது. பல தலைமுறைகளாகச் சேர்த்த சொத்து என்றாலும் உடையவர் குணம் தீயதானால் அழிந்து விடும் செய்தியை 'நஞ்சை மனிதர்கள்' நாவல் கூறுகிறது. சிவதரிசனம் செய்ய முயன்றதால் நந்தனுக்கு ஏற்பட்ட துயர முடிவை 'மரக்கால்' நாவல் விவரிக்கிறது.

9. தஞ்சைச் சிறுகதைகள் - ஓர் ஆய்வு, தஞ்சைக் கதைக்களஞ்சியம், நாட்டுப்புறச் சிறுகதைகள் ஆகியன சோலை சுந்தர பெருமாள் தொகுத்து வெளியிட்ட நூல்களாகும். 'நாட்டுப்புறச் சிறுகதைகள்' என்ற நூலில் ஏழை மக்கள் தங்கள் மன ஆவல்களை அங்கதச்சுவையுடன் வெளிப்படுத்தியுள்ளனர்.

10. உழைப்பிற்கான ஊதியம் வழங்கப்படாமை, சாதிபெயர் கூறி இழிவுபடுத்துதல், அடிப்படைத் தேவைகள் சந்திக்கப்படாமை, அடிமைத் தொழிலைக் காரணம் காட்டி அனைத்திலும் புறந்தள்ளப்படுதல், சாதி ஏற்றத்தாழ்வின் காரணமாக ஒன்று சேர மறுத்தல், மரியாதையின்மை, பாலியல் கொடுமை, சித்ரவதை, தனிக்குவளை போன்ற பல்வேறு வகையான தீண்டாமைக் கொடுமைகளுக்கும் பல்வேறு வகையான சாதிக் கட்டுப்பாடுக ளுக்கும் உள்ளாதல், பொய் வழக்கு, வறுமை போன்றவற்றால் துன்பப்படுதல் ஆகியன ஒடுக்கப்பட்ட மக்களின் பிரச்சனைகளாக உள்ளன.

11. ஆணாதிக்கம், அதிகப்படியான உடலுழைப்பு, வேலைக்கு ஏற்ற கூலியின்மை, பெண் குழந்தையை வெறுக்கும் மனநிலை, வேலையிடங்களில் சந்திக்கும் இன்னல்கள், பாலியல் கொடுமை போன்ற பிரச்சனைகளைப் பெண்கள் சந்திக்கின்றனர்.

12. உழைப்பிற்கு ஏற்ற வருமானம் இன்மை, சுரண்டல், வேலையின்மை மற்றும் கூலியின்மையால் ஏற்படும் துன்பங்கள் ஆகியன *விவசாயிகளின் பிரச்சனைகளாக உள்ளன.*

13. ஆசைப்பட்டதை அனுபவிக்க இயலாத நிலை, முதலாளிகளால் தன் சொந்த வேலைகள் தடைபடுதல் ஆகியன தொழிலாளர் சந்திக்கும் பிரச்சனைகளாகக் குறிப்பிடப்பட்டுள்ளன.

14. நேர்மையான வழியில் கிடைக்கவேண்டிய உரிமைகள் அரசியல்வாதிகளால் பறிக்கப்படுதல், குடிப்பழக்கம், தவறான நடத்தை, சுயகௌரவத்தால் ஏற்படும் தீமை, வலிமையுடையவர்களின் ஆதிக்கம் ஆகியன தனிநபரால் ஏற்படும் பிரச்சனைகளில் குறிப்பிடத் தக்கவை.

15. பொருளாதார வசதியின்மை, அதிகாரவர்க்கத்தின் ஒடுக்குமுறை ஆகியன கல்விபெறத் தடையாக அமையும் பிரச்சனைகள் என்று சிறுகதைகள் மற்றும் நாவல்கள் சுட்டிக்காட்டியுள்ளன.

16. நீதி புரட்டப்படுவது, திருட்டு, இலஞ்சம், உழைப்பைக் கெடுத்தல், நிலம் அபகரிக்கப்படுதல், உழைப்பு பிழியப்படுதல் ஆகியன மனித நேயமின்மையால் ஏற்படும் பிரச்சனைகள் ஆகும்.

17. விதவை என்பதால் தாயை அவமதித்தல், இறந்தபின் ஆவி துன்புறுத்தாமல் இருக்கச் சடங்குகளைச் செய்தல், திருமணத்தைத் தள்ளிப்போடுதல் ஆகியன மூடநம்பிக்கையால் ஏற்படும் பிரச்சனைகள் ஆகும்.

18. படிப்பிற்கு ஏற்ற வேலையின்மையால் இளைஞன் சந்திக்கும் அவலங்கள் 'அக்கறை' என்ற சிறுகதையில் விளக்கப்பட்டுள்ளது.

இவ்வாறு இந்த இயல் சோலை சுந்தர பெருமாள் படைப்புகளான சிறுகதைகள், குறுநாவல்கள், நாவல்கள் ஆகியனவற்றை அறிமுகப்படுத்தி அவற்றிலுள்ள தலித் தொடர்பான செய்திகளுக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்து விளக்குவதாக உள்ளது. மேலும், சோலை சுந்தர பெருமாள் படைப்புகளில் இடம்பெற்ற தலித்துகளான ஒட்டர், சக்கிலியர், பள்ளர், பறையர், புதிரை வண்ணார், மருத்துவர், வண்ணார் ஆகியவர்கள் சாதியின் பெயரால் ஒடுக்கப்பட்ட மக்களாகக் குறிப்பிடப்பட்டுள்ளதையும் இப்பகுதியில் சுட்டுகிறது.

# 3. சோலை சுந்தர பெருமாள் படைப்புகள் குறிப்பிடும் விளிம்புநிலை மக்களின் வாழ்க்கைப் பிரச்சனைகள்

'பொருளிலார்க்கு இவ்வுலகம் இல்லை' என்று வள்ளுவர் குறிப்பிட்டுள்ளார். எனவே மனித மேம்பாட்டிற்கு உறுதுணையாக இருப்பது பொருள் ஆகும். ஆனால் சாதியின் பெயரால் ஒடுக்கப்பட்ட மக்களான தலித்துகளை ஆதிக்கச் சாதியினர் சுரண்டி வருவதால் தலித்துகளின் வாழ்க்கை நிலை மிகவும் நலிவடைந்துள்ளது. இதனை அடிப்படை வசதிகள் இல்லாமை, சாதிக்கட்டுப்பாடுகளுக்குள் வாழ்தல், சாதி சார்ந்த தொழில்களைச் செய்தல், ஆதிக்கச் சாதியினரின் அடிமைத்தனங்களுக்கு உள்ளாதல், ஆதிக்கச் சாதியினரால் புறக்கணிக்கப்படுதல், தீண்டத்தகாதவர்களாகக் கருதப்படுதல், வன்முறைக்கு உட்படுத்துதல், தலித் பெண்களுக்கு எதிராக வன்முறை செய்தல் எனப் பாகுபடுத்தி விளக்குவதாக இப்பபகுதி அமைந்துள்ளது.

### 1. அடிப்படை வசதிகள் இல்லாமை

மனித வாழ்க்கைக்கு அடிப்படை வசதிகள் இன்றியமையாதவை ஆகும். உணவு, உடை, உறைவிடம், நீர், காற்று, கல்வி, வேலைவாய்ப்பு, பாதுகாப்பான வாழ்க்கைச் சூழல் போன்றவை அடிப்படை வசதி சார்ந்த உரிமைகளுக்குள் அடங்கும். எனவே இவை வாழ்வாதார உரிமைகள் எனப்படுகின்றன (அலெக்ஸிஸ் அருள் டைமண்ட் ராஜ், மூன்றாம் யுகத்தில் சமூக பொருளாதார உரிமைகள் ஒரு பார்வை, 2001, ப.12). சோலை சுந்தர பெருமாள் படைப்புகளில் இடம்பெற்றுள்ள தலித் மக்கள் தங்கள் வாழ்க்கைக்குத் தேவையான அடிப்படை வசதிகள் இல்லாத நிலையில் உள்ளனர். அவற்றை உணவு இல்லாமை, உடை இல்லாமை, உறைவிடம் இல்லாமை, சேரிகளில் வாழ்தல், இயற்கையின் சீற்றங்களுக்கு உள்ளாதல் என்ற அடிப்படைகளில் விளக்குவதாக இந்தப் பகுதி அமைகிறது.

#### 1. உணவு இல்லாமை

'தனி ஒருவருக்கு உணவில்லை எனில்
இந்த உலகத்தை அழித்திடுவோம்'

என்பது பாரதியாரின் கருத்து. ஆனால், இந்த நூற்றாண்டிலும் பெரும்பான்மையான தலித் சமுதாயத்தினர் தேவையான அளவுக்கு

உணவு இல்லாமல் துன்புறுகின்றனர். இதனைச் சோலை சுந்தர பெருமாள் படைப்புகள் பின்வருமாறு குறிப்பிடுகின்றன.

1) தலித் விவசாயத் தொழிலாளர்கள் வேலை முடித்து, கூலி வாங்கும் இடை நேரத்தில் நீர் கொண்டு வந்த செம்புகளில் கறிக்காக நண்டு, நத்தை போன்றவைகளைப் பிடித்துப் போட்டனர் (சோலை சுந்தர பெருமாள், செந்நெல், 2003, ப.40). இந்த வேளையில் முதலாளி ஏற்கனவே பேசின கூலியைக் கொடுக்காததால் பெரியான் உட்பட்ட தொழிலாளர்கள் கூலி வாங்க மறுப்புத் தெரிவித்தனர். இதனால், அவர்களின் கால் வயிற்றுக் கஞ்சியும் கேள்விக்குறியானது என்று 'செந்நெல்' நாவல் குறிப்பிட்டுள்ளது.

2) கழனியில் உழைப்பு இல்லாத காலங்களில் தங்கள் பொருளாதாரத் தேவைகளுக்காகக் கால்நடைகளைத் தலித் மக்கள் வளர்த்தனர். ஆனால் கழனிகளில் வேலை உள்ள நாட்களில் அவைகளைப் பராமரிக்க நேரம் இல்லாமல் வருந்தினர். இதனால், கூலி வாங்கும் நேரத்திற்குள் புல் அறுக்க விரைந்தனர்.

3) பொருளாதாரக் குறைபாட்டினால் எளிதாகக் கிடைக்கும் மாட்டு இறைச்சியைத் தலித் மக்கள் உண்டு வந்தனர். எனவே அவர்கள் "செத்தமாடு தின்னு, புளிச்சக் கள்ளு குடிச்சி, ஆண்டைகளுக்கு அடங்கி ஒடுங்கி, இழுத்த இழுப்புக்கு நின்னு வேலை பாத்துப் படிக்கூலி வாங்கிச் செல்லும் தலித்துகள்" (சோலை சுந்தர பெருமாள், மரக்கால், 2007, ப.53) என்று இழிவாகக் கருதப்பட்டனர். மேலும் உழைப்பின் துன்பத்தை மட்டும் தங்கள் வாழ்வில் அனுபவிக்கும் தலித் மக்கள் தங்கள் தேவைக்காகப் பிடி நெல்லாய்ச் சேர்த்து வைத்திருப்பதைக் கண்காணிகளின் முன் புளியமரத்துக் களத்தில் கொட்டிவிட வேண்டும். அவர்கள் கொட்டும் அளவிற்கு ஏற்ப மிளகாய் போன்ற மளிகைப் பொருட்களை அளந்து கொடுப்பர். இவைகளைக் கண்காணிகள் சொல்லும் காலம் வரையும் பயன்படுத்த வேண்டும்.

4) கோடையின் கொடூரத்தினால் சரியான வேலை கிடைக்காமல் தலித் மக்கள் பாதிக்கப்படுகின்றனர். இதனால் மகசூல் காலத்தில் சேமித்த உணவுத்தானியங்கள் தீர்ந்த நிலையில் வறுமையின் கோரப்பிடியில் சிக்கி இறக்கும் நிலை ஏற்படுகிறது. முருகாயி என்பவளுக்கு இரண்டாவதாகப் பிறந்த ஆறுமாத குழந்தைக்குப் பசும்பால், மற்றும் புட்டிப்பால் ஆகியவைகளைக் கொடுக்க வறுமை இடந்தராததால் அல்லிக்கிழங்கை வேக வைத்துக் கொடுத்தனர். அது வயிற்றிற்கு ஒத்துக் கொள்ளாததால் குழந்தை இறந்தது. மேலும், வறுமையின் காரணமாக ராசேந்திரனின் மகன் ராசா என்பவன் எலிக்கறி உண்டதால் உயிரிழந்தான் (சோலை சுந்தர பெருமாள், பெருந்திணை, 2005, ப.33).

5) பெரியானின் மருமகளும், ரெங்கசாமியின் மனைவியுமான வள்ளி கர்ப்பிணியாய் இருக்கும் போது அவள் விரும்பின உணவுப் பொருட்கள் மற்றும் ஊட்டச்சத்துப் பொருட்கள் போன்றவற்றை வாங்கிக் கொடுக்க இயலாத நிலையில் இருந்தனர் (சோலை சுந்தர பெருமாள், செந்நெல், 2003, ப.131). அந்தச் சூழ்நிலையில் அவளது பிரசவ காலத்திற்கென்று சேமித்து வைத்திருந்த பணம் முழுவதும் செலவானது. மனிதனுக்கு இப்படி ஒரு வாழ்க்கை வேண்டாம் என்று பெரியான் நொந்து கொண்டதாகச் 'செந்நெல்' நாவல் குறிப்பிட்டுள்ளது (சோலை சுந்தர பெருமாள், செந்நெல், 2003, ப.177). நந்தனும் அவனுடன் நின்றவர்களும் பலாப் பழத்தின் வாசனையை நுகர்ந்தார்கள். ஆனால் அதன் ருசியை அவர்கள் ஒரு போதும் அனுபவிக்கவில்லை (சோலை சுந்தர பெருமாள், மரக்கால், 2007, ப.82) என்று மரக்கால் நாவல் குறிப்பிட்டுள்ளது.

6. முனியாண்டிச் சாம்பான் பண்ணையிலிருந்து ஓட்டி வந்த சினைப் பசுமாட்டை அவர் பேத்தி விசாலாட்சி மூன்று மாதச் சினையில் இருந்து பராமரித்தாள். பசு குட்டியைப் போட்டதும் சீம்பால் கறந்து திரட்டுப்பால் காய்ச்சிக் குடிப்பேன் என்றாள். ஆனால், கன்று போடும் காலத்தில் பண்ணையிடம் ஓட்டி வரவேண்டும் என்பது கட்டளை. அதனால் "... பறையனுக்குப் பொறந்துட்டா உழைக்கவும், பறிக்கவும் தான் உரிமை. ருசியா திங்க உரிமை ஏது? என்று தனக்குத் தானே புலம்பிய முனியாண்டி விசாலாட்சி எழும்பும் முன் பண்ணை வீட்டிற்கு பசுவுடன் செல்ல விரைந்தார்" (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, ப.66). தான் இதுவரைத் திரட்டுப்பால் தின்றது இல்லை. அந்தப் பாக்கியம் தன் பேத்திக்காவது கிடைக்குமா? என நினைத்தார். பண்ணைகளின் சுகவாழ்விற்காக பண்ணை அடிமைகள் நேரம், காலம் பார்க்காமல் உழைத்தாலும் அவர்கள் விரும்புவதைச் சிறிதளவும் உண்ண முடியாத நிலையில் ஏங்குவதை அறிய முடிகிறது.

**2. உடை இல்லாமை**

தலித் மக்களில் பலர் கந்தல் மற்றும் அழுக்கேறிய ஆடைகளைப் பயன்படுத்துகின்றனர். பறையர் இனத்தைச் சார்ந்த வளத்தி "முரட்டுத்துணியால் பாவாடை போல மூட்டப்பட்டிருக்கும் சுருக்குப் பையைச் சுருக்கிக் கட்டியிருந்தாள். அது இடுப்பை இறுக்கவும், தன் கைவிரல்களை அதனுள் விட்டுத் தளர்த்தி விட்டுக் கொண்டாள். இந்தச் சுருக்குப் பாவாடை மட்டும்தான் அவள் இடுப்பில் இருக்கும் துணி. அது அழுக்கேறி முடமுடப்பாய் மடிந்து மடிந்து காணப்பட்டது. அந்தச் சுருக்குப்பைப் பாவாடை முழங்காலுக்கு மேலே நின்று விடுவதால், அவள் வேலைக்காகத் தண்ணியிலும், சேற்றிலும் புழங்கும்போது, அது அவ்வளவாக நனைந்து போவதில்லை. குளத்திலோ, வாய்க்காலிலோ குளிக்கும் போது இடுப்புத்துணியைக் கழட்டி வைத்து விட்டுக் குளித்ததும், அப்படியே எடுத்து இடுப்பில் சுருக்கிக் கொள்வாள்" (சோலை சுந்தர

பெருமாள், மரக்கால், 2007, ப.24). 'மரக்கால்' நாவல் குறிப்பிடும் தலித் பெண்கள் அனைவரும் இந்த விதமாகவே ஆடை அணிந்துள்ளனர். இதற்கு மாற்றாக ஒரு துணியையோ அல்லது அதற்கு முன்னர் பயன்படுத்தின நைந்து போன இரண்டு துணிகளையோ வைத்துள்ளனர். ஆறுமுகம் என்பவர் "எனக்கு இடுப்புத் துணிக்கு மாத்து இல்லை" (சோலை சுந்தரபெருமாள், பெருந்திணை, 2005, ப. 18) என்று கூறுவதாக 'பெருந்திணை' நாவலில் சுட்டப்பட்டுள்ளது. ஒட்டர் சமுதாயத்தைச் சார்ந்த செல்லாயி என்ற சிறுமி கிழிந்து தொங்கின பாவாடையைத் தைத்துக் கொண்டு தன் தகப்பனிடம் தன்னைப் பள்ளியில் சேர்த்துவிடுங்க. வேறு எதுவும் நான் கேட்க மாட்டேன் என்று கூறுவதாக 'தலைமுறைகள்' என்ற சிறுகதை குறிப்பிட்டுள்ளது (சோலை சுந்தர பெருமாள், வண்டல், 2000, ப.53). பள்ளிச் சீருடை வாங்கப் பணம் இல்லாததால் பார்வதி என்பவள் புத்தகப் பையை எடுத்து பாய்தூக்கும் கொக்கியில் மாட்டிவிட்டுப் பருத்தி எடுக்கச் சென்றதாக 'தாவணி' என்ற சிறுகதையில் செய்தி உள்ளது (சோலை சுந்தர பெருமாள், மடையான்களும் சில காடைகளும், 2006, ப.188). மகள் படிக்க வேண்டும் என்று விரும்பிய பார்வதியின் பெற்றோரும் அவளின் செய்கையைக் கண்டு எதுவும் கூறமுடியாமல் இருந்தனர். இவ்வாறு ஆடையில்லாமை பெரியவர்களை மட்டுமல்லாமல் மாணவர்களையும் பாதிக்கிறது.

### 3. உறைவிடம் இல்லாமை

மனிதன் வாழ்வதற்கு நிலையான உறைவிடம் இன்றியமையாதது. ஆனால் தலித் மக்கள் உறைவிடம் இல்லாமல் துயருறும் செய்தி சோலை சுந்தர பெருமாள் படைப்புகளில் உள்ளது. தலித்துகள் வாழும் குடிசைகள் சுகாதாரம் மற்றும் வசதிகள் இல்லாமல் காணப்படுகின்றன. அரசாங்கம் குடிசை இருக்கும் பகுதியை அளந்து பட்டாப் போட்டுக் கொடுத்ததைத் 'தப்பாட்டம்' நாவலில் குறிப்பிடப்படும் பறைத்தெரு மக்கள் அறியவில்லை. பண்ணைகள் இந்தச் செய்தியைப் பறையர் தெருவினர் அறிய விடாமல் தடுத்தனர். 'செந்நெல்' நாவலிலும் இந்தச் செய்தி கூறப்பட்டுள்ளது. "இந்தக் கீழ்த்தெருவில் உள்ள பறையனுக்கும், பள்ளனுக்கும் அடிமனைப்பட்டா உரிமை கிடையாது. தலைமுறைத் தலைமுறையாக உழைத்தாலும் அவர்களுக்கு நிலம் சொந்தமாக இல்லை. இதனால் அவர்கள் பண்ணைக்குச் சொந்தமான இடங்களில் குடிசைகளை அமைக்கின்றனர். அந்த இடம் பண்ணைக்குத் தேவைப்பட்டால் அல்லது தலித் மக்கள் பண்ணையாரைச் சிறிது எதிர்த்தால் குடிசைகளைப் பண்ணையார்கள் பிரித்துப் போடுவர். மீண்டும் குடிசைகள் போட பண்ணையாரின் வாசல் பந்தல்காலைக் கட்டிநிற்க வேண்டும் (சோலை சுந்தர பெருமாள், பெருந்திணை, 2005, ப.103). நான்கைந்து தலைமுறைகளை உள்ளடக்கியதாக ஒரு குடிசை காணப்படுகிறது. "ஆளுக்குப் பத்துப் பன்னிரண்டு குழிக்குள்ள கட்டி

வைச்சிருக்கிற குடிசைகள். குடும்பம் பெரிசாப் போனதும் அப்படியே எரவானத்தைக் கொஞ்சம் நீட்டி வாரி எறக்கி பொழக்கம் வைச்சிக்கட்டுறது உண்டு. அதுக்குள்ளேயே மாடுகன்றும், கோழி கொக்கும் அடங்கியாவணும்" (சோலை சுந்தர பெருமாள், செந்நெல், 2003, ப.21). ஒழுங்காக அமையாத குடிசைகளில் உள்ள கம்புகள் மனிதர்களைக் காயப்படுத்துகின்றன. கூரைகளாக உள்ள கீற்றின் ஈக்குச்சியின் மேல் வைக்கோல், கோணிச்சாக்குகள், கிழிந்த பாய்கள் போன்றவை மழைநீரும், வெயிலும் குடிசைக்குள் நுழையாமல் போடப்பட்டுள்ளன. மழைநீர் ஒழுகும் நிலையில் உள்ள குடிசையை 'எதிர்பார்ப்புகள்' என்ற சிறுகதை காட்டுகிறது. சில சேரிகளில் உள்ள குடிசைகளில் ஒரு நாள் இத்தனை மணிநேரம் தான் விளக்குகள் எரிய வேண்டும் என்ற கட்டுப்பாடு உள்ளது. மேலும், அதிகநேரம் விளக்குகள் எரிந்தால் எண்ணெய் தீர்ந்து குடிசைகள் இருளில் மூழ்கிவிடும் நிலையும் உள்ளது.

## 4. சேரிகளில் வாழ்தல்

ஊரின் ஒதுக்குப்புறங்களில் தாழ்த்தப்பட்டோருக்கான வாழ்விடங்களான சேரிகள் உள்ளன. 'பெருந்திணை' நாவலில் குறிப்பிடப்பட்டுள்ள ஆறுமுகம் என்பவர் வசிக்கும் சேரிக்கு 'அம்பேத்கர் நகர்' என்று பெயர். அங்கு ஒடுக்கப்பட்ட மக்கள் முன்னேற்றம் அடைந்திருப்பதாக விளம்பரப்படுத்த நான்கைந்து ஆண்டுகளுக்கு முன் கட்டப்பட்ட சமுதாயக்கூடம் விரிசலோடு நின்றது. சேரியின் பெயர் மாறியதைத் தவிர அந்த மக்கள் வேறு எந்த பலனையும் அனுபவிக்கவில்லை. இந்தச் சேரி வயல்வெளியைச் சார்ந்தும், வாய்க்காலை ஒட்டியும் அமைந்துள்ளதால் இயற்கையின் சீற்றத்தால் அடிக்கடி பாதிக்கப்படுகிறது. இதனால், உயிரிழப்பும் ஏற்படுகிறது. சேரிகள் குடியானவர்த் தெருவிற்கு ஒதுக்குப்புறமாகவும், ஆனால் குடியானவர்த் தெருவின் கண்காணிப்பின் கீழும் அமைந்துள்ளன. வாய்க்காலின் அப்புறமுள்ள சேரிகளைக் குடியானவர்த் தெருவுடன் இணைப்பதற்குப் பனைமரத்தடிகள் உதவுகின்றன. சக்கிலியர்த் தெரு, பறையர்த்தெரு, பள்ளர்த் தெரு ஆகியவைகளைச் சுற்றியிருக்கிற குடியானவர்த் தெருக்கள் ஒரு சாணுக்குக் குறைவு இல்லாதபடி மேடாகவே இருக்கின்றன. மழைக்காலம் வந்தால் இந்தத் தெருக்களில் மழைத்தண்ணீர் தேங்கி நிற்கும். எல்லா குடிசைகளும் வரிசையாக மிதப்பது போலத் தான் இருக்கிறது (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, ப.229). தலித் தெரு சீரமைப்பிற்கு ஒதுக்கின பணம் அமுக்கப்பட்டதால் சேரி மக்கள் சகதியில் நடக்க வேண்டிய அவலம் ஏற்பட்டுள்ளது. மேலும், ஆடுமாடுகள் அதில் நடப்பதாலும், கொசு முட்டையிட்டுப் பெருகுவதாலும் தலித் மக்கள் துன்பத்திற்கு உள்ளாகின்றனர். மூப்பர் தெருவிலிருந்து பறைத் தெருவிற்கு வரும்

ஒற்றையடிப் பாதையில் காட்டுக்கருவை அடர்ந்துள்ளது. விவசாயம் முதல் விஞ்ஞானம் வரை அனைத்துத் துறைகளிலும் இந்தியா வளர்ச்சி அடைந்துள்ளது. எனினும், தலித் மக்களின் வாழ்க்கைத் தரம் மிகவும் பின்தங்கிய நிலையில் உள்ளதை அவர்களின் சேரி வாழ்க்கை வெளிப்படுத்துகிறது.

**5. இயற்கையின் சீற்றங்களுக்கு உள்ளாதல்**

'பொதி' என்ற குறுநாவலில் ஒட்டர் சமுதாயத்தினரின் சமுதாய நிலை விளக்கப்பட்டுள்ளது. நாள் முழுவதும் உழைத்து அலுத்துப்போன தோட்டாண்டி உட்பட பாலத்தின் கட்டுமானப் பணியில் ஈடுபட்டிருந்த ஒட்டர் சமுதாயத்தினர் அனைவரும் புளியந்தோப்பை வாழ்விடமாகக் கொண்டிருந்தனர். கறுத்தம்மா பிறந்த அன்று அவர்கள் தங்கியிருந்த கீற்றுப் பள்ளிக்கூடம் வெள்ளத்தில் மிதந்தது. குழந்தையைப் பெற்றவள் காற்றைத் தாங்க இயலாமல் ஜன்னி வந்து இறந்தாள். மேலும், ஒருமுறை புயல் வெள்ளத்திலிருந்து தங்களைக் காக்கத் தங்கியிருந்த பள்ளியின் சுவர் சரிந்து விழுந்தது. அதில் செல்லாயியின் அப்பா மற்றும் தம்பி ஆகியவர்கள் இறந்தனர். அரசு சார்பாக உதவிப்பணம் வழங்கியவர்கள் "குடிசையோ வீடோ இல்லாதவர்களுக்கு உதவி செய்ய முடியாது என்று நிராகரித்து விட்டுப் போயினர். இதனால் கையில் காசு இல்லாமல் குடும்பத்தை நிர்வகிக்க அவன் பட்ட கஷ்டங்களை இப்போது நினைத்துப் பார்த்தாலும் இதயமே வெடித்து விடுவது போல உணர்வான் தோட்டாண்டி" (சோலை சுந்தர பெருமாள், மனசு, 2000, ப. 161). ரெங்கு மற்றும் செல்லாயி ஆகியவர்களுக்குத் திருமணம் முடிந்த அன்று தங்குவதற்கு விடுதி வீட்டைச் சுமங்கலிப் பெண்கள் கட்டினர். மழை பெய்ததால் அவர்களால் அதில் தங்க இயலாமல் முதலாளியின் திண்ணையில் அடைக்கலமாயினர். ஒட்டர் சமுதாயத்தினர் அனைவரும் வீடு இல்லாதவர்களாகக் காணப்படுகின்றனர். இதனால் அவர்கள் புயல், மழை போன்ற இயற்கையின் சீற்றங்களின் போது தங்கள் உயிரை இழக்கின்றனர். பிற சமுதாயத்தினர் இவர்கள் நிலையைக் கண்டு இரங்கினாலும், உதவி செய்யத் தயங்குகின்றனர். மருத்துவ உதவிகள் மற்றும் அரசாங்க நிதி உதவிகள் இவர்களுக்குக் கிடைப்பதில்லை.

மனிதனின் கண்ணியமான வாழ்விற்கு அடிப்படை வசதிகள் மிகவும் இன்றியமையாதவை. இத்தகைய அடிப்படை வசதிகள் அனைத்தும் சாதியின் பெயரால் 'தலித்' என்று கருதப்படும் மக்களுக்கு மறுக்கப்படுவது மனிதனின் அடிப்படை உரிமைகளுக்கு எதிரானச் செயல் ஆகும்.

**2. சாதிக் கட்டுப்பாடுகளுக்குள் வாழ்தல்**

தலித் மக்களுக்கு எதிரான சாதிக் கட்டுப்பாடுகளை அடிமை களாக வேலைசெய்தல், தேநீர்க் கடைகளில் தனிக்குவளைகளைப்

பயன்படுத்துதல், செருப்பு அணிவதற்கும் மிதி வண்டியில் ஏறிச் செல்வதற்கும் பீடி புகைப்பதற்கும் கட்டுப்பாடுகள் காணப்படுதல், ஆடை அணிவதில் கட்டுப்பாடு இருத்தல், அணிகலன்கள் அணிவதில் கட்டுப்பாடு, வெள்ளாடு வளர்க்கத் தடை, கால்நடைகளை விற்பதற்குப் பண்ணையின் அனுமதியைப் பெறுதல், ஆறு, குளம் மற்றும் குட்டைகளைப் பயன்படுத்தத் தடை காணப்படுதல் என்ற அடிப்படைகளில் விளக்கலாம்.

**1. அடிமைகளாக வேலை செய்தல்**

பரம்பரைப் பரம்பரையாக தலித் மக்கள் அடிமை வேலை செய்யத் தூண்டப்படுகின்றனர். படித்தல், பிற வேலைகளுக்குச் செல்லுதல், எதிர்த்துப் பேசுதல், கட்டுப்பட மறுத்தல், முன்னேற விரும்புதல், போட்டிகளில் வெற்றி பெறுதல் போன்றவைகள் குற்றங்களாகக் கருதப்படுகின்றன. இத்தகைய செயல்களில் ஈடுபடுபவர்கள் மீது பொய் வழக்குச் சோடிக்கப்பட்டுப் பல வகைகளில் தண்டிக்கப்படுகின்றனர். "இருபதுக்குக் குறைவு இல்லாத பூர்வீகக் குடிகள் ராசநாராயண சத்திரத்துக் கட்டளையிலும், அம்மையப்ப நல்லூர் ராசாங்கக் கட்டளையிலும் அடிமை சாசனம் கொடுத்து உழைத்துக் கொண்டு இருக்கின்றனர்" (சோலை சுந்தர பெருமாள், குருமார்கள், 2006, ப.83) என்று 'அடிக்கல்' என்ற குறுநாவல் குறிப்பிட்டுள்ளது. சிவசாமி என்பவர் தன் இளவயதில் தெருவிலுள்ள அனைவரும் பண்ணை மாட்டுக் கொட்டில் வாசலில் வேலைக்காகச் சென்று காத்து நிற்பதை வருத்தத்துடன் நினைத்துப் பார்ப்பதாக 'மேலாக்கு' என்ற சிறுகதையில் குறிப்பு உள்ளது (சோலை சுந்தர பெருமாள், மடையான்களும் சில காடைகளும், 2006, பக். 114, 115). மேலும் நந்தன் கச்சலையைத் திருமணம் செய்தபோது பிரமதேயம் "காலமெல்லாம் கட்டளைக்கு அடிமையாகக் கடன்பட்டு, பதினாறும் பெற்று நல்ல அடிமைகளைக் கொடுக்கக் கடவாயாக என்று வாழ்த்தியது" (சோலை சுந்தர பெருமாள், மரக்கால், 2007, ப. 25). தீண்டாமையின் அடிப்படை நிலை அடிமை முறை ஆகும். ஒரு மனிதனை இயற்கைக்கு மாறாக பிறன் ஒருவருடைய சொத்தாக மாற்றிவிடும் நிலை அடிமை முறை ஆகும். ஆனால் தற்கால இளைஞர்கள் அடிமைத் தொழிலால் தங்கள் வாழ்க்கையில் முன்னேற்றம் இல்லை என உணர்ந்து அந்த வேலையிலிருந்து விடுபட முனையும் பாங்கு வரவேற்கத்தக்கது ஆகும்.

**2. தேநீர்க் கடைகளில் தனிக்குவளைகளைப் பயன்படுத்துதல்**

தேநீர்க் கடைகளில் தலித் மக்களுக்குத் தனிக்குவளைகள் பயன்படுத்தப்படுகின்றன. மேலும் அவர்கள் ஆதிக்கச் சாதியினருடன் சேர்ந்து இருந்து சாப்பிட முடியாது. மாறாக மரத்தடியிலோ, தரையிலோ உட்கார வேண்டும் அல்லது நின்று கொண்டுதான் தேநீர் அருந்த வேண்டும். எந்தவிதச் சூழ்நிலையிலும் கடையினுள் உட்காரக்கூடாது.

மேலும், "தேநீர் குடிக்க வரும் தாழ்த்தப்பட்ட மக்கள் தேநீர் குடித்தபின் குவளையை அவர்களே கழுவி அதற்கென்று ஒதுக்கப்பட்ட இடத்தில் வைக்க வேண்டும். சில கடைகளில் தலித் மக்களுக்காகத் தேங்காய்ச் சிரட்டைகள் குவளைக்குப் பதிலாகப் பயன்படுத்தப்படுகின்றன (சேது, தமிழகத்தில் மனித உரிமைகள், 2000, ப.179). ரெட்டிப்பாளையம் பகுதியில் நிலவி வரும் தனிக்குவளை முறை 'தப்பாட்டம்' நாவலில் விளக்கப்பட்டுள்ளது. அங்குள்ள தேநீர்க் கடைகளில் தலித் மக்கள் தேநீர் வாங்க இரண்டு அடி சதுரத்தில் தனி பொத்தல் இருந்தது. உப்புமா போன்ற உணவுகளையும் தேக்கு இலையில் பொத்தல் வழியாகத்தான் வாங்க வேண்டும். பித்தளை டமாரா செட்டில்தான் அவர்களுக்குத் தேநீர் வழங்கப்படும். "அந்தத் தேநீரை எடுத்துக் கொண்டு வந்து மரத்தடியில் உக்காந்து குடித்தவர்கள் ஓரமாக வைக்கப்பட்டிருக்கும் தொட்டியில் உள்ள தண்ணியை அள்ளி ஊற்றிக் கழுவி டமாரா மேடையில் கப்புகளை வைத்துவிட வேண்டும்" (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, பக்.48, 49). உடனே பணம் கொடுக்காதவர்கள் வேளாண்மை மகசூலின் போது கொடுக்கலாம். அந்த நேரத்தில் அவர்கள் கேட்கும் தொகையை மறுப்புத் தெரிவிக்காமல் கொடுக்க வேண்டும். ஏதாவது பேசினால் துணியை அவிழ்த்து வேப்பமரத்தில் கட்டி வைத்து அடிப்பார்கள். பெண்கள் கடைக்கு வந்து அரிதாகத் தேநீர் அருந்துவதால் அவர்களுக்கான டமாரா பச்சைப்பாசி பிடித்து விடுகிறது என்று 'தப்பாட்டம்' நாவல் குறிப்பிட்டுள்ளது. மேலும், "குடியானத்தெரு ஆளுங்களுக்கு மட்டும்தான் சீமைச் சக்கரை மற்ற எல்லாருக்கும் நாட்டுச் சக்கரைதான்" (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, ப.54) என்ற செய்தியும் அந்த நாவலில் உள்ளது. இவ்வாறு தேநீரில் கலக்கும் சர்க்கரையிலும் தீண்டாமை புகுந்துள்ளதை இந்த நாவலின் வாயிலாக அறிந்து கொள்ளலாம். ஆனால், ஆதிக்கச் சாதிக்காரர்களுக்கும் கீழ்ச்சாதிக்காரர்களுக்கும் ஒரே விலையில் சீனியும் வெல்லமும் பயன்படுத்தப்படுவது அடக்குமுறையின் கொடிய வெளிப்பாடாகும். சாதிப்பாகுப்பாட்டின் காரணமாக பள்ளியில் தேநீர்க் குடிக்க சிறிதும், பெரிதுமாக பல்வேறு வண்ணங்களில் குவளைகளைப் பயன்படுத்தினர் என்ற செய்தி 'உதயவாசல்' என்ற சிறுகதையில் உள்ளது (சோலை சுந்தரபெருமாள், மடையான்களும் சில காடைகளும், 2006, ப. 33). மேலும், திருவிதாங்கூர் பகுதியில் காணப்பட்ட நீதிமன்றங்களில் தாழ்த்தப்பட்ட சாதியைச் சார்ந்த வழக்கறிஞர்கள் நீர் அருந்த தனிப் பானைகள் பயன்படுத்தப்பட்டன. அதுபோல உட்காரும் இடத்திலும் ஆதிக்கச் சாதியினருக்கு நாற்காலிகளும் தாழ்ந்த சாதியினருக்குக் குந்துமனை (ஸ்டுல்) களும் பயன்படுத்தப்பட்டன (சோபிதராஜ். ற்றி.ற்றி., 'வாழ்த்துரை', தென் எல்லைக் காவலன் நேசமணி, 2002, ப. iii). இவ்வாறு, சாதியின் பெயரைக் கூறி தலித் மக்கள் தனிக்குவளைகளைப் பயன்படுத்த வேண்டும் என்று கூறுவது இழிவான செயல் ஆகும்.

### 3. செருப்பு அணிவதற்கும் மிதிவண்டியில் ஏறிச் செல்வதற்கும் பீடி புகைப்பதற்கும் கட்டுப்பாடுகள் காணப்படுதல்

ஆதிக்கச் சாதியினரின் தெருவிற்குள் தலித் மக்கள் செருப்பைக் கையில் தூக்கிச் செல்ல வேண்டும். மிதிவண்டியில் செல்பவராக இருந்தால் மிதிவண்டியிலிருந்து இறங்கி நடந்து செல்ல வேண்டும். பீடியும் புகைக்கக் கூடாது. இதை அறிந்திருந்த மதுக்கன் பகடை என்பவர் மது அருந்தியிருந்த போதும் ரெட்டிப்பாளையம் எல்லையைத் தொட்டதும் நிதானமாக, “காலில் கிடந்த செருப்பைக் கையில் எடுத்துக் கொண்டார் ... கோவிந்தராசு என்பவன் போட்டிருந்த சட்டையைக் கழட்டி கக்கத்தில் வைத்துக் கொண்டான். செருப்பையும் கையில் எடுத்துக் கொண்டான்" (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, ப.18). மதுக்கன் பகடையின் மனதில் பீடியைப் பற்ற வைக்க வேண்டும் என்ற ஆசை தலைதூக்கியது. குடியானவர்த் தெருவினர் கண்டால் “சக்கிலியப் பயலுக டவுண்பக்கம் போய் நாலு காசப் பார்க்கிற திமிரு. சுருட்ட பத்த வச்சி எங்க மூஞ்சில விடுவீங்களாடா ..." (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, ப.21) என்று கேட்டுக் கையில் கிடைப்பதை எடுத்து வீசுவார்கள். எதிர்த்தால் மரத்தில் பிடித்துக் கட்டுவார்கள். இதனை நினைத்தவுடன் அவர் தன் மனவிருப்பத்தைக் கைவிட்டார். “உத்தண்டிச் சாம்பானோட மச்சான் சைக்கிளில் ஏறி வந்துட்டான்னு அவனைப் படுத்திய பாட்டைப் பதினைஞ்சு வருஷத்துக்கு முன்னாலேயே பார்த்தவராயிற்றே இந்தக் கோவிந்தராசு" (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, ப.21). அதனால் அவருக்கும் பீடியைப் பற்ற வைக்கத் தைரியம் வரவில்லை. ஆதிக்கச்சாதியினர் தங்களுக்குச் செய்யும் துன்பங்களால் தலித் மக்களுக்குக் கோபம் வந்தாலும் ‘அவர்களை எதுவும் செய்ய இயலாது' என்று ஒடுங்கிப்போன மனதுடையவர்களாக, மது அருந்தியிருந்தாலும் கட்டுப்பாடுகளில் தெளிவுடையவர்களாக நடந்து வந்தனர்.

### 4. ஆடை அணிவதில் கட்டுப்பாடு இருத்தல்

ஆடை அணிவதில் உள்ள கட்டுப்பாடு இடத்திற்கு இடம் வேறுபடுகிறது. ஆதிக்கச் சாதியினர் வசிக்கும் இடம் வந்தால் அல்லது ஆதிக்கச் சாதியினர் எதிர்ப்பட்டால் சட்டை மற்றும் துண்டைக் கக்கத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். அல்லது துண்டை இடுப்பில் கட்டிக் கொள்ள வேண்டும். சேரித்தெரு மக்கள் சட்டைப் போடுவதையும், தோளில் துண்டு போடுவதையும் குடியானவர்த் தெருவினர் அனுமதிக்க வில்லை என்று ‘தப்பாட்டம்' நாவல் குறிப்பிட்டுள்ளது. வெள்ளைச்சாமியின் குதிரை வண்டியைப் பார்த்ததும் மருத்துவர் சமுதாயத்தைச் சார்ந்த ரெத்தின வேலுவின் மச்சான் “லெங்கோடாய்க் கட்டியிருந்த இடுப்பு வேட்டியை முழங்காலு முட்டிவரைக்கும் அவிழ்த்து விட்டுக் கொண்டான்" (சோலை சுந்தர பெருமாள், நஞ்சை மனிதர்கள், 2006, ப.43). உத்தண்டிச்

சாம்பான் என்பவன் கண்காணி, எஜமானி, வேளாளர்ச் சேரிமார்கள் ஆகியோர் முன்னால் வரும்போது தலையில் கட்டியிருக்கும் துணியை அவிழ்த்துக் கக்கத்தில் வைத்துக் கொள்வான் என்று 'அடிக்கல்' என்னும் குறுநாவல் குறிப்பிடுகிறது. ஆறுமுகம் என்பவன் "இடுப்பில் கறுப்புக் கயிற்றை இறுக்கலாகப் போட்டுக் கோவணம் கட்டியிருப்பான். அப்படியான கோவணத்தில் சாண் அளவுக்குத் துணியைத் தொங்கவிட்டு, எல்லாருமே இப்படித்தான் கட்டிக் கொள்ள வேண்டும் என்றும், வழக்கமாய் வயலுக்கு வரும்போது இடுப்பில் கட்டியிருக்கும் துண்டை தலையில் முண்டாசாய்க் கட்டி இருக்க வேண்டும் என்றும் பண்ணை மாகாணங்கள் இதில் கறாராய் இருக்கும்" (சோலை சுந்தரபெருமாள், பெருந்திணை, 2005, ப.74) என்றும் பெருந்திணை நாவல் குறிப்பிட்டுள்ளது. மேலும் ஆடை அணிவதில் பெண்களுக்கு உள்ள கட்டுப்பாட்டைப் பற்றியும் 'பெருந்திணை' நாவல் கூறுகின்றது. ஊரில் பெண்கள் முழங்காலுக்குக் கீழ்த் துணி கட்டக்கூடாது. வயல் வேலைக்கு வரும்போது நல்ல துணியை வீட்டில் வைத்துவிட்டுப் பழையவற்றைக் கட்டுவர். நடக்கும் போது தட்டாமல் இருக்க வசதியாகக் கட்டி, மாராப்புத்துணியை இடுப்பில் இணைத்துச் சொருகுவர். பெண்களை இப்படிக் காலங்காலமாக பண்ணை மாகாணங்கள் கட்டுப்படுத்தி வைத்துள்ளனர். எங்காவது பயணம் போனால் மட்டும் குப்பாயம் போட்டுக் கொள்ளலாம். "குப்பாயம் என்றால் முழங்கை தோள்பட்டை வரைக்கும் மூடி, இடுப்புத் தொடுகிறாப்போல தொள தொளப்பாக பை கணக்கா இருக்கும். வயலுக்கு வரும்போது கொஞ்சம் பாந்தமா இருக்கிற நல்லத் துணியை வீட்டுல பத்திரப்படுத்திவிட்டுப் பழசுப்பட்டதைத்தான் இடுப்புல கட்டிக்கொள்வார்கள். நடக்கும் போது தடுக்காமல் கொசுவம் வைத்துக் கட்டி மாராக்குக்கு வேற துணியைப் போட்டு இடுப்புல சொருகியிருக்கும். வேலைத் தலைப்பில் இடுப்பில உள்ள துணி அவிழ்ந்து விடாமல் இருக்க அதுமேல் ஏதாவது ஆக்கையால் சுத்திக் கட்டிக்கொள்வது வழக்கம்" (சோலை சுந்தர பெருமாள், பெருந்திணை, 2005, பக். 76, 77). இவ்வாறு, தலித் மக்கள் ஆடை அணிவதிலும் கட்டுப்பாடுகளுக்குள் சிக்கி உள்ளனர்.

### 5. அணிகலன்கள் அணிவதில் கட்டுப்பாடு காணப்படுதல்

பண்ணை அடிமைகள் அணிகலன்கள் அணியக்கூடாது என்பது பண்ணைகளின் கட்டுப்பாடு. எனவே ஆறுமுகம் என்பவர் திருமணம் செய்து கொள்ள இருக்கும் கிளியம்மாவிற்குக் கொலுசு எடுக்க ஆறுமுகத்தின் தாத்தா உத்தண்டி என்பவர் ஆண்டை வைத்திய நாதப் பிள்ளையிடம் அனுமதி கேட்டார். அதற்கு அனுமதி அளித்ததை இன்னொரு ஆண்டை செம்மங்குடி அய்யர் அறிந்து கார்வாரியிடம் வைத்தியநாதப் பிள்ளையை அதட்டிப் பேசினார். இதை உத்தண்டியிடம் கார்வாரி, "ஏண்டா உத்தண்டி ! உங்க சாதிச் சனங்க நன்னி புன்னி போட

ஆண்டை சம்மதிச்சதை நானே நம்பவில்லை. நேத்தைக்குச் செம்மங்குடி அய்யர் முருகன் கோயிலுக்கு வந்தப்ப நானே போய்ப் பார்த்தேன். என்கிட்ட அந்தப் பண்ணை அய்யரு எரிஞ்சி விழுந்து குதறி எடுத்துட்டாரு" (சோலை சுந்தர பெருமாள், பெருந்திணை, 2005, ப.105) என்றான். ஒரு பண்ணை தன் அடிமைகளுக்கு அணிகலன்கள் அணிய அனுமதி கொடுத்தால் பிற பண்ணையார்கள் எதிர்ப்புத் தெரிவிப்பதை இதன் மூலம் அறியலாம்.

### 6. வெள்ளாடு வளர்க்கத் தடை இருத்தல்

தலித் மக்கள் வேலை இல்லாத நாட்களில் தங்கள் பணத் தேவைகளை நிறைவேற்றிக் கொள்ள கால்நடைகளை வளர்க்க விரும்புகின்றனர். சில பண்ணைகள் இதற்கு அனுமதி கொடுக்க மறுக்கின்றனர். மேலும் பள்ளர், பறையர், சக்கிலியர் இன மக்கள் வெள்ளாடு வளர்க்கத் தடை செய்யப்பட்டுள்ளதைத் தப்பாட்டம் நாவல் குறிப்பிட்டுள்ளது (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, ப.60). முனியாண்டிச் சாம்பானின் தங்கை மகள் வெள்ளையைத் தங்கசாமி மூப்பனாரின் நான்காவது மகன் பலாத்காரம் செய்து கொன்றதற்குப் பரிகாரமாகவும் முனியாண்டிச் சாம்பான் அந்த நிகழ்வை யாரிடமும் கூறாமல் இருந்ததற்காகவும் குடியானவர்த் தெருக்காரர்களைப் போல வெள்ளாடுகளை வளர்க்க ஆதிக்கச் சாதியினர் உரிமை கொடுத்தனர். இவ்வாறு, சில இக்கட்டான சூழ்நிலைகளில் ஆண்டைகள் சொல்வதைப் பண்ணை அடிமைகள் ஏற்றுக் கொண்டால் இது போன்ற சில சலுகைகளைக் கொடுக்கின்றனர்.

### 7. கால்நடைகளை விற்பதற்குப் பண்ணையின் அனுமதிபெறுதல்

தலித் மக்கள் தாங்கள் வளர்க்கும் கால்நடைகளை விற்பதற்குப் பண்ணையின் அனுமதி பெற வேண்டிய சூழ்நிலையில் உள்ளனர். உத்தண்டி என்பவன் ஆடு வளர்த்தான். தன் பேரன் ஆறுமுகத்தின் திருமணச் செலவிற்காக ஆட்டை விற்பதற்குப் பண்ணையின் அனுமதி கேட்குமாறு கார்வாரியிடம் முறையிடுகிறான். "கார்வாரிய்யா! என் பேரன், மஞ்சக் கயிறு கட்டப்போறப் பொண்ணுக்குக் கூறைத் துணிய வகையா எடுக்கணும். முலைப்பால் பணம் என்று ஒரு ரூவா வெள்ளிப்பணம் வைக்கணும். பண்ணை ஆண்டைகள் ஏத்துக்கிட்டபடி மஞ்சள் கயிறு கட்டிக்கிறப் பொண்ணுக்குக் கொலுசு எடுக்கணுங்க. என்னோட மவன் கையில சல்லிக்காசு இல்லாமத்தான் இருக்கான். ரெண்டு கடாக்குட்டிகளையும் வித்துக் கொடுங்க' என்று தலையைச் சொறிந்து நின்றார் உத்தண்டி" (சோலை சுந்தர பெருமாள், பெருந்திணை, 2005, ப.105). இவ்வாறு விற்பதற்கான அனுமதியை நேரடியாகக் கேட்காமல் கார்வாரி வாயிலாகக் கேட்கும் தலித் மக்களின் நிலை இரங்கத்தக்கதாக அமைந்துள்ளது.

**8. ஆறு, குளம் மற்றும் குட்டைகளைப் பயன்படுத்த தடை காணப்படுதல்**

மனிதன் உயிர் வாழ்வதற்கான அடிப்படைத் தேவையான நீராதாரங்கள் அனைவருக்கும் பொதுவானவை. ஆனால் அவைகளைப் பயன்படுத்த தலித் மக்களுக்கு உரிமை மறுக்கப்படுகிறது. மேலும், ஆறு, குளம் போன்றவற்றிலுள்ள பொதுத்துறைகளில் தலித் மக்கள் குளிப்பதற்குத் தடை விதிக்கப்பட்டுள்ளது. மேலும், “நீசச் சாதிக்காரனுங்க ஊரு குளம் குட்டையில மாடுகளை இறக்கவோ, மட்டை ஊறப் போடவோ கூடாதென்று கட்டுப்பாடு போட்டு வச்சிருக்காங்க" (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம்,2002, ப.265). அதனால் காமாட்சி அம்மன் கோவில் குளக்கரையில் குளித்துக் கொண்டிருந்த நாகராசுவின் மனைவியையும், அவள் நாத்தினாரையும் ஆதிக்கச் சாதிக்காரர்கள் மூவர் தாக்கினர். அதனை எதிர்த்த நாகராசுவையும் அடித்தனர். இவ்வாறு தலித் மக்கள் ஆதிக்கச் சாதியினருக்குக் கீழ்ப்படியாமல் இருக்கும் போதும் அவர்களின் கட்டுப்பாடுகளை மீறும்போதும் பலவகையான இன்னல்களைச் சந்திக்க நேர்கிறது. தனி மனிதச் சுதந்திரம் அனைவருக்கும் பொதுவானது. தலித் சுதந்திரமும் தனிமனிதச் சுதந்திரம் ஆகும். எனவே, தலித் மக்களை ஆதிக்கச் சாதியினர் கட்டுப்படுத்த முயல்வது தண்டனைக்குரியச் செயலாகும். அரசு இதனைக் கவனத்தில் கொள்ள வேண்டும்.

**3. சாதி சார்ந்த தொழில்களைச் செய்தல்**

தலித் மக்கள் சாதி சார்ந்த தொழில்களைச் செய்ய வேண்டும் என்று கட்டாயப் படுத்தப்படுகின்றனர். அவ்வாறான தொழில்களாக பண்ணையாரின் மாடுகளைப் பராமரித்தல், இறந்த விலங்குகளை அப்புறப்படுத்துதல், சடங்குகளை நடத்துதல், வயலில் வேலை செய்தல், பறையடித்தல், குறவன், குறத்தி ஆட்டம் நிகழ்த்தல், துணி வெளுத்தல் ஆகியவை குறித்தச் செய்திகளைச் சோலை சுந்தர பெருமாளின் படைப்புகள் பின்வருமாறு தருகின்றன.

**1. பண்ணையாரின் மாடுகளைப் பராமரித்தல்**

நில விளைச்சலுக்கு அடுத்தபடியாக பண்ணையின் பொருளாதார முன்னேற்றத்திற்குப் பெரும் பங்கு வகிக்கும் மாடுகளைத் தலித் மக்கள் பராமரிப்பதைத் தங்கள் கடமையாகக் கொண்டுள்ளனர். உத்தண்டி சாம்பான், குப்பான் சாம்பான் இருவரும் மாடுகளைப் பராமரித்துக் கொட்டில்களைத் தூய்மைப்படுத்தும் வேலையைச் செய்வதாக ‘அடிக்கல்' என்ற குறுநாவல் குறிப்பிட்டுள்ளது. மாட்டிற்குத் தண்ணீர் காட்ட வந்த பெரியகுப்பான் என்பவன் தன் மனைவி செய்ய வேண்டிய வேலையான சாணியை அள்ளிக் கொட்டும் பணியைச் செய்ததால் சோமுப்பிள்ளையிடம் அடிவாங்கினான் என்று ‘நஞ்சை மனிதர்கள்' என்ற நாவல் குறிப்பிட்டுள்ளது. மேலும் தலித்

தொழிலாளர்கள் வயல் காட்டிலிருந்து வந்து குளிச்சி முழுவினதும் அடுத்த வேலையாக பண்ணையாரின் மாட்டுக் கொட்டிலுக்குப் போய்க் காவலாகப் படுத்துக் கொண்டனர் (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, ப.25) என்று 'தப்பாட்டம்' நாவல் கூறியுள்ளது. எட்டு வயது ஆவதற்கு முன்பே காளி என்பவன் மாடு மேய்க்கப் பழக்கப்படுத்தப்பட்டான் என்று 'செந்நெல்' நாவல் குறிப்பிட்டுள்ளது. மேலும் கறவைப் பசு மரப்படியானதும் அதை ஓட்டிச் சென்று காளைக்கு அணையவிட்டு வளர்ப்பதும் புல்லறுத்துப் போடுவதும் பண்ணை ஆட்களின் கடமையாகும். ஆனால், மாட்டுக்குத் தேவையான வைக்கோல் மற்றும் தீவனத்தைப் பண்ணையார்களிடம் வந்து அவ்வப்போது பெறலாம் என்றாலும் கன்று போடும் நாளில் மாட்டைப் பண்ணையாரிடம் விட்டுவிட வேண்டும். திரட்டுப்பால் உட்பட எதையும் எடுக்க பண்ணை ஆட்களுக்கு உரிமையில்லை. பசுவைப் பராமரித்ததற்குக் கூலியாக நெல், புதுத்துணி போன்றவற்றை கொடுப்பார்கள். "போடுற கன்று கிடேரியா இருந்தால் உனக்கும், மனைவிக்கும் இடுப்புத்துணி எடுக்கிறதோட, உன்னோட பேத்திக்கும் சேத்து எடுத்துக் கொடுக்கிறேன்" (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, ப.59) என்று பண்ணையார் கூறுவதாக 'தப்பாட்டம்' நாவல் பதிவு செய்துள்ளது.

**2. இறந்த விலங்குகளை அப்புறப்படுத்துதல்**

ரெட்டிப்பாளையத்தில் கன்னிப் பொங்கலன்று சாமு சாம்பானின் மகன் உத்தராசு என்பவன் பாஸ்கர மூப்பனாரின் காளையை அடக்கினதால் மூப்பர்த்தெரு இளைஞர்களால் தாக்கப்பட்டான். அதோடு காளையும் விஷ ஊசி போட்டுக் கொல்லப்பட்டது. அதன் பின்னர் வீரைய்யா மூப்பனார் வந்து "வெட்டியாறப்பயலிடம் துக்கிக்கிட்டுப் போவச் சொல்லு" (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, ப. 92) என்பதாக 'தப்பாட்டம்' நாவல் குறிப்பிட்டுள்ளது. இதிலிருந்து தலித் மக்களை மலிவான கூலிகளாக்கி ஆதிக்கச் சாதியினர் எல்லா நிலைகளிலும் தங்களுக்கு இலாபத்தைச் சேர்க்கின்ற நிலையை அறிந்து கொள்ளலாம்.

**3. சடங்குகளை நடத்துதல்**

வண்ணான் சீனிவாசன், ராமு பரியாரி, மருத்துவச்சி ஏலாம்பா ஆகியோர் சோலை சுந்தர பெருமாளின் சிறுகதைகள், குறுநாவல்கள், நாவல்கள் எனப் பெரும்பான்மையான படைப்புகளில் இடம்பெற்றுள்ளனர். சீனிவாசன் என்பவன் பூப்புச் சடங்கை உறவினர்களுக்கு அறிவிக்க, மறைப்புக் கட்ட, திருமணப் பந்தல் அமைக்க, துணி முகூர்த்தம் செய்ய, குழந்தைப் பேற்றின் போது நலுங்கு வைக்க என அனைத்திற்கும் முன்னின்றான். அழகுமுத்துவின் அம்மா சடங்கு கூற வந்த

சீனிவாசனுக்குக் குடும்ப வழக்கப்படி "ரெண்டு மரக்கா பச்சரிசி, ஒரு சீப்பு பேயன் பழம், வெத்தலைப் பாக்கு ஆகியனவற்றைக் கருப்புக்கட்டியோடு கொண்டு வந்து வைத்துவிட்டு இந்தா பாருங்க ! சீனிக்குச் சாப்பாடு வச்சிருக்கேன் சாப்புட்டு வந்ததும் வழிச்செலவுக்கும் சேத்து வச்சிக் கொடுங்க ..." (சோலை சுந்தர பெருமாள், குருமார்கள், 2006, ப.56) என்று கூறியதாகக் 'குருமார்கள்' என்னும் குறுநாவல் குறிப்பிட்டுள்ளது. ஏலாம்பா, பட்டக்கா, காசி ஆகியோர் பேறு பார்த்தல் மற்றும் மருத்துவ உதவிகளைச் செய்தல் போன்ற பணிகளை மேற்கொள்கின்றனர். பின்பு குழந்தைக்குச் செய்ய வேண்டிய த(ட்)டை போடும் சடங்கு பற்றி பெரியவர்களிடம் அறிவுறுத்துகின்றனர் என்ற செய்தி 'நஞ்சை மனிதர்கள்' என்ற நாவலில் இடம்பெற்றுள்ளது. இப்படியாக இவர்கள் ஆதிக்கச் சாதியினரின் வாழ்க்கையோடு பின்னிப்பிணைந்து பிரிக்க முடியாத அங்கமாய் இருந்தாலும் ஆதிக்கச் சாதியினர் தலித் மக்களை இழிவாக நடத்தும் வழக்கம் நடைமுறையில் உள்ளது. ராமு பண்டிதர் தலைமையில் மூன்று பேர் மாணிக்க ராஜுவிற்குப் பாடை கட்டும் தொழிலில் ஈடுபட்டிருந்தனர். அங்கு வந்த ஆதிக்கச்சாதிக்காரர் ஒருவர் ராமு பண்டிதரைப் 'பரியாரிப் பயலே' என்று மரியாதையின்றி அழைத்தச் செய்தி 'ஒரே ஒரு ஊர்ல' என்னும் நாவலில் இடம்பெற்றுள்ளது. சோமுப் பிள்ளை கொலை செய்யப்பட்ட இடத்தில் ஊர் வெட்டியார்கள் காவல் இருந்தனர் என்று 'நஞ்சை மனிதர்கள்' என்ற நாவலில் கூறப்பட்டுள்ளது. பஞ்சநாதம் பிள்ளையின் இறப்புச் சடங்கு மற்றும் கருமாந்திரச் சடங்கு அனைத்தையும் ராமு பண்டிதரும், சீனிவாசனும் நடத்தினார்கள். ஆனால், தங்கவேலுப்பிள்ளையால் "இந்தச் சின்னச் சாதிக்காரப் பயலுங்களுக்கு என்னத் தெரியப் போவுது?" (சோலை சுந்தர பெருமாள், குருமார்கள், 2006, ப. 61) என்று இழிவாகக் கருதப்பட்டார்கள். தாலி இறக்கும் சடங்கை மருத்துவச்சி ஏலாம்பா முன்னின்று நடத்தினாள். ஆதிக்கச் சாதிக்காரர் இறந்தால் அங்கு வேலை செய்யும் தலித்துகள் சுத்தமாக நிற்க வேண்டும் என்ற கருத்து தங்கவேலுப்பிள்ளையால் வலியுறுத்தப்படுகிறது. ஆனால் சாவுச் செய்தி கூறுவது உட்பட எதற்கும் சரியான கூலி கொடுக்கப்படவில்லை. ஆண்டைகள் இறந்தால் ஊர் திரண்டு வந்து மரியாதை செலுத்துவது கட்டாயக் கடமையாகும். ஆனால் தலித் மக்கள் அவ்வாறு மரியாதை செலுத்தக் கொண்டு வரும் பெரிய மாலையைப் பிணத்தின் மேல் போடுவது இல்லை. மாறாக வெட்டியான் இப்படிச் சேர்ந்த மாலைகளையெல்லாம் பந்தல்காலில் மாட்டி வைத்துக் குச்சியில் கோர்த்துக் கள்ளிக்காட்டில் தூக்கி எறிவான் என்ற செய்தி 'தப்பாட்டம்' நாவலில் உள்ளது. தலித் மக்கள் எல்லா நிலைகளிலும் ஆதிக்கச் சாதியினரின் உயர்விற்கு ஆதாரமாக இருந்து, தங்கள் வாழ்வில் இன்பம் நுகராமலேயே மாய்ந்து போவதைச் சமூக ஆர்வலர்களும் அரசும் கவனத்தில் கொள்ள வேண்டும்.

**4. வயலில் வேலை செய்தல்**

சோலை சுந்தர பெருமாள் படைப்புகளில் குறிப்பிடப்படும் பெரும்பான்மையான தலித் மக்கள் விவசாய வேலைகளைச் செய்பவர்களாக உள்ளனர். அவர்கள் முடுக்கி விடப்பட்ட இயந்திரங்களைப் போல நின்று வேலை செய்கின்றனர். "பத்து ஆள்கள் தனியா ஒதுக்கிவிட்டுப் பேப்பர்த்தெடல கொத்தணும், தொடர்ந்து அதப் புழுதியடிச்சிப் பாத்திக்கட்டணும். பண்ணை நாடவாளுங்கள விட்டு ஆட்டுப்புழுக்கைய இடுச்சிப் போடச் சொல்லித்தான் மொளவாக் கண்ணை வைக்கணும். அதுக்கு ஊடுப்பயிரா மருளிக் கட்ட நட்டு வைக்கணும். மழையில், கலகலத்துச் சாஞ்சி நிக்கிற வேலிய நிமிர்த்தாவணும். முள்ளு அறுக்க அறுக்க அப்ப அப்ப வெளியே கொண்டாந்து சேத்திடணும்" (சோலை சுந்தர பெருமாள், செந்நெல், ப.124) என்று பெரியானிடம் வேலுநாடார் கூறுவதாகச் 'செந்நெல்' நாவலில் செய்தி உள்ளது. பறவைகளுக்கு விழிப்பு வந்ததோ, இல்லையோ அதிகாலையிலேயே கூலி ஆட்கள் வயல்வேலைக்குச் செல்ல வேண்டும். பெண்கள், குழந்தை பெற்றவர்கள், கைப் பிள்ளையை உடையவர்களுக்கு மட்டும் சற்று நேரம் விலக்கு உண்டு. சிறுநீர் கழிப்பதற்கும் வயலை விட்டு வெளியேற இயலாததால் நட்டுக் கொண்டிருக்கும் போது கால்வழியாக எரிச்சலுடன் சென்ற நிலையிலும் வேலை செய்து கொண்டு நின்றனர் என்று 'பெருந்திணை' நாவல் குறிப்பிட்டுள்ளது. மேலும், இந்த நாவலில் ஆறுமுகம் மற்றும் கிளியம்மாவின் திருமணத்தன்று பண்ணையாரான வைத்தியநாதப் பிள்ளை என்பவர் "கால்வலி தலைவலி இல்லாமல் காலமுச்சூடும் இருந்து வெள்ளாமையில் நில்லுங்க" (சோலை சுந்தர பெருமாள், பெருந்திணை, 2005, ப.114) என்று தம்பதிகள் காலில் விழுந்து கும்பிடும் போது ஆசி வழங்கினார். 'உறங்க மறந்த கும்பகர்ணர்கள்' என்ற நாவல் விதைப்பில் தொடங்கி, அறுவடையில் முடிகிறது. கண்டாமணியின் முதல் ஓசை பிரமதேய பண்ணை அடிமைகளைத் துயிலெழுப்பி அவர்கள் தங்கள் கடமைகளைச் செய்யத் தூண்டுகிறது. இரண்டாவது ஓசையின் போது அவர்கள் வயலில் இறங்கியாக வேண்டும். எனவே முழு ஆள், அரை ஆள் என்று பாகுபாடு பார்க்காமல் கார்வாரி வந்து, எந்தப் பக்கம் எந்த வயலுக்கு என்ன வேலையைச் சொல்கிறார் என்ற கட்டளையை எதிர்பார்த்துக் காத்திருந்தார்கள் (சோலை சுந்தர பெருமாள், மரக்கால், 2007, ப.45). மேலும், பண்ணைக்கு உரிமை உடையவர்களும், அவர்கள் பிள்ளைகளும் நேரங்காலம் பார்க்காமல் பண்ணையில் வேலை செய்ய வேண்டும். காலையில் பண்ணை மாடுகளைப் பராமரித்த பின்பு வயலில் வந்து சூரியன் மறையும் வரை உழைக்க வேண்டும். பின்னர் வீட்டிற்கு வந்து, வேகமாக இருப்பதை வாயில் அள்ளிப் போட்ட பின்பு பண்ணை நில நீர்ப்பாய்ச்சலுக்கு அல்லது பண்ணை நிலக் காவலுக்குச் செல்ல வேண்டும். தாமதித்துச் சென்றால் அடி கிடைக்கும். இரவில் பிற

ஆண்டைகளிடமிருந்து வரும் இன்னல்களையும் அவர்கள் பொறுத்துக் கொள்ள வேண்டும்.

## 5. பறையடித்தல்

சாவுச் செய்தியைக் கொட்டடித்து ஊருக்கு அறிவிக்கும் கடமை வெட்டியானுடையதாகும். கல்யாண ஊர்வல அடவு அடி, கோவில் கட்டு அடி போன்றவைகளையும் சமுதாயத்திற்கென அந்தந்தக் காலங்களில் வெட்டியான் அடிக்க வேண்டும். கோவில் விழாவில் பறையடிப்பதும், கொம்பு ஊதுவதும், தண்டோரா போடுவதும், தாரை மற்றும் உறுமி ஆகியனவற்றை அடிப்பதுவும் வெட்டியானுடைய வேலையாகும். இதற்காக மூப்பனார்களிடம் பறையர்களும், அம்பலக்காரர்களிடம் சக்கிலியர்களும் அடிமைகளாக இருந்ததாக 'தப்பாட்டம்' நாவல் வாயிலாக அறியலாம். காமாட்சி அம்மன் கோவில் விழாவை அம்பல்காரர்கள் நடத்த முடிவு செய்து தம்புராயன் பகடையை அழைத்துச் செய்தியைக் கூறினர். அவன் "... எல்லா நல்லது, கெட்டதுக் கெல்லாம் நான் முன்னுக்கு வந்து நிக்கிறேங்க. பொழுதுக்கு நின்னாலும் மூணு ரூபாக்கூலியும், தண்ணிக்காசுன்னு ரெண்டு ரூபாயும் தாறீங்க. இது எப்படிங்க கட்டுப்படியாவும் ...?" என்றதற்கு "... உன்னை உசுப்பிவிட்டுச் பேச வச்சிருக்கானங்களாடா? பு ... நாறிபோயிடும் நாறி. வூட்டுக்கு ஊடு வந்து சட்டிச் சோறு வாங்கித் தின்ன காலம் மறந்து போயிட்டாடா? ..." (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, ப.106) என்று விரட்டினர். மைலப்ப சேர்வையின் சாவின் போது சாவுச் செய்தி கூறவும், தப்படிக்கவும் சாமுசாம்பானும், தம்புராயன் பகடையும் மறுத்தனர். இதற்குப் பரிகாரமாக குருமூர்த்திச் சாம்பான் மருங்குளத்தில் முந்திரிக் கொட்டை பொறுக்கினதைக் காரணம் காட்டி அவனது இரண்டு கட்டை விரல்களையும் துண்டித்தனர். இவ்வாறு ஆண்டைகளின் விருப்பத்திற்கேற்ப மறுத்துப் பேசாமல் பறையடித்தலை நிகழ்த்த வேண்டும் என்று தலித் மக்கள் கட்டாயப்படுத்தப்படுவதையும் மறுத்துப் பேசுபவர்கள் தண்டிக்கப்படுவதையம் சோலை சுந்தர பெருமாள் பதிவு செய்துள்ளார்.

## 6. குறவன் குறத்தி ஆட்டம் நிகழ்த்தல்

கோவில் விழாவில் மக்களை மகிழ்விப்பதற்கும், பாடையின் முன் ஆடுவதற்கும், பெருக்கெடுத்து வரும் நீரைக் கட்டுப்படுத்துவதற்கும் குறவன் குறத்தியோ அல்லது குறவன் குறத்தியாக வேடமிட்டவர்களோ பாடி ஆடுவதை ஒரே ஒரு ஊர்ல (ப.146), செந்நெல் (ப.148), ஒரு ஊரும் சில மனிதர்களும் (ப.74), மண் உருவங்கள் (ப.47) ஆகிய படைப்புகளில் காணலாம். பொய்க்கால் குதிரை ஆட்டக்காரர்கள், கரகாட்டக்காரர்கள் கோவில் விழாவில் ஆடுகின்றனர் (சோலை சுந்தர பெருமாள், ஒரே ஒரு ஊர்ல, 2001, ப.148). இரவு முழுவதும் ஆடினாலும் கிடைக்கும் கூலி

குறைவு என்பதால் அவர்களின் பரம்பரையினர் வேறு தொழில்களுக்குச் செல்கின்றனர். மேலும், பரம்பரைத் தொழில் செய்யும் தலித் தொழிலாளர்களும் ஆதிக்கச் சாதி வாடிக்கையாளர்கள் மூலம் இழப்பைச் சந்திக்கின்றனர்.

## 7. துணி வெளுத்தல்

ஊருக்கு அனுபவ பாத்தியதை உள்ள வண்ணார் சாதியினர் ஆதிக்கச்சாதி குடும்பத்திலுள்ள அனைவரின் துணிகளையும் வாரந்தோறும் துவைத்துத் தேய்த்து மடித்துக் கொடுக்க வேண்டும். ஊருக்குத் தனி வண்ணான்கள் இருந்தாலும் சில பண்ணைகள் தங்கள் மனதுக்குப் பிடித்த வேற்றூர் வண்ணானையும் அடிமையாகக் கொண்டுள்ளனர். ஆனால் தலித் மக்கள் தங்களுக்கான தனி வண்ணார்களிடம் மட்டுமே துணி வெளுக்க வேண்டும். அவ்வாறு தலித் மக்களின் துணிகளை வெளுக்கும் வண்ணார்களைப் புதிரை வண்ணார் என்று அழைக்கின்றனர். ஆதிக்கச் சாதியினர், பள்ளர், பறையர், சக்கிலியர் சாதியினரை அடக்கி ஒடுக்கி வைத்துள்ளது போல பறையர் இனத்தினர் புதிரை வண்ணார் சாதியினரை அடக்கி ஒடுக்கி வைத்துள்ளதைத் ‘தப்பாட்டம்' நாவல் குறிப்பிட்டுள்ளது. பறையர் இனத்தைச் சேர்ந்த முனியாண்டி சாம்பான் தன் பேத்தி விசாலாட்சியின் சடங்கின் போது புதிரை வண்ணார் இனத்தைச் சார்ந்த வீரவாகுவையும் அவர் மனைவியையும் பந்தல் கட்டவும், தீட்டுத்துணி எடுக்கவும் அழைத்திருந்தார். அப்படி அங்கு வந்திருந்த வீரவாகுவும் அவன் மனைவியும் மரியாதை இன்றி நடத்தப்பட்டனர். மேலும் அவர்களுக்கான கூலியும் சரியாகக் கொடுக்கப்படவில்லை. எனவே வீரவாகு பறைத்தெரு நாட்டாமைக்காரரும், பஞ்சாயத்துகாரர்களும் அமர்ந்திருந்த ஈச்சம்பாயை விட்டு ஓர் அடி தள்ளி நின்று “அய்யாங்களா ! காலம் முன்னப் போலயா இதுக்குங்கைய்யா? பழைய காலம் போல வண்ணான் துணி கட்டவும், வண்ணாத்தி தீட்டுத்துணி தொவைச்சிப் போட்டுட்டு ஒரு வெள்ளிப் பணத்தோட, வீடுகள்ல உள்ள மிச்ச மீதியை வாங்கிகிட்டுப் போவ முடியுமாங்கைய்யா? நேத்திக்கு விடியல்ல நானும் அவளும் வந்தோம்ங்கைய்யா. தேவைக்காரவங்க சொன்னபடி நாங்க எல்லாவற்றையும் செய்தோம். அதனால் ‘ரெண்டு நாளைக்குச் சோடியா வயக்காட்டுல நின்னு வேலைபாக்கிற பணத்தை நாங்க வாங்கினால்தான் எங்களுக்கு ஒரு மரியாதை இருக்கும் . . .' என்று சொன்னதும், “இந்தாபாரு உங்களுக்கு முன்னப் போலவா காசு கொடுக்கிறோம். கொடுக்கிறத வாங்கிக்கிட்டு வாய்ப் பேசாம போயிச்சேரு . . . அடுத்து அடுத்துத் தேவை இருக்கு. சேத்து வாங்கிக்கலாம் என்று பறைத்தெரு நாட்டாமைக்காரர் நாலு பத்து ரூவா நோட்டைத் தூக்கிப் போடவும் ரெண்டு கையையும் விரிச்ச்க் குனிஞ்சி வாங்கி அந்த நோட்டுக்களைக் கண்ணில் ஒத்திக்கிட்டார் வீரவாகு" (சோலை சுந்தர பெருமாள்,

தப்பாட்டம், 2002, ப.111). அதன்பின்னர் வீரவாகுவிடம் முனியாண்டி, 'உங்க தொழிலுக்கு வாரிசு வைக்கவில்லையா?' என்று கேட்க, 'அவர்கள் விருப்பத்தின்படி கூலி வேலைக்குச் செல்கின்றனர். அதனால் நாங்களும் வருத்தப்பட வில்லை' என்றனர். இதிலிருந்து தங்கள் தொழிலின் தன்மையை அறிந்த அவர்கள் குடும்ப முன்னேற்றத்திற்காக மாற்றுத் தொழிலைத் தேடும் நிலையை அறிய முடிகிறது. மேலும், வீரவாகு மதுக்கன் பகடையிடம், "இப்ப தலையெடுத்து வர்ற சிறுவர்கள்கூட, "ஏ ! வண்ணாத்தி இங்க வாடி ! போடி . . .! என தலையில அடிச்சாப்போல கூப்பிட்டுக்கிட்டு இருக்கிறதைத் தாங்கிக்க முடியலங்க. ஏதோ பழக்க தோஷத்தில பரம்பரை அடிமைத் தொழிலுக்கு வர்றோங்க . . ." (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, ப112) என்று குறிப்பிடுவது கவனத்தில் கொள்ளத்தக்கது. இவ்வாறு சமூக மற்றும் பொருளாதார நிலையில் மிகவும் அடித்தளத்தில் வாழ்ந்து வரும் புதிரை வண்ணார் இனத்திற்குத் தனி நலவாரியம் அமைக்க மேற்கொண்டுவரும் அரசின் முயற்சி (கே. வைத்தியநாதன், 'புதிரை வண்ணான் சமூகத்திற்குத் தனி நலவாரியம்', தினமணி, 08.07.2009, திருநெல்வேலி பதிப்பு, ப. 4) பாராட்டத்தக்கது ஆகும்.

### 4. ஆதிக்கச் சாதியினரின் அடிமைத்தனங்களுக்கு உள்ளாதல்

தலித் மக்கள் ஆதிக்கச் சாதியினரின் பிடியிலிருந்து விடுபடாமல் உள்ளனர். எனவே அவர்கள் கல்வி கற்க பண்ணையாரிடம் அனுமதி கேட்டல், உழைப்பிற்கு ஏற்ற கூலியைப் பெறாமை, உழைப்பிற்காக வழங்கப்படும் குறைந்த கூலியைப் பணிந்து பெறுதல், அதிகமாக வேலை செய்தல், ஆண்டைக்காக அடிவாங்குதல், ஆதிக்கச் சாதியினருக்கு மரியாதை செலுத்துதல் போன்ற நடைமுறைகளை மேற்கொள்ளுகின்றனர். இவற்றை விளக்குவதாக இந்தப் பகுதி உள்ளது.

### 1. கல்வி கற்க பண்ணையாரிடம் அனுமதி கேட்டல்

தலித் மக்கள் கல்வி கற்க விரும்பினால் பண்ணையாரிடம் அனுமதி பெற வேண்டும். ஆனால் தலித் மக்கள் தங்களிடம் அடிமை வேலை செய்ய வேண்டும் என்று பண்ணையார்கள் எதிர்பார்ப்பதால் கல்வி கற்பதற்கான அனுமதியை வழங்குவதில்லை. மேலும் தங்கள் எதிர்பார்ப்பு நிறைவேறாமல் போகும் எனக் கருதும் நிலை ஏற்பட்டால் அவர்கள் தலித் மக்களைத் துன்புறுத்துகின்றனர். செம்மங்குடி ஐயர் பண்ணையில் வாழ்ந்த அம்மாசியின் பேரன் பண்ணையாரின் சொல்லைக் கேட்டு அவரது பால்பண்ணையில் வேலைக்குச் செல்லாமல் கல்லூரியில் சேர்ந்ததால் அவன் மீது 'பால் பண்ணையின் பணத்தைத் திருடினான்' என்று பொய் வழக்குப் போட்டுப் பண்ணையார் தன் வஞ்சத்தைத் தீர்த்துக் கொண்டார் (சோலை சுந்தர பெருமாள், பெருந்திணை, 2005, பக்.9, 10) என்று 'பெருந்திணை' நாவல் குறிப்பிட்டுள்ளது. மேலும் பெரியானின்

இரண்டாவது மகன் கண்ணுசாமி பள்ளிக்குச் செல்ல விரும்புவதை அறிந்த வேலுநாடார் பெரியானிடம் நீ உன் மகனைக் கலகத்துக்குக் கையெழுத்துப் போட வைத்திருக்கிறாய் என்று கூற, பெரியான் ஆண்டே ! நீங்க அப்படிச் சொல்லாதீங்க. என்னோட பாட்டன், பூட்டன் காலத்திலிருந்து நாங்கள் உங்க பண்ணையில தாங்க. நீங்க போடும் உப்பத்தின்னுட்டுக் கிடக்கிற அடிமைங்க நாங்க . . .' என்று கூறுவதாகச் 'செந்நெல்' நாவலில் குறிப்பு உள்ளது (சோலை சுந்தர பெருமாள், செந்நெல், 2003, ப.16). இவ்வாறு தலித் மக்கள் கல்வி பெறுவதைத் தடைசெய்யும் நிலையில் பண்ணையார்கள் உள்ளதைக் சோலை சுந்தர பெருமாளின் நாவல்கள் காட்டுகின்றன. ஆனால் தலித்துகள் "கல்வி, பொருளாதாரம் போன்ற தளங்களில் மேம்படுவதற்குச் சமகாலத்திலேயே இணையான வீரியத்தோடு போராட வேண்டும். அவ்வாறு கல்வித்தளத்தில் மேம்பாடு பெற்ற பிறகு வேலை வாய்ப்பு, தொழில் ஆகியவற்றின் மூலம் பொருளாதாரத்திலும் மேம்பாடு அடைய வேண்டும். அதன்பிறகு சட்டமன்ற, நாடாளுமன்ற பங்கேற்பின் மூலம் அரசியல் அதிகாரத்திலும் மேம்பாடு அடைய வேண்டும்" (தொல். திருமாவளவன், வெளிச்சம், 2007, பக். 94, 95) என்று தொல். திருமாவளவன் கூறுவதும் இங்குக் கவனத்தில் கொள்ளத்தக்கது.

## 2. உழைப்பிற்கு ஏற்ற கூலியைப் பெறாமை

தலித் மக்கள் உழைப்பிற்கு ஏற்ற கூலியைப் பெறாத நிலையில் உள்ளனர். தையம்மா என்பவள் குழந்தைக்குப் பால் வாங்குவதற்காகத் தன் பண்ணையார் வேதாசலம் சொன்ன அனைத்து வேலைகளையும் செய்து முடித்தாள். இறுதியில் கூலியாக இரண்டு ரூபாயைப் பெற்றாள். மனம் நொந்த நிலையில் பண்ணை வீட்டிலிருந்து வெளியேறினாள் (சோலை சுந்தர பெருமாள், மண் உருவங்கள், 2000, ப. 30) என்று 'எதிர்பார்ப்புகள்' என்ற சிறுகதை குறிப்பிட்டுள்ளது. வயலில் வேலை செய்பவர்களுக்கு நெல்லைக் கூலியாகக் கொடுக்கின்றனர். அந்த நெல்லை விற்பதற்குத் தலித் தொழிலாளர்கள் படும்பாடு 'பெருந்திணை' நாவலில் கூறப்பட்டுள்ளது (சோலை சுந்தர பெருமாள், பெருந்திணை, 2005, ப. 133). வீரைய்யா மூப்பனார் என்பவர் முனியாண்டிச் சாம்பானிடம் விவசாய வேலைக்குப் பெண் ஆள் ஒன்றிற்கு ரூபாய் பதினைந்தும், ஆண் ஆள் ஒன்றிற்கு ரூபாய் முப்பதும் தருகிறேன் என்றார். முனியாண்டிச் சாம்பான் முடிவு கூறாத நிலையில் அவர் மிரட்டும் தொனியில் "உன்னோட சாதிக்காரப் பயலுங்க நாங்க கொடுக்கிற கூலிய வாங்கிக்கிட்டு வேலைப் பாத்தாப் பாக்கட்டும். புடிக்காட்டா போவட்டும். வாய்த்தொறக்காம வந்தானுங்கன்னா வயக்காட்டுக்கு அழைச்சிக்கிட்டுப் போய் வேலையைப் பார். இல்ல நீயும் வரவேணாம்" (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, பக். 234, 235) என்றார். அறுந்த செருப்பைத் தைக்கும் மதுக்கன் பகடைக்கு வாடிக்கையாளர்கள் உரிய பணத்தைக் கொடுக்கவில்லை

என்ற செய்தி கூறப்பட்டுள்ளது. மேலும், சோற்றிற்காக வாழ்நாளெல்லாம் கழனியில் உழைத்து உருக்குலையும் தலித் விவசாயத் தொழிலாளர்களின் நிலையைச் 'செந்நெல்' நாவல் சித்தரிக்கிறது. மேலும், ஆதிக்கச் சாதி முதலாளிகள் கூலியைக் குறைத்து, வேலைப் பளுவைக் கூட்டும் நிலையில் மட்டுமே செயல்படுகின்றனர். இதனால் தொழிலாளர்களின் வாழ்க்கையில் முன்னேற்றம் ஏற்படவில்லை. எனவே அவர்கள் முதலாளிகளின் ஆதிக்கத்திலிருந்து விடுபட்டால்தான் சமூகப் பொருளாதார நிலைகளில் முன்னேற்றம் அடைய முடியும்.

### 3. உழைப்பிற்காக வழங்கப்படும் குறைந்த கூலியைப் பணிந்து பெறுதல்

தாழ்ந்த சாதியினரை ஆதிக்கச் சாதியினர் தங்கள் கட்டுக்குள் வைத்து அவர்கள் உழைப்பு முழுவதையும் சுரண்டுகின்றனர். மேலும் அவர்கள் தங்கள் உழைப்பிற்கான கூலியைப் பணிந்து கேட்டாலும் கொடுக்கும் மனநிலை இல்லாதவர்களாகக் காணப்படுகின்றனர். இதனால் தலித் தொழிலாளர்கள் போராட்டத்தில் ஈடுபட்ட போது பெரியான் பண்ணையாரைப் பார்த்துக் "..காலங்காலமாக இந்தச் சனங்க உங்க பண்ணைக்கு எவ்வளவோ உழைச்சி ஓடா தேஞ்சிப் போயிருக்குங்காண்டே. உழைச்ச மாட்டுக்குத் தீனி போடுறாப்போல நீங்களும் செய்கிறீர்கள். இப்ப போன வருஷம் போட்டக் கூலியைத்தான் கேக்குதுங்க. ஊரு உலகம் கொடுக்கிறப்ப நீங்களும் கொடுக்கப் போறீங்க. நாங்களும் வேலைப் பார்க்கப் போறோம். அதுவரைக்கும் பொறுத்துக்கிங்க ஆண்டே. உங்க வெளச்சல நாங்க நாசம் பண்ணிட்டதா உங்க வாயாலச் சொல்லாதீங்க ஆண்டே..." (சோலை சுந்தர பெருமாள், செந்நெல், 2003, பக். 177, 178) என்று பணிந்து வேலுநாடாரிடம் கூறினான். பேசும் போது பணிவாக இருக்க வேண்டும் என்பது எழுதப்படாத சட்டமாக உள்ளது. எனவே தலித் தொழிலாளர்களும் பண்ணையாரிடம் தங்கள் உழைப்பிற்கேற்ற நியாமான கூலியைக் கேட்கும்போது அந்தப் பணிவை அப்படியேக் கையாளுகின்றனர்.

### 4. அதிகமாக வேலை செய்தல்

ஆண்டைகளும், ஆண்டைகளின் வாய்ச்சொல்லிற்குக் கட்டுப்பட்டு ஆட்களை வேலை செய்யத் தூண்டும் கார்வாரிகளும் எப்போதும் தலித் மக்களை மிரட்டி வேலை வாங்குவதை வழக்கமாகக் கொள்கின்றனர். நடவு செய்பவர்களிடம் கார்வாரி கட்டளையிடுவதைக் கேட்டு உத்தண்டிச் சாம்பான் "என்னா மனுசன்? நாலு கையா இருக்கு? ஆந்து அமந்து ஒண்ணு ஒண்ணா செய்யச் சொன்னா காளியாயி வந்தா தூக்கிக்கிட்டுப் போயிடும்? ... எந்த நேரமும் காலில் சக்கரத்தைக் கட்டிக் கொண்டு பறந்து பறந்துதான் வேலையைப் பாக்க வேண்டியிருக்கு . . . இங்க மனுசன் கொட்டை அடிபட்டுக் கிட்டு நிக்கிறதை எங்க நெனச்சிப்

பாக்கிறானுங்க" (சோலை சுந்தர பெருமாள், பெருந்திணை, 2005, ப.84) என்று முணுமுணுத்தார். தொழிலாளர்கள் பசி வயிற்றைக் கிள்ளுவதையும் பொருட்படுத்தாமல் வேலைத்தளத்தில் பரபரப்பாக இயங்குகின்றனர். இவ்வாறு வயல் வேலை முடிந்த பின்பு, பண்ணைக்கு நம்பிக்கையான சிலர் குதிரில் பக்குவப்படுத்தி வைத்திருக்கும் நெல்லை மருத்துவச்சி முன்னிலையில் அரிசிமுனை மழுங்காமல் குத்த வேண்டும். அதன் பின்னர் அவர்கள் அதைத் தொடக்கூடாது. உலக்கை போடும் பெண்கள் களைத்து விடாமல் இருக்க பொடித் தவிட்டை மருத்துவச்சி எடுத்துக் கருப்புக்கட்டி சேர்த்துப் பிசைந்து ஆளுக்கு இரண்டு உருண்டை கொடுப்பாள் (சோலை சுந்தர பெருமாள், பெருந்திணை, 2005, ப. 85). அதில் வரும் மணத்தை நுகர்வதற்குக் கூட அவர்களுக்கு நேரம் இல்லாமல் அதை அப்படியே விழுங்கிவிட்டு வேலையில் ஈடுபடுகின்றனர். தலித் சமுதாய ஆர்வலர்கள் தலித் மக்களின் இந்த நிலையைக் கவனத்தில் கொள்ள வேண்டும்.

### 5. ஆண்டைக்காக அடி வாங்குதல்

தலித் மக்கள் ஓர் ஆண்டைக்குக் கீழ்ப்படியும் போது பிற ஆண்டைகளால் இன்னல்களைச் சந்திக்கின்றனர். முனியாண்டிச் சாம்பானிடம் வீரைய்யா மூப்பனார் கால்வாயைக் குறுக்கே அடைத்துத் தனது எல்லாப் பயிர்க்காட்டிற்கும் நீர் விடக் கூறினார். முனியாண்டி பயத்துடன் 'ஆண்டே பிற ஆண்டைகள்?' எனக் கேட்க வீரைய்யா மூப்பனார் சினத்துடன் 'தனக்கு மிஞ்சினால் தான் தானமும் தர்மமும்' என்றார். எனவே வீரைய்யா மூப்பனாருக்காக முனியாண்டிச் சாம்பான் நீரை அடைத்ததை அறிந்த அம்பலக்காரர்கள் விரைந்து வந்து கால்வாயைத் திறக்க முயன்றனர். முனியாண்டி தன் ஆண்டையின் சொல்லிற்குக் கீழ்ப்படிந்து அடைப்பின் குறுக்கே நின்றான். அம்பலக்காரர்கள் "நவுறுடா பறை ... மவனே ... என்று முனியாண்டியைத் தள்ளிவிட்டதும் முனியாண்டி அப்படியே சிமின்ட் கிட்டியில் விழுந்தான். அவனது மண்டை பிளந்து விட்டது" (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, ப.80). அதோடு விளக்குடன் முனியாண்டிக்குத் துணையாக வந்த மாரியப்பனைப் பனைமட்டையை எடுத்து அடித்து விட்டு நீரைத் திறந்தனர். இவ்வாறு அடிமைகள் தங்கள் உடலில் ஆண்டைக்காக காயங்களை எற்றுக் கொண்டனர் என்ற குறிப்பைத் 'தப்பாட்டம்' நாவலில் காணலாம். ஆதிக்கச் சாதியினரிடையே நடைபெறும் போட்டிகளால் தலித் மக்கள் பாதிக்கப்படுவதை இந்த நிகழ்வின் வழி அறியலாம்.

### 6. ஆதிக்கச் சாதியினருக்கு மரியாதை செலுத்துதல்

ஆதிக்கச் சாதியினரைக் கண்டால் தலித் மக்கள் குனிந்து பணியவோ அல்லது கீழே விழுந்து வணக்கம் தெரிவிக்கவோ வேண்டும்

என்பது சமுதாய நிலையாக உள்ளது. ஆரமுது என்பவள் தாசிக்குப் பிறந்தவளானாலும் மன்னர் சகஜியின் நேசத்திற்குரியவளான காரணத்தால் கொட்டில் சேவகர்களான உத்தண்டிச் சாம்பானும், குப்பான் சாம்பானும் விழுந்து பணிந்தார்கள் (சோலை சுந்தர பெருமாள், குருமார்கள், 2006, ப. 95). ரெத்தினவேலுவின் மச்சான் வெள்ளைச்சாமி என்பவன் குதிரை வண்டியில் வருவதைப் பார்த்ததும் "போயிட்டு வாங்கைய்யா'ன்னு ரெண்டு கையையும் தூக்கிக் கும்பிட்டான்" (சோலை சுந்தர பெருமாள், நஞ்சை மனிதர்கள், 2006, ப.43). அயராத உடலுழைப்பின் வாயிலாக நிலத்திற்குச் சொந்தக்காரனாக மாறின தலித்தான குண்டுகண்ணு என்பவன் தென்னவன் மற்றும் குப்புசாமி இருவரும் வண்டியில் இருப்பதைப் பார்த்ததும் "பயபக்தியோடே 'வணக்கங்க சின்னைய்யா ! ... வாங்க ! வாங்க ! ..." (சோலை சுந்தர பெருமாள், நஞ்சை மனிதர்கள், 2006, ப. 220) என்றார். பொருளாதார நிலையில் முன்னேறினாலும் மரியாதை கொடுக்க வேண்டிய கட்டாய நிலையில் தலித் மக்கள் இருப்பதை இந்தப் பகுதி விளக்குகிறது. மேலும், ராசு மூப்பனாரும் மற்றும் சிலரும் தேநீர்க்கடையில் இருந்ததைப் பார்த்தச் சாமு சாம்பானும் அவனோட சகாக்களும் தோளில் கிடந்த துண்டை எடுத்து இடுப்பில் கட்டிக்கொண்டு "ஆண்டமாருங்களே ! கும்புடுறேனுங்க என்று கூறிக்கொண்டு கைக்கட்டி கூனிக்குறுகி டீக்கடை ஓரமாய் மறைப்பில் நின்றார்கள்" (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, ப.53) என்று தப்பாட்டம் நாவல் குறிப்பிடுகிறது.

பகுத்தறிவு கொண்ட மனிதர்கள் சகோதர உணர்வுடன் பழகக் கடமைப்பட்டவர்கள். ஆனால், ஆதிக்கச் சாதியினர் என்று தங்களைப் பாவித்துக் கொண்டு சிலரைத் தங்களது கட்டுப்பாட்டிற்குள் வைத்துக் கொள்ளும் நிலை மாண்புடைய மனிதச் செயல் அல்ல எனலாம்.

### 5. ஆதிக்கச் சாதியினரால் புறக்கணிக்கப்படுதல்

மனிதர்கள் அனைவரும் உள்ளார்ந்த சுதந்திரத்தோடும், மாண்போடும், உரிமைகளோடும், சமத்துவத்தோடும் பிறக்கிறார்கள். அவர்கள் பகுத்தறிவும், மனசாட்சியும் வாய்க்கப் பெற்றவர்கள் (இ. தேவசகாயம், உரிமைக் காப்போம், 2004, ப. 46). என்றாலும் , ஆதிக்கச் சாதியினரால் தலித் சாதியினர் புறக்கணிக்கப்படும் நிலை நீடித்து வருகிறது. இதனைத் தலித்துகளுக்கு ஆதிக்கச் சாதியினர் மரியாதை வழங்காமை, தலித்துகளுக்கு ஆதிக்கச் சாதியினரின் வீட்டில் சமைத்த உணவை வழங்காமை, தலித்துகளின் வீட்டுத் தேவைகளுக்கு ஆதிக்கச் சாதியினர் வராமை, தலித்துகளை ஆதிக்கச் சாதியினர் ஒதுக்கி வைத்தல், தலித்துகளின் ஒற்றுமையை ஆதிக்கச் சாதியினர் குலைத்தல், தலித் மக்களின் மானிய நிலங்களைப் பறித்து உயர்சாதியினர் விற்றல் என்ற நிலைகளில் விளக்கலாம்.

### 1. தலித்துகளுக்கு ஆதிக்கச் சாதியினர் மரியாதை வழங்காமை

மாண்புடைய மனிதன் தனது வயதிற்குரிய மரியாதையைப் பெறத் தகுதியுடையவன் ஆகிறான். ஆனால், தலித் மக்கள் வயதில் பெரியவர்களாக இருந்தாலும் உயர்சாதியினர் அவர்களிடம் வா, போ என ஒருமையாகவும், இழிவாகவும் பேசுகின்றனர். இதனை எதிர்த்தால் அடிப்பதற்கும் ஆதிக்கச் சாதியினருக்கு உரிமை உண்டு. உயர்சாதியினர் வயதில் சிறியவராக இருந்தாலும் தாழ்ந்த சாதியினர் அவர்களிடம் வாங்க, போங்க என்று மரியாதையாகத்தான் பேச வேண்டும் (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, ப.7). சமுதாயம் பார்ப்பவர்கள் ஆதிக்கச்சாதி மக்களின் எல்லாத் தேவைகளையும் நிறைவு செய்து அவர்களோடு பின்னிப்பிணைந்து வாழ்கிறார்கள். என்றாலும் அப்படிப்பட்ட அவர்களை இழிவாகப் பார்ப்பதாக வண்ணான் *சீனிவாசன்* கூறுவதாக 'குருமார்கள்' என்ற குறுநாவலில் குறிப்பு ஒன்று இடம்பெற்றிருப்பதைக் காணலாம். மேலும், ஆதிக்கச் சாதியினர் தாழ்ந்த சாதியினரான வண்ணான், பரியாரி, வெட்டியான் ஆகியோரை வார்த்தைக்கு வார்த்தை லேய், பயலே என்று அழைக்கின்றனர். இவ்வாறு தலித்துகளைச் சாதி பெயர் கூறி இழிவுபடுத்தி மரியாதையில்லாமல் நடத்துவதால் தலித் இளைஞர்கள் வேற்றூர் வேலைக்கு ஆர்வமாகச் செல்வதை 'வண்டல்', 'மேலாக்கு' சிறுகதைகள் விளக்குகின்றன. மகன் வேலை பார்க்கும் இடத்தில் தந்தை தன் சாதியைக் கூறியதால் இனி யாரும் தன்னை மதிக்கமாட்டார்கள் என்று கூறிச் சினம் கொள்ளும் மகனின் செயல் 'பொறம்போக்கிகள்' என்ற சிறுகதையில் கூறப்பட்டுள்ளது. அதோடு ஆதிக்கச் சாதியினர் தலித்துகளை மரியாதையின்றியும் இழிவாகவும் பேசி வருவதோடு அடிக்கவும் செய்வதால் தலித் இளைஞர்கள் தங்கள் கிராமங்களில் வேலை செய்ய மறுக்கின்றனர்.

### 2. தலித்துகளுக்கு ஆதிக்கச் சாதியினரின் வீட்டில் சமைத்த உணவை வழங்காமை

தலித் தொழிலாளர்கள் நாள் முழுவதும் ஆதிக்கச் சாதியினரின் வீட்டில் தொடர்ந்து வேலை செய்யும் போது, பிற ஆதிக்கச் சாதியினர் அறியாதபடி மிகவும் இரகசியமாக வெளியில் வைத்து தலித் மக்களைக் கொண்டு உணவு சமைத்து அவர்களுக்குப் பரிமாறுவதை 'நஞ்சை மனிதர்கள்' நாவல் கூறுகின்றது. இப்படி உணவு கொடுக்கும்போது தட்டு போன்ற பாத்திரங்களுக்குப் பதிலாகத் தேங்காய்ச் *சிரட்டை*, இலைகள் (சோலை சுந்தர பெருமாள், நஞ்சை மனிதர்கள், 2006, ப. 119) போன்றவைகளைப் பயன்படுத்துகின்றனர்.

### 3. தலித்துகளின் வீட்டுத் தேவைகளுக்கு ஆதிக்கச் சாதியினர் வராமை

தலித் மக்களின் வீட்டுத் தேவைகளுக்கு ஆதிக்கச் சாதியினர் வந்து சமமாக அமர மாட்டார்கள். தலித் மக்கள் சமைத்த எந்த

உணவையும் சாப்பிடமாட்டார்கள். நீரும் அருந்த மாட்டார்கள். ஆதிக்கச்சாதியைச் சார்ந்த சிவராமன் என்பவன் தன் பெற்றோரிடம், "ஒம் பண்ண ஆளு மவ சடங்குக்குக் காலையிலேயே போயி ஒக்கார்ந்துட வேண்டாம். நம்மகிட்ட வேல பாக்கிறவன். நீ பாக்க வளந்தவன். அவன் கிட்ட காசு வந்துட்டுதுன்னா சரிசமமாப் பந்தியிலே உட்கார்ந்துட வேண்டாம். பத்து ரூபாவ வச்சுக் கொடுத்துட்டு . . . போனோம் வந்தோம்னு வந்துடுங்க . . . எம் மரியாதையக் காப்பாத்துங்க . . ." (சோலை சுந்தர பெருமாள், உறங்க மறந்த கும்பகர்ணர்கள், 2000, ப. 79) என்றார். ஆனால் மகனின் சொல்லை மீறி நடந்ததால் சிவராமனுக்கும், சின்னசாமி மற்றும் தங்கத்திற்கும் இடையே வீட்டில் பிரச்சனை ஏற்பட்டது. சிவராமனின் மாமானாரும் சின்னசாதி பண்ணை ஆளின் வீட்டுப் பந்தியில் சமமாய் அமர்ந்தது தவறு என்று சிவராமனின் பெற்றோரிடம் வாதிட்டார்.

### 4. தலித்துகளை ஆதிக்கச் சாதியினர் ஒதுக்கி வைத்தல்

ஆதிக்கச் சாதியினரிடம் தலித் மக்கள் அடிமைத்தொழில் செய்பவர்களாகவும், தினக் கூலிகளாகவும் பணியாற்றுகின்றனர். மேலும், ஆதிக்கச் சாதி முதியவரைப் பராமரிப்பவராகவும் (இன்னார்க்கு இன்னார் என்று), ஆதிக்கச் சாதி நபரான மனநிலை குன்றியவரைப் பராமரிப்பவராகவும் (மானம்) தலித் மக்கள் உள்ளனர். இந்த நிலைகளில் தலித்துகளை ஒதுக்கி வைக்கக்கூடாது என்ற கருத்து வலுவூட்டப்படுகிறது. ஆனால் அனைத்து நிலைகளிலும் தலித் மக்கள் ஆதிக்கச் சாதியினரால் ஒதுக்கி வைக்கப்படுகின்றனர். அல்லது ஒதுக்கி வைக்கத் தூண்டப்படுகின்றனர். இவ்வாறு வண்ணான் சீனிவாசன், ராமு பண்டிதர், மருத்துவர் ரெத்தினம் ஆகியோர் ஒதுக்கி வைக்கப்பட்டதாக 'குருமார்கள்' என்ற குறுநாவல் குறிப்பிடுகிறது. பண்ணை ஆள் என்பதாலும், சின்னசாதி என்பதாலும் அய்யாவின் மகள் சடங்கிற்குச் சின்னசாமி செல்வதை அவர் மகன் சிவராமன் தடுக்கிறான். இதனை 'உறங்க மறந்த கும்பகர்ணர்கள்' என்ற நாவலில் காணலாம். குடித்துப் போதையில் இருந்தாலும் சின்னசாதி, பெரியசாதி என்ற வேறுபாடு இருக்க வேண்டும் என்ற கருத்துத் 'தப்பாட்டம்' நாவலில் அம்பலக்காரர்களால் வலியுறுத்தப்படுகிறது. ஒட்டர் சமுதாயத்தினரை மருத்துவமனையில் கவனிக்காத அவலநிலை 'பொதி' என்ற குறுநாவலில் காட்டப்பட்டுள்ளது. "அளானப்பட்ட ஆளுங்களே ஆஸ்பத்திரியில் என்னாப்பாடு படுவாங்க ! இந்த ஜனங்களை என்னத்தக் கவனிச்சுடப் போறாங்க? நம் நாட்டுக்குச் சுதந்திரம் வந்ததால் ஓட்டுப் போடுறதத் தவிர இந்த மக்களுக்கு என்ன கிடைச்சிருக்கு? ..." (சோலை சுந்தர பெருமாள், மனசு, 2000, ப. 140) என்று தோட்டாண்டியையும், செல்லாயியையும் மருத்துவமனையில் சேர்த்த ஓட்டுநர் பரிதாபப்படுகிறார். அவர்களைப் படுக்க வைத்திருந்த தரையின் அருகிலிருந்த கழிவறையிலிருந்து துர்நாற்றம் வீசிக் கொண்டிருந்தது என 'பொதி' என்ற குறுநாவல் வழி அறியலாம். சோமுப்பிள்ளையிடம் பள்ளு, பறை சமுதாயத்தினரை ஒதுக்கி வைக்க

முதலியார் தூண்டுகிறார். இதனால், சோமுப்பிள்ளை தலித் மக்களுக்குச் செய்ய வேண்டும் என்று நினைத்த உதவிகளை மறைத்துச் செய்ய வேண்டிய சூழ்நிலைக்கு உள்ளானார். விதை நெல் கோட்டை கட்டும் பணியில் ஈடுபட்டிருந்த தொழிலாளர்களுக்கு உணவு வழங்கும் போது சோமுப்பிள்ளை என்பவர் மாரியிடம் "எல்லா ஆளையும் அழைச்சிக்கிட்டுப் போய்த் தாவாரத்தில் வச்சுப் சோத்தத் தின்னுப்புட்டு வாங்க. இங்கச் சோறு தின்ன சேதி இரகசியமாக இருக்கணும். வெளிய போயி ஆண்ட வீட்டில சோறு ஆக்கிப் போட்டாங்கன்னு யாராச்சும் சொல்லி என் காதுக்கு வந்தால் திருக்கவாலு பிஞ்சி போயிடும்" (சோலை சுந்தர பெருமாள், நஞ்சை மனிதர்கள், 2006, ப. 72) என்று கூறியதாக நஞ்சை மனிதர்கள் என்ற நாவலில் குறிப்பு உள்ளது. இவ்வாறு சில ஆண்டைகள் பிற ஆண்டைகளுக்கு அஞ்சி தலித் மக்களை ஒதுக்கி வைக்கின்ற நிலையும் உள்ளது.

## 5. தலித்துகளின் ஒற்றுமையை ஆதிக்கச் சாதியினர் குலைத்தல்

தலித் மக்கள் ஒற்றுமையாக இருந்தால் அவர்களுக்கு எதிரான தங்களது சூழ்ச்சிகள் வெற்றி பெறாது என்பதை உணர்ந்த ஆதிக்கச் சாதிக்காரர்கள் சூழ்ச்சிகள் மூலம் தலித் மக்களின் ஒற்றுமையைக் குலைக்கின்றனர். பெருந்திணை நாவலில் சுட்டப்படும் தலித்துகள் கம்யூனிஸ்ட் கட்சியின் மூலம் ஒன்றுபட்டிருந்தனர். இதை அறிந்த பண்ணை மாகாணங்கள் மற்றும் ஆளும் கட்சியினர் இந்த ஒற்றுமையை நீடிக்க விடவில்லை. "அதிகாரிகளை வச்சி 'எங்க கட்சிக் கொடிய உங்க தெருவில ஏத்தி, எங்ககிட்ட அனுசரணையா நில்லுங்க, கெவுருமெண்ட் கொடுக்கிற சலுகைகளைத் தருகிறோம் என்று ஆசை காட்டினர்" (சோலை சுந்தர பெருமாள், பெருந்திணை, 2005, பக். 26, 27). பள்ளர், பறையர், சக்கிலியர் இன மக்களை ஒன்று சேரவிடாமல் மூப்பனார் மற்றும் அம்பலக்காரர்கள் தடுப்பதாக 'தப்பாட்டம்' நாவல் குறிப்பிட்டுள்ளது. ஆதிக்கச் சாதிக்காரர்கள் தங்களுக்கு ஆதரவு தரும் தலித் மக்களுக்குச் சில சலுகைகளும், பண உதவிகளும் செய்கின்றனர். இவைகளை நம்பியும் சில தலித்துகள் ஏமாறுகின்றனர். இவ்வாறு, தலித் மக்கள் ஆதிக்கச் சாதியினரால் புறக்கணிக்கப்படும் நிலை மனித நேயமிக்கவர்களால் கடிந்து கொள்ளப்பட வேண்டியதாகும்.

## 6. தலித் மக்களின் மானிய நிலங்களைப் பறித்து உயர்சாதியினர் விற்றல்

ஊரில் தொண்டு செய்யும் மருத்துவர் சாதியினருக்கு வருஷக்கூலி, களக்குருணி மற்றும் அம்பட்டன் காணி நிலவருவாய் ஆகியன உள்ளன. இதற்காக ஊரிலுள்ள செல்வாக்குப் பெற்ற பண்ணைகள் நிலத்தை மானியமாக எழுதி வைத்துள்ளனர். அவ்வாறு காத்தையாப் பிள்ளையின் மூதாதையர் எழுதி வைத்த சமுதாய

நிலத்தைக் குப்புசாமி விற்றான். எனவே அவன் மனைவி சாவித்திரிக்கு மருந்து கொடுக்கும் போது மருத்துவச்சியான பட்டக்கா என்பவள் அதற்கான பணத்தை வாங்கினாள் (சோலை சுந்தர பெருமாள், நஞ்சை மனிதர்கள், 2006, பக். 208, 209). மேலும் பெருந்திணை நாவல் வேளாளருக்கான சமுதாய நிலம் குறித்தச் செய்தியினைக் "கொசவன் காணி என்று அஞ்சுமா நஞ்சையும், குசவன் தெடல் என்று இருநூறு குழியும் குடியிருக்கிற இந்த மனையையும் கொடுத்து வச்சிருக்கு" (சோலை சுந்தர பெருமாள், பெருந்திணை, 2005, ப.101) என்று தந்துள்ளது. இத்தகையச் சமுதாய நிலங்களின் பலன்களைப் பெற்றுக்கொண்டு சமுதாயத்திற்கு வேண்டிய கடமைகளை ஆற்ற கீழ்ச்சாதி மக்கள் வற்புறுத்தப்படு கின்றனர். மேலும், வெட்டியான், தலையாரி, பரியாரி, வண்ணான் ஆகியோருக்கும் காணியாட்சி நிலங்கள் உள்ளன. சமுதாயம் பார்க்கத் தவறினால் நிலத்தின் பயன்கள் அவர்களைச் சென்றடைவதில்லை. சமுதாயம் பார்க்கும் நிலையில் தலித் மக்கள் தவறாமல் செயல் பட்டாலும் நிலத்தை எழுதி வைத்தவரின் வாரிசுகள் தங்களுக்கு ஏற்படும் தேவைகளைப் பொறுத்து நிலத்தை விற்கவும் உரிமைப் பெற்றுள்ளதை 'நஞ்சை மனிதர்கள்' என்ற நாவலின் வழி அறியலாம்.

### 6. தீண்டத்தகாதவர்களாகக் கருதப்படுதல்

சமுதாயம், பொருளாதாரம், அரசியல், சமயம் மற்றும் அவை தொடர்பான அனைத்து நிகழ்வுகளிலும் தலித்துகள் பின்தள்ளப்படுகிறார்கள் (பார்க்க. L.Stanislaus, The Liberative Mission of the Church Among Dalit Christians, 1999, p. 42). உரிமை கொண்டாட முடியாத நிலையில் தலித் மக்களை நிறுத்துவது தீண்டாமை ஆகும். மேலும், சாதி அடிப்படையிலான சமுதாயத்தின் முக்கியமான அங்கமாகத் தீண்டாமை திகழ்கிறது. தீண்டாமை என்பதற்குச் "சாதி அமைப்பில் சில சாதியினர் தொட்டால் தீட்டு ஏற்பட்டுவிடும் என்னும் சமூக விரோதப் போக்கு" (எஸ். ராமகிருஷ்ணன், க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, 2008, ப. 733) என்று க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி விளக்கம் கூறுவது கவனத்தில் கொள்ளத்தக்கது. இத்தகைய சமூக விரோதப் போக்காகிய தீண்டாமையால் தலித்துகள் வாழ்வில் ஏற்படும் சிக்கல்களைத் தெய்வம் சேரியில் வருவதை ஆதிக்கச் சாதியினர் தடுத்தல், இந்துக் கோவில் விழாக்களில் அனுமதியில்லாமை, கிறிஸ்தவக் கோவில்களில் சாதி நடைமுறைக் காணப்படுதல், கடைகளில் ஆதிக்கச் சாதியினருக்கு இடங்கொடுத்து ஒதுங்கி நிற்கச் செய்தல், இடைவெளியைக் கடைபிடித்தல், முடிவெட்டும் இடத்தில் சாதிப்பாகுபாடு காணப்படுதல் என்ற அடிப்படைகளில் விளக்கலாம்.

### 1. தெய்வம் சேரியில் வருவதை ஆதிக்கச் சாதியினர் தடுத்தல்

கோவில் தேர் சேரியில் வருவதற்கும், சேரி மக்கள் அதனை வணங்கவும் ஆதிக்கச் சாதியினர் எதிர்ப்புத் தெரிவிக்கின்றனர்.

இதற்குரிய காரணமாக "உங்கத் தெரு குறுகலாகவும், சகதியாகவும் இருக்கும். அலங்காரத்தோட போற அம்மன் சகதியில் சிக்கி அழுக்காயிடுவா. அதனால் தான் உங்கள் தெருமுனையில் அம்மனைக் கொண்டு வந்து நிறுத்தி விடுகிறோம்" (சோலை சுந்தர பெருமாள், பெருந்திணை, 2005, ப.28) என்று கூறி வருகின்றனர். குப்பான் சாம்பான் என்பவன் சிவபெருமானைத் தொழுததால் தண்டனை பெறுவதற்காகத் தேசப் பிரதானிகளால் இழுத்து வரப்பட்டான். சமுதாயக் கட்டுமானங்களால் நீசனான அவனுக்குப் பேச உரிமையில்லாததால் பணிவுடன் நின்றதாக 'அடிக்கல்' என்னும் குறுநாவல் குறிப்பிட்டுள்ளது. மேலும் சேரியில் தெய்வம் வருவதை ஆதிக்கச் சாதியினர் தடுப்பதை 'இலையுதிர்காலம்' என்ற சிறுகதையும் குறிப்பிட்டுள்ளது.

## 2. இந்துக் கோவில் விழாக்களில் அனுமதியில்லாமை

கோவிலில் வழிபடவும், கோவில் விழாக்களில் பங்கெடுக்கவும், தலித் மக்களுக்கு அனுமதி மறுக்கப்படுகிறது. அம்பலக்காரரான காத்தமுத்துச் சேர்வையின் தலைமையில் காமாட்சிக் கோவில் திருவிழா நடந்தது. அப்போது பறைத்தெரு, பள்ளத்தெரு, சக்கிலியத்தெரு சனங்கள் சாமி பொறப்பாடு செய்கிறதைப் பார்க்க ஆசைப்பட்டுக் குளத்து மேலக்கரையிலும், முக்கூட்டுலயும் நின்று வேடிக்கைப் பார்த்தார்கள் (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, ப. 120). இந்தச் சூழ்நிலையைச் சாதகமாகப் பயன்படுத்த நினைத்த சிலரின் திட்டமிட்ட சதியால் சக்கிலியத்தெரு குடிசைகள் எரிந்தன. இதற்கு 'ஆயா தீயாகப் பொங்கி எழுந்து தீட்டை அருகில் அண்டவிடாமல் தடுத்தாள்' என்று காரணம் கூறினர். இவ்வாறு இந்துக் கோவில் விழாக்களில் தலித்துகளை அனுமதிக்காமல் விலக்கி வைக்கும் வழக்கம் இருப்பதைத் 'தப்பாட்டம்' நாவல் குறிப்பிட்டுள்ளது.

## 3. கிறிஸ்தவக் கோவில்களில் சாதி நடைமுறை காணப்படுதல்

கிறிஸ்தவம் சாதி அடிப்படைக்கு அப்பாற்பட்ட சமயமாக இருந்தாலும் இந்தியாவில் உள்ள கிறிஸ்தவக் கோவில்களில் சாதி நடைமுறைக் காணப்படுவதைத் 'தப்பாட்டம்' நாவல் பதிவு செய்துள்ளது. திருக்கனூர் பட்டியிலில் ஸ்டீபன் சந்தான உடையார் என்ற ஆண்டையிடம் அடிமை வேலை செய்யும் காளியப்பனுக்கு விசாலம் என்பவள் வாழக்கைப் பட்டாள். அந்தச் சூழ்நிலையில் அவர்கள் கிறிஸ்தவர்களாக மதம் மாற எண்ணினர். மாதா கோவிலில் தங்களைக் கிறிஸ்தவர்கள் என உறுதி செய்ய காளியப்பனும் விசாலமும் ஆலயத்திற்குச் சென்றனர். அந்த ஆலயம் சிலுவை வடிவில் அமைந்திருந்தது. அதன் நீளப்பகுதியில் மேசை, பலகைகள் போடப்பட்டிருந்தன. அதில் உடையார் சாதிக்காரர்கள் அமர்ந்திருந்தனர். இரண்டு பக்கவாட்டுப் பகுதிகளில் வடப்பகுதியில் அம்பலக்காரச் சாதிகளும், தென்பகுதியில் பறை

சாதிக்காரர்களும் அமர்ந்திருந்தனர் (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, பக். 162, 163) என்று 'தப்பாட்டம்' நாவல் குறிப்பிட்டுள்ளது. இவ்வாறு, இந்தக் கிறிஸ்தவக் கோவிலில் சாதி நடைமுறை கடைபிடிக்கப்படுவதால் ஒவ்வொரு சாதியினரும் ஒவ்வொரு இடத்தில் அமர்ந்திருக்கும் சூழ்நிலை ஏற்பட்டுள்ளது.

### 4. கடைகளில் ஆதிக்கச் சாதியினருக்கு இடம் கொடுத்து ஒதுங்கி நிற்கச் செய்தல்

தலித் மக்கள் பலசரக்குக் கடை உட்பட அனைத்துக் கடைகளிலும் ஆதிக்கச் சாதியினருக்கு இடம் விட்டு ஒதுங்கி, மறைந்து நின்று பொருட்களை வாங்க வேண்டும். மதுக்கன்பகடை தனக்கும் கோவிந்தராசுவுக்கும் பீடி வாங்க கடைக்குச் சென்றார். கடையில் நின்ற அம்பலக்காரர்களில் ஒருவர் "... குடியானத்தெருக்காரங்க நிக்கிறாங் களேன்னு மட்டு மரியாதை தெரியுதா? இடுச்சிக்கிட்டு நிக்கிறதப் பாரு ... நானுந்தான் குடிச்சிருக்கேன். குடிச்சிட்டு வந்துட்டா சின்ன சாதி, பெரிய சாதின்னு இல்லாமயாப் போயிடும்?" (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, ப.20) என்றார். இதைக் கேட்ட இளம் வயதினனான கோவிந்த ராசுவிற்குச் சினம் வந்தாலும் ஒன்றும் சொல்லவும், செய்யவும் இயலாது அந்த இடத்தை விட்டுச் சென்றதாகத் 'தப்பாட்டம்' நாவல் குறிப்பிட்டுள்ளது.

### 5. இடைவெளியைக் கடைபிடித்தல்

ஆதனூர் பிரமதேய பறையர் பண்ணை அடிமைகள் பிரமதேய பிராமணர்களுக்கு முன் நின்று பேச வேண்டிய சூழ்நிலைகளில் நூறு முழம் இடைவெளியையும், பிரமதேய சூத்திர அடிமைகளுக்கு முன் நின்று பேச வேண்டிய சூழ்நிலைகளில் பத்து முழம் இடைவெளியையும் கடை பிடிக்க வேண்டும் (சோலை சுந்தர பெருமாள், மரக்கால், 2007, பக். 22, 23) என்ற கட்டுப்பாட்டுடன் வாழ்ந்தனர். இந்தச் சூழ்நிலையில் நந்தன் என்பவன் தில்லை நடராஜ தரிசனம் காணச் சென்றபோது புறவாயில் காவலன் தடுத்தான். நந்தன் உடனே காவலனின் காலைப் பிடித்துக் கெஞ்சினான். அந்த வேளையில் காவலன் "நீசா ! என்னைத் தொட்டுத் தீட்டுப்பட வைத்து விட்டாயே ! சண்டாளா ! நீசப் பறையா !' என்று கோபத்தில் உதைத்துத் தள்ளினான்" (சோலை சுந்தர பெருமாள், மரக்கால், 2007, ப. 243). இவ்வாறு தலித் மக்கள் ஆதிக்கச் சாதியினரிடம் இடைவெளியைக் கடைபிடித்து வாழ்வதோடு, மாண்புடைய மனிதனுக்கான எந்த மரியாதையையும் பெறத் தகுதியில்லாத வாழ்க்கையையும் வாழ்வதை அறிந்து கொள்ளலாம்.

### 6. முடிவெட்டும் இடத்தில் சாதிப்பாகுபாடு காணப்படுதல்

- ஊரிலுள்ள நாவிதர் ஆதிக்கச் சாதியினருக்கு மட்டும்தான் முடிவெட்டுவார். ஆனால், தலித் மக்கள் ஊரின் ஒதுக்குப்புறத்தில் சென்று

முடிவெட்ட வேண்டும் என்பது ஆதிக்கச் சாதியினர் வைத்த எழுதப்படாத சட்டமாக நடைமுறைப்படுத்தப்பட்டு வருகிறது. இந்தச் செய்தி 'தப்பாட்டம்' நாவலிலும் கூறப்பட்டுள்ளது. மேலும் பாஸ்கர் என்பவர் தங்கராசு மூப்பனாரிடம் "நாம மயிரு வெட்டிக்கிற எடத்தில அவனுங்களை விடுறதில்லை" (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, ப.238) என்றார். அதோடு "நீசன் உடம்புல, கை விரல் நீளத்துக்கு மேல மயிரு இருக்கக் கூடாது. இது ராசாங்கக் கட்டளையின் சாஸ்திரம். கறாரான நடைமுறை. இதுல நீசனுங்க மீறிட முடியாது" (சோலை சுந்தர பெருமாள், குருமார்கள், 2006, ப.89) என்று அடிக்கல் என்ற குறுநாவல் குறிப்பிட்டுள்ளது. இதனால் குப்பான் சாம்பான் தன் முடியைத் தானே அறுக்கும் கத்தியைப் பயன்படுத்தினான். உத்தண்டியும் ஆறுமுகமும் காட்டாற்றுக் கரையில் இருக்கும் அம்பட்டன் கொட்டகைக்குச் சென்று முடி வெட்டினர் என்று 'பெருந்திணை' என்ற நாவல் குறிப்பிட்டுள்ளது. 'மரக்கால்' என்ற நாவல் ஆண் பறையர் அடிமைகளுக்கு நாலு விரற்கடை அளவு நீளத்திற்கு மேல் தலை மற்றும் முகத்தில் முடி இருக்கக்கூடாது என்று குறிப்பிட்டுள்ளது. அதோடு, பறையர்களுக்கு முடிவெட்டும் சிறுகாணி அம்பட்டன் பண்ணை வேலைகளை முடித்த பின்பு மாலை நேரத்தில் காட்டாற்றுக் கரையிலுள்ள ஆலமர வேரில் சென்று உட்கார வேண்டும். வெட்டாத கத்திரியுடன் அம்பட்டன் குறைவான வெளிச்சத்தில் பறையர் அடிமைகளின் தலைமுடியுடன் போராட வேண்டும். கத்தரி முடியை வெட்டும்போது சரியாக அறாததால் ஏற்படும் வலியின் காரணமாக அவர்களுக்கு முடியின் மீது வெறுப்பு ஏற்பட்டது (சோலை சுந்தர பெருமாள், மரக்கால், 2007, பக். 30, 31). மேலும் சிறுகாணி அம்பட்டன் பறையர்களிடையே பயன்படுத்தும் கத்தரியையும், கத்தியையும் கொல்லன் காரை இலைத் தண்ணீரில் ஊறப்போட்ட பின்னர்தான் உலைக்கு எடுப்பான். இவ்வாறு தீண்டாமை மிகக் கடுமையான நிலையில் வழக்கில் உள்ளதை 'மரக்கால்' நாவல் குறிப்பிடுகிறது. தீண்டாமை நாகரீகச் சமுதாயத்தின் அவலம் ஆகும். எனவே, தீண்டாமைக் கொடுமை களையப்பட வேண்டும்.

### 7. வன்முறைக்கு உட்படுத்துதல்

சாதி ஏற்றத்தாழ்வு சமத்துவமின்மையைத் தோற்றுவிக்கிறது. சமத்துவமின்மை பாகுபாட்டை நிலைப்படுத்துகிறது. பாகுபாட்டின் விளைவாக ஆதிக்கச் சாதியினர் தங்களுக்கு விருப்பமில்லாத தலித் மக்களை வன்முறைக்கு உட்படுத்துகின்றனர். மேலும், வறட்சியும் வறுமையும் போதாது என்று, சேரிகளில் வன்கொடுமைகளின் வீரியமும் அதிகரித்து விட்டது (தமிழ்ப்பாவை, கே.எஸ். முத்து, தலித்துகளும் வன்கொடுமைகளும், 2005, ப. 26) என்று கூறும் அளவிற்கு நிலைமை மோசம் அடைந்துள்ளது. இவ்வாறு தலித் சமுதாயத்தினருக்கு எதிராக நிகழ்த்தப்படும் வன்முறைச் செயல்களை அடித்தல், சித்ரவதை செய்தல், கொலை செய்தல் என்ற அடிப்படைகளில் விளக்கலாம்.

**1. அடித்தல்**

ஆதிக்கச் சாதியினர் தலித்துகளுக்கு எதிராக மேற்கொள்ளும் வன்முறைகளில் ஒன்றான அடித்தலை வெறுங்கையால் அடித்தல், புளியங்கம்பால் அடித்தல், கசையால் அடித்தல், மரக்காலால் முகத்தை மூடி அடித்தல் என வகைப்படுத்தலாம்.

**1. வெறுங்கையால் அடித்தல்**

தலித்துகளிடம் ஆதிக்கச் சாதியினர் ஏதாவது குறைகண்டால் உடனே கைநீட்டி அடிக்கும் நிலை உள்ளது. மூர்த்தி என்ற வண்ணான் ஒரு நாள் சுப்பிரமணி என்ற கூலிக்காரனுக்கு இரவலாக ஒரு சோடி துணியைக் கொடுத்தான். அந்தத் துணிக்குச் சொந்தக்காரனான மதிவாணன் என்பவன் இதை அறிந்து மூர்த்தி என்ற வண்ணானை அடித்தான். அப்போது மூர்த்தி "நீங்க அடிக்காம யாருங்க என்னை அடிக்க முடியும்?" (சோலை சுந்தர பெருமாள், மடையான்களும் சில காடைகளும், 2006, ப.180) என்று கூறி அடியைத் தாங்கினான் என்று 'பூக்கும் காலம்' என்ற சிறுகதை குறிப்பிட்டுள்ளது.

**2. புளியங்கம்பால் அடித்தல்**

ஆதிக்கச் சாதியினருக்கு விருப்பமில்லாத செயல்களை தலித்துகள் மேற்கொண்டால் அவர்களைப் புளியங்கம்பால் அடிக்கும் வழக்கம் நடைமுறையில் உள்ளது. நந்தன் என்பவன் சிவமந்திரங்களை ஓதியதால் நஞ்சைக்கண்காணி ராமு மழவராயன் என்பவன் புளியங்கம்பால் நந்தனையும் அவன் கூட்டாளிகள் இருவரையும் அடித்தான். அவ்வாறு அவன் "புளியன் விளாரால் நந்தனை நிறுத்திப் புரட்டிப் புரட்டி அவன் பலம் கொண்ட மட்டும் அடிக்கும் போது, 'சிவ சிவ', 'சிவ சிவ' என்று கையைக் கட்டிக்கொண்டு கத்திக் கதறவும், அவன் கூட்டாளிகள் இருவரும் 'ஆண்டே! ஆண்டே! இனிமே செய்யமாட்டோம் ஆண்டே !' என்று கதறி, அந்த அடிகளைத் தங்கள் மேல் வாங்கிக் கொள்ள, மூன்று பேரையும் சேர்த்துப் புரட்டிப் புரட்டி அடித்தான். அவர்கள் மேற்கொண்டு அடி தாங்க முடியாமல் கீழே விழுந்து புரண்டார்கள்" (சோலை சுந்தர பெருமாள், மரக்கால், 2007, ப.51). இவ்வாறு நந்தனும் அவன் கூட்டாளிகளும் அடிகள் வாங்கினதால் அந்த இடங்கள் சின்னச் சின்னப் புடைப்புகள் போல காணப்பட்டன. இவ்வாறு ஆதனூர் பிரமதேயத்தில் ஏதேனும் ஒரு கண்காணியால் ஏதேனும் ஓர் இடத்தில் ஒரு நாளில் ஒருவராவது இது போன்று அடிவாங்குகின்றனர்.

**3. கசையால் அடித்தல்**

தலித்துகள் ஏதாவது சூழ்நிலையில் ஆதிக்கச் சாதியினரின் விருப்பத்திற்கு ஏற்றபடி செயல்படாமல் இருந்தாலோ அல்லது ஆதிக்கச் சாதியினரை எதிர்த்தாலோ அவர்களைக் கசையால் அடிக்கும் வழக்கம்

உள்ளது. செம்மங்குடி பிரமதேய பறை பண்ணை அடிமையான மருதன் வரப்பை வேகமாகச் சீர் செய்யாததால் நஞ்சைக் கண்காணி அவனுக்குச் சவுக்கடி கொடுத்தான். உடனே மருதன் மண்வெட்டியால் கண்காணியைத் தாக்கினான். அதனால் "மருதனைக் கண்காணி மரத்தில் கட்டிச் சனங்க முன்னால் நிப்பாட்டி கோமணத்தை அவுத்துவிட்டு அதுக்குள்ள மிளகாய்ப்பொடி திணிச்சுக் கசையடிக் கொடுத்தான்" (சோலை சுந்தர பெருமாள், மரக்கால், 2007, ப. 216) என்று மரக்கால் நாவல் குறிப்பிட்டுள்ளது.

### 4. மரக்காலால் முகத்தை மூடி அடித்தல்

குற்றவாளியாகக் கருதப்படும் தலித்தின் தலையில் மரக்காலைக் கவிழ்த்து மூடி வைத்துவிட்டு யார் அடிக்கிறார்கள் என்று தெரியாதபடி அடிக்கும் வழக்கத்தையும் ஆதிக்கச் சாதியினர் நடைமுறையாகக் கொண்டுள்ளனர். எனவே, கோவில் பிரச்சனையில் ஆதிக்கச் சாதிக்காரர்களை எதிர்த்ததால் குண்டுகண்ணுவின் மேல் திருட்டுப் பட்டம் சுமத்தி, அவனை மாரியம்மன் கோவிலில் கட்டிப்போட்டுத் தலையில் மரக்காலைக் கவிழ்த்து வைத்துவிட்டு அடிப்பது யார் என்று தெரியாமல் அடித்துவிட்டுக் காவலர் வாகனத்தில் தூக்கிப் போட்டு மூன்று நாட்கள் காவலர் கட்டுப்பாட்டில் வைத்திருந்தனர் (சோலை சுந்தர பெருமாள், மடையான்களும் சில காடைகளும், 2006, பக். 142, 143). இவ்வாறு கீழ்ச்சாதி மக்களை அடித்து, அச்சப்படுத்தி ஆதிக்கச் சாதியினருக்கு எதிராக ஒருவரும் திரளாமல் பார்த்துக் கொள்வதில் ஆதிக்கச் சாதியினர் கவனமாக உள்ளதை இந்த நிகழ்வுகள் குறிப்பிடுகின்றன.

### 2. சித்ரவதை செய்தல்

ஆதிக்கச் சாதியினர் கீழ்ச்சாதி மக்களை உடல் அளவிலும், மன அளவிலும் தாக்குகின்றனர். "சித்ரவதை என்பது ஒருவர் இன்னொரு நபரின் மீது உடல் ரீதியாகவோ அல்லது மனரீதியாகவோ கடுமையான வலியையோ அல்லது கஷ்டத்தையோ உள்நோக்கத்துடன் ஏற்படுத்துவதாகும். மேலும் சித்ரவதை என்பது மிகையானதும் திட்டமிட்டதுமான நிலையில் குரூரமாகவும் மனிதத் தன்மையற்ற நிலையிலும் இழிவான முறையிலும் பிறரை நடத்துவதோ அல்லது தண்டனை கொடுத்தலோ ஆகும் (ஜோதிபாசு, சித்ரவதை-ஓர் முழுமையான பார்வை, 2003, ப.1). இவ்வாறு தலித்துகளுக்கு எதிராக நடைபெற்று வரும் சித்ரவதைகளாகச் சோலை சுந்தர பெருமாள் குறிப்பிடுவனவற்றைக் களிக்கம் போடுதல், கொதிக்கும் எண்ணெயில் அமிழ்த்துதல், வெயிலில் கட்டிப்போடுதல் என வகைப்படுத்தி விளக்கலாம்.

## 1. களிக்கம் போடுதல்

ஆதிக்கச் சாதியினர் தங்களுக்குப் பிடிக்காத தலித் மக்களைத் தூக்கி வந்து நிற்கச் செய்து காவடியில் கெண்டைக் காலை விட்டுச் சேர்த்துப் பூட்டிச் சாத்தூர் மிளகாயை அஃரத்து வரச்சொல்லி உடம்பில் உள்ள துவார வாசல்கள் வழியே உள்ளேச் செலுத்திக் களிக்கம் போடும் கொடிய நடைமுறையையும் தேவைக்கேற்றபடி செய்து வருகின்றனர் (சோலை சுந்தர பெருமாள், செந்நெல், 2003, ப.59) என்று 'செந்நெல்' நாவல் குறிப்பிடுகிறது. கோபால கிருஷ்ண நாயுடுவின் சித்தப்பன் தனது பண்ணை அடிமையான பெரியானின் அக்காள் மகள் மருதாயியைப் பலாத்காரம் செய்ய முயன்றான். அதற்கு அவள் உடன்படவில்லை. அதற்குத் தண்டனையாக அவளுக்குக் களிக்கம் போட்டனர் என்ற செய்தி கூறப்பட்டுள்ளது. இதற்காக மருதாயியை “மாட்டுக் கொட்டில் தாழ்வாரத்திலுள்ள தூணில் கட்டி வைத்துக் துணியெல்லாம் உருவி எடுத்துவிட்டு ஊரக்கூட்டிக் குழந்த கழுத்தில் கெடந்த தங்கச் சங்கிலியைக் கழட்டிவிட்டாள் என்று திருட்டுப்பட்டம் கட்டி 'களிக்கம்' போட்டனர்" (சோலை சுந்தர பெருமாள், செந்நெல், 2003, ப.73). தலித் சமுதாயத்திலுள்ள பெண்கள் ஆதிக்கச் சாதியினரால் மானபங்கப் படுத்தப் படுகின்றனர். இதற்கு எதிர்ப்புத் தெரிவித்தால் மேற்கூறியது போன்று பல இன்னல்களுக்கு உள்ளாகின்றனர்.

## 2. கொதிக்கும் எண்ணெயில் அமிழ்த்துதல்

தலித்துகளைத் தண்டிக்கும் நோக்கில் உடல் உறுப்புகளைக் கொதிக்கும் எண்ணெயில் அமிழ்த்தும் வழக்கமும் உள்ளது. செம்மங்குடி பிரமதேய பறைபண்ணை அடிமைகள் கடும் வெயிலில் வேலை செய்து கெண்டிருக்கும் போது தாகம் ஏற்பட்டுக் கோவில் குளத்தில் இறங்கி நீரை அள்ளிக் குடித்தனர். இதற்காக நஞ்சைக் கண்காணி மூலம் புளியங்கம்பால் தண்டனை பெற்றனர். இதைக் கண்ட மருதன் என்பவன் நஞ்சைக் கண்காணியின் கையிலிருந்த புளியங்கம்பைப் பிடித்து இழுத்து அவனைக் கீழேத் தள்ளினான். இதற்குத் தண்டனையாக “மருதனின் இரண்டு கையையும் கட்டி இழுத்துக் கொண்டு போய் கட்டைவிரல் ரெண்டையும் கொதிக்கிற எண்ணெயில அமுக்கினர்" (சோலை சுந்தர பெருமாள், மரக்கால், 2007, ப.216) என்று 'மரக்கால்' நாவலில் செய்தி உள்ளது.

## 3. வெயிலில் கட்டிப்போடுதல்

தலித்துகளைத் தண்டிக்கும் வழிமுறைகளில் ஒன்றாக வெயிலில் கட்டிப்போடும் வழக்கமும் உள்ளது. செம்மங்குடி பிரமதேய அதிபர் சீனிவாசய்யர் தாமரைக் குளத்தில் மூழ்கி எழும்போது மந்திரம் கூறினதைப் பார்த்துச் சிரித்த மருதன் என்பவன் புளியங் கம்பால் சாமு கார்வாரியிட மிருந்து அடி வாங்கினான். அப்போது அவன் திமிறினதால் அவனையும்

அவன் தந்தையையும் "இடுப்புத்துண்டை அவிழ்த்துவிட்டு உடம்பெல்லாம் ஈச்ச எண்ணெயைத் தடவச் செய்து கைகளையும் கால்களையும் பின்பக்கமாகக் கட்டிக் கொளுத்தும் வெயிலில் போட்டபோது அவர்கள் எரிச்சல் தாங்கமுடியாமல் கத்திக்கத்தி முனுகினர்" (சோலை சுந்தர பெருமாள், மரக்கால், 2007, ப.238) என்று 'மரக்கால்' நாவல் குறிப்பிடுகிறது.

### 3. கொலை செய்தல்

பண்ணையார்களும் அவர்களது ஏவலர்களும் தங்களுக்குக் கட்டுப்பட மறுக்கும் தலித்துகளான அடிமைகளைக் கொலை செய்தும் தங்கள் கோபத்தைத் தணித்துக் கொள்கின்றனர். இதற்காக அவர்கள் எரித்துக் கொலை செய்தல், களிக்கம் போட்டுக் கொலை செய்தல், அடியாட்களின் துணையுடன் கொலை செய்தல், அடித்துக் கொலை செய்தல் போன்ற வழிமுறைகளை மேற்கொள்கின்றனர்.

#### 1. எரித்துக் கொலை செய்தல்

தலித்துகளுக்கு ஆதிக்கச் சாதியினர் வழங்கும் தண்டனைகளில் மிகக் கொடூரமானதாக எரித்துக் கொலை செய்தல் உள்ளது. அடிமை ஒருவன் சிறிது உளுந்தைத் திருடி எடுத்ததற்குத் தண்டனையாக "மகளை அப்பனை விட்டும் தாயை மகனை விட்டும் பண்ணைக் களத்தில் புணரச் சொல்லி சவுக்கால் அடி கொடுக்கும் போது அப்பனும் மகனும் கோப ஆவேசத்தில் தங்கசாமி மூப்பனாரோட அப்பனைக் கடித்துக் குதறினர். அதற்காகப் புது ஆத்தங்கரையில் இருக்கும் சுண்ணாம்புக் காளவாயில் அந்தக் குடும்பத்தையே தூக்கிபோட்டு எரித்துவிட்டு, அந்தக் குடும்பம் ஊரைவிட்டே ஓடிப்போயிட்டதாகச் செய்தி பரப்பினர்" (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, பக். 63, 64) என்று தப்பாட்டம் நாவல் குறிப்பிட்டுள்ளது. மேலும் இந்தச் செய்தி முனியாண்டியின் ஊரிலுள்ளவர்களுக்குத் தெரிந்தாலும் அவர்களால் எதுவும் பேசவும், செய்யவும் இயலவில்லை என்றும் அந்த நாவலின் மூலம் அறிய முடிகிறது. "நந்தனின் தாத்தா திருட்டுத்தனமாகப் பெரியாச்சிக்குக் கோசாலை பசுமாட்டைக் கறந்து பால் பள்ளையம் போட்டார். இதனை அறிந்த கோயில் அதிபர்கள் அவனை . . . ஒக்கூர் சுண்ணாம்புக் காளவாயில் தள்ளி எரித்தனர்" (சோலை சுந்தர பெருமாள், மரக்கால், 2007, ப.36) என்ற செய்தியை 'மரக்கால்' நாவல் கூறுகிறது.

#### 2. களிக்கம் போட்டுக் கொலை செய்தல்

தலித்துகளைக் களிக்கம் போட்டுக் கொல்லுவதற்கும் ஆதிக்கச் சாதியினர் தயங்காமல் உள்ளனர். குளிக்கரை முதலியாரின் அடிமை ஒருவன் தனது எதிர் பண்ணைக்கு ஆதரவாக இருந்தான் எனக்கூறி முதலியார் தன் அடிமையைக் களிக்கம் போட்டுக் கொன்றார் (சோலை சுந்தர பெருமாள், பெருந்திணை, 2005, ப. 114) என்று 'பெருந்திணை' நாவல் குறிப்பிட்டுள்ளது.

### 3. அடியாட்களின் துணையுடன் கொலை செய்தல்

தலித் மக்கள் எப்போதும் பண்ணை முதலாளிகளுக்குக் கட்டுப்பட்டு நடக்க வேண்டும். சிறிதளவு மிரண்டால் அவர்களை அடியாட்களை வைத்துக் கொலை செய்து புதைக்கும் செய்தியைச் 'செந்நெல்' நாவல் "பண்ணை முதலாளிமாருங்க கையாட்களை அனுப்பி எத்தனையோ உசுர வாங்கியிருக்காங்க. ரெண்டாம் பேரு தெரியாம சாக்கிலக்கட்டிக் குழியத் தோண்டிப் போட்டுப் புதைச்சிருக்கிறதைப் பெரியான் கண்ணாலப் பாத்திருக்கான்" (சோலை சுந்தர பெருமாள், செந்நெல், 2003, பக். 72, 73) என்று பதிவு செய்துள்ளது.

### 4. அடித்துக் கொலை செய்தல்

தலித்துகளை அடித்துக் கொல்லும் வழக்கத்தைத் தேவைப்படும் போதெல்லாம் ஆதிக்கச் சாதியினர் மேற்கொள்கின்றனர். நஞ்சைக் கண்காணி ராமுமழவராயன் ஓர் அடிமையை அடித்துக் கொன்றான் (சோலை சுந்தர பெருமாள், மரக்கால், 2007, ப. 53) என்ற செய்தி 'மரக்கால்' நாவலில் உள்ளது.

### 8. தலித் பெண்களுக்கு எதிராக வன்முறை செய்தல்

தலித் சமுதாயத்தின் ஒரு பகுதியினராகிய பெண்களின் மீது பல வன்முறைச் செயல்கள் நடந்து வருகின்றன. பெண்ணாகப் பிறந்த காரணத்தினால் இரண்டாம் தர வாழ்க்கை நிலையை மேற்கொள்ளுமாறு வற்புறுத்தப்படும் சமுதாயச் சூழலில், தலித் பெண்களின் நிலை மிகவும் சிக்கல் வாய்ந்ததாக உள்ளது. பெண்கள் சமத்துவத்திற்காகவும் சமூக நீதிக்காகவும் போராடினாலும் அவர்களின் நிலை சமுதாயத்தில் இரண்டாம் இடத்தில்தான் இருக்கிறது (சி.சேம்ஜி, பெண்களும் இயக்கங்களும், 2002, ப.51). இந்தப் பின்னணியில் தலித் பெண்களுக்கு எதிரான வன்முறைச் செயல்களை ஒடுக்குதல், தீயவார்த்தைகளால் காயப்படுத்துதல், கற்பழித்தல், கற்பழித்துக் கொலை செய்தல் எனப்பாகுபடுத்தலாம்.

### 1. ஒடுக்குதல்

தலித் பெண்களின் செயல்பாட்டைத் தடுக்க ஆதிக்கச் சாதியினர் ஒடுக்குதலையும் வழிமுறையாகக் கொண்டுள்ளனர். இதன்படி எல்லம்மா என்பவள் ஆதிக்கச் சாதியினரால் ஒடுக்கப்பட்டாள். வாழ்வில் தனித்து விடப்பட்ட எல்லம்மா இரவில் வன்புணர்ச்சிக்கு உட்பட்டபோது அதை எதிர்த்து வெற்றி பெற்றாள். மேலும் களத்து மேட்டுத் திருட்டிற்குச் சாட்சி கூறியதால் அவள் கணவனான வீரப்பனை ஊர்த்தலைவர் தூண்டிவிட்டு அவளது குடும்ப வாழ்வையும் பிரித்துச் சீர்குலைத்தார் (சோலை சுந்தர பெருமாள், மனசு, 2000, ப.94). தலித் பெண்கள் தேநீர்க் குடிக்க தனிக்குவளைகளைப் பயன்படுத்தும் செய்தி தப்பாட்டம் நாவலில்

கூறப்பட்டுள்ளது (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, ப. 55). மேலும் ஆண்களுக்குச் சமமாகப் பெண்கள் விவசாய வேலைகளில் ஈடுபட்டாலும் ஆண்களுக்குக் கொடுக்கும் கூலியில் பாதி கூலித்தான் கொடுக்கப்படுகிறது (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, ப. 233).பால் பாகுபாடு இல்லாமல் சம வேலைக்குச் சம ஊதியம் பெறும் உரிமை மனிதர்களாகப் பிறந்த அனைவருக்கும் உண்டு.

## 2. தீய வார்த்தைகளால் காயப்படுத்துதல்

ஓய்வு இல்லாமல் உழைப்பதனால் உடலளவில் பாதிக்கப்படும் தலித் பெண்கள் ஆதிக்கச் சாதியினர் பயன்படுத்தும் தீய வார்த்தைகளால் மன அளவிலும் பாதிக்கப்படுகின்றனர். "வண்ணாத்தி ! வீட்டு அம்மா பெத்துக்கப் போயிருக்கா. அந்தியில் கூலிப்படி போட்டதும் வாங்கிக்கிட்டுக் குளிச்சி முழுவி சனங்க அடங்கினதும் பண்ணைக்கட்டுக்குப் பின்னாடி வக்கணையா வந்துட்டுப் போடீ" (சோலை சுந்தர பெருமாள், பெருந்திணை, 2005, ப.75) என்று வண்ணார் சமுதாயப் பெண்களின் மனதையும், உடம்பையும் காயப்படுத்தும் செயல் நடைபெறும் நிலை 'பெருந்திணை' நாவலில் கூறப்பட்டுள்ளது. மூப்பர் தெரு இளைஞர்களைவிட அதிகமாக பள்ளர் சமுதாயப் பெண் ஒருத்தி படிப்பதால் அவளைக் கெடுக்க வேண்டும் என்று தூண்டும் நிலை 'தப்பாட்டம்' நாவலில் குறிப்பிடப்பட்டுள்ளது (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, ப.49). நாற்று முடியுடன் வேலுநாடாரின் வீட்டிற்குச் சென்ற செல்வியிடம் ரெங்கபாஷ்ய நாயுடு "அந்த நாடான் பய தரப்போறது போல நான் இரண்டு பங்கு தாரேன், வாங்கிக்கிட்டு . . . அலட்டாம பக்குவமா . . . மூணாம் பேருக்குத் தெரியாம . . . என்னா செல்வி ! சொல்லு" (சோலை சுந்தர பெருமாள், செந்நெல், 2003, ப.99) என்று கூறுவதாகச் 'செந்நெல்' நாவல் குறிப்பிட்டுள்ளது. இவ்வாறு தலித் சமுதாயப் பெண்களின் விருப்பம் இல்லாமல் அவர்களின் மனதைக் காயப்படுத்தும் வகையில் ஆதிக்கச் சாதியினர் இழிவாகப் பேசுகின்ற நிலை வருந்தத்தக்கது ஆகும்.

## 3. கற்பழித்தல்

அழகிய தோற்றமுடைய தலித் பெண்களைக் கற்பழிக்கும் வழக்கத்தைப் பண்ணையார்கள் மிகச்சாதாரணமாக மேற்கொண்டு வருகின்றனர். இதற்காக அவர்கள் கண்ணிற்கு அழகான பெண்களைத் தனது மாட்டுக் கொட்டிலுக்குத் தண்ணீர் ஊற்றவும், சாணி அள்ளவும் அழைப்பர். அவர்கள் அங்குச் சென்று, நஞ்சுப்போய் வரும் செய்தி 'செந்நெல்' நாவலில் கூறப்பட்டுள்ளது (சோலை சுந்தரபெருமாள், செந்நெல், 2003, ப. 73). தலித் பெண் இனம் இப்படிப்பட்ட சூழ்நிலைகளிலிருந்து மீட்கப்பட வேண்டும்.

### 4. கற்பழித்துக் கொலை செய்தல்

பெண்களைக் கற்பழித்துக் கொல்லும் செய்தி 'தப்பாட்டம்' நாவலில் கூறப்பட்டுள்ளது. முனியாண்டிச் சாம்பானின் தங்கை மகள் வெள்ளைக்குத் திருமணம் நிச்சயிக்கப்பட்ட பின்னர் தங்கசாமி மூப்பனாரின் நான்காது மகன் அவளைக் கற்பழித்துக் கொன்று விட்டுத் தண்ணீர் பிடிக்க வந்த அவள் வழுக்கி விழுந்து இறந்ததாக ஊரை நம்பச் செய்தான். உண்மை அறிந்த முனியாண்டியைப் பேச விடாமல் ஆதிக்கச் சாதியினர் அதட்டினர் (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, ப.61). தலித் மக்கள் உண்மை நிகழ்ச்சிகளை அறிந்தாலும் ஆதிக்கச் சாதியினருக்கு எதிராக எதையும் சொல்லவும், செய்யவும் இயலாத நிலையில் உள்ளனர். சமுதாயத்தில் தாழ்த்தப்பட்ட சாதி ஆண்களைவிட பெண்களின் நிலை மிகவும் பின்தங்கி உள்ளது. அவர்களுக்கு வாழ்வு உரிமைகள் மறுக்கப்படுவதுடன் எதையும் சொந்தம் கொண்டாடும் உரிமையும் இல்லாததால் சுதந்திரம் இல்லாதவர்களாக உள்ளனர். இதனால் அதிகார வர்க்கத்தின் காமப்பசிக்கும் இரையாகி அழிகின்றனர்.

### தொகுப்புரை

"சோலை சுந்தர பெருமாள் படைப்புகள் குறிப்பிடும் தலித்துகளின் வாழ்க்கைப் பிரச்சனைகள்" குறித்து உரையாடிய செய்திகளைப் பின்வருமாறுத் தொகுத்துத் தரலாம்.

1. சோலை சுந்தர பெருமாள் படைப்புகளில் குறிப்பிடப்பட்டுள்ள தலித் மக்கள் தங்கள் வாழ்க்கைக்குத் தேவையான அடிப்படை வசதிகள் இல்லாத நிலையில் உள்ளனர். வேலை உள்ள நாட்களில் கால் மற்றும் அரை வயிற்றுக் கஞ்சியைக் குடிக்கும் அவர்கள் வேலையில்லாத நாட்களில் தங்கள் பொருளாதாரத் தேவைகளுக்காகக் கால்நடைகளை வளர்க்கின்றனர். உழைப்பு ஒன்றையேத் தங்கள் மூலதனமாக உடைய அவர்கள் தங்கள் அடிப்படைத் தேவைகளை நிறைவு செய்வதற்கு ஏற்ற ஊதியம் இல்லாமல் வருந்துகின்றனர். மேலும், கோடையின் கொடூரத்தால் வேலை இல்லாத நாட்களில் வறுமையின் பிடியில் சிக்கி இறக்கும் நிலையில் உள்ளனர். பெண்கள் சத்துப் பொருட்கள் மற்றும் ஆசைப்பட்டதை உண்ண வேண்டிய கர்ப்பகாலத்தில் அதற்கு வழியற்றுக் கலங்குகின்றனர். பண்ணை அடிமைகள் காலநேரம் பார்க்காமல் உழைத்தாலும் அவர்கள் விரும்பும் எதையும் உண்ண முடியாமல் ஆசைப்பட்டு ஏக்கத்தோடு வாழ்ந்து மடிகின்றனர். கந்தல் மற்றும் அழுக்கேறிய ஆடைகளே தலித்துகளின் ஆடையாக இருப்பதால் 'ஆள்பாதி ஆடைபாதி' என்ற வழக்குச் சொல்லைத் தலித் மக்களுடன் ஒப்பிட இயலாத நிலையில் வாழ்கின்றனர். ஆடையில்லாமை பெரியவர்களை வருந்த வைப்பதுடன் மாணவர்களைக் கல்வி கற்க விடாமல் தடுக்கிறது. உணவிற்கு ஏங்கும் அவர்களால் உடைக்குச்

செலவழிக்க இயலவில்லை. மேலும், தலித்துகள் வாழும் குடிசைகள் சுகாதாரமும், வசதிகளும் இல்லாமல் காணப்படுகின்றன. பல ஆண்டுகளாகத் தொடர்ந்து குடியிருப்போருக்கு அந்த நிலம் சொந்தமாகும் என்ற அரசாணையைத் தலித் மக்கள் தெரிந்தவர்களாக இல்லை. மேலும் குடிசை இருக்கும் பகுதியை அரசாங்க உதவியுடன் அளந்து பட்டாப் போட்டச் செய்தியைக்கூட தலித் மக்கள் அறியவிடாமல் பண்ணைகள் தடுத்தனர். தலித்துகள் வாழும் குடிசைகள் நான்கைந்து தலைமுறைகளை உள்ளடக்கியதாக உள்ளதால் இடப்பற்றாக்குறை உள்ளது. எனவே, நாள் முழுவதும் உழைத்துக் களைத்தாலும் இரவில் ஓய்வெடுக்கவும் இயலாத நிலை காணப்படுகிறது. தாழ்த்தப்பட்டோரின் வாழ்விடங் களாகிய சேரிகள் ஊரின் ஒதுக்குப்புறங்களில் இருந்தாலும் அவைக் குடியானவர்த் தெருவினரின் கண்காணிப்பின் கீழ் உள்ளன. மேலும் அவை இயற்கையின் சீற்றங்களால் எளிதில் பாதிக்கப்படும் நிலையிலும் உள்ளன. தலித் தெருவைச் சீரமைப்பதற்கு ஒதுக்கின பணம் சரியான முறையில் செலவழிக்கப்படாததால் நாள்தோறும் துன்பம் நிறைந்த வாழ்வைத் தலித் மக்கள் அனுபவிக்கின்றனர்.

2. ஒட்டர் சமுதாய மக்கள் குடிசைகள் கூட இல்லாத நிலையில் வாழ்கின்றனர். மருத்துவ மற்றும் அரசாங்க உதவிகள் ஒட்டர் இன மக்களுக்குக் கிடைப்பதில்லை. அடிப்படை வசதிகள் அனைவருக்கும் பொதுவானவை. எனவே அவை அனைவருக்கும் கிடைக்க அரசு வழிவகை செய்ய வேண்டும்.

3. தலித் மக்கள் பரம்பரைப் பரம்பரையாக அடிமைகளாக வாழ்ந்து வருகின்றனர். எனவே அவர்கள் அடிமை வேலை செய்யத் தூண்டப்படுகின்றனர். பிற வேலைகளுக்குச் செல்லுதல், எதிர்த்துப் பேசுதல், கட்டுப்பட மறுத்தல், முன்னேற விரும்புதல், போட்டிகளில் வெற்றிபெறுதல் போன்றவை காரணமாகப் பொய் வழக்கில் ஈடுபடுத்தப்பட்டுத் தண்டிக்கப்படுகின்றனர். தலித் மக்களுக்குத் தேநீர்க் கடைகளில் தனிக்குவளை பயன்பாட்டில் உள்ளது. அவர்கள் உண்ணும் கலன்களிலும் இருக்கும் இடங்களிலும் பாகுபாடு நிலவில் உள்ளது. பெண்கள் அரிதாக தேநீர்க் கடைகளில் வருவதால் அவர்களுக்கான தனிக்குவளைகள் பாசி படர்ந்துள்ள நிலையில் காணப்படுகின்றன. தலித் மக்கள் ஆதிக்கச் சாதியினரின் தெருவிற்குள் நுழையும் போது செருப்பு அணியக்கூடாது, மிதிவண்டியில் ஏறிச் செல்லக்கூடாது, பீடி புகைக்கக்கூடாது என்ற கட்டுப்பாடுகள் வழக்கத்தில் உள்ளன. சேரித்தெரு மக்கள் சட்டை போடுவதையும், தோளில் துண்டு போடுவதையும் ஆதிக்கச் சாதியினர் அனுமதிப்பதில்லை. சட்டை, துண்டு இவைகளை அணிந்திருந்தாலும் ஆதிக்கச் சாதியினர் எதிர்ப்பட்டால் அவற்றைக் கழற்றி கக்கத்தில் வைத்துவிட்டுப் பணிந்து நிற்க வேண்டும் என்ற நிலை உள்ளது. பெரும்பாலான தலித் பெண்கள் முழங்காலுக்குக்

கீழே ஆடை அணிவதில்லை. பயணங்களின் போது குப்பாயம் என்றொரு ஆடையை அணிகின்றனர். பொதுவாகத் தலித் மக்கள் நல்ல ஆடைகளை அணிய அனுமதி இல்லை. மேலும் தலித் மக்கள் அணிகலன்களையும் அணியக்கூடாது என்பது பண்ணைகளின் எழுதப்படாத சட்டமாக உள்ளது. ஒரு பண்ணைத் தன் பண்ணை அடிமைகளுக்கு அணிகலன் அணிய அனுமதி அளித்தால் பிற பண்ணைகளின் எதிர்ப்பைச் சேகரிக்கும் நிலைக்கு ஆளாவார். மேலும், தலித் மக்கள் வெள்ளாடு வளர்ப்பதற்கும் தடை விதிக்கப்பட்டுள்ளது. தலித் மக்கள் தாங்கள் வளர்க்கும் கால்நடைகளை விற்பதற்குப் பண்ணையின் அனுமதியைப் பெற வேண்டும் என்ற கட்டாயச் சூழலில் வாழ்கின்றனர். அடிப்படைத் தேவைகளில் ஒன்றான நீராதாரங்கள் அனைத்து மக்களுக்கும் பொதுவானவை. ஆனால் தலித் மக்கள் ஆறு, குளம் மற்றும் குட்டைகளைப் பயன்படுத்தக்கூடாது என்ற கட்டுப்பாட்டிற்குள் உள்ளனர். இவ்வாறு பலவித கட்டுப்பாடுகளுக்குள் வாழும் தலித் மக்கள் கட்டுப்பாடுகளை மீறினால் கடும் இன்னல்களைச் சந்திக்கின்றனர். தலித் உரிமைகள் மனித உரிமைகளே ஆகும். எனவே, தலித் மக்களுக்கு மட்டும் கட்டுப்பாடுகளை விதிப்பது எந்தவிதத்திலும் நியாயம் ஆகாது.

4. வேளாண்மைக்கு அடுத்த நிலையில் பண்ணையின் பொருளாதாரத்திற்கு உறுதுணையாக இருப்பது மாடுகள் ஆகும். எனவே பண்ணையார்களுக்காகத் தலித் மக்கள் மாடுகளைப் பராமரித்து, கொட்டில்களைத் தூய்மைப்படுத்தும் செயல்களை மேற்கொள்கின்றனர். மேலும் மரபடியான கறவைப் பசுவைக் காளைக்கு அணையவிட்டு வளர்த்து, கன்று போடும் முன் பண்ணையிடம் ஓட்டிச் செல்ல வேண்டும் என்று கட்டாயப் படுத்தப்படுகின்றனர். இறந்த விலங்குகளை அப்புறப்படுத்துவதும் தலித் மக்களின் தொழிலாகிறது. பிறப்பு, பூப்பு, இறப்புச் சடங்குகள் மற்றும் அதைச் சார்ந்த நிகழ்வுகளை நிகழ்த்துவதற்கு முன்னிற்பது தலித் மக்களின் கடமையாகிறது. ஆனால், அவர்கள் அந்தச் சூழ்நிலைகளிலும் மரியாதையின்றி நடத்தப்படுவதுடன் குறைவான கூலியையும் பெறுகின்றனர்.

5. தலித் மக்கள் வயலில் வேலை செய்யும் போது முடுக்கி விடப்பட்ட இயந்திரங்களைப் போல நின்று வேலை செய்கின்றனர். மேலும் பண்ணைக்கு உரிமை உடையவர்கள் மற்றும் அவர்களின் பிள்ளைகள் ஆகியோர் நேரம் பார்க்காமல் பண்ணை வேலையில் ஈடுபட வேண்டும் என்று பண்ணையார்கள் கட்டாயப்படுத்துகின்றனர்.

6. கோவில் விழாவில் பறையடிப்பதும், கொம்பு ஊதுவதும், தண்டோரா போடுவதும், தாரை மற்றும் உறுமி அடிப்பதும் வெட்டியானுடைய வேலையாகும். சாவுச் செய்தியைப் பறையடித்து ஊருக்குச் சொல்ல வேண்டும் என்று தலித் மக்கள் கட்டாயப்

படுத்தப்படுகின்றனர். மேலும், கோவில் விழாவிலும், பாடையின் முன்னும், பெருக்கெடுத்து வரும் நீரைக் கட்டுப்படுத்தவும், குறவன்-குறத்தி ஆட்டம் ஆடப்படுகிறது. ஆனால் இவை அனைத்திற்கும் ஏற்ற கூலி வழங்கப்படவில்லை.

7. ஆதிக்கச் சாதிக் குடும்பத்தினர் அனைவரின் துணிகளையும் ஊருக்கு அனுபவ பாத்தியதை உள்ள வண்ணார் சாதியினர் வாரம்தோறும் எடுத்துத் துவைத்துக் கொடுக்க வற்புறுத்தப்படுகின்றனர். தலித் மக்களின் துணிகளைப் புதிரை வண்ணார் என்ற சாதியினர் துவைக்கின்றனர். இவர்களும் சரியான கூலியைப் பெறுவதில்லை.

8. தலித் மக்கள் ஆதிக்கச் சாதியினரின் கட்டுப்பாடுகளுக்கு உள்ளாகி வாழ்கின்றனர். குறிப்பாக அனைவருக்கும் கல்விபெறும் உரிமை உண்டு. ஆனால், தலித் மக்கள் கல்வி கற்க பண்ணையாரிடம் அனுமதி பெற வேண்டும். தலித் மக்களின் உழைப்பு முழுவதையும் சுரண்டும் பண்ணையார்கள் தங்களின் பண்ணைகளில் வேலைசெய்யும் அடிமைகள் படிப்பதற்கு மறுப்பு தெரிவிக்கின்றனர். பண்ணையாரின் விருப்பத்திற்கு மாறாக தலித் மக்கள் படிக்க முன்வந்தால்·அவர்கள் மீது பொய்க்குற்றம் சாட்டப்படுகிறது. எந்த வேலையைச் செய்தாலும் தலித் மக்கள் தங்கள் உழைப்பிற்கு ஏற்ற கூலியைப் பெறாத நிலையில் உள்ளனர். எனவே, அவர்கள் பண்ணை ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெற்றால்தான் பொருளாதார நிலையில் முன்னேற்றம் பெறமுடியும்.

9. தலித் மக்களின் வாழ்வுடன் பின்னிப் பிணைந்ததாகப் பணிவு உள்ளது. ஆதிக்கச் சாதியினரிடம் பணிந்து பேசும் நிலையில் உள்ள தலித் மக்கள் தங்களுக்குச் சேர வேண்டிய நியாயமான கூலியையும் பணிந்தே பெறுகின்றனர். உழைப்பது ஒன்றைத் தங்கள் வாழ்வின் நோக்கமாகக் கொண்டுள்ள தலித் மக்கள் அதிக வேலைப் பளுவால் துயருறுகின்றனர். எந்த நேரமும் ஆண்டைகளுக்காகக் காலில் சக்கரத்தைக் கட்டிக் கொண்டு பறக்கும் அவர்கள் இனிய மணத்தை நுகர்வதற்கும் நேரமற்று உள்ளனர்.

10. தலித் மக்கள் ஒரு பண்ணையின் சொல்லுக்குக் கீழ்ப்படியும் போது பிற பண்ணைகளின் எதிர்ப்பைச் சந்திக்க வேண்டியுள்ளது. குறிப்பாகத் தனது பண்ணைக்குக் கீழ்ப்படிய மறுத்தால் அந்தப் பண்ணையிடமிருந்தும், கீழ்ப்படிந்தால் பிற பண்ணைகளிடமிருந்தும் அடிவாங்குகின்றனர். இவ்வாறு ஆதிக்கச் சாதியினருக்கிடையே நிகழும் போட்டிகளால் தலித் மக்கள் பாதிக்கப்படுகின்றனர்.

11. தலித் மக்கள் ஆதிக்கச் சாதியினரைக் கண்டால் குனிந்து பணிய வேண்டும். அல்லது கீழே விழுந்து வணக்கம் தெரிவிக்க வேண்டும் என்பது எழுதப்படாத சட்டமாக நடைமுறைப்படுத்தப்பட்டு வருகிறது.

12. தலித்துகள் வயதில் பெரியவர்களாக இருந்தாலும் ஆதிக்கச் சாதி சிறுவர்கள் அவர்களை இழிவாகப் பேசவும், ஒருமையில் அழைக்கவும் உரிமையுண்டு. ஆனால் தலித் மக்கள் ஆதிக்கச் சாதிச் சிறுவனிடமும் மரியாதையோடு தான் பேச வேண்டும். ஆதிக்கச் சாதியினர் தங்கள் வீடுகளில் சமைத்த உணவுகளைப் பெரும்பாலும் தலித் மக்களுக்கு வழங்குவதில்லை. சில வேளைகளில் அரிதாக வழங்கினாலும் அவர்களுக்கு இலைகள், தேங்காய்ச் சிரட்டை போன்றவை உண்கலன்களாகின்றன. மேலும் தலித் மக்களின் வீட்டுத் தேவைகளுக்கு ஆதிக்கச் சாதியினர் வரவிரும்புவதில்லை. தலித் மக்களை ஆதிக்கச் சாதியினர் எல்லா நிலைகளிலும் ஒதுக்கி வைக்கின்றனர் அல்லது ஒதுக்கி வைக்கத் தூண்டப்படுகின்றனர். இதனால் அடிமைகளுக்குச் சில சலுகைகள் கொடுக்க வேண்டும் என்று கருதும் பண்ணைகளும் தடுமாறுகின்றனர். தலித்துகள் ஒற்றுமையாக இருந்தால் அவர்கள் போராட்டங்கள் வாயிலாகத் தங்கள் வாழ்க்கையில் முன்னேறுவர் எனக்கருதும் ஆதிக்கச் சாதியினர் சூழ்ச்சிகளைப் பயன்படுத்தி தலித் மக்களின் ஒற்றுமையைக் குலைக்கின்றனர். ஊரில் சமுதாயம் பார்க்கும் தலித் மக்களுக்கெனத் தனி மானிய நிலங்கள் உண்டு. இவ்வாறான நிலங்களை எழுதி வைத்தவரின் தலைமுறையினர் தங்களுக்கான தேவைகளைப் பொறுத்து நிலங்களை விற்கின்றனர். இதனால் சமுதாயம் பார்ப்பவர்கள் பாதிக்கப்படுகின்றனர்.

13. ஆதிக்கச் சாதியினர் தங்கள் தெய்வம் சேரியில் ஊர்வலமாக வருவதற்கும், சேரி மக்கள் அந்த தெய்வத்தை வணங்குவதற்கும் எதிர்ப்புத் தெரிவிக்கின்றனர். அதோடு இந்துக் கோவில் திருவிழாக்களில் பங்கெடுக்கவும், கோவிலில் வழிபடவும் தலித்துகள் அனுமதிக்கப் படுவதில்லை. சாதி அடிப்படைக்கு அப்பாற்பட்டது என்று கருதத்தக்க கிறிஸ்தவக் கோவில்களிலும் சாதி நடைமுறை காணப்படுகிறது. தலித்துகள் கடைகளில் ஆதிக்கச் சாதியினருக்கு இடம் கொடுத்து ஒதுங்கி நிற்க வேண்டும் என்று கட்டாயப்படுத்தப்படுகின்றனர். தலித் மக்கள் ஆதிக்கச் சாதியினருக்கு முன்நின்று பேச வேண்டிய சூழ்நிலைகளில் இடைவெளியைக் கடைபிடிக்க வற்புறுத்தப்படுகின்றனர். ஊரின் ஒதுக்குப் புறத்தில் சென்று முடிவெட்ட வேண்டிய நிலையில் தலித் மக்கள் உள்ளனர். மேலும் சிறுகாணி அம்பட்டன் பயன்படுத்திய கத்தரி மற்றும் கத்தியைக் காரை இலைநீரில் ஊறப்போட்டபின் கொல்லன் உலைக்கு எடுக்கிறான்.

14. தலித் மக்களை ஆதிக்கச் சாதியினர் வெறுங்கையாலும், புளியங்கம்பாலும், கசையாலும், மரக்காலால் முகத்தை மூடியும் அடித்தும், அச்சப்படுத்தியும் தங்களுக்கு எதிராக அவர்கள் திரளாமல் பார்த்துக் கொள்கின்றனர். மேலும் மிகக் குரூரமாகவும், மனிதத்

தன்மையற்ற நிலையிலும், இழிவானமுறையிலும் பிறரை நடத்துவது அல்லது தண்டனை கொடுப்பது என்ற சித்ரவதை முறைகளின் அடிப்படையில் தலித் மக்கள் அனைத்து வகையான தண்டனைகளுக்கும் உள்ளாக்கப்படுகின்றனர். அவற்றில் களிக்கம் போடுதல், கொதிக்கும் எண்ணெயில் அமிழ்த்துதல், வெயிலில் கட்டிப் போடுதல் போன்றவை மிகக் கொடிய தண்டனைகள் ஆகும். மேலும் எரித்துக் கொல்லுதல், அடியாட்களின் துணையுடன் கொலை செய்தல், அடித்துக் கொலை செய்தல் என்ற நிலைகளிலும் தலித் மக்கள் மீது வன்முறைகள் கட்டவிழ்த்து விடப்படுகின்றன.

15. ஒடுக்குதல், தீய வார்த்தைகளால் காயப்படுத்துதல், கற்பழித்தல், கற்பழித்துக் கொலை செய்தல் என்று பெண்களுக்கு எதிரான வன்முறைச் செயல்களால் தலித் பெண்கள் மிகவும் சிக்கல் வாய்ந்த நிலையில் வாழ்கின்றனர். இந்த இன்னல்களை எதிர்த்துப் போராட அவர்களுக்குப் பொருளாதார பலமோ, தொழில் பாதுகாப்போ இல்லாததால் தினமும் துன்பங்களோடு கட்டுப்பாடுகளுக்குள் வாழ்க்கையை நடத்திச் செல்கின்றனர். தாங்களும் மனிதர்கள் தான் என்றும், தங்களுக்கும் ஆதிக்கச் சாதியினரைப் போன்ற உரிமைகள் அனைத்தும் உண்டு என்றும் புரிந்து கொள்ள தலித் மக்களால் இயலவில்லை. காலம் காலமாக உள்ள அடிமை நிலையை அடியொற்றியே தலித் மக்களின் வாழ்வு செல்கிறது.

இவ்வாறு சோலை சுந்தர பெருமாள் படைப்புகள் குறிப்பிடும் தலித்துகளின் வாழ்க்கைப் பிரச்சனைகள் அனைத்தும் உடனடியாகத் தீர்வு காணப்பட வேண்டியவைகளாக உள்ளன எனலாம்.

# 4. சோலை சுந்தர பெருமாள் படைப்புகள் குறிப்பிடும் விளிம்புநிலை மக்களின் வாழ்வுரிமைப் போராட்டங்கள்

தனிநபர் ஒருவர் சிறப்பாக வாழ்வதற்குத் தேவைப்படுகிற உரிமைகளாக உயிர்வாழும் உரிமை, உணவு பெறும் உரிமை, சமத்துவ உரிமை, சுதந்திரமாக வாழும் உரிமை, சித்ரவதைக்கு உட்படுத்தப் படாமல் வாழும் உரிமை, சட்டத்தின்முன் சமம் என்ற உரிமை, பாதுகாப்புடன் வாழும் உரிமை, குடியுரிமை, இயக்கமாகச் சேர உரிமை, சம ஊதிய உரிமை, கருத்தை வெளிப்படுத்தும் உரிமை போன்றவை சர்வதேச மனித உரிமைப் பிரகடனத்தில் கூறப்பட்டுள்ளன. இந்த உரிமைகள் பிரிக்கவும் பறிக்கவும் கூடாதவையாகத் திகழ்கின்றன. ஆனால், இவை அனைத்தும் தலித் மக்களுக்கு மறுக்கப்படுவதால் தலித் மக்கள் மறுக்கப்பட்ட உரிமைகளை மீட்டெடுக்கப் போராடுகின்றனர். போராட்டங்கள் சமூக விடுதலை பெறுதல், முதலாளித்துவச் சுரண்டலை ஒழித்தல், ஜனநாயக உரிமைகளை அடைதல், சமாதானம் மற்றும் தேசிய சுதந்திரத்தைப் பாதுகாத்தல் போன்ற நோக்கங்களுக்காக நடத்தப்படுகின்றன (ஏ. மர்மக்கோவா, வி. ராட்னிக்கவ், வர்க்கங்கள் வர்க்கப் போராட்டம் என்றால் என்ன?, 1998, ப.137). 'வயிற்றைக் கழுவினால் போதும்' என்ற நிலையில் கூலி வேலையும் சேவகத் தொழிலும் செய்வதோடு அடிமைத்தனத்திற்குள் சிக்கித் தவித்துத் துண்டு இடுப்பிலும், செருப்பு கையிலும் என்ற நிலையில் வாழ்ந்து வரும் தலித் மக்கள் தங்கள் வாழ்க்கையில் பல இன்னல்களைத் தொடர்ந்து சந்திக்கும் போது மனதளவில் போராட்டங்களை மேற்கொள்ளத் தயாராகிறார்கள். இந்த நிலையில் விடுதலை என்பது அவர்களின் குறிக்கோளாகிறது. மேலும் வாழ்வாதார உரிமைகள் என்பன மனிதகுல மாண்பின் முக்கிய அம்சமாகும். எனவே வீடு, நீர், காற்று, கல்வி, வேலை வாய்ப்பு மற்றும் நிலைத்த விவசாயம் ஆகியன இந்தப் பூமியில் பிறந்த மனிதகுலத்தின் முக்கிய உரிமைகளாகின்றன (அலெக்சிஸ் அருள் டைமண்ட் ராஜ், மூன்றாம் யுகத்தில் சமூக பொருளாதார உரிமைகள் - ஓர் பார்வை, 2001, பக். 11, 12). ஆகவே, தலித் மக்கள் கீழான நிலையிலிருந்து மேலான நிலைக்கு உயர்வதற்குப் போராட்டங்கள் உதவுகின்றன. இந்த நிலையில் தலித் மக்களின் போராட்டங்கள் அவர்களின் கடமை என்ற நிலையிலிருந்து உரிமை என்ற நிலைக்கு மாறுகின்றன. இவ்வாறு நடைபெறும் தலித்துகளின் வாழ்வுரிமைப் போராட்டங்களை அடிப்படைத் தேவைகளுக்கான போராட்டம், கூலி

உயர்வுக்கான போராட்டம், அடிமை வேலைக்கு எதிரான போராட்டம், சம உரிமைக்கான போராட்டம், தீண்டாமைக்கு எதிரான போராட்டம், பெண் உரிமைக்கான போராட்டம், இடுகாடு பெறுவதற்கான போராட்டம், மனிதனாக வாழும் உரிமைக்கான போராட்டம் என்று பாகுபடுத்தி விளக்குவதாக இப்பகுதி அமைகிறது.

## 1. அடிப்படைத் தேவைகளுக்கான போராட்டம்

சமுதாயத்தில் தாழ்ந்தவர்களாகவும், மிகவும் கீழ்த்தரமானவர்களாகவும் கருதப்படும் தலித் மக்கள் தாங்கள் இழந்த மனித மாண்புகள் அனைத்தையும் மீட்பதற்கு விரும்புகிறார்கள். இதனால் அவர்கள் இழந்து போன மனித உரிமைகளை மீட்டெடுக்கப் போராட்டம் உதவும் என்று நம்பி அதற்கான முயற்சிகளில் ஈடுபடுகிறார்கள். மேலும் அவர்கள் இழந்துபோன மாண்பினையும், பாதுகாப்பினையும் நிலைபெறச் செய்து, இந்தப் பூமியில் சுய ஆட்சி அமைத்து, அதன் மூலம் பொருளாதார, கலாச்சார, அரசியல் அமைப்புகளில் ஒரு மாற்றத்தைக் கொண்டு வந்து, இந்த நாட்டின் மக்களாகத் தங்களை நிலைப்படுத்திக் கொள்ளவும் முனைகிறார்கள் (சேது, தமிழகத்தில் மனித உரிமைகள், 2000, ப.330). இதனால் சுந்தரமூர்த்தி வாத்தியாரின் வழிகாட்டுதலால் தோழப்பன் உள்ளிட்ட தலித் இளைஞர்கள் ஆதிக்கச் சாதிகளுக்கும், அதிகார வர்க்கத்திற்கும் எதிராகத் திரண்டனர். இதனை ஆதரித்த மூத்த தலைமுறையினரான சாமு சாம்பானும், தம்புராயன் பகடையும் தோழப்பனிடம் நீங்க என்ன சொல்லுறீங்களோ நாங்க அப்படியே ஏத்துக்கிறோம். நம்ம சனத்துக்கு விடிவு வந்திடும் என்றால் எங்களது தலையையும் விலை கொடுக்கத் தயாரா இருக்கிறோம் (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, ப.143) என்று சொல்வதாகப் 'தப்பாட்டம்' நாவல் குறிப்பிட்டுள்ளது. மேலும், காலங்காலமாகச் சமுதாயம் பார்ப்பவர்களுக்குச் சமுதாய நிலத்தின் ஒருபகுதி உரிமையாகும் என்ற நடைமுறை உள்ளது. இதனால் 'செந்நெல்' நாவலில் இடம்பெற்ற சமுதாயம் பார்ப்பவர்கள் போராட்டத்தில் ஈடுபட்டுச் சமுதாய நிலத்தின் ஒரு பகுதியைத் தங்களுக்கு உரிமையாக்கினர். அதன்பின் அவர்கள் கூலி உயர்வுப் போராட்டத்தில் ஈடுபட்டால் போராடிப் பெற்ற நிலத்தின் உரிமை பறிபோகும் என்பதை உணர்ந்த வடிவேலு என்பவர் “வெட்டியானும், தலையாரியும் குடியானத் தெருவினருக்கு அடிமை வேலைப் பார்ப்பதை இழிவாக நினைப்பது ஏற்றுக்கொள்ளக் கூடியதுதான். ஆனால், காலம் காலமாக உழைத்த உங்களுக்கு ஊர்க்காணி நிலம் உரிமையாக வேண்டும். அதனைக் கொடுக்காமல் இருந்த குடியானவர்த் தெருவினரிடம் போராடி, பண்ணைகளிடம் இருந்த நிலத்தை மீட்டு இப்போது தான் தொழிலாளர்களிடம் கொடுத்திருக்கிறோம். அந்த நிலத்தின் உரிமையை நிலைநிறுத்தும்

வரை அவர்கள் அங்குச் சென்று வேலை பார்க்க வேண்டும். எனவே விரைவாக எந்த முடிவு எடுத்தாலும் அது மக்களுக்கு எதிரானது போல் ஆகிவிடும்" (சோலை சுந்தர பெருமாள், செந்நெல், 2003, ப. 143) என்றார். போராடிப் பெற்ற நிலத்தை மற்றொரு போராட்டத்தில் ஈடுபட்டு விட்டுவிடக்கூடாது என்பதில் உறுதியாயிருந்த வடிவேலுவின் நிலை இங்குக் கவனத்தில் கொள்ளத்தக்கது.

## 2. கூலி உயர்வுக்கான போராட்டம்

தலித் மக்கள் அடிமைத்தனங்களை எதிர்த்து நிற்கும் போதெல்லாம் ஆதிக்கச் சாதியினர் அவர்கள் வேலையையும் கூலியையும் தடை செய்கின்றனர். வயிறு பசிக்கும் போது எதிர்த்துப் போராடும் எண்ணம் தடைபடும் என்பது ஆதிக்கச் சாதியினரின் திட்டம். என்றாலும் "வேலையும் கூலியும் போனாலும் பரவாயில்லை. சுயமரியாதையும் உரிமையுமே முக்கியம் என தலித் மக்கள் முடிவெடுக்கத் துணியும் போது கலவரங்கள் நிகழ்கின்றன. இதனால் தலித் மக்களின் உயிர்கள் பறிக்கப்படுகின்றன (மீனா மயில், இருக்கவிடலாமா ஜாதியை? தலித் முரசு, சூலை, 2006, ப.17). இத்தகைய சூழ்நிலையில் 'செந்நெல்' நாவலில் குறிப்பிடப்படும் விவசாயக் கூலிகளுக்கு பண்ணைமார்கள் தாலுகா கமிட்டியில் பேசின கூலியைக் கொடுக்கலாம் என்று ஒத்துக்கொண்டு, பின்னர் மறுத்தனர். இதனை அறிந்த தலித் தொழிலாளர்கள் "பேசினபடி கூலியைக் கொடுத்தால் வாங்குவோம். இல்லையென்றால் நாளைக்கு வேலை நிறுத்தம் பண்ணினாத்தான் அவர்களுக்கு நம் முக்கியத்துவம் தெரியும். காலங்காலமாக நம்மை ஏமாற்றி கீழப் போட்டு மிதிச்சிக்கிட்டு இருந்த பண்ணைகளுக்கு இப்ப நாம முணுமுணுக்கிற சத்தம் கூட காட்டுக்கத்தலாத் தெரியுது" (சோலை சுந்தர பெருமாள், செந்நெல், 2003, ப.41) என்றனர். வேலை நிறுத்தம் ஆறு நாட்களுக்கு மேலும் தொடர்ந்த பின்பும் அவர்கள் கேட்ட கூலி உயர்வைக் கொடுக்க பண்ணையார்கள் மறுத்தனர். போராட்டம் கீழ வெண்மணியில் தொடங்கி தஞ்சை வரை பரவியது. விவசாயிகளின் கையிருப்புக் கரைந்தது. நியாயம் கேட்கப் போன விவசாயிகள் தாக்கப்பட்டனர். அதோடு தொழிலாளர்கள் போராட்டத்தை விட்டு வேலைக்குச் செல்ல ஆதிக்கச் சாதியினர் கூறினர். ஆனால் பேராட்டத்தைக் கைவிட தலித் விவசாயத் தொழிலாளர்கள் மறுத்தனர். என்ன நடந்தாலும் கூலி உயர்வு பெறாமல் வேலைக்குச் செல்வதில்லை என்ற உறுதியுடன் இருந்தனர். மேலும் பண்ணையார்கள் வெளி ஆட்களைக் கொண்டு வந்து வேலை செய்வதையும் தடுக்க முயன்றனர். நெல் உற்பத்தியாளர் சங்கத் தலைவர் கோபால கிருஷ்ண நாயுடு அடியாட்களை வைத்துக் கலவரத்தைத் தூண்டி கீழவெண்மணியிலுள்ள பெண்கள், குழந்தைகள், முதியோர் போன்றோரை அடித்து உதைத்தார்.

இந்தத் திட்டமிட்ட தாக்குதலை தலித் தெருமக்களால் எதிர்கொள்ள முடியவில்லை (சோலை சுந்தர பெருமாள், செந்நெல், 2003, ப. 80). காயம் அடைந்த குடியானவர் தெருவினரைக் காவலர் வாகனம் மருத்துவமனையில் சேர்த்தது. அதோடு குடியானவர் தெருவினருக்குக் காவல் துறையினரின் பாதுகாப்பும் கிடைத்தது. ஆனால் தலித் தொழிலாளர்கள் பாரவண்டி மூலம் மருத்துவமனைக்குக் கொண்டுவரப்பட்டனர். இந்த நிலையில் கோபால கிருஷ்ண நாயுடுவின் தூண்டுதலால் மருத்துவமனையில் தலித்துகளுக்குச் சிகிட்சை மறுக்கப்பட்டது. கம்யூனிஸ்ட் கட்சி தலையிட்டதால் மருத்துவ உதவி கிடைத்தது. அமைதியாகத் தொடங்கின போராட்டம் வன்முறையை நோக்கிச் சென்றதால் அரசு தலையிட்டது. பின்னர் விவசாயத் தொழிலாளர்கள் எட்டணா கூலி உயர்வு பெற்றனர். குறுவைச் சாகுபடியின் முடிவில் எட்டாம் நம்பர் பயிர் அறுவடையின் போது கலத்திற்கு ஐந்து படிதான் கூலிகொடுக்க வேண்டும் என்று நெல் உற்பத்தியாளர் சங்கத்தில் முடிவாயிற்று. இதற்கு அதிகமாகக் கொடுக்கும் மிராசுகள் சங்கத்தின் கடுமையான நெருக்கடிக்கு ஆளாவர் என எச்சரிக்கப்பட்டது. ஆனால் தொழிலாளர்கள் கடந்த வருடம் வாங்கின கூலி போல் கலத்திற்கு ஆறுபடி கூலியை வாங்காமல் வேலைக்கு வருவதில்லை என்பதில் உறுதியாய் இருந்தனர். தங்கள் எதிர்ப்பைக் காட்ட ஒரு நாள் வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டு, நாகப்பட்டினத்தில் பெரிய ஊர்வலமாகச் சென்று சப்-கலெக்டரைச் சந்தித்து, மன்னார்குடி ஒப்பந்தப்படி அறுவடைக் கூலியைத் தீர்மானம் செய்யும்படிக் கூறி மனு கொடுத்தனர். போராட்டத்தில் ஈடுபட்ட விவசாயிகளை அச்சப்படுத்த கோபால கிருஷ்ண நாயுடு அடியாட்களை வைத்து ஊர் மிராசுகளின் துணையுடன் பண்ணை இடத்தில் அமைந்திருந்த வீடுகளைப் பிரித்து எறியச் சொல்லி மிரட்டினார். சிவப்புக் கொடியைக் கோபாலகிருஷ்ண நாயுடுவின் காரியக்காரரான வீரப்பன் மற்றும் அடியாட்களின் காலின் கீழ்ப் போட வைத்தார். மேலும், வெண்மணி போராட்டத்தலைவர்களை ஒழித்துக்கட்டவும் கோபால கிருஷ்ண நாயுடு முனைந்தார். இதனால் கீழத்தெருவினருக்கு ஆதரவாகச் செயல்பட்ட வடிவேலு மீது பொய்க் குற்றம் சாட்டினார். இவை அனைத்தையும் மனதில் வைத்திருந்த கீழ வெண்மணி இளைஞர்கள் அந்த வழியாக ஜீப்பில் வந்த கோபால கிருஷ்ண நாயுடுவின் அடியாட்களையும் வீரப்பனையும் அடித்து உதைத்தனர். இறுதியில் வீரப்பன் அடித்துக் கொல்லப்பட்டான் (சோலை சுந்தர பெருமாள், செந்நெல், 2003, ப.197). கோபால கிருஷ்ண நாயுடுவின் வலது கரமாக விளங்கிய வீரப்பனின் இறப்புச் செய்தி கோபால கிருஷ்ண நாயுடுவைக் கொதித்து எழச் செய்தது. இதனால், தலித் மக்களை அழிக்க கோபால கிருஷ்ண நாயுடுவும், ரெங்க பாஷ்ய நாயுடுவும் குண்டர்படையுடன்

ஐந்தாறு வண்டிகளில் புறப்பட்டனர். அவர்களை எஸ்.ஐ வழியனுப்பி வைத்தார். குண்டர் படையினர் மண்ணெண்ணெய் மற்றும் பெட்ரோல் போன்றவைகளை வைத்திருந்தனர். வடிவேலுவின் தேநீர்க் கடையிலிருந்து தலித் ஒற்றுமைக்கான முயற்சி ஆரம்பமானதால் அந்தக்கடை முதலில் தீக்கிரையாக்கப்பட்டது. தொடர்ந்து கோபால கிருஷ்ண நாயுடுவிற்குத் துணையாகவும், தூதாகவும் இருந்த பாவாடை, காளிமுத்து ஆகிய இருவரின் குடிசை வீடுகளைத் தவிர, பிற குடிசைகள் அனைத்தும் நெருப்புக்கு இரையாயின. எங்கும் துப்பாக்கி வெடிக்கும் சத்தம் கேட்டது. வீட்டில் பதுங்கியிருந்த பெண்கள், பிள்ளைகள் மீதும் துப்பாக்கிக் குண்டுகள் பாய்ந்தன. சிலர் சவுக்குக்கட்டைகளால் தாக்கப்பட்டுச் சுருண்டு விழுந்தனர் (சோலை சுந்தர பெருமாள், செந்நெல், 2003, ப.203). ஓலச்சத்தம் எங்கும் கேட்டது. வெண்மணி கீழத்தெருவில் ராமையன் என்பவரின் வீட்டைத்தவிர அனைத்தும் குடிசைகள். அந்த வீட்டினுள் கீழத்தெருவினர் சிலர் கோபால கிருஷ்ண நாயுடுவிற்கும், அவரது குண்டர் படைகளுக்கும் பயந்து ஒளிந்தனர். அந்த வீடும் கொளுத்தப்பட்டது. இதனால், அந்த வீட்டுக்குள் புகுந்த தலித் மக்கள் அனைவரும் தீயில் சிக்கினர். அதில் ஒரு பெண் தான் செத்தாலும் பரவாயில்லை, தனது கைக்குழந்தை பிழைத்தால் போதும் என்று அதனை வெளியில் தூக்கி எறிந்தாள். வெளியே வந்து விழுந்த கைக்குழந்தையைப் பிடித்த கோபால கிருஷ்ண நாயுடு அந்தக் குழந்தையைத் துண்டு துண்டாக வெட்டித் தூக்கித் திரும்ப எரிகிற வீட்டுக்குள் போடும்போது, “இதோட கம்யூனிஸ்ட் கட்சின்னு சொல்லிக்க ஒரு உசுரு இருக்கக்கூடாது . . . நான் விட மாட்டேன் . . ." என்று உரக்கக் கத்திச் சிரித்தார். சுற்றி நின்ற அடியாட்கள் கைகளைத் தட்டி ஆரவாரம் செய்தார்கள் (சோலை சுந்தர பெருமாள், செந்நெல், 2003, ப.206) என்று ‘செந்நெல்' நாவல் குறிப்பிட்டுள்ளது. இவ்வாறு வெண்மணி கீழத்தெரு தலித் மக்களின் கூலி உயர்வுப் போராட்டம் தோல்வியில் முடிந்தது.

### 3. அடிமை வேலைக்கு எதிரான போராட்டம்

மூப்பனார் சமுதாயத்திற்கு அடிமை வேலை செய்யும் சாமு சாம்பானும், அம்பலக்காரர் சமுதாயத்திற்கு அடிமை வேலை செய்யும் தம்புராயன் பகடையும் கூலி உயர்த்திக் கொடுக்காவிட்டால் மைலப்ப சேர்வையின் சாவுக்குத் தப்படிக்க மாட்டோம் என்று கூறி பஞ்சாயத்தார் முன்னிலையில் தைரியமாக வந்து நின்றனர். அவர்கள் நாட்டாமைக்காரர்களிடம் “. . . அடுத்த வேளை சோத்துக்கு உங்க கையை பார்த்துக் கிட்டு நிக்கிற நாங்கதாங்க. நேத்தைக்கு வரைக்கும் உங்களுக்கு அடிமையாக நின்று வெட்டியாரத் தொழிலு பார்த்து . . .இன்னிக்கு நாங்க அந்தத் தொழில அடிமையா நின்னு வேலை பார்க்கிறாப்போல இல்லங்க. அதுக்காக தப்பு அடிக்கிறதை நிப்பாட்டிடவும்

போறதில்லங்க. சாவுக்கோ, கோவிலுக்கோ அடிக்கத்தான் போறோம். நாங்க செய்யிற தொழிலுக்கு நாங்க கேக்கிற கூலியை எங்களுக்குக் கட்டுப்படியாகிறாப்போல கொடுத்தா நாங்க செய்யிறதா இருக்கோம்" (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, ப. 193) என்றனர். இப்படிப் பேசும்போது வழக்கமாக அவர்கள் இடுப்பில் கட்டிக்கொள்ளும் துண்டு தோளில் கிடந்தது. கையைக் கட்டாமல் எடுத்தெடுத்துப் பேசினர். மீண்டும் குடியானவர்த் தெருவினர் அடிமையாக இருந்து, கொடுக்கும் சோற்றை வாங்கிக் கொண்டு சாவுக்குத் தப்படிக்கக் கூறி, இழிவாகப் பேசினர். அதற்கு அவர்கள் "... ஆண்ட மாருங்களா ! ரொம்ப கொட்டிப்புடாதீங்க. அப்புறம் நீங்க நெனச்சாக்கூட அள்ள முடியாதுங்க. வாய அடக்கித்தான் ஒரு தடவ இல்லங்க. பத்துத் தடவ சொல்லுறேன் ... நாங்க உங்க சமுதாயத்துக்குச் சாவு சொல்லுறதுக்கும் சாவு தப்பு அடிக்கவும் கோவிலுக்கு அடிக்கவும் சோத்த வாங்கிகிட்டு அடிமையா நிக்கப் போறதில்லங்க . . . நீங்களும் எங்களை மனுசனா நெனைச்சு . . . நீங்க . . . கூலி கொடுத்தாத்தான் தப்புக் கட்டையை எடுப்போம் . . ." (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, ப.195) என்றனர். வீரைய்யா மூப்பனார் அப்போது முனியாண்டிச் சாம்பானிடம் விவசாய வேலைக்குப் பேசின கூலியைக் கொடுக்க முடியாது என்றார். இதைக் கேட்ட முனியாண்டி "இப்ப தலைப்பட்ட புள்ளைங்க திமிறிக்கிட்டு இருக்கிறதுக்குப் பக்கபலமா நின்னுட்டா விடிமோட்சம் கெடைச்சிடும். பட்டினி கெடந்து செத்து மடிஞ்சாலும் இதுவரைக்கும் வாங்கின கூலிய வாங்கிட்டு வேலையைப் பாக்காம வயக்காட்டுக்கு அடியெடுத்து வைக்கக் கூடாது" (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, ப. 236) என்று மனதில் நினைத்துத் திரும்பினார். தான் விரும்பும் வேலையைத் தேர்வு செய்து கொள்ளும் உரிமை, நியாயமான சாதகமான பணிச்சூழலில் பணிபுரியும் உரிமை, வேலையின்மைக்கு எதிராகப் பாதுகாப்புப் பெறும் உரிமை இவை மனிதனாகப் பிறந்த அனைவருக்கும் உண்டு. ஆனால் தலித் மக்கள் கடினமானதும், இழிவானதும் அவருவருப்பானதுமான அனைத்துப் பணிகளையும் பரம்பரையாகச் செய்ய வற்புறுத்தப் படுகின்றனர். மேலும் ஆதிக்கச் சாதியினர் தலித் மக்களிடம் கடின உழைப்பைக் கோருவதுடன், சுகாதாரமற்ற சூழலில் மேற்கொள்ளப்படும் தொழில்கள் அனைத்தையும் இலவசமாகச் செய்ய வற்புறுத்துகின்றனர். அவர்கள் தொழிலுக்கு நேர அளவும், விடுமுறை நாளும், ஏற்ற கூலியும் கிடையாது. இவ்வாறு தலித் மக்கள் உழைப்பிற்கு ஏற்ற கூலி பெறாமல் அடிமை வேலையில் ஈடுபட்டு பண்ணைகளுக்கு இலாபத்தைச் சேர்த்தாலும் பண்ணையார்கள் சிறிதளவுகூட தலித்துகளிடம் இரக்கம் இல்லாமல் நடந்து கொள்கின்றனர். குறிப்பாக தலித் விவசாயக் கூலிகள் பண்ணைக்காகப் பாடுபட்டு உழைத்த பின்பும் வேலுநாடார் சிறிதும்

இரக்கம் இல்லாமல் நடந்ததால் வருத்தம் அடைந்த பெரியான், "நாள்தோறும் ஆண்டே ! ஆண்டே ! என்று அழைத்து ஆண்டையிடம் அடிபணிந்து வயிற்றைக் கால்வயிறு நிரப்புவதை விட்டுப் போராடி செத்துப் போகலாம். தலித் தெரு மக்கள் மானத்துடன் வாழ எத்தனை முறை வேண்டுமானாலும் ஜெயிலுக்குச் செல்லவும், அடிபடவும், இறுதியில் உயிரை விடவும் தயாராக வேண்டும் என்று முடிவெடுத்தான் (சோலை சுந்தர பெருமாள், செந்நெல், 2003, பக். 178, 179) என்று 'செந்நெல்' நாவல் குறிப்பிட்டுள்ளது. இவ்வாறு அடிமை வேலைக்கு மறுப்பு கூறுவது வரவேற்கத்தக்க நிகழ்ச்சியாகும்.

## 4. சம உரிமைக்கான போராட்டம்

தனிநபர் ஒருவர் மனிதனாகப் பிறந்ததினால் அனைத்து உரிமைகளையும் பெறத்தகுதி உடையவர் ஆகின்றார். ஆகவே, பாலின வேறுபாடு இல்லாமல் உலகின் அனைத்து மக்களுக்கும் பொதுவாக உள்ள உரிமைகள் மனித உரிமைகள் ஆகும் (இராஜமுத்திருளாண்டி, மனித உரிமைகள், 2005, ப. 4). இந்த அடிப்படையில் சாதி, மதம், நிறம், பாலினம், இனம், பிறப்பிடம் ஆகிய வேறுபாடுகள் இல்லாமல் அனைத்து மனிதர்களும் சமமாக நடத்தப்பட வேண்டும் என்று மனித உரிமைகள் வலியுறுத்துகின்றன. ஆனால் தலித் மக்களுக்கு சமஉரிமைகள் அனைத்தும் மறுக்கப்படுவதாக சோலை சுந்தர பெருமாள் படைப்புகள் குறிப்பிடுகின்றன. எனவே இவற்றிற்காக நிகழ்த்தப்படும் போராட்டங்களைக் கோவில் உரிமைப் போராட்டம், தேநீர்க்கடைப் போராட்டம் என வகைப்படுத்தி விளக்கலாம்.

### 1. கோவில் உரிமைப் போராட்டம்

தலித் மக்களுக்கு ஊரில் அமைந்த கோவில்களில் நுழைய முடியாத சூழல் நிலவுகிறது. கோவில் திருவிழாக்களிலும், ஆதிக்கச் சாதியினருக்குச் சமமாகப் பங்கேற்க முடிவதில்லை. காமாட்சி அம்மன் கோவில் திருவிழாவின் இறுதிநாளில் அம்பலக்காரர்கள் வழிபட்டுச் சென்றபின்பும் கோவில் வாசல் பக்கம் போக அனுமதி இல்லாத நிலையில் சக்கிலியர்கள் அர்ச்சனை மற்றும் அபிஷேகம் செய்ய பல போராட்டங்களைச் செய்தனர். அதன்பிறகு அவர்களுக்கு உரிமை கிடைத்தது. இவ்வாறு தலித்துகளுக்குக் கோவிலில் உரிமை கொடுத்ததால் மூப்பர் தெரு வாலிபர்கள் அம்பலக்காரரான கந்தசாமியைத் தாக்கினர். அதன்பிறகு மூப்பர் சமுதாய பண்ணைகளிடமும், சிறு நிலவுடைமையாளர் களிடமும் அடிமை வேலை செய்யும் பறையர் சமுதாயத்தினர் காளிக்குக் கொடுக்கும் பலியில் பங்கு கேட்டனர். ஆனால் அவர்கள் அடிமை வேலை செய்பவர்களுக்குப் பங்கு

கொடுக்காத நிலையில் மூப்பர் சமுதாயத்திற்கு அடிமை வேலை செய்யக்கூடாது என்று முடிவு எடுத்தனர். இதை அறிந்த மூப்பர் சமுதாயத்தினர் இறுதியில் தலித்துகளுக்குக் கோவிலில் இடம் கொடுப்பதில்லை எனவும், பலியில் பங்கு கொடுப்பதில்லை எனவும் கூறினர். எனவே சகடையில் வைத்துச் சாமியைத் தள்ளவும், தப்பு, தம்பட்டை அடிக்கவும் பறைத்தெருவினர் மறுத்தனர். காவல்துறை அதிகாரிகளிடம் "எங்களுக்குக் கோவிலில் சமத்துவம் கிடைக்கிற வரைக்கும் நாங்கள் சாமியைச் சகடையில் வைத்துத் தள்ளவோ, தப்பு தம்பட்டை அடிக்கவோ போவதில்லை ..." (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2003, ப. 201) என்று கூறினர். பின்னர் பறைத் தெருவினர் கொண்டு செல்லும் பால்குடத்தை அவர்கள் முன்னிலையில் சாமிக்கு அபிஷேகம் பண்ணுதல், சாமி கும்பிடும் போது ஆண்டைகள் நிற்கும் வரிசையில் நிற்க உரிமை கொடுத்தல் உட்பட பலதையும் பேசினர். ஆண்டைகள் தலித் இளைஞர்களை அடித்ததற்கு மன்னிப்பும் கேட்கக் கூறினர். ஆனால், இவை எதுவும் ஏற்றுக்கொள்ளப்படவில்லை என்று' 'தப்பாட்டம்' நாவல் குறிப்பிட்டுள்ளது. மேலும் 'செந்நெல்' நாவல் கோவில் இருக்கிற திசைக்குக் கீழத்தெருவினர் போகக்கூடாது என்று குடியானவர்த் தெருவினர் அடக்கி வைத்திருந்ததையும் பின்னர் பல போராட்டங்களுக்குப் பிறகு கோவிலுக்குப் போகலாம் என்ற உரிமை கொடுத்ததையும் குறிப்பிட்டுள்ளது. 'இலையுதிர்காலம்' என்ற சிறுகதை கோவில் விழாவில் கீழத்தெருவினர் சாமி, எங்கத் தெருவுக்கும் வந்தே ஆக வேண்டும் என்று பேசும்போது சாமியைத் தூக்கவே வேண்டாம் என்று ஆதிக்கச் சாதியினர் முடிவுக்கு வந்தனர் (சோலை சுந்தர பெருமாள், மடையான்களும் சில காடைகளும், 2006, ப. 142) என்று குறிப்பிட்டுள்ளது. இவ்வாறு சோலை சுந்தர பெருமாள் படைப்புகளில் குறிப்பிடப்படும் கோவில் உரிமைப் போராட்டங்களில் பல தோல்வியில் முடிந்தன.

## 2. தேநீர்க்கடைப் போராட்டம்

ஒதுக்கப்பட்ட சூழலில் வாழும் தலித்துகள் தலித் அல்லாதவரோடு சேர்ந்து வாழ்வதற்காகச் செய்யப்படும் முயற்சிகள் சில நேரங்களில் பலனளிக்காமல் போகின்றன. தேநீர்க் கடையில் கீழ்ச்சாதி மக்கள் ஆதிக்கச் சாதியினருக்குச் சமமாக அமர்ந்து தேநீர் குடிக்க ஆறுமாதங்களாகப் பேராடினர். பின்னர் மாவட்ட ஆட்சியாளர் மற்றும் பிற அதிகாரிகளை அழைத்துத் தங்களுக்கு எதிராக நடத்தப்படும் தீண்டாமைக் கொடுமைகளைக் கூறினர். மாவட்ட ஆட்சியாளர் ஆதிக்கச் சாதியினரிடம் இனி தீண்டாமைக் கொடுமைகள் செய்தால் 'தீண்டாமைத் தடுப்புச் சட்டத்தில் கைது பண்ணுவோம்' என்று கூறி, இருதரப்பினரையும் சமமாக அமர வைத்துத் தேநீர் கொடுத்தனர். அடுத்தநாள் மதுக்கன் பகடை தேநீர் குடிக்க கடைக்கு வந்தார். அங்குப்

பித்தளை டமாராக்கள் இருந்த இடத்தில் பூப்போட்ட கிளாஸ் மட்டும் மாறியிருந்தது. 'டீக் கொடுங்க சாமி' என்று பணிவாகக் கேட்காததால் டீக்கடைக்காரரான தங்கராசு மூப்பனார் என்பவர் மதுக்கன் பகடையைக் கண்டு கொள்ளவில்லை. அந்தக் கடையில் இருந்த ஒருவர் "தங்கராசு அண்ணே ! நாயி சூத்துல தேனு வடியிதுன்னா நாயும் நாயும் தாண்ணே ... நீ வியாபாரத்தைப் பாரு. . ." எப்பவும் கலெட்டரைக் கூட்டி வச்சிக்கிட்டா டீ வாங்கிக் குடிக்க முடியும் . . .? இத்தோட சேப்புக்கொடியும் கம்யூனிஸ்ட் கட்சியும் ஊருக்குள்ள இருந்து போயிடனும் இல்ல . . . எல்லாத்தையும் கூண்டோடு கைலாசத்துக்கு அனுப்புறாப்போல எங்களுக்கு வேலை கொடுத்திடாதீங்க . . ." (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, பக். 261, 262) என்றார். இந்தப் பேச்சுகளுக்குப் பின்பும் கடைக்காரர் இறுதிவரைத் தேநீர் கொடுக்கவில்லை. 'உதயவாசல்' என்ற சிறுகதையில் தங்கமுத்து என்ற நாடக வாத்தியார் பள்ளி ஆசிரியர் களிடையே சாதிப்பகுப்பு இருப்பதை நேரடியாகப் பார்த்தபோது முன்பு 'கிராமத்துத் தேநீர்க் கடையில் தனிக்குவளை வைத்ததை எதிர்த்து நாடகம் நடித்ததையும், அதனால் ஏற்பட்ட கலகத்தையும் நினைத்துப் பார்க்கிறார்' என்ற செய்தி உள்ளது.

### 5. தீண்டாமைக்கு எதிரான போராட்டம்

சாதி பெற்றெடுத்த குழந்தையாக தீண்டாமை உள்ளது. மனித உரிமை அழிப்பைச் சாதியப் பேய் திட்டமிட்ட வலைப்பின்னலாகச் செய்து தீண்டாமைப் பாகுபாட்டை நிலைப்படுத்துகிறது (அ. அந்தோனி குருசு, தலித்தியக் கருத்தாடல்கள், 2003, ப.119).இந்தப் பாகுபாடு ஏற்றத் தாழ்வான சமுதாயத்தைத் தோற்றுவிக்கிறது. மேலும் ஏற்றத்தாழ்வான சமுதாயத்தில் மனித உரிமை அழிப்பு நிரந்தரமாகிறது. ஆனால் தாழ்த்தப்பட்டோர் உரிமைகள் மனித உரிமைகளே என்றும் தீண்டாமை ஒரு வன்முறை மட்டுமல்ல, இது ஒரு மனித உரிமை மீறலே என்றும் தீண்டாமையின் மூலம் மக்களைப் பாகுபடுத்துவது நாகரீகச் சமூகத்தின் அவலம் என்றும் (இ. தேவசகாயம், மனித உரிமைக் கல்வி, தொடர் – 111 - பாகுபாடு, 2004, ப.94) உள்ள கருத்துகள் இங்குக் கவனத்தில் கொள்ளத்தக்கன. என்றாலும், தலித் மக்கள் பல ஆண்டுகளாக வாழ்க்கை வசதிகள் பறிக்கப்பட்ட நிலையிலும், சமூகப் பொருளாதார நிலையிலும் அடிமைகளாக ஒடுக்கப்பட்டும், நசுக்கப்பட்டும், தீண்டத்தகாதவர்களாக வாழ்கின்றனர். மேலும் ஊரின் ஒதுக்குப் புறங்களிலும், குடிசைகளிலும், சேரிகளிலும் வாழ்ந்து அன்றாட வாழ்க்கைத் தேவைகள் சந்திக்கப்பட பண்ணை அடிமைகளாகி உழைப்பது தவிர அவர்களுக்கு வேறு வழி இல்லை. இதுபோன்ற சூழ்நிலையில் தப்பாட்டம் நாவலில் குறிப்பிடப்படும் தலித் மக்கள் தங்களை மனிதனாக்கும் போராட்டத்தை மேற்கொண்டனர். அதில்

குறிப்பிட்ட சிலரைத் தவிர அனைத்துத் தலித் மக்களும் ஆதிக்கச் சாதியினரின் தூண்டுதலால் விலகினர். இதனை அறிந்த மதுக்கன்பகடை உட்பட அனைவரும் அதிர்ந்தனர். சுந்தரமூர்த்தி வாத்தியார் 'இதனைத் தோல்வி என்று கருதாமல் ஒரு படிப்பினையாக எற்க வேண்டும் என்றார். மேலும், "... தீண்டாமை ஒழிப்புப் போராட்டம் என்பது அவ்வளவு இலேசு இல்லை. பல தலைமுறைகளாகத் தாழ்த்தப்பட்டும் சுரண்டப்பட்டும், அடக்கப்பட்டும், ஒடுக்கப்பட்டும் கிடக்கிற சனங்களோட வாழ்வை மீட்டு எடுக்க போராடுகிற விஷயம் இது ..." (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, ப.303) என்றார். மூப்பர் மற்றும் அம்பலக்கார நாட்டாமைக்காரர்கள் முனியாண்டிச் சாம்பானிடம் 'யாரும் கம்யூனிஸ்ட் கட்சியில் தொடர்பு வைக்க கூடாது என்றும் இதற்கு ஒத்துக்கொண்டால் ஊரினுள் இரத்தம் சிந்தாமல் தடுக்கலாம்' என்றும் எச்சரிக்கை செய்தனர். ஆனால் தலித் இளைஞர்கள் கம்யூனிஸ்ட் கட்சிக்கூட்டம் கூட்டி பிரச்சனைகளைப் பேச முடிவு செய்தனர். இதை அறிந்தவுடன் குடியானவர்த் தெருவினர் கூறியதை நினைத்துக் கலங்கி, "சுந்தர மூர்த்தி சாரையும் துடிப்பா நிக்கிற சின்னப்புள்ளைங்களையும் காவு கொடுக்கப் போறதுக்கு, நாமளும் தொணையா நிக்கப்போறோம் என்று ஆதங்கம் பொங்கி வரவும் வெம்பி வெடித்து அழுதார் முனியாண்டிச் சாம்பான்" (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, பக். 287, 288). இந்தச் சூழ்நிலையில் குடியானவர்த் தெருவினர் வெளியாட்களைத் திரட்டித் தங்கள் வீடுகளில் வைத்திருந்தனர். அவர்கள் 'நீசனுங்க மீறி நடந்தால் போட்டுத்தள்ள வேண்டும்' என்ற முன்னேற்பாட்டுடன் காவல் இருந்தனர். இவ்வாறு பல இன்னல்களில் சிக்கி வாழும் தலித் மக்கள் ஆதிக்கச் சாதியினரின் கொடுமைகளைத் தாங்க முடியாத நிலையில் அவர்களுக்கு எதிராக வழக்குத் தொடர்கின்றனர். இந்தச் சூழ்நிலையில் நாகராசுவின் மனைவியும், அவர் தங்கையும் குளத்தில் குளித்துக் கொண்டிருக்கும் போது அம்பலக்காரத் தெரு சின்னப்பிள்ளை என்பவர் 'எங்கு குளித்தாலும் பறைச் செறுக்கிகள் பறை செறுக்கிதாண்டி ...' என்று இழிவாகப் பேசினார். இதை எதிர்த்த நாகராசுவை அவருடன் வந்தவர்கள் அடித்தனர். இதனால் நாகராசுவும், அவர் மனைவியும் தீண்டாமைச் சட்டத்தில் வழக்குத் தொடர்ந்தார்கள். எனவே காவல்துறையினர் தொடர்புடையவர்களைக் கைது செய்ய வந்ததால் வழக்கில் தொடர்புடையவர்கள் தலைமறைவாயினர். தீண்டாமையிலிருந்து விடுதலை பெற தலித் மக்கள் சமுதாயத்தில் நிலைகொண்டிருக்கும் ஆதிக்கச் சாதியினரை எதிர்த்துப் போராடத் துணிவு கொள்கிறார்கள். இதற்காக மனித உரிமைக் கமிஷன், சமூக சீர்திருத்த இயக்கம், கம்யூனிஸ்ட் கட்சி ஆகியனவும் தலித்துகளுக்கு உதவுகின்றன. இவை பற்றிய செய்திகளைப் பின்வருமாறு தரலாம்.

### 1. மனித உரிமைக் கமிஷன்

மனித உரிமைகள் கேள்விக்குறியாக்கப்படும் போது தலித் மக்களுக்கு மனித உரிமைக் கமிஷன் உதவுகிறது. சாதி பெயர் கூறி இழிவுபடுத்துதல், முடிவெட்டும் இடத்தில் மறுப்பு, தேநீர்க்கடையில் தனிக்குவளை, சமமாக அமர மறுப்பு, கொத்தடிமையாக வைத்து வேலைக்குக் கூலி கொடுக்காமல் இருத்தல், பாதையை அடைத்து வைத்துக் கொடுமைப்படுத்துதல் போன்றவற்றிற்காக தலித் மக்கள் மனித உரிமைக் கமிஷனில் மனு கொடுத்தனர். அப்போது ஆர்.டி.ஒ. பணியிலிருந்தவர் சுந்தரமூர்த்தி வாத்தியாரிடம் 'கம்யூனிஸ்ட் கட்சியில் சேர்ந்து நீங்கதான் கலகத்தைத் தூண்டுகிறீர்களாமே? என்று கேட்க சுந்தர மூர்த்தி வாத்தியார், "எங்களோட வழிகாட்டுதலை எதிர்பார்த்து வருகிறவர்களை நாங்கள் எப்படி விரட்டி அடிக்க முடியும்? நாங்களும் எல்லா அதிகாரிகளிடமும் அந்தக் கிராமத்தில் நடக்கிற தீண்டாமைக் கொடுமைபத்தி பலமுறை பேசியிருக்கோம். மனு கொடுத்திருக்கோம். அதில் பயன் இல்லாதப்பதான் மனித உரிமைக் கமிஷனுக்கும் முதல் அமைச்சருக்கும் மனு கொடுக்கும்படியா ஆயிட்டு" (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, ப. 245) என்றார். பிரச்சனைகள் தீராத நிலையில் அரசின் கவனத்தைத் தங்கள் பக்கம் திருப்ப தலித் மக்கள் முனைகின்ற நிலை வரவேற்கத்தக்கது ஆகும்.

### 2. சமூக சீர்திருத்த இயக்கம்

ஒடுக்கப்பட்டு, அடிமை வேலைகளில் ஈடுபடும் தலித் மக்கள் விமோசனம் பெறவும், சுயஉணர்வுடன் போராடவும் சமூக சீர்திருத்த இயக்கம் உதவுகிறது. சாதி எதிர்ப்புப் போராட்டம் மனிதநேய உணர்வு அடிப்படையில் மட்டுமே அமையும். ஏனெனில், "உழைக்கும் மக்களிடம் உழைப்பின் துன்பச் சுமையும், தேவைக்குக் குறைவான வருவாயும் மனிதநேய எழுச்சி தோன்றுவதற்கு அடிப்படைக் காரணங்களாக இருக்கின்றன" (சி. வின்செண்ட் ராஜ், சமரசம் கி.பி. 2001 (இரண்டாம் பகுதி) மேட்டுக்குடிகள், 2004, ப.63). சுரண்டலை நடத்தவும், அதனைப் பாதுகாக்கவும் தோன்றின சாதியை எதிர்க்கும் போராட்டத்தைச் சுரண்டல் எதிர்ப்புடன் சேர்த்துச் செய்யும் போதுதான் விரைவான வெற்றி கிடைக்கும். "கோடிக்கணக்கான மக்களிடையே சாதி எதிர்ப்பு உணர்வையும் மனிதநேயத்தையும் தட்டி எழுப்ப சமூக சீர்திருத்த இயக்கம் தேவைதான். ஆனால் அது வெறும் சமூக சீர்திருத்த இயக்கமாக நின்றுவிடக்கூடாது. மாறாக சுரண்டலுக்கு எதிரான போராட்டத்தையும் சேர்த்துச் செய்யும் போதுதான் அது மனித இனத்துக்கான வெற்றியைக் கொடுக்கும்" (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, ப. 142). இந்த அடிப்படையில் தலித் சமுதாயத்தை

முன்னேற்றும் நோக்குடன் சமூக சீர்திருத்த இயக்கம் செயல்பட்டு வருகிறது.

### 3. கம்யூனிஸ்ட் கட்சி

தலித் மக்களின் முன்னேற்றத்திற்குத் தூண்டுகோலாக இருப்பதால் தலித் மக்கள் கம்யூனிஸ்ட் கட்சியைச் சார்ந்துள்ளனர். "சாதிகள் ஒவ்வொன்றும் தங்களுக்கெனச் சங்கங்களை அமைத்துத் தத்தம் உரிமைகளுக்காகப் போராடிக் கொண்டு வருகின்றன" (அரங்க. மு.முருகையன், 'என்னுரை', சாதீயம், 1990, ப. xiii). இந்த நிலையில் 'கம்யூனிஸ்ட் கட்சியினர் கூட்டம் கூடி கலவரத்தைத் தூண்டுகின்றனர். கட்சிக்கு ஆதாயம் தேடுகின்றனர்' என்பன போன்ற குற்றச்சாட்டுகள் கம்யூனிஸ்ட் கட்சிக்கு எதிராகப் பரப்பப்பட்டன என்று 'தப்பாட்டம்' நாவல் குறிப்பிடுகிறது. இதைத் தவிர்க்க பத்திரிகையாளர் கூட்டத்தைக் கூட்டி நிலைமையை விளக்க வேண்டும் என்று சுந்தரமூர்த்தி வாத்தியாரும், தோழர்களும் முடிவு செய்தனர். மேலும், ரெட்டிப்பாளையத்தில் தீண்டாமைக் கொடுமை இருந்ததை அரசு அதிகாரிகள் நேரில் பார்த்துத் தீண்டாமைக் கொடுமை நீடிக்கக்கூடாது என்று அறிவித்தது, இரட்டைக்குவளை முறையை ஒழித்தது, இதைத் தொடர்ந்து சாதி வெறியர்கள் ஊர்க்கட்டுப்பாடு என்று கூடி தாழ்த்தப்பட்டவர்களுக்கு நெருக்கடி கொடுத்தது, நாகராசன் என்பவர் காது ஜவ் அறுபடும்படியும் மூளை நரம்பு பாதிக்கப்படும்படியும் தாக்கப்பட்டது, குளங்களில் மாடுகளைக் குளிப்பாட்டவும் பெண்களைக் குளிக்கவும் விடாமல் அடித்து விரட்டியதை மாவட்ட ஆட்சியருக்கும் வட்டாட்சியருக்கும் காவல்துறை யினருக்கும் தெரிவித்தும் உரிய நடவடிக்கை எடுக்கப்படாதது, ஊர்க்கூட்டம் போட்டுத் தாழ்த்தப்பட்டவர்களை இழிவாகத் திட்டுவது, நிபந்தனைகள் விதிப்பது, கட்சிக்கொடி மரங்களை வெட்டுவது, உரிமைப் போராட்டத்தைத் திசை திருப்ப கம்யூனிஸ்ட் கட்சி மீது களங்கம் ஏற்படுத்துவது இவைகளெல்லாம் பத்திரிகைச் செய்திகளாக வெளிவந்ததுடன், "அரசியல் சட்டம் வழங்கும் சமஉரிமை மறுக்கப் படுவதோடு மனித உரிமையும் கேள்விக்குரியதாக ஆக்கப்பட்டுள்ளது. எத்தனையோ வன்கொடுமை தடைச் சட்டங்கள் இருந்தும் தீண்டாமைக் கொடுமை புரிந்தே தீருவோம் என்று கூறித் தாக்குதல் நடத்துவோர் மீது மாவட்ட நிர்வாகம் நடவடிக்கை எடுக்க மறுக்கிறது. எனவே தான் மாவட்ட நிர்வாகமும் தீண்டாமைக்கு ஆதரவாகச் செயல்படுகிறது என்றும் குற்றம் சாட்டுகிறோம் . . ." (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, ப.293) என்ற அறிக்கையும் வெளிவந்தது. இது சாதி வெறியர்களிடையே அச்சத்தை ஏற்படுத்தியது. இதுபோன்ற செயல்பாடுகளினால் தலித் மக்களுக்கு ஆதரவாகச் செயல்படுகின்றவர்கள் பொய்க் குற்றச்சாட்டிற்கு உள்ளாக்கப்படுகின்றனர். மேலும் தலித் மக்கள் தங்கள் தலைமுறை

யினராவது மானம் நிறைந்த வாழ்வு வாழ வேண்டும் என்று விரும்புகின்றனர். இதற்கான போராட்டங்களில் ஈடுபடும் போது ஆதிக்கச் சாதியினர் அவர்களையும், அவர்களுக்கு ஆதரவு செய்பவர்களையும் பொய்க்காரணம் காட்டிக் கைது செய்யத் தூண்டுகின்றனர். 'தப்பாட்டம்' நாவல் குறிப்பிடும் ரெட்டிப் பாளையத்தில் நிலவிய சீரற்ற நிலையை முடிவிற்குக் கொண்டுவர கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் நடைபெற்ற பேச்சுவார்த்தையில் சில முடிவுகள் எடுக்கப்பட்டன. இதை ஏற்றுக் கொண்டு தோழப்பனும் அவன் நண்பர்களும் வெளியில் வந்தனர். அப்போது சுந்தரமூர்த்தி வாத்தியாரைக் கைது செய்வதற்கான ஆவணங்களை வல்லம் எஸ்.ஐ. கொடுத்தார். இவ்வாறு "தங்கள் நியாயமான உரிமைகளைக் கோர முயற்சி செய்பவர்களின் மீது காவல்துறையினர் நேரடி நடவடிக்கை வாயிலாகவும், முரட்டுத்தனமான செயல்கள் மூலமாகவும் எதிர்ப்புடன் நடந்து கொண்டிருக்கிறார்கள். நாடு முழுவதிலுமுள்ள தலித் செயல்பாட்டாளர்கள் "பயங்கரவாதிகள்" , "நாட்டுப் பாதுகாப்புக்குக் குந்தகம் விளைவிக்கக் கூடியவர்கள்", "குற்றங்கள் செய்வதையே தொழிலாகக் கொண்டவர்கள்" போன்ற குற்றச்சாட்டுகளை எதிர்கொண்டு வருகிறார்கள்" (அந்தோணி குரூஸ், ஜான் வின்செண்ட், நொறுக்கப்பட்ட மக்கள், 2002, ப. 256). சுந்தர மூர்த்தி வாத்தியார் தாழ்த்தப்பட்ட மக்களைத் தரக்குறைவாகப் பேசினதாகக் பொய்க்குற்றம் சாட்டப்பட்டுத் தீண்டாமைக் கொடுமைச் சட்டத்தின்கீழ் வழக்குப்பதிவு செய்யப்பட்டுக் கைது செய்யப்பட்டார். இது தோழப்பனையும், அவனைச் சார்ந்தவர்களையும் வருந்த வைத்தது. மாவட்ட நிர்வாகமும், பண்ணை மாகாணமும், குடியானவர்த் தெருக்களும் பேச்சு வார்த்தையை மீறி வாத்தியாரைக் கைது செய்ததால் விசாலம் உட்பட்டவர்கள் கைது செய்ய வந்தவர்கள் பயணம் செய்த வேன் செல்லாமல் 'மாவட்ட நிர்வாகமே எங்களைப் பழி வாங்காதே !' என்ற முழக்கத்துடன் குறுக்காக அமர்ந்தார்கள். சுந்தரமூர்த்தி வாத்தியார் "...நீங்க இப்ப தற்காலிகமாக பின்வாங்கித்தான் ஆகணும். ஆனா அதே சமயம் அடுத்த நொடியிலிருந்து போராட்டத்தைத் தொடர்ந்து நடத்தத்தான் வேணும் ... நம் போராட்டம் அவ்வளவு லேசுல வெற்றிப் பெற ஆதிக்கச் சாதிகளும், அதிகார வர்க்கமும் பாத்துக்கிட்டு நிக்காது. இந்தச் சக்திகளையும் மீறித்தான் . . . உழைக்கும் வர்க்கம் ஒண்ணா தெரண்டுட்டா போராட்டமும் சீக்கிரம் வெற்றிய கொண்டாந்து சேர்த்திடும் ... அதுக்கான முயற்சியில் இறங்கி போராட்டத்தை வலுப்படுத்திட்டா போராட்டம் நம்மை புதிய விடிவுக்குக் கொண்டு போற நேரம் ரொம்ப தூரத்தில இல்ல ..." (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, பக். 308, 309) என்றார். இந்தப் பேச்சைக் கேட்டு வேனை வழிமறித்தவர்கள் விலகி வழிவிட்டார்கள். 'தப்பாட்டம்' நாவலில் இடம்பெற்ற தலித் மக்களின்

போராட்டங்களில் பெரும்பான்மையும் தோல்வியில் முடிந்தாலும் சுந்தர மூர்த்தி வாத்தியாரின் விடுதலை அவர்களைப் புது முயற்சியில் ஈடுபட வைக்கிறது. சுந்தரமூர்த்தி வாத்தியாரின் விடுதலையைத் தோழப்பன் மற்றும் அவன் தோழர்கள் புது எழுச்சியுடன் உணர்ச்சிப் பெருக்கில் கொண்டாடினர். யாரும் எதிர்பாராத கூட்டத்தில் தாரையும், தம்பட்டையும் இதுவரை வெளிப்படுத்தாத சத்தத்தை முழக்க, தப்புகள் போர்க்குரலாய் ஒலித்தன. 'வாழ்க !' என்ற வாழ்த்தொலியுடன் கைதட்டும் ஆரவாரமும் சேர்ந்து ரெட்டிப்பாளையக் குடியானவர்த் தெருவையும், சுற்றுப்பட்ட இடங்களையும் அதிர்ச்சியில் உறைய வைத்தன (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, ப.315). இந்த விடுதலையை ரெட்டிப்பாளையத் தலித் மக்களின் விடுதலையின் ஆரம்ப வடிவம் எனக் கொள்ளலாம். 'செந்நெல்' நாவலில் குறிப்பிடப்படும் வடிவேலு பொய்க் குற்றம் சாட்டப்பட்டுக் கைது செய்யப்படுகிறார். ஆனால், பாகுபாடு இல்லாமல் சட்டத்தில் சம பாதுகாப்புப் பெறவும், பாகுபாடு தூண்டப்பட்டால் அதற்கு எதிராக பாதுகாப்புப் பெறவும் அனைவருக்கும் உரிமை உண்டு. இவ்வாறு சட்டத்தில் வாசகங்கள் இருந்தாலும் இந்த உரிமைகள் தலித் மக்களுக்கும், அவர்களுக்கு ஆதரவாகச் செயல்படுகிறவர்களுக்கும் மறுக்கப்படுவதுதான் கொடுமையான நிகழ்வாகத் தொடர்கிறது. மேலும், இந்த நாவலில் குறிப்பிடப்படும் கண்ணுசாமி 'இது நம் செங்கொடிக்கும், அவர்களின் மஞ்சள் கொடிக்கும் இடையே நடக்கும் போராட்டம். நம் கொடிக்காக நாம் எதையும் இழக்கத் தயாராக வேண்டும். நான் என்னையே ஒப்படைத்துவிட்டேன். அப்பா உனக்கு ஒரு பிள்ளைதான் என்று நினைத்துக் கொள் என்றான். இதைக் கேட்ட அனைவரும் செங்கொடிக்காகப் போராட வேண்டும் என்று உறுதி கொண்டார்கள். இவ்வாறு கூலி உயர்வுப் பிரச்சனையில் தலித் மக்கள் தங்களுக்கு ஆதரவுக்கரம் நீட்டின செங்கொடியைப் பாதுகாக்க உறுதிகொண்டனர். அதோடு "செங்கொடி ஓங்குக ! ஓங்குக ! தொழிலாளர் ஒற்றுமை வளர்க !' என்று அனைவரும் உரத்தக்குரலில் உணர்ச்சியாய் கோஷம் போட்டனர் (சோலை சுந்தர பெருமாள், செந்நெல், 2003, ப. 196). 'பெருந்திணை' நாவலில் குறிப்பிடப்படும் கம்யூனிஸ்ட் கட்சி ஊருக்கு ஒதுக்குப் புறங்களில் கூனிக் குறுகி வாழ்க்கை நடத்தும் தலித் மக்களைத் தலை நிமிர வைத்து உழைப்பிற்கான கூலியை அவர்கள் பெற பல போராட்டங்களை நடத்தியது. மேலும், நீரின்மையால் தலித் விவசாயக் கூலிகளுக்கு வேலை கிடைக்காமல் வறுமை தாண்டவம் ஆடினபோது அரசிற்கு எதிராகப் போராட்டங்கள் நடத்த உதவினது. காவிரிக் கரையில் வாழும் மக்களின் வாழ்க்கைப் பிரச்சனையை மையமாக வைத்துக் கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பில் தலித் தொழிலாளர்கள் அமைதியாக காவிரியில் நீர் விடக்கோரி கொடி தூக்கிக் கொண்டு போராடினார்கள் (சோலை சுந்தர பெருமாள், பெருந்திணை, 2005, ப.62). அந்தப்

போராட்டத்தில் 'விவசாயக் கூலித் தொழிலாளர்களுக்கு வேலை வாய்ப்பை உறுதி செய்ய வேண்டும்' என்பது போன்ற கோரிக்கைகள் முன் வைக்கப்பட்டன. இறுதியில் போராட்டம் தோல்வியில் முடிந்தாலும் அந்தப் போராட்டம் அரசின் கவனத்தைக் கவர்ந்தது.

## 6. பெண் உரிமைக்கான போராட்டம்

தலித் மக்கள் ஒடுக்கப்பட்டவர்கள். அதிலும், தலித் பெண்கள் மிகவும் ஒடுக்குதலுக்கு உள்ளாக்கப்பட்டு வருகின்றனர். மாண்பு, தகுதி, நன்மதிப்பு, சுயமரியாதை ஆகியவற்றில் ஆண்களுக்கு நிகரான அனைத்தும் பெண்களுக்கும் உண்டு. ஆனால், ஆதிக்கச் சாதிப் பெண்களே இவற்றிற்காகப் போராடும் நிலையில் தலித் பெண்களின் நிலை மிகவும் வருத்தமடையச் செய்வதாக உள்ளது. மேலும் அவர்கள் பால்சார்ந்த வன்முறைகளிலிருந்து தப்பித்துக் கொள்வதற்காகப் பல்வேறு வழிமுறைகளைக் கையாளவேண்டிய நிலையிலும் உள்ளனர். ஆனால் பால்சார்ந்த சமத்துவம் என்பது பால்சார்ந்த வன்முறையிலிருந்து பாதுகாப்பையும், மனித மாண்புடன் பணிபுரிவதையும் உள்ளடக்கியதாகும். இது உலக அளவில் அங்கீகரிக்கப்பட்ட அடிப்படை மனித உரிமையாகும். மேலும் இந்தப் பொதுவான குறைந்தபட்ச தேவை உலகளவில் ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒன்றாகவும் உள்ளது (ஜான் வின்சென்ட், பணியிடங்களில் பாலியல் வன்முறை, 1998, ப.8). 'செந்நெல்' நாவலில் இடம்பெற்ற ரெங்கபாஷ்ய நாயுடு என்பவர் செல்வி என்ற தலித் பெண்ணிடம் தகாதபடி உரையாடினார். சீறி எழுந்த செல்வி "நாய்க்கப்பயலே ! போடா ஒன்னோட பொண்ண அழைச்சிக்கிட்டு வந்து என் மாமன்கிட்டக்க விட்டுட்டு வாடா. நான் உன்கிட்ட படுத்துக்கிறேன் . . ." (சோலை சுந்தர பெருமாள், செந்நெல், 2003, ப. 100) என்றாள். செல்வி தன் சுயமதிப்பைக் காத்தாள். இதனால் நாயுடு வெட்கித் தலைகுனிந்தார். தலித் பெண்கள் ஆதிக்கச் சாதியினரை எதிர்த்தால் அவர்கள் கொடுக்கும் தண்டனையை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பது கட்டாய நடைமுறையாக உள்ளது. இதனைச் சாதகமாகப் பயன்படுத்திய ரெங்கபாஷ்ய நாயுடு தன்னை எதிர்த்துப் பேசின செல்வியைக் கடத்தி அவளைப் பலாத்காரம் செய்து சீரழிக்க வேண்டும் என்று திட்டமிட்டார். எனவே மாரியம்மன் கோவில் விழாவில் குறவன் குறத்தி ஆட்டம் பார்க்கச் செல்லும் வழியில் செல்வியை வீரப்பனுடைய உதவியுடன் தடுத்துத் தூக்கி இருஞ்சூரு கோபால கிருஷ்ண நாயுடுவின் பண்ணை வீட்டில் அடைத்து வைத்தார். இதை அறிந்த கண்ணுசாமி சில ஆட்களுடன் பண்ணை வீட்டிற்கு விரைந்தான். அங்குக் காவலாக இருந்த தலையாரியை அடித்து, உண்மையை வரவழைத்துப் பண்ணை வீட்டிலிருந்து செல்வியை மீட்டான். இவ்வாறு தலித் பெண்கள் பாதுகாப்பற்ற நிலையில் வாழ்கின்ற நிலையை அறிய முடிகிறது.

## 7. இடுகாடு பெறுவதற்கான போராட்டம்

'தப்பாட்டம்' நாவலில் இடம்பெற்ற காருக்குடியிலுள்ள தெற்குச்சேரித் தெருவினர் பிணத்தைக் குடியானவர்த்தெரு வழியாகக் கொண்டு சென்று காவிரிக்கரையிலுள்ள குடியானவர்த் தெருவினரின் இடுகாட்டில் எரிக்க வேண்டும் என்று முடிவு செய்தனர். இதற்குக் குடியானவர்த் தெருவினரும், காவல்துறையினரும் எதிர்ப்புத் தெரிவித்தனர். சேரித்தெருவினர் குடியானவர்த்தெரு வழியாகச் செல்ல முயலும்போது தடுத்த காவல்துறை அதிகாரியிடம் வரகூர் அறிவு "சார் நீங்க துப்பாக்கிச் சூடு நடத்திடுவீங்கன்னு எங்களுக்குத் தெரியும். ஆனால் நீங்கள் நடத்திறதப்பத்தியும் எங்களுக்கு ஆட்சேபம் இருக்காது. நீங்க துப்பாக்கிச் சூட்டுக்கு ஆர்டர் கொடுப்பீங்க . . . அதே சமயம் நான் வாணம் விடச் சொல்லிடவும் தயாராக இருக்கேன். . . . தோழர்களே ! எல்லாரும் உங்க கையில உள்ள வாணத்தை விட ரெடியா வச்சுங்க . . . உங்க துப்பாக்கிக்கு எங்கள்ல நூறு பேருன்னா அதுபோல எங்க வாணத்துக்கு உங்கள்ல நூறு பேர்" (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, ப. 313) என்றார். இவ்வாறு, அன்று கட்சியின் வழிகாட்டலுக்கு நம்பிக்கையானவர்கள் இருந்ததால் சேரித்தெருவினர் திட்டமிட்டதைச் சரியாகச் செய்து முடித்தனர். இதனால் போராட்டமும் வெற்றியில் முடிந்தது.

## 8. மனிதனாக வாழும் உரிமைக்கான போராட்டம்

'மரக்கால்' என்ற நாவலில் சுட்டப்பட்டுள்ள சோழதேசத்துக்குக் கட்டுப்பட்ட செம்மங்குடி பிரமதேய பறையர் பண்ணை அடிமைகளான மருதனும் நாகனும் மனிதனாக வாழும் உரிமைக்காகப் போராடினதால் பல சித்ரவதைகளுக்கு உள்ளாயினர் (சோலை சுந்தர பெருமாள், மரக்கால், 2007, ப. 216). இறுதியில் பண்ணையை எதிர்க்கும் அடிமைகளை அயல்தேசத்திற்கு அடிமைகளாக கப்பல் ஏற்றி விட வேண்டும் என்று பிரமதேய அதிபர் உத்தரவு போட்டபோது மருதனும், நாகனும் காவலனை ஏமாற்றி, அவனைத் தாக்கி, அவனிடம் இருந்த ராஜாங்க முத்திரையை வாங்கிக் கொண்டு தப்பினர். பறையர் அடிமைகளை ஆடுமாடுகளை விடவும் இழிவாகப் பண்ணைகள் நடத்துவதைக் கண்ட மருதன் என்பவன் கண்காணி சவுக்கடி கொடுத்தவுடன் அவனை மனதில் இருந்த சினம் கொப்பளிக்க தன் மக்களின் வாழ்வுநிலையை நினைத்துத் திருப்பித் தாக்கினான். மேலும், கோயிலடி களத்தில் கொளுத்தும் வெயிலில் நின்று நெல் கோட்டை கட்டும் வேலை செய்து கொண்டிருக்கும் போது தாகத்தின் காரணமாக நாகனும், சிலரும் கோவில் குளத்தின் நீர் குடித்த குற்றத்திற்காகத் தண்டம் கொடுக்கும் போது மருதன் நஞ்சைக் கண்காணியைக் கீழேத்

தள்ளினான் (சோலை சுந்தர பெருமாள், மரக்கால், 2007, ப. 216). இந்தப் போராட்டம் தோல்வியில் முடிந்தது.

## தொகுப்புரை

'சோலை சுந்தர பெருமாள் படைப்புகள் குறிப்பிடும் தலித்துகளின் வாழ்வுரிமைப் போராட்டங்கள்' என்ற பொருண்மையின் அடிப்படையில் பின்வருமாறு செய்திகளைத் தொகுத்து அறியலாம்.

1. மனிதன் மாண்புடன் வாழ மனித உரிமைகள் உதவுகின்றன. மனித உரிமைகள் மனிதனின் தனிமனித மதிப்பை மேம்படுத்துவதாகவும், சமுதாயத்தாலும், சட்டத்தாலும் அங்கீகரிக்கப்பட்டதாகவும் உள்ளன. ஆனால் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு இந்த உரிமைகள் அனைத்தும் மறுக்கப்படுகின்றன. எனவே அவர்கள் தங்களுக்கு மறுக்கப்பட்ட உரிமைகளை மீட்டெடுக்கப் போராடுகின்றனர். இந்த நிலையில் விடுதலை என்பது அவர்களின் குறிக்கோளாகிறது. சில வேளைகளில் போராட்டங்களின் முடிவு தோல்வியாக இருந்தாலும் அவர்கள் மனதில் நம்பிக்கைத் துளிர்விடுகிறது.

2. தலித் மக்கள் இழந்த மனித மாண்புகள் அனைத்தையும் மீட்பதற்கான அடிப்படைத் தேவைகளாக போராட்டங்களைக் கருதி அவற்றில் ஈடுபடுகிறார்கள். ஆனால் போராடிப் பெற்ற சமுதாய நிலத்தின் பயனை அனுபவிப்பவர்கள் சமுதாய நிலம் தங்களுக்குச் சொந்தமாகும் வரை எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும் என்ற கருத்தும் வலுவூட்டப்படுகிறது.

3. தலித்துகள் தங்களது உரிமைகளுக்காகப் போராடும் போது அவர்களின் வேலை மற்றும் கூலியை ஆதிக்கச் சாதியினர் தடை செய்கின்றனர். என்றாலும் தலித் மக்கள் தங்களுக்குச் சுயமரியாதையும், உரிமையும் முக்கியம் என்று முடிவெடுத்துப் போராட்டங்களில் ஈடுபடுகின்றனர். அவ்வாறு கூலி உயர்விற்காகக் கீழ வெண்மணியில் தொடங்கின போராட்டம் தஞ்சை வரை பரவினது. நியாயம் கேட்கப் போன தலித் தொழிலாளர்கள் தாக்கப்பட்டனர். அவர்களின் கையிருப்புக் கரைந்தது. போராட்டத்தைக் கைவிட்டு வேலைக்குச் செல்ல ஆதிக்கச் சாதியினர் கூறினர். கூலி உயர்வு பெறாமல் வேலைக்குச் செல்ல மறுத்த அவர்கள் வேறு ஆட்கள் வாயிலாக வேலை செய்வதையும் தடுக்க முயன்றனர். இதனால் சினம் கொண்ட கோபாலகிருஷ்ண நாயுடு என்பவர் கலவரத்தைத் தூண்டி கீழவெண்மணி மக்களை அடித்து உதைத்தார். இந்தத் தாக்குதலை அவர்களால் எதிர்கொள்ள இயலவில்லை. இந்தச் சூழ்நிலையில் அரசின் தலையீட்டால் தலித் விவசாயத் தொழிலாளர்கள் எட்டணா கூலி உயர்வு பெற்றனர். பின்னர் எட்டாம் நம்பர் பயிர் அறுவடையின் போது கலத்திற்கு ஆறுபடி கூலியைத் தரவேண்டும் என்று தலித் மக்கள் ஆதிக்கச் சாதியினரிடம் கேட்டனர். இதனால் போராட்டம்

மீண்டும் தொடர்ந்தது. எனவே பண்ணை இடத்தில் அமைத்திருந்த தலித்துகளின் வீடுகளைப் பிரிக்குமாறு ஆதிக்கச் சாதியினர் மிரட்டினர். இந்தச் சூழ்நிலையில் தலித் இளைஞர்களால் கோபாலகிருஷ்ண நாயுடுவின் காரியக்காரன் வீரப்பன் கொல்லப்பட்டான். தலித் மக்கள் அமைதியாகத் தொடங்கின போராட்டம் நாளடைவில் வன்முறையை நோக்கிச் சென்றது. எனவே கோபால கிருஷ்ண நாயுடு குண்டர் படையுடன் வந்தார். அவருக்குப் பயந்து தலித் மக்கள் ராமையன் என்பவரது வீட்டிற்குள் நுழைந்தனர். உடனே கோபால கிருஷ்ண நாயுடு அனைவரையும் வீட்டோடு சேர்த்துத் தீயிட்டுக் கொளுத்தினார். இதனால் 'செந்நெல்' நாவலில் கூறப்பட்டுள்ள கீழவெண்மணி தலித் மக்களின் கூலி உயர்வுப் போராட்டம் தோல்வியில் முடிந்தது.

4. 'தப்பாட்டம்' நாவலில் அடிமை வேலைக்கு எதிரான போராட்டம் குறித்த செய்திகள் கூறப்பட்டுள்ளன. கூலி உயர்த்திக் கொடுக்கா விட்டால் அடிமை வேலை செய்ய மாட்டோம் என்று சாமு சாம்பான் மற்றும் தம்புராயன் பகடை ஆகியோர் கூறினர். இவ்வாறு ஆதிக்கச் சாதியினரிடம் பேசும் போது வழக்கமாக அவர்கள் இடுப்பில் கட்டும் துண்டு தோளில் கிடந்தது. மேலும் அவர்கள் கையை ஆட்டிப் பேசினர். அதோடு ஏற்ற கூலி இல்லாமல் விவசாய வேலைக்குச் செல்வதில்லை என்றும் முடிவு எடுத்தனர். விரும்பும் வேலையைச் செய்யும் உரிமை, நியாயமான மற்றும் சாதகமான பணியிடத்தில் பணிபுரியும் உரிமை, வேலைக்கு ஏற்ற கூலி பெறும் உரிமை, வேலையின்மைக்கு எதிராகப் பாதுகாப்புப் பெறும் உரிமை இவை மனிதர் அனைவருக்கும் பொதுவானவை. ஆனால் தலித் மக்கள் கடினமானதும், இழிவானதுமாகக் கருதக்கூடிய அனைத்துப் பணிகளையும் செய்ய வற்புறுத்தப்படுகின்றனர். இது மானிடத் தன்மை வாய்ந்த செயல் அல்ல.

5. மனிதனாகப் பிறந்ததினால் தனிநபர் ஒருவர் அனைத்து உரிமைகளையும், சமமாகப் பெறுவதற்குத் தகுதியுடையவர் ஆகிறார். மேலும் சாதி, மதம், நிறம், பாலினம், இனம், பிறப்பிடம் ஆகிய வேறுபாடுகள் இன்றி அனைவரும் சமமாக நடத்தப்பட வேண்டும் என மனித உரிமைகள் வலியுறுத்துகின்றன. சோலை சுந்தர பெருமாள் படைப்புகளில் இடம்பெற்ற போராட்டங்களில் கோவில் உரிமைப் போராட்டம், தேநீர்க்கடை போராட்டம் ஆகியவற்றைச் சமஉரிமைக்கான போராட்டங்கள் எனலாம்.

6.ஊரிலுள்ள கோவில்களில் தலித் மக்கள் நுழையக்கூடாது என்ற சூழ்நிலை நிலவுகிறது. மேலும், திருவிழாக்களில் தலித் மக்கள் பங்கேற்கவும் அனுமதி இல்லை. 'தப்பாட்டம்' நாவல் குறிப்பிடும் காமாட்சி அம்மன் கோவில் திருவிழாவின் இறுதிநாளில் அர்ச்சனை மற்றும் அபிஷேகம் செய்ய பல போராட்டங்களுக்குப் பிறகு சக்கிலியர்கள்

உரிமை பெற்றனர். பறையர் சாதியினர் மூப்பனார் சமுதாயத்தினரிடம் காளிக்குக் கொடுக்கும் பலியில் பங்கு கேட்டனர். மூப்பர் சாதியினர் மறுத்த நிலையில் அவர்களுக்கு அடிமை வேலை செய்ய தலித் மக்கள் மறுப்புத் தெரிவித்தனர். 'செந்நெல்' நாவல் குறிப்பிடும் தலித் மக்களைக் கோவில் இருக்கும் திசையில் போகக்கூடாது என்று ஆதிக்கச் சாதியினர் தடுத்தனர். எனவே பல போராட்டங்கள் நடைபெற்ற பிறகு கோவிலில் நுழைய அனுமதி கிடைத்தது. 'இலையுதிர் காலம்' என்ற சிறுகதையிலும் கோவில் விழாவில் தலித் மக்கள் பங்கெடுக்க நடைபெற்ற போராட்டம் குறித்த செய்தி கூறப்பட்டுள்ளது.

7. ரெட்டிப்பாளையத்தில் தலித் மக்கள் ஆதிக்கச் சாதியினருடன் சமமாக அமர்ந்து தேநீர் குடிக்க ஆறுமாதங்களாகப் போராடினர். இறுதியில் மேல் அதிகாரிகள் பலர் வந்து ஆதிக்கச் சாதியினருக்குச் சமமாக தலித் மக்களை உட்கார வைத்துத் தேநீர் வழங்க ஏற்பாடு செய்ததுடன் சமரசமும் பேசினர். ஆனால் அடுத்த நாள் முதல் பழைய முறையே நிலவில் வந்தது. இதனால் தலித் மக்களின் தேநீர்க் கடைப் போராட்டம் தோல்வியடைந்தது.

8. பல தலைமுறைகளாகத் தலித் மக்கள் வாழ்க்கை வசதிகள் பறிக்கப்பட்ட நிலையில் அடிமைகளாக ஒடுக்கப்பட்டு, நசுக்கப்பட்டுத் தீண்டத்தகாதவர்களாக வாழ்கின்றனர். அன்றாடத் தேவைகள் சந்திக்கப்பட உழைப்பது தவிர தலித் மக்களுக்கு வேறு வழியில்லை. ரெட்டிப் பாளையத்தில் தலித் மக்களின் ஒற்றுமையின்மையால் அவர்களின் போராட்டம் தோல்வியில் முடிந்தது. எனினும் போராட்டத்தில் அக்கறையுள்ள மதுக்கன் பகடை போன்றோருக்குச் சுந்தரமூர்த்தி வாத்தியாரின் அறிவுரைகள் புத்தெழுச்சியூட்டின. சுந்தரமூர்த்தி வாத்தியாரின் விடுதலையை ரெட்டிப்பாளையத் தலித் மக்களின் விடுதலையின் ஆரம்ப வடிவம் எனலாம். மனித உரிமைகள் கேள்விக்குறியாக்கப்படும் நிலையில் தலித் மக்களுக்கு மனித உரிமைக் கமிஷன் உதவியது என்று 'தப்பாட்டம்' நாவல் கூறுகிறது. மேலும் தலித் மக்கள் சுயஉணர்வுடன் போராட சமூக சீர்திருத்த இயக்கம் தூண்டுகோலாயிருந்தது. தலித் மக்களுக்கு விழிப்புணர்வைத் தூண்ட கம்யூனிஸ்ட் கட்சி மேற்கொண்ட முயற்சிகள் 'தப்பாட்டம்', 'பெருந்திணை', 'செந்நெல்' ஆகிய நாவல்களில் பதிவாகியுள்ளன.

9. மாண்பு, தகுதி, நன்மதிப்பு, சுயமரியாதை இவற்றிற்காகப் பெண் இனம் பாடுபடும் நிலையில் தலித் பெண்களின் நிலை மிகவும் சிக்கல் வாய்ந்ததாக உள்ளது. பால் சமத்துவம் என்பது பால்சார்ந்த வன்முறையிலிருந்து பாதுகாப்பையும், மனித மாண்புடன் பணிபுரிவதையும் உள்ளடக்கியதாகும். இது உலகளவில்

ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒன்றாகும். ஆனால் தலித் பெண்கள் ஆதிக்கச் சாதியினரை எதிர்த்தால் அவர்கள் கொடுக்கும் தண்டனையை ஏற்றுக்கொள்ள வேண்டியது கட்டாயமாகிறது. 'செந்நெல்' நாவல் குறிப்பிடும் செல்வி என்பவள் பால் சார்ந்த வன்முறையிலிருந்து தன்னைப் பாதுகாத்துக் கொள்ள ரெங்கபாஷ்ய நாயுடுவை எதிர்த்தாள். இந்தப் போராட்டத்தின் விளைவாகச் செல்வி கடத்தப்பட்டாள். பின்னர் கண்ணுசாமி அவளைப் பத்திரமாக மீட்டான்.

10. 'தப்பாட்டம்' நாவலில் காருக்குடியிலுள்ள தலித் மக்கள் இடுகாடு பெறுவதற்கான போராட்டத்தில் ஆதிக்கச் சாதியினர் மற்றும் அரசு அலுவலர்களை எதிர்த்து வெற்றி பெற்றனர்.

11. 'மரக்கால்' என்ற நாவலில் மருதன் மற்றும் நாகன் என்பவர்கள் மனிதனாக வாழும் உரிமைக்காகப் போராடினதால் ஆதிக்கச் சாதியினரால் கொடிய தண்டனைகளைப் பெற்றதுடன் நாடு கடத்தப்படும் நிலைக்கும் உள்ளாயினர். எனவே அவர்களது போராட்டம் தோல்வியில் முடிந்தது.

போராட்டம் என்னும் செயல்பாடு தலித் விடுதலையின் ஆரம்ப வடிவம் ஆகும். எனவே தலித் மக்கள் தங்களிடையேயான சிறிய பிரச்சனைகளைப் புறக்கணித்துவிட்டு வலிமையான ஓரணியாகத் திரண்டு போராட்டத்தில் ஈடுபட்டால் மட்டுமே வெற்றிபெற முடியும். அதோடு போராட்டத்தில் ஈடுபடும் போது வரும் இழப்புகளைத் தாங்கினால்தான் தலித் தலைமுறையினர் தலை நிமிர்ந்து வாழ்வர் என்ற கருத்தும் சோலை சுந்தர பெருமாள் படைப்புகளில் இடம்பெற்றுள்ளன.

# 5. சோலை சுந்தர பெருமாள் படைப்புகள் குறிப்பிடும் விளிம்புநிலை மக்களின் வாழ்க்கை மேம்பாட்டுச் சிந்தனைகள்

தலித் இலக்கியங்கள் தாழ்த்தப்பட்ட மக்களின் அவல வாழ்க்கையை விளக்குவதுடன் அவர்களது வாழ்க்கை மேம்பாட்டிற்கான வழிமுறைகளைச் சுட்டிக்காட்டி விழிப்புணர்வைத் துண்டுவனவாகவும் உள்ளன. இந்த அடிப்படையில் சோலை சுந்தர பெருமாள் படைப்புகள் குறிப்பிடும் தலித்துகளின் வாழ்க்கை மேம்பாட்டுச் சிந்தனைகளைத் தலித்துகளை மையமாகக் கொண்டவை, தலித்துகள் அல்லாதவர்களை மையமாகக் கொண்டவை என வகைப்படுத்தி விளக்குவதாக இப்பகுதி அமைகிறது.

## 1. தலித்துகளை மையமாகக் கொண்டவை

தலித்துகளின் வாழ்க்கை மேம்பாடு அடைய தலித்துகள் மேற்கொள்ள வேண்டிய விழிப்புணர்வுச் சிந்தனைகளை ஒடுக்கப்பட்டோர் கல்வி பெற வலியுறுத்துதல், ஒடுக்கப்பட்டோர் பொருளாதார நிலையில் வலிமை பெறுவதை வலியுறுத்துதல், பரம்பரைத் தொழிலை விட்டு வேறு தொழிலை நாடத்தூண்டுதல், தலித்துகள் நீசச் சாதி இல்லை என வலியுறுத்துதல், தலித்துகள் தங்களுக்கு இடையே கலப்பு மணம் செய்ய அறிவுறுத்துதல், தலித் சாதிக்குள் உட்சாதிப் பிரிவுகளைத் தவிர்த்தல், தலித்துகளுக்கிடையே ஒற்றுமையை வலியுறுத்துதல், தலித்துகள் தங்களை மனிதனாக்கும் போராட்டத்திலிருந்து விலகுவதைத் தவிர்த்தல், தலித்துகள் பிற தலித்துகளைத் தாழ்வாகக் கூறுவதைத் தவிர்த்தல், முன்னேறிய தலித்துகள் பின்தங்கிய தலித்துகளுக்கு உதவ வலியுறுத்துதல், தலித்துகளைச் சாதியைக் கூறாமல் வர்க்கத்தைக் கூறி ஒன்று திரட்டுதல் என வகைப்படுத்தி விளக்கலாம்.

### 1. ஒடுக்கப்பட்டோர் கல்வி பெற வலியுறுத்துதல்

ஒடுக்கப்பட்ட மக்களைக் கல்வியின் வாயிலாக விழிப்படையச் செய்து சமூக மற்றும் பொருளாதார நிலைகளில் மேம்பாடு அடையச் செய்ய வேண்டும் என்ற கருத்துச் சோலை சுந்தர பெருமாள் படைப்புகளில் மையம் கொண்டுள்ளது. சிவசங்கரன் பிள்ளை என்ற பண்ணையாரின் அடிமையான ஆறுமுகம்(பறையர்) என்பவர் தன் மகன் சாமிக்கண்ணைப் படிக்க வைக்க விரும்பினார். தன் மகன் கால் காசு வாங்கினாலும் அரசாங்க வேலைதான் பார்க்க வேண்டும் என்பதில் உறுதியாய்

இருந்தார். இதனால் வறுமையான நிலையில் தன்னையும், தன் குடும்பத்தினரையும் மேலும் ஒடுக்கி மகனைப் படிக்க வைத்தார். ஆறுமுகம் அனுபவித்த இன்னல்கள் அனைத்தையும் துடைக்கும்படியாகச் சாமிக்கண்ணு பன்னிரண்டாம் வகுப்பில் பள்ளியில் முதல் மாணவனாகத் தேறினான். அவன் பள்ளி வாத்தியார் ஆறுமுகத்திடம் 'உன் வருமானத்தில் குடும்பத்தைப் பராமரித்துச் சாமிக்கண்ணைப் படிக்க வைப்பது கடினம் தான். இருந்தாலும் அவனை மேலும் இரண்டு ஆண்டுகள் நாகப்பட்டினத்திலுள்ள பாலிடெக்கினிக்கில் படிக்க வை' என்று கூறினார். அதோடு அவன் செலவில் பாதி உதவித்தொகையாகக் கிடைக்கும் என்றும், இந்த ஊரிலேயே உன் குடும்பம் உயர்ந்த இடத்தில் வரும் என்றும், இதனால் ஏற்படும் பெருமை உனது குடும்பத்திற்கு மட்டும் அல்லாமல் ஒடுக்கப்பட்ட சமுதாயத்தினர் அனைவருக்கும் சேரும் என்றும், ஒடுக்கப்பட்ட மக்கள் அனைவரும் இதுபோல் விழித்தால் எளிதாக ஒடுக்குமுறையிலிருந்து விடுபடலாம் என்றும், அந்தப் பெருமை உங்க மூலமா உங்கத் தலைக்கட்டிலிருந்து ஆரம்பமாகட்டும் என்றும் இதனால் நான் பெருமை அடைகிறேன் என்றும் (சோலை சுந்தர பெருமாள், பெருந்திணை 2005, ப.8) கூறினார். ஆசிரியரின் வார்த்தைகள் ஆறுமுகம் மற்றும் சாமிக்கண்ணுவிற்குத் தூண்டுகோலாயின. சாமிக்கண்ணு படித்துப் 'பொறியாளர்' என்ற பதவியை அடைந்தான். மேலும், 'நஞ்சை மனிதர்கள்' என்ற நாவல் குண்டுகண்ணு என்பவன் தனது இரண்டு மகன்களையும், ஒரு மகளையும் திருவாரூரில் படிக்க வைத்துள்ள செய்தியைக் குறிப்பிட்டுள்ளது (சோலை சுந்தர பெருமாள், நஞ்சை மனிதர்கள், 2006, ப.194). இவ்வாறு தலித் மக்கள் கல்வியறிவு பெறுவதால் சமுதாயத்தில் உயர்ந்த இடமும், மதிப்பும், தன்னம்பிக்கையும், வாழ்வில் மேம்பாடும் பெற முடியும் என்ற சிந்தனை இங்கு வெளிப்படுத்தப்பட்டுள்ளது. ஆனால், கல்வி கற்பதற்குப் பொருளாதாரம் இன்றியமையாதது. இந்தப் பொருளாதாரத்தில் ஏற்பட்டுள்ள தேக்க நிலையால் தலித்துகள் கல்வியிலும் தேக்கம் அடைய வேண்டிய நிலை ஏற்பட்டுள்ளதையும் சோலை சுந்தர பெருமாள் படைப்புகள் சுட்டிக்காட்டுகின்றன.

**2. ஒடுக்கப்பட்டோர் பொருளாதார நிலையில் வலிமை பெறுவதை வலியுறுத்துதல்**

பொருளாதார அடித்தளம் இல்லாத எந்தத் திட்டங்களும் வெற்றி பெறுவது இல்லை. எனவே, எதற்கும் பொருளாதாரம் மிகவும் தேவையானது என்பதை விளக்குவதாகப் பின்வரும் பகுதி உள்ளது. தோட்டாண்டி என்பவர் தன் மகள் செல்லாச்சியைப் படிக்க வைத்து, அவளை ஒரு வேலையில் புகுத்திவிட நினைத்தார். இதனால் அவள் வருங்காலத்தில் தன் பரம்பரைத் தொழிலான தார் வாளி மற்றும் ஜல்லிச் சட்டியைத் தூக்கிச் சுமந்து வெயிலில் அலைந்து சாக வேண்டாம் எனவும்

எண்ணினார். ஆனால், அவளை ஏழாம் வகுப்பில் சேர்க்க ரூபாய் தொண்ணூற்றொன்று தேவைப்பட்டது. இந்தத் தொகையைக் கடனாகப் பெற கண்காணி உதவியுடன் முதலாளியின் வீட்டிற்கு நடந்து சென்ற அவர் "அப்ப பத்து ரூபாய்க்குக் கண்காணிகிட்ட கெஞ்ச வேண்டியிருந்தது. இப்ப நூறு ரூபாய்க்குக் கெஞ்ச வேண்டியிருக்கு. நம்ம வாழ்நாள்ல இதுதான் மாற்றம்" (சோலை சுந்தர பெருமாள், வண்டல், 2000, ப.51) என்று தன் வாழ்வின் முந்தைய நிலையையும், தற்போதைய நிலையையும் நினைத்துப் பார்த்து வருந்துவதாகத் 'தலைமுறைகள்' என்ற சிறுகதை குறிப்பிட்டுள்ளது. ஆனால் தலித்தான குண்டுகண்ணு தனது மற்றும் தனது மனைவியின் கடின உழைப்பின் காரணமாக இரண்டு வேலி நன்செய் நிலத்திற்குச் சொந்தக்காரன் ஆனான். இதனால் கிராமத்திலுள்ள மிராசுகளில் ஒருவனாக மதிக்கப்பட்டான். ஊரில் நடக்கும் காரியங்களில் முன்னிற்க அழைக்கப்பட்டான். இவனது வாய்ச் சொல்லிற்கும் முக்கியத்துவம் அளிக்கப்பட்டது (சோலை சுந்தர பெருமாள், நஞ்சை மனிதர்கள், 2006, ப.193) என்று 'நஞ்சை மனிதர்கள்' என்ற நாவல் குறிப்பிட்டுள்ளது. மேலும், கீழ்ச்சாதியான அய்யாவு மற்றும் பொன்னுக்கண்ணு தம்பதியினர் தங்கள் உழைப்பின் வாயிலாக வசதியாக வாழ்ந்ததோடு, தங்கள் மகள் மருதாயியை வசதியான இடத்தில் திருமணம் செய்து கொடுக்கவும் முற்படுகின்றனர் (சோலை சுந்தர பெருமாள், உறங்க மறந்த கும்பகர்ணர்கள், 2002, ப.157) என்று 'உறங்க மறந்த கும்பகர்ணர்கள்' என்ற நாவல் குறிப்பிட்டுள்ளது. இவற்றின் அடிப்படையில் தலித் மக்கள் அடிமை வேலைகளிலிருந்து விடுபட்டு பொருளாதாரத்தில் முன்னேறினால் வாழ்வில் உயர்நிலைக்கு வரலாம் என்ற கருத்து இங்கு வலுவூட்டப்படுகிறது.

### 3. பரம்பரைத் தொழிலை விட்டு வேறு தொழிலை நாடத் தூண்டுதல்

பரம்பரைத் தொழில் செய்யும் தலித் மக்கள் ஆதிக்கச் சாதிக்காரர்களால் இழிவுபடுத்தப்படுகின்றனர். மேலும், அவர்கள் வேலைக்கு ஏற்ற கூலியையும் பெறுவதில்லை. இந்த நிலையில் பொருளாதாரத்தில் முன்னேற தலித் மக்கள் தங்கள் பரம்பரைத் தொழிலை விட்டுக் கல்வி கற்கவும், பிற தொழில்களை நாடவும் வேண்டும் என்ற கருத்துச் சோலை சுந்தர பெருமாள் படைப்புகளில் உள்ளது. பாடை கட்டும் தொழிலில் ஈடுபட்ட வண்ணார் சமுதாயத்தைச் சார்ந்த சீனிவாசன் என்பவரை ஆதிக்கச் சாதிக்காரரான நடராசு போன்றவர்கள் இழிவாகப் பேசியதோடு அடியும், உதையும் கொடுத்தனர். துடித்துப் போன சீனிவாசன் தன் பரம்பரைத் தொழிலை விட்டு வேறு தொழிலை நாட முற்பட்டார். அப்போது சீனிவாசனின் அண்ணன் மகன் தன்னுடன் வேலைக்கு வருமாறு அவனை அழைத்ததும் சீனிவாசன் இந்த ஊருக்குப் பரம்பரைப் பரம்பரையாக நமது குடும்பம் தான் சமுதாயம்

பார்த்துக் கொண்டு இருக்கிறது. அதனால் என் தலை இருக்கும் வரை நானும் இப்படியே இருக்கிறேன் என்று கூறிவந்த தனது நிலையை மாற்றித் தனது அண்ணன் மகன் அழைத்த வழிக்குப் போக வேண்டும் என்ற உறுதியுடன் ஆற்றுக்கரைத் துறைக்குச் சென்று தலையில் இருந்த சுமையை இறக்கி வைத்தார். இப்போது சீனிவாசனால் நல்ல காற்றைச் சுவாசிக்க முடிந்தது (சோலை சுந்தர பெருமாள், ஒரு ஊரும் சில மனிதர்களும், 2000, ப. 80) என்ற செய்தி 'பிழைப்பு' என்ற சிறுகதையில் கூறப்பட்டுள்ளது. மேலும், பரம்பரைத் தொழிலையேத் தொடர்ந்து செய்வதால் தங்கள் வாழ்க்கை நிலையில் முன்னேற்றம் ஏற்படாது, அவமானமே மிஞ்சும் என்று புரிந்து கொண்ட தலித் மக்கள் தங்கள் இளந்தலைமுறையினரைப் படிக்க வைக்கவும் முயல்கின்றனர். 'செந்நெல்' நாவலில் குறிப்பிடப்படும் பெரியானின் இரண்டாவது மகன் கண்ணுசாமி என்பவன் பள்ளிக்குச் செல்ல விரும்புவதை அறிந்த வேலுநாடார் பெரியானிடம் நீ உன் மகனைக் கலகத்துக்குக் கையெழுத்துப் போட வைத்திருக்கிறாய் (சோலை சுந்தர பெருமாள், செந்நெல், 2003, ப. 16) என்கிறார். 'தப்பாட்டம்' என்ற நாவலில் முனியாண்டி சாம்பானின் பேத்தி விசாலாட்சியின் சடங்கிற்குப் பந்தல் துணி கட்டவும். சடங்கின் போது தீட்டுத்துணி எடுக்கவும் வீரவாகு என்ற புதிரை வண்ணானையும், அவர் மனைவியையும் அழைத்திருந்தனர். அவ்வாறு அங்கு வந்திருந்த அவர்களிடம் முனியாண்டி சாம்பான் என்னடா வீரவாகு! நீயும் உன் மனைவியும் இப்படிக் கூனிக் குறுகிப் போயிட்டீங்க? உங்களது தொழிலுக்கு வாரிசு அமைக்கவில்லையா? என்று கேட்டார். அதற்கு வீரவாகு எங்களுக்கு வயது ஆகிவிட்டது. எங்களது தலையோடு இந்த அடிமைத் தொழில் அழிந்து போகட்டும். என் பேரப்பிள்ளைகள் அவர்கள் விருப்பம் போல் கூலி வேலைக்குச் செல்கின்றனர். நாங்களும் இதனால் வருத்தப்படவில்லை (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, ப.109) என்றார். மேலும், சடங்கு வீட்டில் ஏற்ற கூலியும், மரியாதையும் வழங்கப்படாததை நினைத்து வருந்தி மதுக்கன் பகடையிடம் தாங்கள் பழக்கதோஷத்தில் பரம்பரை அடிமைத் தொழிலுக்கு வந்ததாகத் தெரிவித்தார். 'ஒரே ஒரு ஊர்ல' என்ற நாவல் குறிப்பிடும் பொய்க்கால் குதிரை ஆட்டக்காரர்கள் தங்கள் கலைக்கு மதிப்பு இல்லாததாலும், குறைவான கூலியின் காரணமாகவும், குறைவான நாட்கள் ஆட்டம் கிடைப்பதாலும் தங்கள் மகன் லாரி ஓட்டச் செல்வதாகக் கூறுகின்றனர் (சோலை சுந்தர பெருமாள், ஒரே ஒரு ஊர்ல, 2001, ப.149). தற்காலத்தில் தலித் மக்கள் குலத்தொழிலை விடவும், வேறு தொழில்களை நாடவும், கல்வி கற்கவும் முற்படுகின்ற நிலை மிகவும் வரவேற்கத்தக்கது ஆகும்.

**4. தலித்துகள் நீசச் சாதி இல்லை என வலியுறுத்துதல்**

தலித் சமுதாயத்தினர் சாதியின் பெயரால் தீண்டத்தகாதவர் களாகப் புறந்தள்ளப்பட்டுள்ளனர். அதோடு அவர்கள் ஏழ்மை

நிலையிலேயே உள்ளனர். அவர்கள் வாழ்க்கை வசதிகள் மற்றும் சுகாதாரம் போன்றவைகளைப் பெறுவது இல்லை. சில வேளைகளில் காலம் தாழ்ந்து பெறுகின்றனர். மேலும், வன்முறைக்கு ஆளாகின்றனர். அதோடு அனைத்து இன்னல்களையும் சந்திக்கின்றனர். இவைகளுடன் சமுதாயத்தில் தீண்டத்தகாதவர் என்ற பெரிய கொடுமையையும் அனுபவிப்பதால் தாழ்வு மனப்பான்மை அவர்களுக்குள் வளர்ந்துள்ளது. ஆனால் தீண்டத்தகாதோர் என்னும் தனிப்பிரிவினர் சட்டப்படி இந்தியச் சமுதாயத்தில் இல்லை. இந்திய அரசியல் சட்டம் தீண்டாமை ஒழிக்கப்படுவதாகவும், தீண்டாமையைக் கடைபிடித்தல் குற்றம் எனவும் கூறுகிறது (ஐ.இரவி ஆறுமுகம், தீண்டாமை ஒழிப்பில் காவல்துறை, 2002, ப.2). எனவே, மனிதன் என்று அங்கீகரிக்கப்படும் உரிமை மனிதனாகப் பிறந்த அனைவருக்கும் உண்டு. அதனால், நீச சாதி என்று கூறி எவரையும் அடிமை நிலையில் வைத்துக் கொள்ள யாருக்கும் உரிமையில்லை. அடிமை முறை, அடிமை வியாபாரம் ஆகியனவும் அவற்றின் அனைத்து வடிவங்களும் குற்றங்களாகும். எனினும், தலித் விவசாயக் கூலிகள் மிகவும் ஒடுக்கப்பட்ட நிலையில் வாழ்கின்றனர். இந்த நிலையை மாற்ற வேண்டும் என்ற நோக்கில் தலித்துகள் நீச சாதி இல்லை என வலியுறுத்துவதைச் சோலை சுந்தர பெருமாள் படைப்புகள் அடிப்படைத் திட்டமாகக் கொண்டுள்ளன. அவை பின்வருமாறு தரப்படுகின்றன.

1. 'தப்பாட்டம்' நாவலில் குறிப்பிடப்படும் முனியாண்டிச் சாம்பான் என்பவர் உழைப்பதற்காகப் பிறந்துள்ள நீசர்கள் தான் நிலவுடைமையாளர்களுக்கு எவ்விதமான கேடும் வராமல் பாதுகாக்க வேண்டும். இது நீசர்களின் தலையெழுத்து. இந்த விதியை யாரும் மாற்ற முடியாது (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, ப.69) என்கிறார். மேலும், தலைமுறை தலைமுறைகளாகத் தலித் மக்கள் அடங்கி, ஒடுங்கி வாழ்வதால் அவர்கள் மனதில் தாழ்வு மனப்பான்மை குடியேறி விடுகிறது. தலித் மக்கள் தேநீர்க்கடைக்கும், சலூண் கடைக்கும் எதற்குப் போகிறார்கள்? ஆதிக்கச் சாதியினர் தலித் மக்களை அழைத்தார்களா? தலித்துகள் ஒதுங்கிச் சென்றால் பிரச்சனை இல்லையே என்று நினைக்கின்றனர். நீசனுக்குப் பிறந்த பின் நாறுதே என்று கூறினால் எப்படி? நாறத்தானே செய்யும். கெட்டாலும் மேல் மக்கள் மேல் மக்கள் இல்லையா? சங்கைச் சுட்டால் அது கறுப்பாக மாறுமா? நீசச் சாதிக்குப் பிறந்து விட்டு ரொம்ப ரோசப்பட்டால் ஒன்றும் ஆகாது. குடியானவர் தெருவையும், பண்ணை மாகாணங்களையும் எதிர்த்து விட்டு எங்கே போக முடியும் என்று தங்களுக்குள் கதறும் அவர்கள் "சின்ன சாதி, பெரிய சாதின்னு மனிதர் படைத்ததில்லை. மகாத்மா காந்தி தலித் சனங்களை ஏன் கடவுளின் குழந்தைகள் என்று கூறினார்? தலித்துகள் மட்டும் இல்லாவிட்டால் குடியானத் தெருவும், பண்ணை மாகாணங்களும்

என்னவாகும்? எல்லாம் தெரிஞ்சிதான் அப்படி கூறினதை அனைவரும் கண்ணை மூடிக்கிட்டு ஏத்துக்கிட்டாங்க" (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, ப.295) என்கின்றனர். ஆதிக்கச் சாதியினர் நினைத்தால் தலித் மக்கள் எங்கு வேலை தேடிச் சென்றாலும் வேலை கொடுக்கச் செய்யாமல் தடுக்க முடியும் எனவும், தலித் மக்கள் ஆதிக்கச் சாதியினருக்கு அடிமைத் தொழில் செய்யப் படைக்கப்பட்டவர்கள் எனவும் கருதுகின்றனர். ஆனால், கல்வி கற்ற சங்கர் போன்ற சில இளைஞர்கள் தலித்துகள் நீச சாதி இல்லை. கடவுள் தலித்துகளை நீச சாதியாகப் படைத்தார் என்றால் அவருக்குக் கடவுளாக ஆகும் உயர்ந்த பண்பு இல்லை (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, ப. 295) என்றும் தலித் சாதியினருக்கு விழிப்புணர்வைத் தூண்டும் பணியைச் செய்து வருகின்றனர்.

2. 'செந்நெல்' நாவல் குறிப்பிடும் தலித் மக்களுக்குக் கருத்துச் சுதந்திரம் முற்றிலும் மறுக்கப்பட்டுள்ளது. இதனைத் தவிர்ப்பதற்கு நெஞ்சு நிமிர்த்தி வீரமாக ஆதிக்கச் சாதியினரிடம் பேச வேண்டும் என்ற எண்ணம் தலித் இளைஞர்களின் மனதில் ஓடுகிறது. கண்ணுசாமி என்பவன் ஆராயிடம் இந்த நாள் வரைக்கும் ஆதிக்கச் சாதியினர் தலித்துகளின் மேல் ஏறி சவாரி செய்து கொண்டு இருக்கிறார்கள். தலித்துகளுக்குக் கருத்துச் சுதந்திரம் கொடுத்தால் அவர்களை எதிர்த்துத் தலித்துகள் கேள்வி கேட்பார்கள் என்று அஞ்சுகின்றனர். எனவே, அதனை வெளிக்காட்டாமல் மிரட்டுகின்றனர். அவர்கள் சத்தத்திற்குத் தலித்துகள் அஞ்சாமல் நெஞ்சை நிமிர்த்திப் பேசினால் அவர்கள் நிலை பரிதாபம் தான் (சோலை சுந்தர பெருமாள், செந்நெல், 2003, ப.19) என்றான். அடிமை நிலையில் இருந்தபோது 'ஆண்டே! ஆண்டே!' என்று கூறின தலித் மக்கள் விழிப்பு அடைந்த நிலையில் தன்மானத்துடன் செயல்படுகின்றனர். வேலுநாடாரின் பண்ணைக்கு உரிமையான பெரியான் உள்ளிட்டவர்கள் கூலிப் பிரச்சனையால் வேலை நிறுத்தத்தில் ஈடுபட்ட போது பெரியான் வேலுநாடாரை அமைதிப்படுத்த வார்த்தைக்கு வார்த்தை ஆண்டே என்று கூறினார். இதனைக் கேட்ட காத்த முத்து என்பவன், "மாமா ! அவங்க என்ன ஆண்ட பரம்பரையா? அந்தக் காலம் மலையேறிவிட்டது. இப்போது அவங்க ஆளவும் இல்லை. தலித்துகள் அடிமையும் இல்லை. வேலை பார்ப்பதற்குக் கூலி கொடுக்கிறார்கள். ஆனால் அந்தக் கூலியில் அவர்கள் கைவைக்கிறதத்தான் எதிர்த்துக்கிட்டு நிற்க வேண்டியுள்ளது. அதை விட்டுவிட்டுப் பேச்சுக்குப் பேச்சு ஆண்டே ஆண்டேன்னு சொல்லுறதைக் கேட்டுக் கொண்டு இருக்க முடியாது . . ." (சோலை சுந்தர பெருமாள், செந்நெல், 2003, ப.178) என்றான். இங்கு ஆண்டைகளுக்கும் அடிமைகளுக்கும் இடையிலான வேறுபாடு விழிப்புணர்வால் தகர்க்கப்படுகிறது.

3. 'பெருந்திணை' என்ற நாவலில் உத்தண்டியின் மூதாதையர் தன் சுற்றத்தவருடன் அந்த ஊரில் ஆதி குடியாக வாழ்ந்து வந்தனர். நாடு மாறியாக வந்தவர்கள் இல்லை. அந்தக் காலத்தில் அவர்கள் வாழ்ந்த அந்த ஊர் முழுவதும் பண்ணை மாகாணத்துக்குக் கை மாறினது. இதனால் அவர்களின் அதிகாரத்திற்குத் தலித்துகளான ஆதிகுடிகள் கீழ்ப்பட்டு அடிமைகளாக மாறினர் (சோலை சுந்தர பெருமாள், பெருந்திணை, 2005, ப.103) என்ற செய்தி கூறப்பட்டுள்ளது. எனவே, தலித்துகள் என்று கருதப்படும் மக்கள் இழிவானவர்கள் அல்ல என்ற கருத்து இங்கு வலுவூட்டப்படுகிறது.

4. 'மரக்கால்' என்ற நாவலில் இடம்பெற்ற ஆதிக்கச் சாதியினர் நந்தனிடம் 'நீ நீசப் பிறவி' என்றும் 'நீ பண்ணை அடிமை' என்றும் சொல்லும் போது அவன் சாமி ! ஆண்டை உங்களுக்கு நான் அடிமைக்காரன். மூன்று உலகத்தைப் படைத்தளிக்கும் ஆண்டவனுக்கு நான் கொத்தடிமைக்காரன் (சோலை சுந்தர பெருமாள், மரக்கால், 2007, ப.72) என்றான். தில்லை நடராஜ பெருமான் தரிசனம் பார்க்கச் செல்ல முயன்ற நந்தனிடம் அம்மாசி என்ற முதியவர் நீசச் சாதியின் இழிநிலையைக் கூறி நந்தனைத் தடுக்க முயன்றார். அப்போது நந்தன் உணர்ச்சி பொங்கிடக் குதித்து எழுந்தான். பின்னர் அவன் தான் சாதிமுறையை மறுக்கவில்லை எனவும், சாமிக்கும், ஆண்டைக்கும் அடிபணிந்து வாழ்வதாகவும், ஆதிக்கச் சாதியினர் காலால் இட்ட வேலையைத் தலையால் செய்யக் காத்திருப்பதாகவும் கூறினான். மேலும் நீசப் பறையனாகப் பிறந்ததனால் தொலைவில் நின்றாவது சிவலோக நாதரைத் தரிசனம் பார்க்கவில்லை என்றால் இந்தச் சென்மத்தில் செய்திருக்கும் பாவம் தொலையாது. ஆதலால் நாயினும் கடையேன் என்னைத் தடுக்காதே தாத்தா (சோலை சுந்தர பெருமாள், மரக்கால், 2007, ப.84) என்றான். தில்லைத் தரிசனம் காணச் சென்ற வழியில் மருதனைச் சந்தித்த பின்னர் நந்தனும் அவன் தோழர்களும் தங்களை 'நீசப் பிறப்பினர்!' என்று புலம்பினர். இதைக் கேட்ட மருதன், "நந்தா ! என் தோழர்களே ! நீங்கள் உங்கள் பிறவியை நீசப்பிறவி என்று ஏற்றுக் கொள்ளாதீர்கள். ஏனென்றால் தலித்துகளின் வம்சாவளியினர்களும் நாடாண்டவர்களே. நாமெல்லாம் நாகவழியினர். பிரமதேய உரிமையைத் தந்திரமாகவும், தானமாகவும் ஆரிய வம்சாவளியினரும், நம்மிடம் இருந்து கலந்து பிறப்பெடுத்தவர்களும் பறித்துக் கொண்டார்கள். பின்னர் நம்மையேத் தள்ளி மிதித்து அடிமைகளாக ஆக்கி வைத்திருக்கிறார்கள்" (சோலை சுந்தர பெருமாள், மரக்கால், 2007, ப. 236) என்று மனதில் பொருமினான். இவ்வாறு தலித்துகள் 'நீசச் சாதி இல்லை' என்ற கருத்தைச் சோலை சுந்தர பெருமாள் விளங்க வைத்துள்ளார்.

## 5. தலித்துகள் தங்களுக்கு இடையே கலப்பு மணம் செய்ய அறிவுறுத்துதல்

சாதி வேறுபாடுகளை நீக்கக் கலப்பு மணம் சிறந்த வழியாகத் திகழ்கிறது. எனவே, சோலை சுந்தர பெருமாள் தனது படைப்புகள் மூலம் கலப்புத் திருமணத்தை வலியுறுத்தியுள்ளார் என்பதைப் பின்வரும் பகுதிகள் மூலம் அறியலாம்.

1. சக்கிலியர் சாதியைச் சார்ந்த மதுக்கன் பகடை என்பவரின் இரண்டாவது மகனான தோழப்பன் என்பவன் தன் சாதிக்காரர்களுடன் சேர்ந்து ரெட்டிப்பாளையத்தில் வேலை செய்ய விரும்பாமல் திருவையாறு என்னும் இடத்திலுள்ள கரும்புத் தோட்டத்தில் வேலைக்காகச் சென்றான்.அங்கு வேலைபார்க்கும் பறையர் சாதியைச் சார்ந்த வள்ளி என்பவளுடன் அவனுக்குப் பழக்கம் ஏற்பட்டது. பின்னர் அது நாளடைவில் காதலாக மாறினது. வள்ளியின் உறவினர்களின் காதிற்கு இந்தச் செய்தி எட்டினவுடன் சாதியின் காரணத்தால் எதிர்ப்பு ஏற்பட்டது. ஆனால் வள்ளியின் பெற்றோர் தோழப்பனை ஏற்றுக்கொண்டனர். வள்ளியின் உறவினர்கள் தோழப்பனைக் கொல்ல வேண்டும் என்று கடுஞ்சினம் கொண்டபோது வள்ளியின் தாயார் ஓர் இரவில் தோழப்பனுடன் வள்ளியை அனுப்பினாள். வள்ளியின் மாமாவான செல்வராசு என்பவர் தோழப்பனை அடிக்க முயன்றார். ஊரில் நிகழும் அனைத்துச் செய்திகளையும் உடனுக்குடன் அறிந்து கொண்டிருக்கும் சுந்தர மூர்த்தி வாத்தியார் என்பவர் செல்வராசுவை அழைத்துத் தோழப்பனும் வள்ளியும் திருமண வயதை அடைந்தவர்கள். காவல்துறை மற்றும் நீதிமன்றத்தில் அவர்கள் சொல்வது தான் செல்லும். இந்த ஊரும், உலகமும் உங்க இரண்டு சாதிகளையும் சின்ன சாதிகளாக ஒதுக்கி வைத்துள்ளது. இப்படி நீங்க உங்களுக்குள் எதிர்த்துக் கொண்டு நின்றால் உங்களது தலைமுறை மட்டுமல்லாமல் பத்துத் தலைமுறை ஆனாலும் உங்களுக்கு விடிவு ஏற்படாது (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, ப.16) என்று எடுத்துக் கூறினார். இதனைக் கேட்டபோது செல்வராசு தனது கோபத்தைக் குறைத்துக் கொண்டான் என்று 'தப்பாட்டம்' நாவல் குறிப்பிட்டுள்ளது.

2. கார்வாரி சின்னப் பிள்ளை என்பவர் பறையர் சாதியைச் சார்ந்த உத்தண்டி என்பவரிடம் உன் பேரன் ஆறுமுகம் உன் தெருவின் இறுதியிலுள்ள ஒதுக்குப்புறத்தில் வாழ்ந்து வரும் புதிரை வண்ணார் சமுதாயத்தைச் சார்ந்த கிளியம்மாவைக் காதலிப்பது சரியில்லை. பண்ணையிலுள்ள வேலையாட்கள் இவ்வாறு சாதிக்கலப்புப் பண்ணுவதை பண்ணை அனுமதிக்காது. அவர்களைப் பண்ணை மாட்டுக்கொட்டிலுக்கும் விடாமல் பண்ணை கட்டுப்படுத்தியுள்ளது (சோலை சுந்தர பெருமாள், பெருந்திணை, 2005, ப.75) என்றார். மேலும்,

கார்வாரி என்பவர் ஆறுமுகத்தின் அப்பாவான அய்யாறிடம் உன் மகனின் செயலால் உன் சாதிப்பெயர் கெட்டுவிடும். அந்தப் பெண் வீட்டில் ஆண் வாரிசு இல்லை. எனவே, இந்தத் திருமணம் நடந்தால் உன் மகனும், அந்தப் பெண்ணும் தான் உன் தெருவிலுள்ள குடிகளுக்கு அடிமை வேலை பார்க்க வேண்டும் என்று பண்ணை ஐயா கட்டளையிடுவார் என்றார். ஆறுமுகத்தின் திருமணத்தன்று ஆராயியின் தம்பியுடைய மனைவி கலகலப்பு இல்லாமல் நின்றாள். இந்த நாள் வரை வண்ணார் குடும்பத்தை ஒதுக்கி வைத்து, அவர்களுடன் சமமாக இருந்து கை நனைக்காத நிலையில் இன்று சரிசமமாகக் கூட்டத்தில் உட்கார வைத்துத் திருமணக் காரியங்களைப் பேசி முடித்ததால் ஒருவித அருவெறுப்பு அவள் மனதில் கூடிக்கொண்டிருந்தது (சோலை சுந்தர பெருமாள், பெருந்திணை, 2005, ப.111). இவ்வாறு கார்வாரி முதல் ஆண்டை வரைக்கும் செய்த பலவித எதிர்ப்புகளுக்கு மத்தியில் ஆறுமுகம் மற்றும் கிளியம்மாவின் திருமணம் ஒரு புரட்சித் திருமணமாக நடைபெற்றது.

3. 'செந்நெல்' நாவலில் குறிப்பிடப்படும் கண்ணுசாமி (பறையர்), செல்வி (பள்ளர்) காதலை அறிந்த செல்வியின் அக்காவின் கணவன் தன் மனைவியிடம் "அந்தப் பய தான் இந்த வீட்டுக்கு மாப்பிள்ளையா வரப்போறான்னா உனக்கும் சேத்தே மாப்பிள்ளையைப் பார்த்துக் கட்டி வைக்கச் சொல்லுடீ. என் குடும்பம் சாதிக்கலப்பு இல்லாமல் கௌரவமாகக் கஞ்சிக் குடிச்சிக்கிட்டு இருக்குது. இப்படின்னா நாளைக்கு என் பொண்ணு பிள்ளைக்கு எவன் கூசாம பொண்ணு பிள்ளையைக் கொடுப்பான்? ரெண்டுல ஒண்ணு தெரிஞ்சிக்கிட்டு வாடி" (சோலை சுந்தர பெருமாள், செந்நெல், 2003, ப.94) என்றான். இவ்வாறு பல சிக்கல்களுக்கு இடையில் திருமண ஒப்பந்தம் பேசப்பட்டாலும் இறுதிவரைத் திருமணம் நடைபெறுவதற்கான சூழ்நிலை அமையவில்லை. என்றாலும் கலப்புத் திருமணங்கள் நடைபெற்றால்தான் சாதி ஏற்றத்தாழ்வுகள் விரைவில் மறைந்து தலித் மக்களின் புதுவாழ்விற்கு வழி பிறக்கும்.

## 6. தலித் சாதிக்குள் உட்சாதிப் பிரிவுகளைத் தவிர்த்தல்

தலித் சமுதாயத்தினர் தங்களுக்குள் உட்சாதிப் பிரிவுகள் பாராட்டாமல் இருந்தால் அவர்கள் போராட்டங்கள் அனைத்தும் எளிதில் வெற்றிபெறும். ஆனால், தலித் சமுதாயத்தினர் பல உட்சாதிப் பிரிவுகளால் தங்களைப் பிரித்து அதில் கீழ்நிலையில் இருப்போரை ஆதிக்கச் சாதியினர் தங்களை நடத்துவதைப் போல் மரியாதையின்றி நடத்துகின்றனர். 'தப்பாட்டம்' நாவலில் குறிப்பிடப்படும் பள்ளர்கள் மற்றும் பறையர்கள் தங்களுக்குக் கீழாகச் சக்கிலியர்களை வைத்து உள்ளனர். பறையர் இனத்தவரான மாரிசாம்பானிடம் சக்கிலியர் இனத்தவரான கோவிந்தராசு என்பவர் பறையாட்டம் பயில முற்படுகின்றார் இறுதியில்

பறையர் சாதியைச் சார்ந்தவன் சக்கிலியனுக்குக் கலை பயிற்றுவிக்கக் கூடாது என்று பறையர் சமுதாயத்தினர் எதிர்ப்புத் தெரிவித்தனர் (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, ப.41). மேலும் பறையர் தெருவில் வாழும் முனியாண்டியின் வீட்டுத் தேவைக்கு அழைக்கப்பட்ட புதிரை வண்ணார் சமுதாயத்தைச் சார்ந்த வீரவாகு என்றவ்ரும், அவர் மனைவியும் அங்கு இழிவுபடுத்தப்பட்டனர் (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, ப.க் 111,112). எனவே இந்த விதமான உட்சாதிப் பிரிவுகள் தலித் மக்களின் வாழ்க்கை முன்னேற்றத்திற்குத் தடையாக அமையும். ஆகவே, இத்தகைய பிரிவுகளைத் தவிர்ப்பது நல்லது என்ற கருத்து இங்கு அடிநாதமாக ஒலிக்கிறது.

### 7. தலித்துகளுக்கு இடையே ஒற்றுமையை வலியுறுத்துதல்

ஆதிக்கச் சாதியினரின் தூண்டுதலாலும், சுயகௌரவத்தாலும் தலித் மக்கள் தங்கள் சாதிக்குள் ஒன்றுசேர மறுக்கின்றனர். முனியாண்டிச் சாம்பானிடம் முருகன் என்பவன் கம்யூனிஸ்ட் கட்சிக்கு வந்தால் ஒரு குவளை தேநீருக்கும் வழியில்லாமல் போகும் என்றான். மேலும், சம்பாத்தியத்திலும், 'தலைவரி' என்று வாங்குவதால் தன்னைப் போன்ற சிலர் ஆளும் கட்சியில் சேர்ந்திருப்பதாகக் கூறினான். இதனால் தனக்குக் கிடைக்கும் லோனில் சிறிதளவு பணத்தைக் குடியானவர்த் தெருவிலுள்ள கட்சிக்காரர் எடுத்தாலும் பாதியாவது தன்னை அடையும் என்றான். குடியானவர் தெருவினர் தங்களிடம் "லோன் பணத்தை நீங்க யாரு திருப்பிக் கட்டப் போறீங்க? கொஞ்ச நாள் போனா கவருமெண்டே தள்ளுபடி பண்ணிடும் நீங்க தீண்டாமையைப் போக்க கம்யூனிஸ்ட் கட்சியில சேருங்கன்னு கூப்புடுறீங்க. உங்களோட சேந்துட்டா பலவகையாலும் நாங்க குடியானவர்த்தெரு சனங்களோட பகையைச் சம்பாத்தியம் பண்ணிக்கிறது தான் மிச்சமா இருக்கும்" (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, ப.282) என்று கூறினார். குளுந்தான் சாம்பான் மற்றும் பள்ளர்களின் பிரதிநிதியாக விளங்கும் சாமாந்தவாய்க்காரர் ஆகியோர் குடியானவர்த் தெருவிற்குள் தொடர்பு வைத்துள்ளனர். இதனால் முனியாண்டிச் சாம்பான் உட்பட அனைவரும் ஒற்றுமை பற்றிப் பேச அஞ்சுகின்றனர். மேலும், இவர்கள் தலித் மக்களின் திட்டங்களை ஆதிக்கச் சாதியினருக்குத் தெரிவிக்கும் சூழ்ச்சி வேலைகளில் ஈடுபடுகின்றனர். தன் சனங்களே தங்களுக்கு எதிரியாக அமைந்து, போராடுகிறவர்களைக் காட்டிக் கொடுப்பதை அறிந்த முனியாண்டி வருந்துகிறார். கூலிப் போராட்டத்தின் விளைவாகக் கோபால கிருஷ்ண நாயுடுவின் தலைமையில் கீழத்தெருவினரின் குடிசைகள் எரிக்கப்பட்ட போது அவருக்குத் துணையாகவும், தூதாகவும் இருந்த காளிமுத்து, பாவாடை இருவரின் வீடுகளும் எரிக்கப்படவில்லை (சோலை சுந்தர பெருமாள், செந்நெல், 2003, ப.203). இவ்வாறு தலித் மக்கள் தங்களுக்கிடையே காணப்படும் வேற்றுமைகளின் அடிப்படையில்

ஒற்றுமை இல்லாமல் செயல்படுவது ஆதிக்கச் சாதியினருக்குப் பெரும் வாய்ப்பாக அமைகிறது. எனவே, அவர்கள் ஒன்றுபடுவது அவசியம் என்பதை நாவல்கள் வலியுறுத்துகின்றன. 'தப்பாட்டம்' நாவலில் குறிப்பிடப்படும் பறையரான முனியாண்டிச் சாம்பானின் பேத்தி விசாலத்தின் சடங்கின் போது பறையர் வீட்டுத் தேவையில் கை நனைக்காத பள்ளர் மற்றும் சக்கிலியர் வீட்டு வாலிபர்கள் அனைவரும் ஒன்றாகக் கூடினர் (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, ப.110). இந்த ஒற்றுமை தொடர வேண்டியது இன்றியமையாதது ஆகும். மேலும், ரெட்டிப்பாளையத்தில் தலித் கூலித் தொழிலாளர்களுக்குத் தொடர்ந்து பல வேலைகள் கிடைத்தாலும் ஆதிக்கச் சாதியினர் கொடுக்கும் கூலியைத்தான் வாங்கிக் கொள்ள வேண்டும் என்ற நிலை நீடித்தது. இதனால் அவர்களில் பலர் தாங்கள் விரும்பின வேலையை நாடிச் சென்றனர். இந்த நிலையில் தோழப்பன் மருத்துவக் கல்லூரி அருகில் அமைந்த ஒரு தோட்டத்தில் வேலைக்குச் சென்றான். இதனைப் பயன்படுத்தி அவன் தோழர்கள் அய்யாசாமி, உத்தராசு, கோவிந்தன் உட்பட அனைவரும் சேர்ந்து வேலை செய்தனர். இந்தச் சூழ்நிலையில் தோழப்பன் அவர்கள் மனதில் விழிப்புணர்வைத் தூண்டும்படியாக பல கேள்விகளை எழுப்பி அவனே அதற்கு விடைகளையும் கூறினான். பின்னர் தலித் மக்களிடையே உள்ள உட்சாதிப் பிரிவுகளை உடைத்துக் கொண்டு ஒன்று சேர்ந்தால்தான் தலித் மக்கள் மானம் மரியாதையுடன் வாழ முடியும் என்றும் கூறினான். அவனது கருத்தை அனைவரும் ஏற்றுக் கொண்டனர் (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, ப.138). ஒற்றுமை நிலைத்த, சீரான வாழ்விற்கு அடிப்படை ஆகும். எனவே, இப்போதுள்ள சில சிறு பிரச்சனைகளை ஒதுக்கித் தள்ளிவிட்டு ஒன்று கூடினால்தான் எதிர்காலத்தில் தலித் தலைமுறையினர் தலைநிமிர்ந்து நடப்பர்.

### 8. தலித் மக்கள் தங்களை மனிதனாக்கும் போராட்டத்திலிருந்து விலகுவதைத் தவிர்த்தல்

ஒடுக்கு முறைகளிலிருந்து விடுதலை பெற விரும்பும் தலித் மக்கள் போராட்டங்களில் ஈடுபடுகின்றனர். மாறாக ஆதிக்கச் சாதியினரிடம் தொடர்பு வைத்திருக்கும் தலித் மக்கள் இந்தப் போராட்டங்கள் தோல்வியடையக் காரணமாகின்றனர். இந்த நிலை 'தப்பாட்டம்' நாவலில் விவரிக்கப்பட்டுள்ளது. குடியானவர்த் தெருவிற்குள் தொடர்பு வைத்திருக்கும் முருகன் சாம்பான், குளுந்தான் சாம்பான், பள்ளர்களின் பிரதிநிதியான சாமாந்தவாய்க்காரர் ஆகியோரின் முயற்சியால் கட்சி சார்பு இல்லாமல் தலித் மக்களின் கூட்டம் கூட்டப்பட்டது. இறுதியில் ஊருக்குள் கம்யூனிஸ்ட் கட்சியை இனி அனுமதிக்கக்கூடாது எனவும், கூலி உயர்வு இல்லாமல் வடக்கு மூப்பர்த் தெருவிற்கு வெட்டியான் வேலைக்கு ஆள் அனுப்புவோம் எனவும், ஊரில் தப்பு அடிக்கும் வெட்டியானுக்கு நாள் ஒன்றுக்கு நூறு ரூபாய் வாங்க

சம்மதம் தெரிவித்தும், புதிதாகக் கற்றுக்கொண்டு தப்பு அடிக்க வெளியூர் போகும் குழுவிற்கு அந்தச் சாதியிலேயே தலைவர் போட்டுக் கொள்வதாகவும், தேநீர்க்கடையில் முன் இருந்த முறையைப் பின்பற்றலாம் என்றும் முடிவு செய்யப்பட்டது. மேலும் கிராமத்தில் உள்ள பிரச்சனையை வேறு நபருக்குத் தெரியப்படுத்த மாட்டோம் என்றும் கையெழுத்துப் போட்டுக் கொடுத்தனர். தஞ்சாவூரின் முக்கிய இடங்களில் கம்யூனிஸ்ட் கட்சி அரசியல் ஆதாயத்திற்காக இனக்கலவரத்தைத் தூண்டுகிறது என்றும், இதனைத் தடுத்து நிறுத்தும்படி மாவட்ட நிர்வாகத்தைக் கேட்டுக் கொண்டு ரெட்டிப்பாளையத்திலுள்ள அனைத்து அரிசன மக்கள் முன்னிலையில் ஊர்மக்கள் அனைவரும் கூடி உண்ணாவிரதப் போராட்டம் நடத்தப் போவதாகவும் விளம்பரப் படுத்தினார்கள் (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, பக் 300, 301). இந்தச் செய்திகளைக் கேள்விப்பட்ட மதுக்கன் பகடையும், கட்டுப்பாடுகளின் காரணமாக ஊரின் வெளியில் இருந்த தோழப்பன் மற்றும் அவன் தோழர்களான செல்வராசு, உத்தராசு, கோவிந்தன், விசாலம் ஆகியோரும் அதிர்ச்சியடைந்தனர் என்று 'தப்பாட்டம்' நாவல் குறிப்பிட்டுள்ளது. இவ்வாறு தலித் மக்களில் சிலர் செயல்படுவதால் போராட்ட உணர்வு படைத்தவர்கள் செயல்படுத்த விரும்பும் விடுதலை முயற்சிகள் தோல்வியடைகின்றன.

## 9. தலித்துகள் பிற தலித்துகளைத் தாழ்வாகக் கூறுவதைத் தவிர்த்தல்

'பெருந்திணை' என்ற நாவலில் இடம் பெற்ற உத்தண்டி என்பவர் கிளியம்மா மேற்கொண்ட நீரில் மூழ்கி எழும் விளையாட்டைத் தடை செய்ய விரும்பி "பீத்துணி அள்ளுற பயக்குட்டிக்கு ரொம்பதான் கெப்புறு ..." (சோலை சுந்தர பெருமாள், பெருந்திணை, 2005, ப.68) என்றார். மேற்கூறிய வார்த்தைகள் விளையாட்டு நோக்கில் கூறப்பட்டவை என்றாலும் தொடர்புடையவர்களின் மனதைக் காயப்படுத்தும் தன்மை உடையவை. மேலும் 'தப்பாட்டம்' நாவலில் குறிப்பிடப்படும் பள்ளர்களின் பிரதிநிதியாக வரும் சாமாந்தவாய்க்காரர் என்பவர் காத்தமுத்து சேர்வையிடம் பறையர் மற்றும் சக்கிலியர் சாதியினரை 'எவ்வளவு கொடுத்தாலும் வச்சி வடிக்கத் தெரியாத சாதி' என்று இழிவாகக் குறிப்பிட்டுள்ளார். மேலும், அந்தச் சின்னசாதிக்காரப் பயலுங்களை வச்சிக்கிட்டு ஒன்றரை வேலி வயக்காட்டை நட்டு ஏழாம் கடைசி பண்ணங்காட்டியும் போதும் போதும்ன்னு ஆயிட்டுங்க . . . (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, ப.177) என்றார். மேலும் கரூர் சக்கிலியர்கள் மற்றும் பறையர்கள் வாழும் இடத்தில் நிம்மதியாக இருக்க இயலாது என்று கருதியதுடன் தன் சாதியினரை அழைத்துச் சக்கிலியர்களும், பறையர்களும் கம்யூனிஸ்ட் கட்சிக் கொடியைத் தூக்கிக் கொண்டு அழியப் போகிறார்கள் என்றும் குடியானவர்த் தெரு பண்ணையார்கள் நினைத்தால் அவர்கள் செல்லும் இடம் தெரியாமல் போவார்கள் என்றும்

அதட்டினார். மேலும், "செத்த மாட்டுக்கறி திங்கிற சின்ன சாதிகாரப் பயலுங்களுக்கு எங்க புத்தி இருக்கு? மாடு கால் பவுனுன்னா சொமைக் கூலி அரைப் பவுனு கொடுக்கிற பயலுங்க. நான் சொல்லி கேப்பானுங்களா?" (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, ப.180) என்றார். இவ்வாறு தலித்துகள் தங்கள் சாதியிலும் கீழானோர் என்று கருதப்படுவோரைத் தாழ்வாகக் கூறுவதைத் தவிர்த்து, அவர்களிடம் நல்லன்பு பாராட்டினால் நல்வாழ்விற்கு அது அடித்தளம் அமைக்கும் என்ற கருத்தைச் சோலை சுந்தர பெருமாள் வெளிப்படுத்தியுள்ளார். ரெட்டிப்பாளையத் தலித் தெரு முதியவர்கள் போராட்டங்களில் ஈடுபட விரும்பும் இளைஞர்களிடம் இந்தத் தெரு மக்களை நம்பிச் செயலில் இறங்கினால் அது மண் குதிரையை நம்பி ஆற்றில் இறங்கின கதையாய் ஆகிவிடும் என்று எச்சரிக்கைச் செய்கின்றனர் (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, ப.140). இவ்வாறு உயர்நிலையில் உள்ள தலித்துகள் தாழ்ந்த நிலையிலுள்ள தலித்துகளைத் தாழ்வாக நினைக்கும் மனநிலை மாற வேண்டும். இதற்கு அனைத்துத் தலித் மக்களும் ஒத்துழைக்க வேண்டியது கட்டாயமாகிறது.

### 10. முன்னேறிய தலித்துகள் பின்தங்கிய தலித்துகளுக்கு உதவ வலியுறுத்துதல்

'பெருந்திணை' நாவலில் இடம்பெற்ற சாமிக்கண்ணு மிகுந்த வறுமையின் மத்தியில் படித்து, உயர்ந்த பதவியில் வந்த பிறகு, தான் படித்த காலத்தையும், தன் தகப்பனையும், தன்னுடன் பிறந்தவர்களையும் கண்டு கொள்ளவில்லை (சோலை சுந்தர பெருமாள், பெருந்திணை, 2005, ப.167). சாமிக்கண்ணுவின் மனமாற்றத்தை நினைத்து அவன் தந்தை ஆறுமுகம் பல இடங்களில் வருந்துகிறார். 'வெள்ளாடுகளும் சில கொடி ஆடுகளும்' என்ற சிறுகதையில் குறிப்பிடப்படும் நாச்சிமுத்து வாத்தியாரின் மூன்று மகன்களும் படித்துச் சாதிக்கோட்டாவின் மூலம் வேலையைப் பெற்ற பின்னர் தங்கள் சமுதாயத்திலுள்ள ஏழைப் பெண்களைத் திருமணம் செய்யாமல் ஆதிக்கச் சாதிப் பெண்களைத் திருமணம் செய்தனர். இதனைக் கேள்விப்பட்ட அவர் தனது இளைய மகன் பிரபுவிடம் "நீங்கள் சுத்தமான ஆம்பளையா இருந்தால் நம்ம சனங்களுக்கு உள்ள கோட்டாவில் வாங்கின வேலையை விட்டுப்புட்டுப் பொதுக்கோட்டாவில் வேலையை வாங்கிட்டு வாங்கடா பார்ப்போம்" (சோலை சுந்தர பெருமாள், ஒரு ஊரும் சில மனிதர்களும், 2000, ப.134) என்றார். இறுதியில் நாச்சிமுத்து வாத்தியார் தன் மகன்களிடம் நீங்க பிறந்த சாதி மக்களுக்கு வழிகாட்டுவீர்கள் என்றுதான் படிக்க வைத்தேன் என்றார். தலித் மக்கள் தங்கள் வாழ்க்கையில் முன்னேறிய பிறகு தன்னைச் சார்ந்தவர்களையும் முன்னேற்ற முயல வேண்டும் என்ற கருத்தை ஆசிரியர் இங்கு முன்வைத்துள்ளார்.

### 1.5. தலித்துகளைச் சாதியைக் கூறாமல் வர்க்கத்தைக் கூறி ஒன்று திரட்டுதல்

தலித் இளைஞர்கள் கிராம வேலையை வெறுத்து நகர வேலையைச் செய்ய முயல்கின்றனர். 'வண்டல்' என்ற சிறுகதையில் கிராமத்தில் வயல் வேலைக்குச் செல்லாமல் நகரத்திற்குச் சென்றால் அங்குக் கொத்தனுக்குச் சித்தாளாகவோ, அல்லது எடுபிடி செய்யும் வேலையோ கிடைக்கும். கையில் காசு கிடைப்பதற்கு அதுவே போதும். அங்கு 'அவன்', 'இவன்' என்று பிரித்துப் பார்ப்பதில்லை. மேலும், சாதி பெயரைக் கூறாமல் அனைவரையும் கூலி என்று தான் அழைப்பர் (சோலை சுந்தர பெருமாள், வண்டல், 2000, ப.11) என்ற கருத்து இடம்பெற்றுள்ளது. மேலும் படித்து நகரத்தில் வேலை பார்க்கும் தனது மகன் வீட்டிற்கு அம்மாசியும், குப்பம்மாவும் வந்தனர். அங்கு அவர்கள் மகன் வீட்டின் அயலகத்தாருடன் சாதியைக் குறித்துக் கூறினதால் மகன் கோபம் கொண்டு தனது பெற்றோரை வீட்டைவிட்டுத் துரத்தின செய்தியைப் 'பொறம்போக்கிகள்' என்ற சிறுகதை குறிப்பிட்டுள்ளது (சோலை சுந்தர பெருமாள், வண்டல், 2000, ப.23). இவற்றை அடிப்படையாகக் கொண்டு தலித் இளைஞர்கள் தங்களைச் சாதிப் பெயர் கூறி அழைப்பதை விரும்பவில்லை என அறிய முடிகிறது. எனவே, அவர்கள் நகரத்தில் கடுமையான வேலைகளைச் செய்ய முன்வருகின்றனர். இதைக் கவனித்த பெரியவர் ஒருவர் தனது பேரப் பிள்ளைகள் நகரத்தில் கடினமான வேலையைச் செய்வதைக் கண்டு வருந்தி, வயசுப் பிள்ளைகளை அரவணைத்து, அவர்களைப் பக்குவப் படுத்தி வர்க்கமாகத் திரட்டினால் இப்படிச் சாதியைச் சொல்லி சாதிக்குச் சாதி உயர்வு தாழ்வு ஏற்படுத்திக் கேவலப்படுவார்களா? (சோலை சுந்தர பெருமாள், மடையான்களும் சில காடைகளும், 2006, ப.118) என்று ஆதங்கப்பட்டதாக 'மேலாக்கு' என்ற சிறுகதை குறிப்பிட்டுள்ளது. எனவே, தலித் மக்களைச் சாதிப்பெயர் கூறி அழைக்காமல் வர்க்கமாகத் திரட்டினால் அவர்களுக்கிடையேயான உட்சாதிப் பிரிவுகள் மறைந்து அவர்கள் ஒன்று சேர்வதற்கு அது வசதியான வாய்ப்பாக அமையும் என்ற கருத்து இங்குப் புலப்படுத்தப்பட்டுள்ளது.

## 2. தலித் அல்லாதவர்களை மையமாகக் கொண்டவை

தலித்துகளின் வாழ்க்கை மேம்பாடு அடைய தலித் அல்லாதவர்கள் மேற்கொள்ள வேண்டிய நடைமுறைகளாக சோலை சுந்தர பெருமாள் குறிப்பிடுவனவற்றை ஆதிக்கச் சாதியினர் சாதி வேறுபாடு இல்லாமல் நடந்து கொள்ளுதல், ஆதிக்கச் சாதியினர் தலித்துகளை ஒன்று சேரவிடாமல் தடுப்பதைத் தவிர்த்தல், ஆதிக்கச் சாதியினர் தலித் மக்களுடன் திருமண உறவில் ஈடுபடுதல், ஆதிக்கச் சாதித் தொழிலாளர்கள் சாதி என்ற அடிப்படையில் ஒன்று திரளாமல்

வர்க்கம் என்ற அடிப்படையில் தலித் மக்களுடன் ஒன்று திரளுதல் என வகைப்படுத்தலாம்.

**1. ஆதிக்கச் சாதியினர் சாதிவேறுபாடு இல்லாமல் நடந்து கொள்ளுதல்**

ஆதிக்கச் சாதியைச் சார்ந்தவர்கள் சாதி வேறுபாடு இல்லாமல் நடந்து கொள்ளும் நிகழ்வுகள் நாவல்களில் பதிவு செய்யப்பட்டுள்ளன. சான்றாக ராமு பண்டிதர் தனது குலத்தொழிலான சவரத் தொழிலைத் தன் குடும்பத்தின் வாழ்விற்காகப் பயன்படுத்தினார். இதற்காக ஓடக்கரையின் கீழ்ப்பக்கம் சவரக் கொட்டகையை அமைத்திருந்தார். வாளியில் ஆற்றுநீரைக் கொண்டு வந்து சண்முகத்திற்குச் சவரம் செய்தார். சண்முகம் அவரிடம் ஆதிக்க உணர்வு இல்லாமல் பேச, அவரும் மனநிறைவுடன் பேசிக்கொண்டு சவர வேலையில் ஈடுபடுவதாக 'ஒரே ஒரு ஊர்ல' என்ற நாவல் குறிப்பிட்டுள்ளது (சோலை சுந்தர பெருமாள், ஒரே ஒரு ஊர்ல, 2001, ப.128). மேலும் 'பெருந்திணை' என்ற நாவலில் இடம்பெற்ற சிவசங்கரன் பிள்ளை என்ற ஆதிக்கச் சாதிக்காரர் சாதி வேறுபாடு பார்க்காமல் தாழ்ந்த சாதியைச் சார்ந்த ஆறுமுகத்திடம் தனது சுகதுக்கங்களைப் பகிர்ந்து கொள்ளும் நிலை உள்ளது (சோலை சுந்தர பெருமாள், பெருந்திணை, 2005, ப.61). மேற்கூறிய நிகழ்வுகள் அனைத்தும் ஆதிக்கச் சாதியினர் தங்களுக்குக் கீழானோரிடம் சாதி வேறுபாடு இல்லாமல் அன்புடன் பழகுவதைக் குறிப்பிடுகின்றன. இவ்வாறான சாதி வேறுபாடற்ற நடைமுறைகள் கீழ்ச்சாதி மக்களின் துன்ப துயர நிகழ்வுகளை மறக்க வைக்க முயல்வதோடு, அவர்களிடம் தன்னம்பிக்கை வளரவும் உறுதுணையாகின்றன.

**2. ஆதிக்கச் சாதியினர் தலித்துகளை ஒன்றுசேர விடாமல் தடுப்பதைத் தவிர்த்தல்**

'தப்பாட்டம்' நாவலில் காமாட்சி அம்மன் கோவில் திருவிழாவின் இறுதியில் அம்மனை வழிபட சக்கிலியர்களை அனுமதித்ததால் காத்தமுத்து சேர்வையைப் பிற ஆண்டைகள் கடிந்து கொண்டனர். மேலும் "பறைத்தெரு, பள்ளத்தெரு, சக்கிலியத்தெரு பயலுக ஒண்ணா சேராமப் பார்த்துக் கொள்ள வேண்டும். சேர விட்டோம். மல்லாக்கப் படுத்துக்கிட்டு எச்சி துப்புனதா ஆயிடும்யா" (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, ப.124) என்று எச்சரித்தனர். வீரைய்யா மூப்பனார் "பறைப்பயலுங்களையும், சக்கிலியப் பயலுங்களையும் கம்யூனிஸ்ட் கட்சி ஒன்றாகச் சேத்துட்டா சிண்டு வெரைச்சிடும். அப்புறம், அந்தப் பயலுங்களை அவ்வளவு லேசில நாம வேலை வாங்கிட முடியாது. அவன்களைச் சேரவிடாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். அதற்கு அவன் சாதியில் தலைவனாக வந்தவனை நம்ம கட்சி பெரிய தலைவர்களுடன் வளைத்துப் போட்டுப் பண உதவி செய்ய வேண்டும்" (சோலை சுந்தர

பெருமாள், தப்பாட்டம், 2002, ப.141) என்றார். தலித் மக்கள் தங்களிடையேயான சிறு பிரச்சனைகளை மறந்துவிட்டு ஒன்று கூடினால் ஆதிக்கச் சாதியினருக்குக் கட்டுப்பட்டு அடிமை வேலைகளைச் செய்யமாட்டார்கள் என்பதை உணர்ந்து அவர்கள் தலித்துகளை ஒன்று சேரவிடாமல் தடுக்கின்றனர். இந்த நிலை தவிர்க்கப்பட வேண்டிய ஒன்றாகும்.

**3. ஆதிக்கச் சாதியினர் தலித் மக்களுடன் திருமண உறவில் ஈடுபடுதல்**

'உறங்க மறந்த கும்பகர்ணர்கள்' நாவல் 'சாதியுணர்வு நீங்க வேண்டும்' என்ற சிந்தனையைச் சில கதைப்பாத்திரங்கள் வாயிலாக வெளிப்படுத்தியுள்ளது. சாதி மற்றும் சொத்துடைமை அழுக்குகளில் சிக்கித் தனது பெற்றோர் மற்றும் சகோதரனைப் புறக்கணிக்கும் ஈரம் அற்ற நெஞ்சுடைய சிவராமன் போன்றோரின் தடைகள் அனைத்தையும் தகர்த்து விட்டுச் சின்னசாமி மற்றும் தங்கம் தம்பதியினர் தங்கள் மகன் அப்புனுவின் திருமணத்தைக் கீழ்சாதிப் பெண்ணான செவத்தியுடன் நடத்துகின்றனர் (சோலை சுந்தர பெருமாள், உறங்க மறந்த கும்பகர்ணர்கள், 2000, ப.142). இவ்வாறு ஆதிக்கச் சாதியினர் தலித் மக்களுடன் திருமண உறவில் ஈடுபடுவது அரிதாக நடைபெற்று வந்தாலும் இத்தகையை நிலை சாதிவேறுபாடுகளைக் களைய உதவும்.

**4. ஆதிக்கச் சாதித் தொழிலாளர்கள் சாதி என்ற அடிப்படையில் ஒன்று திரளாமல் வர்க்கம் என்ற அடிப்படையில் தலித் மக்களுடன் ஒன்று திரள்தல்**

முனியாண்டிச் சாம்பான், கதிர்வேலு பள்ளன், சின்னராசு சக்கிலியன் மூவரும் அவர்களின் நியாயமான கூலியைப் பண்ணை ஆண்டையிடம் கேட்டுப் பெற்றனர். அப்போது குடியானவர்த் தெருக்கூலிகள் தலித் மக்களுடன் சேர்ந்து நின்று கூலி வாங்கினர். பின்பு மூப்பர் தெருவினர் மற்றும் அம்பலக்காரர்த் தெருவினரிடம் உறவு முறையாகப் பேசினர். பின்னர் தலித்துகளைப் பார்த்துத் 'தள்ளி நின்னுங்கடா நீசப் பயலுங்களா . . .' என்று கூறி அதில் கிடைக்கும் சந்தோஷத்தில் திருப்தி அடைந்தனர் (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, ப்.94). காத்து முத்து சேர்வை என்பவர் 'நீச சாதிக்காரர்களை விட்டுவிட்டுக் குடியானவர்த் தெருவிலுள்ள ஆண், பெண் கூலிக்காரர்களை வைத்து வேலை பார்க்க வேண்டும் (சோலை சுந்தர பெருமாள், தப்பாட்டம், 2002, ப. 170) என்று கூறினார். கருப்பூர் தெரு கூலித் தொழிலாளர்கள் தங்கள் வேலையை ஒழுங்காகச் செய்வது இல்லை. வழக்கமாக வயலில் வேலை செய்யும் பண்ணைக் கூலிகளாகத் தலித்துகளை வைத்து, இவர்களை இரண்டாம் தர ஆட்களாகப் பண்ணை வைத்திருப்பதால் பண்ணை மீதான தங்களின் கோபத்தைப் பல

வழிகளில் தலித் தொழிலாளர்கள் மீது காட்டுகின்றனர். பிரச்சனைகளைத் தாங்களேத் தொடங்கி, “சின்ன சாதிக்காரப் பயலுங்களுக்குக் கெட்டப் புத்தித் தானே வரும்? இல்லாட்டா அந்த ஆறுமுகம் பய வண்ணாத்தி மூத்திரத்தைக் குடிக்கச் சுத்திக்கிட்டு நிக்கிறதைக் கண்டும் காணாதது போல இருப்பானுங்களா?" (சோலை சுந்தர பெருமாள், பெருந்திணை, 2005, ப. 83) என்று பேச்சைத் தொடங்கி உத்தண்டிச் சாம்பானை அடிக்க முயன்றனர் என்று 'பெருந்திணை' நாவல் குறிப்பிட்டுள்ளது. இவ்வாறு இல்லாமல் ஆதிக்கச் சாதியைச் சார்ந்த தொழிலாளர்கள் தலித் தொழிலாளர்களுடன் ஒன்றிணைந்து சாதியை மறந்து வர்க்கமாகச் செயல்பட்டால் பயன் விளையும்.

## தொகுப்புரை

“சோலை சுந்தர பெருமாள் படைப்புகள் குறிப்பிடும் தலித்துகளின் வாழ்க்கை மேம்பாட்டுச் சிந்தனைகள்" என்னும் தலைப்பின் கீழ் பின்வரும் செய்திகளைத் தொகுத்துக் காணலாம்.

1. சோலை சுந்தர பெருமாள் படைப்புகள் குறிப்பிடும் தலித்துகளின் வாழ்க்கை மேம்பாட்டுச் சிந்தனைகள் தலித்துகளையும், தலித் அல்லாதவர்களையும் மையம் கொண்டவையாக உள்ளன. அவற்றில் தலித்துகளை மையமாகக் கொண்ட சிந்தனைகளில் ஒடுக்கப் பட்டோருக்குக் கல்வி இன்றியமையாதது என்ற கருத்து வலுவூட்டப் பட்டுள்ளது. மேலும் தலித் மக்கள் தாங்கள் பெறும் கல்வியறிவால் சமுதாயத்தில் உயர்ந்த இடம், மதிப்பு, தன்னம்பிக்கை ஆகியவைகளைப் பெறமுடியும்.

2. தலித் மக்கள் வாழ்க்கை வசதிகள் பெறுவதற்குப் பொருளாதாரம் இன்றியமையாதது ஆகும். எனவே, பொருளாதார மேம்பாட்டால் தலித் சமுதாயத்தினர் மதிக்கப்படும் நிலையை அடையலாம்.

3. தலித் மக்கள் பரம்பரைத் தொழில் செய்வதால் ஆதிக்கச் சாதியினரால் இழிவு படுத்தப்படுகின்றனர். மேலும், அவர்கள் வேலைக்கான கூலியையும் பெற முடியாமல் வருந்துகின்றனர். எனவே, தலித்துகள் தங்கள் குலத்தொழிலைப் புறக்கணித்துவிட்டுப் படிக்கவும், பிற தொழில்களை நாடவும் வேண்டும் என்று சோலை சுந்தர பெருமாள் படைப்புகள் அறிவுரை வழங்குகின்றன.

4. மனிதராகப் பிறந்த அனைவரும் சமமான தகுதி உடையவர்கள் ஆவர். எனவே 'நீச சாதி' என்று கூறி யாரையும் அடிமையாக வைத்திருக்க எவருக்கும் உரிமையில்லை. ஆகவே தலித்துகள் இழிவானவர்கள் அல்லர்.

5. சாதி வேறுபாடுகளை நீக்கக் கலப்பு மணம் ஒரு சிறந்த வழியாகும். தலித் மக்கள் தங்கள் உட்சாதிப் பிரிவுகளுக்குள்ளும்,

ஆதிக்கச் சாதியினருடனும் கலப்பு மணம் செய்ய சோலை சுந்தர பெருமாளின் படைப்புகள் அறிவுறுத்துகின்றன.

6. தலித்துகள் தங்களிடையே காணப்படும் உட்சாதிப் பிரிவுகளைத் தவிர்த்தால் வாழ்க்கையில் எளிதில் உயரலாம். மேலும், ஒற்றுமை என்பது நிலைத்த மற்றும் சீரான வாழ்விற்கு அடித்தளமாகத் திகழ்கிறது. எனவே, தலித்துகள் தங்களிடையே காணப்படும் சிறிய பிரச்சனைகளைப் பெரிது படுத்தக்கூடாது.

7. போராட்டங்கள் தலித் மக்களின் விடுதலை வாழ்க்கைக்கு உதவுகின்றன. எனவே தலித் மக்கள் தங்களை மனிதனாக வாழ வைக்க உதவும் போராட்டங்களில் ஈடுபட வேண்டும். சில தலித் மக்கள் தங்களது சுய இலாபத்திற்காக ஆதிக்கச் சாதியினரிடம் தொடர்பு கொண்டு போராட்டங்கள் தோல்வியடையக் காரணமாகின்றனர். இந்த நிலை தவிர்க்கப்பட வேண்டும்.

8. தலித்துகள் தங்களைச் சார்ந்த பிற தலித்துகளைத் தாழ்வாகக் கூறக்கூடாது.

9. படித்து மற்றும் உழைத்து முன்னேறிய தலித்துகள் பின்தங்கிய தலித்துகள் முன்னேற உதவ வேண்டும்.

10. தலித்துகள் தங்களைச் சாதிபெயர் கூறி அழைப்பதை விரும்பாததால் அவர்கள் நகரங்களில் கூலிவேலைக்காகச் செல்லும் நிலை ஏற்பட்டுள்ளது. இந்த நிலை தவிர்க்கப்பட தலித் மக்களைச் சாதியைக் கூறாமல் வர்க்கத்தைக் கூறி ஒன்று திரட்ட வேண்டும்.

11. தலித் அல்லாத ஆதிக்கச் சாதியினர் சாதிவேறுபாடு இல்லாமல் தலித் மக்களுடன் நடந்து கொள்வதால் தலித்துகளிடையே தன்னம்பிக்கை வளர்கிறது.

12. தலித்துகளை ஆதிக்கச் சாதியினர் ஒன்று சேர விடாமல் தடுக்கும் நிலை தவிர்க்கப்பட வேண்டிய ஒன்றாகும். மாறாக, ஆதிக்கச் சாதியினர் தலித் மக்களுடன் திருமண உறவில் ஈடுபடுவது வரவேற்கத்தக்க ஒன்றாகும்.

13. ஆதிக்கச் சாதித் தொழிலாளர்கள் சாதி என்ற அடிப்படையில் ஒன்று சேராமல் வர்க்கம் என்ற அடிப்படையில் தலித் தொழிலாளர்களுடன் ஒன்று சேர வேண்டும்.

இவ்வாறு சோலை சுந்தர பெருமாள் படைப்புகள் தலித்துகளின் வாழ்க்கை மேம்பாடு தொடர்பான செய்திகளைத் தந்துள்ளன. இவற்றில் கலப்புத் திருமணம் போன்ற நிகழ்வுகள் தற்காலத்தில் பெரிய அளவில் வரவேற்பைப் பெறாவிட்டாலும் எதிர்காலத்தில் ஏற்றுக் கொள்ளப்பட்டுச் சாதிசமத்துவம் ஏற்பட உதவும் எனலாம்.

# முடிவுரை

**"படைப்பிலக்கியம் - விளிம்புநிலை மக்கள் ஆய்வு நோக்கு"** என்ற தலைப்பில் செய்யப்பட்ட இந்நூலின் வாயிலாக அறியலாகும் செய்திகளை –

1. சோலை சுந்தர பெருமாள் படைப்புகளில் காணலாகும் தலித்தியம் தொடர்பான செய்திகள்

2. சோலை சுந்தர பெருமாள் படைப்புகளில் காணலாகும் தலித்தியம் தொடர்பான செய்திகளின் இயல்புகள்

3. சோலை சுந்தர பெருமாள் படைப்புகளை அடியொற்றி தலித்தியம் தொடர்பான ஆய்வு வளர்ச்சிக்கான பரிந்துரைகள்

என வகைப்படுத்தி அமைக்கலாம்.

**1. சோலை சுந்தர பெருமாள் படைப்புகளில் காணலாகும் தலித்தியம் தொடர்பான செய்திகள்**

சோலை சுந்தர பெருமாள் படைப்புகளில் காணலாகும் தலித்தியம் தொடர்பான செய்திகளை, 1. தலித்தியம் தொடர்பான செய்திகள், 2. சோலை சுந்தர பெருமாள் படைப்புகள், 3. சோலை சுந்தர பெருமாள் படைப்புகள் குறிப்பிடும் தலித்துகளின் வாழ்க்கைப் பிரச்சனைகள், 4. சோலை சுந்தர பெருமாள் படைப்புகள் குறிப்பிடும் தலித்துகளின் வாழ்வுரிமைப் போராட்டங்கள், 5. சோலை சுந்தர பெருமாள் படைப்புகள் குறிப்பிடும் தலித்துகளின் வாழ்க்கை மேம்பாட்டுச் சிந்தனைகள் ஆகிய தலைப்புகளின் அடிப்படையில் பின்வருமாறு குறிப்பிடலாம்.

**1. 'தலித்தியம் தொடர்பான செய்திகள்' என்ற தலைப்பின் அடிப்படையில் பின்வருவனவற்றைச் சுட்டிக்காட்டலாம்.**

1. ஒடுக்கப்பட்டோரைக் குறிப்பதற்காக முதன்முதலாகத் 'தலித்' என்ற சொல் மராட்டிய மொழியில் பயன்படுத்தப்பட்டது. இது 'உரிமை இல்லாத சலுகை எங்களுக்குத் தேவை இல்லை' என்ற கருத்தை மையமாகக் கொண்டது.

2. மிகப் பழங்காலம் முதற்கொண்டே சாதி குறித்த செய்திகள் தமிழ் நூல்களில் பதிவாகியுள்ளன. தொல்காப்பியம் என்ற இலக்கண நூலிலும், பதிற்றுப்பத்து, புறநானூறு, பரிபாடல் போன்ற சங்க

இலக்கியங்களிலும், திருக்குறள், நாலடியார், நல்வழி முதலான நீதிநூல்களிலும், நாலாயிரதிவ்ய பிரபந்தம், பெரிய புராணம் போன்ற பக்தி இலக்கியங்களிலும், சிற்றிலக்கியங்கள் மற்றும் மறுமலர்ச்சிக்கால இலக்கியங்கள் ஆகியவற்றிலும் சாதி குறித்த செய்திகள் இடம்பெற்றுள்ளன.

3. பிராமணர் அல்லாதார் இயக்கம், நீதிக்கட்சி, அரிசன இயக்கம் ஆகியனவற்றைத் தொடர்ந்து பெரியார் சாதி ஒழிப்புப் போராட்டங்களில் நேரடியாக ஈடுபட விரும்பி சுயமரியாதை இயக்கத்தைத் தோற்றுவித்தார்.

4. தலித் இலக்கியப் படைப்பாளிகள் மராட்டியத்தில் 'தலித் இலக்கியம்' என்ற ஒரு புதிய பிரிவைத் தோற்றுவித்தனர். தலித் இலக்கியங்கள் மராட்டிய மொழியிலிருந்து இந்தி, கன்னடம், குஜராத்தி, தமிழ், தெலுங்கு எனப் பல மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டன. இதனால் தமிழ் மொழியில் தாழ்த்தப்பட்ட மக்களின் வாழ்வு படைப்புப் பொருளானது. இவ்வாறு மராட்டிய மொழியில் தலித் இலக்கியம் தோன்றிய பின்னர் தமிழிலும் தலித் மக்களின் வாழ்வு குறித்த படைப்புகள் தோன்றின.

5. இருபதாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் தமிழில் தலித் இலக்கியம் அதன் முழுமையான பொருளில் தோன்றியது. தமிழில் இமையம், சிவகாமி, கே. டானியல், பாமா, பூமணி போன்றோர் 'தலித் சமுதாயத்தைச் சார்ந்த' தலித் இலக்கியப் படைப்பாளர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவர். இன்குலாப், சோலை சுந்தர பெருமாள், ஞானி. கோவை, பத்மாவதி விவேகானந்தன், பொன்னீலன், அ. மார்க்ஸ் போன்றோர் 'தலித் அல்லாத' தலித் இலக்கியப் படைப்பாளர்கள் மற்றும் விமரிசகர்கள் ஆவர்.

6. தலித் கவிதைப் படைப்புகள், தலித் சிறுகதைப் படைப்புகள், தலித் நாவல் படைப்புகள், தலித் நாடகப் படைப்புகள், தலித் சுயசரிதைகள், தலித் மொழிபெயர்ப்புகள், தலித் ஒலிப்பேழைகள் என தலித் இலக்கிய வடிவங்களைப் பாகுபடுத்தலாம். இவை தலித் மக்களின் துயர வாழ்க்கை நிலையை வெளிப்படுத்துவதுடன், ஆதிக்க எதிர்ப்புணர்வைத் தூண்டுவனவாகவும் உள்ளன.

7. தென்னிந்திய பௌத்த சாக்கிய சங்கமும், தலித் ஆதார மையமும் தலித் சார்பான நிறுவனங்களில் குறிப்பிடத்தகுந்தவை ஆகும்.

8. தலித் மக்களுக்கு எதிராக நடைபெறும் பொருளாதாரச் சுரண்டலுக்கு எதிரான இயக்கங்களாகத் தலித் இயக்கங்கள் செயல்படுகின்றன. மேலும்,இவை தலித் சிந்தனைகளை நூல்கள் மற்றும் இதழ்கள் வாயிலாக வெளியிட்டுத் தலித் மக்களின் விழிப்புணர்வைத் தூண்டுகின்றன.

9. கலக மொழி என்று அழைக்கப்படும் தலித் மொழி தலித் மக்களுக்கு விழிப்புணர்வைத் தூண்டுகிறது. எனவே, கலகமொழியைப் படைப்பாக்குவதற்குத் தலித் ஆர்வலர்கள் விரும்புகிறார்கள்.

10. தலித் சார்ந்த கொள்கைப் படைப்புகளான ஆய்வு நூல்கள், கொள்கை நூல்கள், கட்டுரை நூல்கள் போன்றவை புதிய சிந்தனைகளைத் தருகின்றன.

இவ்வாறு தலித்தியச் செய்திகளைக் கூறுவதாக இந்த இயல் உள்ளது.

**2. 'சோலை சுந்தர பெருமாள் படைப்புகள்' என்ற தலைப்பின் அடிப்படையில் பின்வருவனவற்றைக் குறிப்பிடலாம்.**

1. சோலை சுந்தர பெருமாள் திருவாரூர் மாவட்டம் காவனூரில் 09-05-1953 இல் பிறந்தார். பிறப்பால் சோழிய வெள்ளாளர் சமுதாயத்தைச் சார்ந்த இவர் அம்மையப்பன் அரசு மேல்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணியாற்றி வருகிறார். இவரது படைப்புகள் எதார்த்த வாழ்க்கையை அப்படியே விளக்குகின்றன.

2. ஐந்து சிறுகதைத் தொகுப்புகள், இரண்டு குறுநாவல் தொகுப்புகள், ஏழு நாவல்கள் ஆகியவற்றோடு சிறுகதைத் தொகுப்பு நூல் ஒன்றுமாக மொத்தம் பதினைந்து நூல்கள் சோலை சுந்தர பெருமாளின் புனைகதைப் படைப்புகளாக வெளிவந்துள்ளன.

3. சிறுகதைத் தொகுப்புகள் ஐந்திலுமாக மொத்தம் அறுபத்து ஐந்து சிறுகதைகள் உள்ளன. அவை தலித் மக்களின் பண்பாடு சார்ந்த செய்திகள், உள்ள ஏக்கங்கள், கனவுகள், ஏமாற்றங்கள் ஆகியவற்றை எதார்த்தமாகச் சித்தரிக்கின்றன. மேலும், தங்கள் வாழ்க்கைப் பிரச்சனைகளைத் தீர்க்க மக்கள் மேற்கொள்ளும் பலவித முயற்சிகளும் கருப்பொருள்களாகியுள்ளன.

4. மனசு, குருமார்கள் ஆகிய குறுநாவல் தொகுப்புகளில் மொத்தம் ஐந்து குறுநாவல்கள் உள்ளன. இவை தலித் மற்றும் தலித் அல்லாத மக்களின் வாழ்க்கை நிலையைப் படம் பிடித்துக் காட்டுகின்றன.

5. சாதி அமைப்பு அப்படியே தகர்க்கப்படும் செய்தி, நாகதோஷம் என்ற நம்பிக்கை உடைக்கப்படும் செய்தி, சாதிய ஒடுக்குமுறைக்கு எதிரான வர்க்கப் போராட்டச் செய்தி, கூலி உயர்வுப் போராட்டத்தால் தலித் விவசாயத் தொழிலாளர்களுக்கும் நிலவுடைமையாளர்களுக்கும் இடையே ஏற்பட்ட போராட்டச் செய்தி, மண்ணுக்கும் மனிதனுக்கும் இடையேயான பொருந்தாக் காதலாக விவசாயம் மாறி வரும் செய்தி, பெருஞ்சொத்து என்றாலும் உடையவர் குணம் தீயதானால் அழிந்து விடும் செய்தி, சிவதரிசனம் செய்ய முற்பட்டதால் நந்தனுக்கு ஏற்பட்ட

அவல நிலை குறித்த செய்தி ஆகியவைகளை முறையே உறங்க மறந்த கும்பகர்ணர்கள், ஒரே ஒருஊர்ல, தப்பாட்டம், செந்நெல், பெருந்திணை, நஞ்சை மனிதர்கள், மரக்கால் ஆகிய ஏழு நாவல்களும் தெரிவிக்கின்றன.

6. நாட்டுப்புறச் சிறுகதைகள் என்ற சோலை சுந்தர பெருமாளின் தொகுப்பு நூலில் தலித் மற்றும் ஏழை மக்களின் அவலநிலை சித்தரிக்கப்பட்டுள்ளது.

7. ஒடுக்கப்பட்ட மக்களின் பிரச்சனைகளாக உழைப்பிற்கு ஏற்ற ஊதியம் வழங்கப்படாமை, சாதி பெயர் கூறி இழிவுபடுத்துதல், அடிப்படைத் தேவைகள் சந்திக்கப் படாமை, சமுதாயத்தால் புறந்தள்ளப்படுதல், ஒன்றுசேர மறுத்தல், மரியாதையின்மை, சித்ரவதை, தீண்டாமைக் கொடுமைகள், வறுமை ஆகியன உள்ளன.

8. பெண்களின் பிரச்சனைகளாக ஆணாதிக்கத் தன்மை, அதிகப்படியான உடலுழைப்பு, வேலைக்கான கூலியைப் பெறாமை, பெண் குழந்தையை வெறுக்கும் நிலை, வேலையிடங்களில் பாதுகாப்பின்மை, பால் சார்ந்த வன்கொடுமை போன்றவை காணப்படுகின்றன.

9. விவசாயக் கூலிகளின் பிரச்சனைகளாக உழைப்பிற்கு ஏற்ற வருமானம் இன்மை, சுரண்டல், வேலையின்மை மற்றும் கூலியின்மையால் ஏற்படும் இன்னல்கள் ஆகியன உள்ளன. மேலும், ஆசைப்பட்டதை அனுபவிக்க இயலாத நிலை, முதலாளிகளால் தன் சொந்த வேலை தடைபடுதல் போன்றனவும் உள்ளன.

10. தனிநபரால் ஏற்படும் பிரச்சனைகளாக அரசியல்வாதிகளின் ஆதிக்கம், குடிப்பழக்கம், தவறான நடத்தை, சுயகௌரவத்தின் விளைவு, வலிமையுடையவர்களின் ஆதிக்கம் ஆகியன உள்ளன.

11. கல்வி பெறத் தடையாகப் பொருளாதாரப் பற்றாக்குறை, அதிகார வர்க்கத்தின் ஒடுக்குமுறை ஆகியன உள்ளன.

12. மனித நேயமின்மையால் ஏற்படும் பிரச்சனைகளாக நீதி புரட்டப்படுதல் உள்ளது. மேலும் திருட்டு, இலஞ்சம், உழைப்பைக் கெடுத்தல், நிலத்தை அபகரித்தல், உழைப்புப் பிழியப்படுதல் ஆகியவனவும் உள்ளன.

13. மூடநம்பிக்கை, படிப்பிற்கு ஏற்ற வேலையின்மை ஆகியனவும் சமூகப் பிரச்சனைகளாகச் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.

இவ்வாறு இத்தலைப்பு சோலை சுந்தர பெருமாளின் படைப்புகள் மற்றும் அவற்றின் இயல்புகள் ஆகியவற்றை அறிமுகம் செய்து விளக்கும் நோக்கில் உள்ளது.

**3. 'சோலை சுந்தர பெருமாள் படைப்புகள் குறிப்பிடும் விளிம்புநிலை மக்களின் வாழ்க்கைப் பிரச்சனைகள்' என்ற தலைப்பின் அடிப்படையில் பின்வருவனவற்றைத் தரலாம்.**

1. சோலை சுந்தர பெருமாள் படைப்புகளில் குறிப்பிடப்பட்டுள்ள தலித் மக்கள் உழைப்பு ஒன்றையே மூலதனமாகக் கொண்டவர்கள். அவர்கள் தங்கள் வாழ்க்கைக்கான அடிப்படைத் தேவைகளை நிறைவு செய்யத் தேவையான பொருளாதார வசதி இல்லாதவர்களாக உள்ளனர். மேலும், பண்ணை அடிமைகளான அவர்கள் காலநேரம் இல்லாமல் உழைத்தாலும் விரும்புவதை உண்ண இயலாமல் உள்ளனர். அதோடு கோடைக்காலங்களில் வறுமையின் பிடியில் சிக்கி இறக்கும் நிலையிலும் உள்ளனர். உணவிற்கு ஏங்கும் அவர்களால் உடைக்குச் செலவழிக்க இயலவில்லை. தலித் மக்களின் உறைவிடங்கள் சுகாதாரம் அற்றும் வசதிகள் இல்லாமலும் காணப்படுகின்றன. இவர்களின் குடிசைகள் நான்கைந்து தலைமுறைகளை உள்ளடக்கியதாக உள்ளதால் இடப்பற்றாக்குறை காணப்படுகிறது. இவர்களின் வாழ்விடங்களாகிய சேரிகள் ஊரின் ஒதுக்குப்புறங்களில் உள்ளன. மேலும், குடிசைகள் கூட இல்லாத நிலையில் ஒட்டர் சமுதாய மக்கள் வாழ்கின்றனர். எனவே அடிப்படை வசதிகள் தலித் மக்களுக்குக் கிடைக்க அரசு வழிவகை செய்ய வேண்டும்.

2. பரம்பரைப் பரம்பரையாகத் தலித் மக்கள் அடிமைகளாக வாழ்ந்து வருவதால் அவர்கள் அடிமை வேலை செய்யத் தூண்டப்படுகின்றனர்.தனிக்குவளை மற்றும் உண்கலன்கள், குடியிருக்கும் இடங்களில் பாகுபாடு, செருப்பு அணியத்தடை, மிதிவண்டியில் ஏறிச் செல்லத்தடை, பீடி புகைக்கத் தடை, ஆடை மற்றும் அணிகலன்கள் அணிவதில் கட்டுப்பாடு, வெள்ளாடு வளர்க்கத் தடை, கால்நடைகளை விற்பதற்குப் பண்ணையின் அனுமதி பெறுதல், ஆறு, குளம் மற்றும் குட்டைகளைப் பயன்படுத்தத் தடை எனப் பல்வேறு வகையான நெருக்குதல்களுக்குள் வாழும் தலித்துகள் கட்டுப்பாடுகளை மீறினால் கொடூரமான தண்டனைகளைப் பெறுகின்றனர்.

3. மாடுகளைப் பராமரித்தல், இறந்த விலங்குகளை அப்புறப்படுத்துதல், பிறப்பு, பூப்பு, இறப்புச் சடங்குகள் மற்றும் அதைச் சார்ந்த நிகழ்வுகளை நிகழ்த்துதல், வயலில் வேலை செய்தல், பறையடித்தல்,குறவன் குறத்தி ஆட்டம் நிகழ்த்துதல், துணி வெளுத்தல் என சாதி சார்ந்த தொழில்களைச் செய்வதற்குத் தலித் மக்கள் கட்டாயப்படுத்தப் படுகின்றனர். ஆனால் இவற்றிற்கு உரிய கூலி வழங்கப்படவில்லை.

4. அனைவருக்கும் கல்வி கற்கும் உரிமை இருப்பினும் தலித் மக்கள் கல்வி கற்க பண்ணையாரிடம் அனுமதி பெற வேண்டிய

சூழ்நிலையில் வாழ்கின்றனர். மாறாக பண்ணையாரின் அனுமதி இல்லாமல் தலித் மக்கள் படிக்க முயற்சித்தால் அவர்கள் மீது பொய்க்குற்றம் சாட்டப்படுகிறது. தலித் மக்கள் வாழ்வுடன் பின்னிப் பிணைந்ததாகப் பணிவு உள்ளது. தலித் மக்கள் தங்களுக்குக் கிடைக்கும் சிறிதளவு கூலியையும் பணிந்து பெறுகின்றனர். தங்கள் வேலைகளில் ஒழுங்காக இருந்தாலும் அவர்கள் ஆண்டைகளுக்காகப் பிற ஆண்டைகளிடமிருந்து அடி வாங்குகின்றனர். மேலும், தலித் மக்கள் ஆதிக்கச் சாதியினரைக் கண்டால் மரியாதைச் செலுத்த வேண்டும் என்பது போன்ற பல நடைமுறைகளை மேற்கொண்டு ஆதிக்கச் சாதியினரின் அடிமைத் தனங்களுக்கு உள்ளாகித் துன்புற்று வாழ்கின்றனர்.

5. தலித் மக்களுக்கு ஆதிக்கச் சாதியினர் மரியாதை வழங்க மறுப்பதுடன், இழிவாகவும் பேசுகின்றனர். ஆதிக்கச் சாதியினர் தங்கள் வீடுகளில் சமைத்த உணவுகளைத் தலித் மக்களுக்கு வழங்குவது இல்லை. தலித்துகள் பொருளாதாரத்தில் உயர்ந்த நிலையில் இருந்தாலும் ஆதிக்கச் சாதியினர் அவர்கள் வீட்டுத் தேவைகளுக்கு வரவிரும்புவது இல்லை. மேலும், ஆதிக்கச் சாதியினர் எல்லா நிலைகளிலும் தலித் மக்களை ஒதுக்கி வைப்பதுடன், தலித் மக்களின் ஒற்றுமையைக் குலைக்கவும் முயல்கின்றனர். அதோடு தலித் மக்களுக்கான சமுதாய நிலங்களை ஆதிக்கச் சாதியினர் தங்களுக்கு ஏற்படும் தேவைகளைப் பொறுத்து விற்கின்றனர். இவ்வாறு தலித்துகள் ஆதிக்கச் சாதியினரால் புறக்கணிக்கப்படுகின்றனர்.

6. ஆதிக்கச் சாதியினர் தலித் மக்களைத் தீண்டத்தகாதவர்களாகக் கருதுவதால் தங்கள் தெய்வம் சேரியில் வருவதற்கும், சேரி மக்கள் அந்த தெய்வத்தை வணங்குவதற்கும் எதிர்ப்புத் தெரிவிக்கின்றனர். கடைகளில் தலித் மக்கள் ஆதிக்கச் சாதியினருக்கு அருகில் நிற்க முடிவதில்லை. அதோடு, எப்போதும் தலித் மக்கள் இடைவெளியைக் கடைபிடிக்க வேண்டியது கட்டாயமாகிறது. மேலும் முடிவெட்டும் இடத்திலும் சாதிப்பாகுபாடு காணப்படுகிறது.

7. ஆதிக்கச் சாதியினர் தங்களுக்கு விருப்பமில்லாத தலித் மக்களை வன்முறைக்கு உட்படுத்துகின்றனர். அடித்தல், சித்ரவதை செய்தல், கொலை செய்தல் என்ற முறைகளில் தலித் மக்கள் மீது வன்முறைகள் நிகழ்கின்றன.

8. தலித் பெண்கள் ஒடுக்கப்படுதல், தீய வார்த்தைகளால் காயப்படுத்தப்படுதல், கற்பழிக்கப்படுதல், கற்பழித்துக் கொலை செய்யப்படுதல் என்ற வன்முறைச் செயல்களால் மிகவும் சிக்கல் வாய்ந்த நிலையில் வாழ்கின்றனர்.

இவ்வாறு தலித் மக்களின் வாழ்க்கை அவலங்களைச் சோலை சுந்தர பெருமாள் படைப்புகளை மையமாகக் கொண்டு எடுத்தியம்புவதாக இந்த இயல் உள்ளது.

**4. 'சோலை சுந்தர பெருமாள் படைப்புகள் குறிப்பிடும் விளிம்புநிலை மக்களின் வாழ்வுரிமைப் போராட்டங்கள்' என்ற தலைப்பின் அடிப்படையில் பின்வருமாறு காணலாம்,**

1. மனித உரிமைகள் மனிதனின் தனி மனித மதிப்பை மேம் படுத்துவதாகவும் சமுதாயத்தாலும் சட்டத்தாலும் அங்கீகரிக்கப் பட்டதாகவும் உள்ளன. தலித் மக்களுக்கு தாழ்த்தப்பட்டவர்கள் என்ற காரணத்தால் மனித உரிமைகள் மறுக்கப்படுகின்றன. இந்த நிலையில் போராட்டங்களின் வாயிலாக மனித உரிமைகளை மீட்டெடுக்க தலித் மக்கள் முயல்கின்றனர்.

2. தலித் மக்களின் வேலை மற்றும் கூலியை ஆதிக்கச் சாதியினர் தடை செய்யும் நிலையில் அவர்கள் தங்களுக்குச் சுயமரியாதையும், உரிமையும் முக்கியம் என்று கருதிப் போராட்டங்களில் ஈடுபடுகிறார்கள்.

3. கூலி உயர்விற்காகக் கீழவெண்மணியில் தலித் விவசாயக் கூலித் தொழிலாளர்கள் தொடங்கின போராட்டம் தஞ்சை வரை பரவினது. கூலி உயர்வு பெறாமல் வேலைக்குச் செல்ல மறுத்த அவர்கள் வேறு ஆட்கள் வாயிலாக வேலை செய்வதையும் தடுக்க முயன்றனர். இதனால் நெல் உற்பத்தியாளர் சங்கத் தலைவர் கோபால கிருஷ்ண நாயுடுவால் பல இன்னல்களைச் சந்தித்தனர். பின்னர் அரசின் தலையீட்டால் அவர்கள் எட்டணா கூலி உயர்வு பெற்றனர். எட்டாம் நம்பர் பயிர் அறுவடையின் போது கலத்திற்கு ஆறுபடி நெல்லைக் கூலியாகத் தரவேண்டும் என்று கேட்டதால் மீண்டும் போராட்டம் தொடர்ந்தது. தலித் மக்கள் அமைதியாகத் தொடங்கின போராட்டம் ஆதிக்கச் சாதியினரின் சூழ்ச்சியினால் வன்முறையை நோக்கிச் சென்றது. இறுதியில் கோபால கிருஷ்ண நாயுடு குண்டர் படையுடன் வந்து, ராமையன் என்பவரது வீட்டிற்குள் ஒளித்திருந்த தலித் மக்கள் அனைவரையும் தீயிட்டுக் கொளுத்தினார் என்று 'செந்நெல்' நாவல் குறிப்பிட்டுள்ளது. இவ்வாறு கீழவெண்மணியில் நடைபெற்ற தலித் மக்களின் கூலி உயர்வுப் போராட்டம் தோல்வியில் முடிந்தது.

4. கூலியை உயர்த்திக் கொடுக்காவிட்டால் அடிமை வேலை செய்ய மாட்டோம் என்று சாமு சாம்பான் என்பவரும் தம்புராயன் பகடை என்பவரும் கூறியதோடு விவசாய வேலைக்கான கூலியையும் உயர்த்திக் கேட்டனர் என்று 'தப்பாட்டம்' நாவல் குறிப்பிட்டுள்ளது.

5. தலித் மக்களுக்குக் கோவில் மற்றும் தேநீர்க் கடைகளில் சம உரிமை மறுக்கப்படுகிறது. 'தப்பாட்டம்' நாவலில் குறிப்பிடப்படும்

காமாட்சி அம்மன் கோவில் திருவிழாவின் இறுதிநாளில் பல போராட்டங்களுக்குப் பிறகு சக்கிலியர்கள் அர்ச்சனை மற்றும் அபிஷேகம் செய்ய உரிமை பெற்றனர். ஆனால் பறையர் சாதியினரை மூப்பர் தெருவினர் அனுமதிக்கவில்லை. மேலும் ரெட்டிப்பாளையம் மக்களின் தேநீர்க் கடைப் போராட்டம் தோல்வியில் முடிந்தது.

6. சோலை சுந்தர பெருமாள் படைப்புகளில் குறிப்பிடப்படும் கம்யூனிஸ்ட் கட்சி தலித் மக்களுக்கு விழிப்புணர்வைத் தூண்டி, அவர்கள் போராட்டங்களில் ஈடுபட உதவுகிறது.

7. தலித் பெண்கள் பால் சார்ந்த வன்முறைகளிலிருந்து தங்களைப் பாதுகாத்துக் கொள்ள முயன்று போராடும்போது பல இன்னல்களைச் சந்திக்கும் நிலையைச் ‘செந்நெல்' நாவல் புலப்படுத்துகிறது.

8. ‘தப்பாட்டம்' நாவலில் சுட்டிக்காட்டப்பட்டுள்ள இடுகாடு வெறுவதற்கான போராட்டத்தில் காருக்குடியிலுள்ள தலித் மக்கள் ஆதிக்கச் சாதியினர் மற்றும் அரசுப் பணியாளர்களை எதிர்த்து வெற்றி பெற்றனர்.

9. மனிதனாக வாழும் உரிமைக்கான போராட்டம் தோல்வியில் முடிந்ததாக ‘மரக்கால்' என்ற நாவல் குறிப்பிட்டுள்ளது.

இவ்வாறு பல்வேறு விதமான போராட்டச் செய்திகளைக் கூறுவதாக இத்தலைப்பு அமைந்துள்ளது.

**5. ‘சோலை சுந்தர பெருமாள் படைப்புகள் குறிப்பிடும் விளிம்புநிலை மக்களின் வாழ்க்கை மேம்பாட்டுச் சிந்தனைகள்' என்ற தலைப்பின் அடிப்படையில் பின்வருவனவற்றைக் குறிப்பிடலாம்.**

1. சோலை சுந்தர பெருமாள் படைப்புகள் குறிப்பிடும் தலித்துகளின் வாழ்க்கை மேம்பாட்டுச் சிந்தனைகளில் தலித்துகளை மையமாகக் கொண்டவைகளாக கல்வியின் இன்றியமையாமை, பொருளாதாரத்தின் தேவை, குலத்தொழிலைப் புறக்கணிக்கத் தூண்டுதல், தலித்துகள் இழிவானவர் அல்லர் என்ற கருத்தை முதன்மைப்படுத்துதல், தலித்துகள் தங்களுக்குள் கலப்பு மணம் செய்ய அறிவுறுத்துதல், உட்சாதிப் பிரிவுகளைத் தவிர்த்து ஒற்றுமைக்கு அடித்தளமிடச் செய்தல், போராட்டங்களில் ஈடுபடுதல், தலித்துகள் தங்களைச் சார்ந்தவர்களை மதித்தல், முன்னேறிய தலித்துகள் சமுதாயத்தில் பின்நிலையில் இருப்போருக்கு உதவுதல், சாதியைக் கூறித் தலித் மக்களை ஒன்றிணைக்காமல் வர்க்கத்தைக் கூறி ஒன்று திரட்டுதல் ஆகியவை உள்ளன.

2. ஆதிக்கச் சாதியினரை மையமாகக் கொண்டவையாக சாதிப்பாகுபாடு இல்லாமல் ஆதிக்கச் சாதியினர் தலித்துகளிடம் நடந்துகொள்ளுதல், ஆதிக்கச் சாதியினர் தலித்துகளை ஒன்று சேரவிடாமல் தடுப்பதைத் தவிர்த்தல், ஆதிக்கச் சாதியினர் தலித் மக்களுடன் திருமண உறவில் ஈடுபடத்தூண்டுதல், ஆதிக்கச் சாதித் தொழிலாளர்கள் வர்க்கத்தின் அடிப்படையில் தலித் தொழிலாளர்களுடன் இணைதல் ஆகியவை உள்ளன. இவற்றில் கலப்புத் திருமணம் என்பது தற்காலத்தில் வரவேற்பைப் பெறாவிட்டாலும் எதிர்காலத்தில் அது சாதி சமத்துவம் மலர உதவும் எனக் கருதலாம்.

இவ்வாறு இத்தலைப்பில் விளிம்புநிலை மக்களின் வாழ்க்கை மேம்பாட்டுச் சிந்தனைகள் இடம்பெற்றுள்ளன.

**2. சோலை சுந்தர பெருமாள் படைப்புகளில் காணலாகும் தலித்தியம் தொடர்பான செய்திகளின் இயல்புகள்**

சோலை சுந்தர பெருமாள் படைப்புகளில் காணலாகும் தலித்தியம் தொடர்பான செய்திகளின் இயல்புகளை 1.தலித்தியம் தொடர்பான செய்திகள், 2. சோலை சுந்தர பெருமாள் படைப்புகள், 3. சோலை சுந்தர பெருமாள் படைப்புகள் குறிப்பிடும் தலித்துகளின் வாழ்க்கைப் பிரச்சனைகள், 4. சோலை சுந்தர பெருமாள் படைப்புகள் குறிப்பிடும் தலித்துகளின் வாழ்வுரிமைப் போராட்டங்கள், 5. சோலை சுந்தர பெருமாள் படைப்புகள் குறிப்பிடும் தலித்துகளின் வாழ்க்கை மேம்பாட்டுச் சிந்தனைகள் ஆகிய தலைப்புகளின் அடிப்படையில் பின்வருமாறு குறிப்பிடலாம்.

**1. 'தலித்தியம் தொடர்பான செய்திகள்' என்ற தலைப்பின்கீழ் பின்வருவனவற்றைச் சுட்டிக்காட்டலாம்.**

1. 'தலித்' என்பதைப் பிற்படுத்தப்பட்டோர் அனைவரும் உணர்வு அடிப்படையில் இணையும் புள்ளி என்று கூறலாம். இது'உரிமை எங்களுக்குத் தேவை. உரிமை இல்லாத சலுகை எங்களுக்குத் தேவை இல்லை' என்ற கருத்தை வலியுறுத்தி நிற்கிறது.

2. சமுதாயம் சாதி அமைப்பால் பிளவுபட்டிருந்தது என்பதைப் பழங்கால இலக்கியங்கள் சுட்டிக்காட்டுகின்றன. மேலும் தமிழகத்தில் மறுமலர்ச்சிக் காலத்திலேயே தாழ்த்தப்பட்டோர் வாழ்வு படைப்புப் பொருளானது. எனினும் மராட்டியத்தில் தலித் இலக்கியம் தோற்றம் பெற்ற பின்னரே தமிழிலும் தலித் மக்களின் வாழ்வு குறித்த படைப்புகள் தோன்றின.

3. தலித் இலக்கியங்கள் அனைத்தும் தலித் மக்களின் அவல வாழ்வைப் படம் பிடித்துக் காட்டுவதுடன், ஆதிக்க எதிர்ப்புணர்வையும் தூண்டுகின்றன.

4. தலித் நிறுவனங்கள் தலித் மக்களுக்கு விழிப்புணர்வைத் தூண்டி அவர்களைச் சமுதாயத்தில் விடுதலை உணர்வுடன் வாழச் செய்ய முயல்தல் என்னும் அரிய முயற்சியுடன் செயல்பட்டு வருகின்றன.

**2. 'சோலை சுந்தர பெருமாள் படைப்புகள்' என்ற தலைப்பின் அடிப்படையில் பின்வருவனவற்றைக் குறிப்பிடலாம்.**

1. 'ஓராண்காணி' என்ற சிறுகதைத் தொகுப்பில் கல்வி, மருத்துவம், வேலை முதலிய அடிப்படையான வாழ்க்கைத் தேவைகளுக்காகக் கிராம மக்கள் அனுபவிக்கும் இன்னல்கள் கூறப்பட்டுள்ளன. மேலும் மக்களின் உரிமைகளை ஆதிக்கச் சாதியினர் பறிக்கும் நிலைகளும் காட்டப்பட்டுள்ளன.

2. சராசரி மனித வாழ்வின் பல்வேறு முரண்பாடுகளை 'மண் உருவங்கள்' என்ற சிறுகதைத் தொகுப்புக் கருப்பொருள்களாக்கியுள்ளது.

3. 'ஒரு ஊரும் சில மனிதர்களும்' என்ற சிறுகதைத் தொகுப்பிலுள்ள சிறுகதைகள் தலித் மக்களின் அவல வாழ்வைப் படம்பிடித்துக் காட்டுகின்றன.

4. குடந்தை, திருவாரூர், நாகை எனப்படும் கீழ் தஞ்சைப் பகுதியில் வாழும் தலித் மற்றும் வறுமைக் கோட்டிற்குக் கீழ் வாழும் மக்களின் குடும்ப வாழ்வின் பிரச்சனைகளை 'வண்டல்' சிறுகதைத் தொகுப்பிலுள்ள சிறுகதைகள் எடுத்தியம்புகின்றன.

5. தஞ்சை மாவட்டத்திலுள்ள தலித் மற்றும் தலித் அல்லாத மக்களின் வாழ்க்கைப் பிரச்சனைகளை ஆசிரியர் 'மடையான்களும் சில காடைகளும்' என்ற சிறுகதைத் தொகுப்பின் வாயிலாக அறிமுகம் செய்துள்ளார்.

6. தலித் மற்றும் தலித் அல்லாத சராசரி மனிதர்களின் மனநிலைகளையும், தலித் மக்களின் சமுதாய நிலைகளையும் 'மனசு' என்ற குறுநாவல் தொகுப்புச் சீர்தூக்கிப் பார்க்கிறது.

7. 'குருமார்கள்' என்ற குறுநாவல் தொகுப்பில் தலித் மற்றும் தலித் அல்லாத மனிதர்களின் வாழ்க்கை நிலைகள் கூறப்பட்டுள்ளன.

8. சாதி அமைப்புத் தகர்க்கப்பட வேண்டும் என்ற செய்தி '*உறங்க மறந்த கும்பகர்ணர்கள்*' என்ற நாவலில் மையம் கொண்டுள்ளது.

9. நாகதோஷம் என்ற நம்பிக்கை பொய்யாகிப் போனதை 'ஒரே ஒரு ஊர்ல' என்ற நாவல் கூறுகிறது. மேலும் தாழ்த்தப்பட்ட மக்கள் சமுதாயம் பார்க்கும் செய்தியையும் இந்த நாவல் குறிப்பிடுகிறது.

10. 'தப்பாட்டம்' என்ற நாவல் சாதி வேறுபாடுகளையும், சமூக அவலங்களையும் களையும் நோக்கில் படைக்கப்பட்டது ஆகும். எனவே சாதி அடிமைத்தனங்களையும், அதனால் நிலை குலைந்து போனவர்களின் இயல்புகளையும் இந்த நாவலின் பாத்திரங்கள் பிரதிபலிக்கின்றன. அதோடு தீண்டாமைக் கொடுமையையும் இந்த நாவல் வெளிப்படுத்துகிறது.

11. 'செந்நெல்' நாவல் கீழ வெண்மணி மக்களின் கூலிப் போராட்டம் குறித்த நாவலாக உள்ளது. நெடுங்காலமாக அடிமைப்பட்டுப் போன மக்களின் விடுதலை வேட்கையை நாவலின் முதன்மைப் பாத்திரங்கள் பிரதிபலிக்கின்றன. ஆதிக்கச் சாதியினருக்கும், அடிமைப்பட்டோருக்கும் இடையே நடைபெறும் முரண்பட்ட போராட்டம் நாவலில் மையப்படுத்தப்பட்டுள்ளது.

12. கோடையின் விளைவாகத் தலித் மக்கள் வறுமையடைந்து துயருறும் நிலையையும், அரசிற்கு எதிராக அவர்கள் செய்யும் போராட்டத்தையும், ஆண்டைகளின் துயர வாழ்வையும் 'பெருந்திணை' நாவல் காட்டுகிறது.

13. ஆண்டைகள் மற்றும் அடிமைகளின் வாழ்வு நிலையை 'நஞ்சை மனிதர்கள்' என்ற நாவல் விளக்குகிறது.

14. சிவபித்துப் பிடித்த தலித்தான நந்தனின் வாழ்க்கை நிலையையும், அவனது பரிதாப முடிவையும் 'மரக்கால்' நாவல் கூறுகிறது.

15. கிராம மக்களின் மன ஏக்கங்களை, அங்கதச் சுவையுடன் கூறும் 'நாட்டுப்புறச் சிறுகதைகள்' என்ற தொகுப்பு நூலில் விளிம்புநிலை மக்களின் வாழ்க்கை நிலைகளும் கூறப்பட்டுள்ளன.

**3. 'சோலை சுந்தர பெருமாள் படைப்புகள் குறிப்பிடும் விளிம்புநிலை மக்களின் வாழ்க்கைப் பிரச்சனைகள்'என்ற தலைப்பின் அடிப்படையில் பின்வருவனவற்றைத் தரலாம்.**

1. அடிப்படை வசதிகள் அனைவருக்கும் பொதுவானவை. மேலும், மனிதனின் கண்ணியமான வாழ்விற்கு அவை இன்றியமையாதவை. ஆனால் இத்தகைய அடிப்படை வசதிகள் 'தலித்' என்று சாதியின் பெயரால் ஒடுக்கப்படும் மக்களுக்கு மறுக்கப்படுவது மனித உரிமைகளுக்கு எதிரான செயல் ஆகும்.

2. 'தலித்' என்ற பெயரால் ஒருவரது தனி மனிதச் சுதந்திரம் பறிக்கப்படுதல் கூடாது. எனவே, ஆதிக்கச் சாதியினர் சாதிக்கட்டுப்பாடு என்று கூறி தலித்துகளைத் தமது கட்டுப்பாட்டிற்குள் வைத்திருக்க முயலுதல் தவிர்க்கப்பட வேண்டிய ஒன்று ஆகும்.

3. தான் விரும்பும் வேலையைச் செய்யும் உரிமை மனிதனாகப் பிறந்த அனைவருக்கும் உண்டு. எனவே, சாதி சார்ந்த தொழில்களைச் செய்ய தலித் மக்களை வற்புறுத்தக் கூடாது.

4. ஆதிக்கச் சாதியினரின் பிடியிலிருந்து தலித் மக்கள் விடுபட்டு அவர்களின் அடிமைத்தனங்களிலிருந்து மீள்வது இன்றியமையாதது.

5. சுதந்திரம், மாண்பு, உரிமைகள், சமத்துவம் இவைகளோடு மனிதன் பிறக்கிறான். எனவே தலித் மக்கள் ஆதிக்கச் சாதியினரால் புறக்கணிக்கப்படும் நிலை தவிர்க்கப்பட வேண்டும்.

6. எதையும் உரிமை கொண்டாட முடியாத நிலைக்குத் தலித் மக்களைத் தள்ளுவது தீண்டாமை ஆகும். எனவே தலித்துகளை தீண்டத்தகாதவர்களாகக் கருதும் நிலை ஒழிக்கப்பட வேண்டும்.

7. ஆதிக்கச் சாதியினர் சாதிப் பாகுபாட்டின் காரணமாக தலித் மக்களை வன்முறைக்கு உட்படுத்துகின்றனர். இவ்வாறான வன்முறைச் செயல்கள் களையப்பட வேண்டியது கட்டாயமாகும்.

8. பொதுவாக பெண்கள் சமுதாயத்தில் இரண்டாம் தர வாழ்க்கை வாழும் சூழலில் தலித் பெண்களின் நிலை மிகவும் சிக்கல் வாய்ந்ததாக உள்ளது. பரிதாபத்திற்குரிய தலித் பெண் இனம் இக்கட்டான சூழ்நிலைகளிலிருந்து மீட்கப்பட வேண்டும்.

தலித்துகளின் வாழ்க்கைப் பிரச்சனைகள் தொடர்பாக தரப்பட்ட கருத்துகளைத் தலித் விடுதலை விரும்பிகளும், அரசும் கவனத்தில் கொள்ள வேண்டியது இன்றியமையாதது ஆகும்.

**4. 'சோலை சுந்தர பெருமாள் படைப்புகள் குறிப்பிடும் விளிம்பு நிலை மக்களின் வாழ்வுரிமைப் போராட்டங்கள்' என்ற பொருண்மையின் அடிப்படையில் பின்வரும் செய்திகளைத் தரலாம்.**

1. மறுக்கப்படும் உரிமைகளை மீட்டெடுப்பதற்குத் தலித் மக்களுக்குப் போராட்டங்கள் உதவுகின்றன.

2. வேலைக்கு ஏற்ற கூலியைப் பெற ஒவ்வொருவருக்கும் உரிமை உண்டு. ஆகவே கூலி உயர்வுக்கான போராட்டங்கள் ஏற்றுக் கொள்ளத்தக்கவை. மேலும், அடிமை முறையும், அடிமை முறையின் வடிவங்களும் குற்றங்களாகும். எனவே, அடிமை முறை தடை செய்யப்பட வேண்டும். அதோடு அடிமை வேலைக்கு எதிரான போராட்டங்களும் வரவேற்கத்தக்கவை ஆகும்.

3. தனி நபர் ஒருவர் அனைத்து உரிமைகளையும் சமமாகப் பெறுவதற்குத் தகுதி உடையவர் ஆவார். எனவே கோவிலில் வழிபடும் உரிமைக்கானப் போராட்டம், தேநீர்க் கடைப் போராட்டம் போன்றவை மனித மாண்பை நிலைப்படுத்த உதவுகின்ற போராட்டங்களாகும்.

4. பால் சமத்துவம் ஆண் மற்றும் பெண்ணிற்குச் சம மதிப்பை அளிக்கிறது. இது உலகளவில் ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒன்றாகும். எனவே பெண்கள் மதிப்பிலும், ஊதியத்திலும் ஆண்களுக்கு இணையாகக் கருதப்பட வேண்டும்.

5. மனிதர்களாகப் பிறந்த அனைவரும் மனிதராக மதிக்கத் தகுதியுடையவர் ஆவார். எனவே மனிதனாக வாழும் உரிமைக்காகத் தலித் மக்கள் நடத்தும் போராட்டங்கள் வரவேற்கப்படத்தக்கவை ஆகும்.

**5. 'சோலை சுந்தர பெருமாள் படைப்புகள் குறிப்பிடும் விளிம்பு நிலை மக்களின் வாழ்க்கை மேம்பாட்டுச் சிந்தனைகள்' என்ற தலைப்பின் அடிப்படையில் பின்வரும் செய்திகளைச் சுட்டிக் காட்டலாம்.**

1. சமுதாயத்தில் உயர்ந்த இடம், மதிப்பு, தன்னம்பிக்கை ஆகியன கல்வியால் கிடைக்கும் கொடைகள் ஆகும். எனவே தலித்துகள் கல்வி கற்க வேண்டியது கட்டாயமாகிறது.

2. பொருளாதார அடித்தளம் இல்லாத எந்தத் திட்டங்களும் பயன்படுவது இல்லை. எனவே, தலித் மக்களின் வாழ்க்கை வளமாக மாற பொருளாதாரம் இன்றியமையாதது.

3. தலித்துகள் தங்கள் பரம்பரைத் தொழிலை விட்டு, வேலைக்கு ஏற்ற கூலியைப் பெறும் பிற தொழில்களை நாட முன்வரவேண்டும்.

4. மனிதனாகப் பிறந்த அனைவரும் சமமானவர்கள். எனவே, தலித் மக்கள் இழிவானவர்கள் அல்லர்.

5. தலித்துகள் தங்களிடையேயான உட்சாதிப் பிரிவுகளைக் களைந்து வர்க்கம் என்ற அடிப்படையில் ஒன்றிணைந்து ஒற்றுமையாக வாழ வேண்டும்.

6. தலித் மக்கள் தேவையானால் போராட்டங்களில் ஈடுபட்டுத் தங்கள் உரிமைகளை மீட்டெடுக்க முயல வேண்டும்.

7. தலித்துகள் பிற தலித் மக்களை மதிக்க வேண்டும். மேலும் சமுதாயத்தில் கீழ்நிலையில் இருப்போரை உயர்த்துவதற்கு வழிவகை செய்ய வேண்டும்

8. தலித்துகளிடையே தன்னம்பிக்கை வளர ஆதிக்கச் சாதியினர் சாதி வேறுபாடு இல்லாமல் தலித் மக்களிடம் பழகுவது இன்றியமையாதது.

9. திருமணம் என்னும் அங்கீகரிக்கப்பட்ட உறவில் ஆதிக்கச் சாதியினர் தலித் மக்களுடன் ஒன்றிணைவது வரவேற்கத்தக்க முயற்சியாகும்.

10. வர்க்கம் என்ற அடிப்படையில் ஆதிக்கச் சாதித் தொழிலாளர்கள் தலித் தொழிலாளர்களுடன் ஒன்றிணைந்தால் விரைவில் புதிய சமுதாயம் மலரும்.

இவ்வாறு விளிம்புநிலை மக்களின் வாழ்க்கை மேம்பாடு தொடர்பாக இங்குத் தரப்பட்ட சிந்தனைகள் கவனத்தில் கொள்ளத் தக்கனவாக உள்ளன.

**3. சோலை சுந்தர பெருமாள் படைப்புகளை அடியொற்றி தலித்தியம் தொடர்பான ஆய்வு வளர்ச்சிக்கான பரிந்துரைகள்**

சோலை சுந்தர பெருமாள் படைப்புகளை மையமாகக் கொண்டு தலித்தியம் தொடர்பான ஆய்வு வளர்ச்சிக்காகப் பின்வருவனவற்றைப் பரிந்துரைகளாகக் கொள்ளலாம்.

1. தலித்தியம் தொடர்பான படைப்புகளும், ஆய்வுகளும் மிகுதியாக வெளிவரும் தற்காலச் சூழ்நிலையில் சாதிக் கட்டுமானங்களைத் தகர்க்கும் நோக்குடன் புதிய ஆய்வுகள் பல வெளிவர வேண்டும். இதற்காக தலித்தியம் சார்பான படைப்பாளர்களின் படைப்புகளை முழுமையாக ஆய்வுக்கு உட்படுத்துவது மிகவும் தேவையானதாகும்.

2. தலித்திய நோக்கிலான ஆய்வுகள் சமூகப் பார்வையுடன் வெளிவந்தால் அவை சமூக மாற்றத்தையும் சமதர்மத்தையும் வளர்க்கும். எனவே, சமூகப் பார்வையுடன் தலித்தியம் சார்ந்த ஆய்வுகள் செய்யப்பட வேண்டியது சமகாலத் தேவை என முடிவு செய்யலாம்.

தற்காலச் சமுதாய வளர்ச்சிக்கும் ஒடுக்கப்பட்ட மக்களின் வாழ்க்கை மேம்பாட்டிற்கும் தலித்தியம் தொடர்பான ஆய்வுகள் உதவுகின்றன எனலாம்.

# துணைநூல் பட்டியல்

## தமிழ்


1. அந்தோனி குரூஸ்.அ., 2003, தலித்தியக் கருத்தாடல்கள், ஸ்ரீ செண்பகா பதிப்பகம், சென்னை.

2. அந்தோனி குரூஸ், ஜான் வின்செண்ட், (முத.), 2002, நொறுக்கப்பட்ட மக்கள், மக்கள் கண்காணிப்பகம் – தமிழ்நாடு, மதுரை.

3. அர்ஜுன் டாங்ளே, 1992, தலித் இலக்கியம், தாமரைச் செல்வி பதிப்பகம், சென்னை.

4. அருட்கடலார், (தொ.ஆ.),2006, தலித் அடையாளத் தேடல், வைகறைப் பதிப்பகம், திண்டுக்கல்.

5. அலெக்ஸிஸ் அருள் டைமண்ட் ராஜ், (ப.ஆ.), 2001, மூன்றாம் யுகத்தில் சமூக பொருளாதார உரிமைகள் ஒரு பார்வை, அலெக்ஸிஸ் அருள் டைமண்ட் ராஜ் அறக்கட்டளை, மதுரை.

6. அழகரசன், (க.ஆ.), 2008, 'தலித் விமர்சனம் - சில குறிப்புகள்', காலச்சுவடு (நவம்பர் இதழ்), நாகர்கோவில், பக். 52 – 56.

7. அழகிய பெரியவன், (க.ஆ.),2005, 'கலகம் செய்யும் எழுத்து', தலித்தியல், கலைஞன் பதிப்பகம், சென்னை, பக். 149 – 158.

8. அன்பு செல்வம், 2004, கொடுமை முறியும், கலகம், சென்னை.

9. - - - - - - -, (தொ. ஆ.), 2006, 'பூ. சந்திர போசு என்பவரின் பேட்டி',
விடுதலையின் வேர்காணல்,
தலித் ஆதார மையம்,
மதுரை.

10. இதயவேந்தன்.விழி.பா., 2002, தலித் அழகியல்,
காவ்யா,
சென்னை.

11. இரவி ஆறுமுகம். ஐ., 2002, தீண்டாமை ஒழிப்பில் காவல்துறை,
மதுரைக் காமராசர் பல்கலைக்
கழகம், மதுரை.

12. இராஜமுத்திருளாண்டி, 2005, மனித உரிமைகள்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
சென்னை.

13. இளவரசன்.த., (க.ஆ.), 2007, 'இரா. நடராசனின் தலித் என்னும் விளிம்பு
நிலை மனிதர்கள்',
இலக்கியமும் சமூகமும் – பன்முகப்
பார்வை,
ஞாலத் தமிழ்ப் பண்பாட்டு ஆய்வு மன்றம்,
மதுரை, பக். 154 – 157.

14. கலாகோபி.க., (க.ஆ.), 2007, 'புனைகதை இலக்கியங்களில் தலித்
கதையாடல்',
புத்திலக்கியம் – பன்முகப் பார்வை,
தொகுதி-2,
ஞாலத் தமிழ்ப் பண்பாட்டு ஆய்வு மன்றம்,
மதுரை, பக். 101 – 104.

15. கீதா.கி.அ., (க.ஆ.), 2008, 'விரிவுபெறும் பொருளும் மாறுபடும்
அடையாளமும்',
காலச்சுவடு (நவம்பர் இதழ்),
நாகர்கோவில், பக். 57 – 58.

16. குணசேகரன். கே.ஏ., 1995, தலித் அரங்கியல்,
கீழைக்காற்று வெளியீட்டகம்,
சென்னை.

17. - - - - - - -, 2005, ஒடுக்கப்பட்டோர் அரங்கியல்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
சென்னை.

18. - - - - - - -, 2005, பலி ஆடுகள்,
நவஜோதி பதிப்பகம்,
சென்னை.

19. - - - - - - -, 2005, வடு,
காலச்சுவடு பதிப்பகம்,
நாகர்கோவில்.

20. குருநாதன். இராம, 2005, தலித்தியல்,
பத்மாவதி விவேகானந்தன், கலைஞன் பதிப்பகம்,
(தொ.ஆசி.),சென்னை.

21. கெயில் ஓம்வெத், 1994, தலித் பேந்தர்கள் தலித் இலக்கியம்
பெண்கள்,
நிறப்பிரிகை (நவம்பர் இதழ்),
சென்னை, ப. 3.

22. கேசவன்.கோ., 1994, சமூக விடுதலையும் தாழ்த்தப்பட்டோரும்,
சரவணபாலு பதிப்பகம்,
விழுப்புரம்.

23. - - - - - - -, 1998, தலித் இலக்கியம்,
தி பிரிண்டிங் ஹவுஸ்,
திருச்சி.

24. கோவிந்தசாமி.வெ. ,2002, ஒரு தலித்திடமிருந்து,
(மொ.பெ.ஆ), விடியல் பதிப்பகம்,
கோயம்புத்தூர்.

25. கோவேந்தன்.த., (ப.ஆ.),1992, சித்தர் பாடல்கள்,
பூம்புகார் பதிப்பகம்,
சென்னை.

26. சண்முக சுந்தரம்.சு., 1996, தலித்தியம்,
(தொ.ஆ.), காவ்யா பதிப்பகம்,
பெங்களூர்.

27. சண்முகம் பிள்ளை, (ப.ஆ.), 2000, தொல்காப்பியம், முதல் பகுதி, முல்லை வெளியீடு, சென்னை.

28. சரண்குமார் லிம்பாலே, 2006, 'மராட்டியத் தலித் எழுத்தாளரிடம் பேட்டி', தலித் முரசு (பிப்ரவரி இதழ்), சென்னை, பக். 39 – 40.

29. சவரிமுத்து.சா., (க.ஆ.), 1999, 'கதைப்பாடல்கள் வழி அறியலாகும் சாதிப்போராட்டம்', ஆய்வுக் கோவை (இரண்டாம் தொகுதி), இந்தியப் பல்கலைக கழகத் தமிழாசிரியர் மன்றம், மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம், திருநெல்வேலி, பக். 643 – 647.

30. சஜன், 2004, தலித்தியம் இயக்கமும் இலக்கியமும், காலசகம் பதிப்பகம், கன்னியாகுமரி மாவட்டம்.

31. சாலன்.ஏ.எம்., 2005, தலித் பண்பாடு சில பார்வைகள், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிமிடெட். சென்னை.

32. சிவ சுப்பிரமணியன்.ஆ., 2005, தமிழகத்தில் அடிமை முறை, காலச்சுவடு பதிப்பகம், நாகர்கோவில்.

33. சின்னப்பன்.கு., 2006, தமிழகத்தில் தலித் சிந்தனை மரபு, வழிகாட்டி வெளியீடு, புதுச்சேரி.

34. சுந்தரமூர்த்தி.இ. (ப.ஆ.),2003, பாரதியார் கவிதைகள், பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை.

35. சுமதி. செ.த., 2008, வெண்மணி படுகொலைகள்: வரலாறும் கலை இலக்கியப் பதிவுகளும், அலைகள் வெளியீட்டகம், சென்னை.

36. சேது, (தொ.ஆ.), 2000, தமிழகத்தில் மனித உரிமைகள் 1998-2000, மக்கள் கண்காணிப்பகம் - தமிழ்நாடு, மதுரை.

37. சேம்ஜி.சி., 2001, சமூக நீதியும் தலித் மக்களும், குமரி கிறிஸ்தவ ஒன்றிப்பு இயக்கம், நாகர்கோவில்.

38. - - - - - - -, 2002, பெண்களும் இயக்கங்களும், இறையரசு இயக்க அலுவலகம், குமரி மாவட்டம்.

39. சொக்கலிங்கம்.சி., 2003, தலித் மயமாக்கல், திணை வெளியீட்டகம், குமரி மாவட்டம்.

40. சோபிதராஜ்.ற்றி.ற்றி., 2002, 'வாழ்த்துரை', தென் எல்லைக்காவலன் நேசமணி, நேசமணி தமிழர் பதிப்பகம், நாகர்கோவில், ப. iii.

41. சோலை சுந்தர பெருமாள், 2000, உறங்க மறந்த கும்பகர்ணர்கள், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., சென்னை.

42. - - - - - - - - -, 2000, ஒரு ஊரும் சில மனிதர்களும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., சென்னை.

43. - - - - - - -, 2000, ஓராண்காணி, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., சென்னை.

44. -------, 2000, மண் உருவங்கள்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
சென்னை.

45. -------, 2000, மனசு,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
சென்னை.

46. -------, 2000, வண்டல்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
சென்னை.

47. -------, 2001, ஒரே ஒரு ஊர்ல,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
சென்னை.

48. -------, 2002, தப்பாட்டம்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
சென்னை.

49. -------, 2003, செந்நெல்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
சென்னை.

50. -------, 2004, 'வெண்மணி தீயில் கருகிய 44 உடல்களை நேரில் பார்த்தேன்' (நேர்காணல்),
புதிய புத்தகம் பேசுது, (டிசம்பர் இதழ்),
சென்னை, பக். 18 – 23.

51. -------, 2005, பெருந்திணை,
பாரதி புத்தகாலயம்,
சென்னை.

52. -------, 2006, குருமார்கள்,
நிவேதிதா புத்தக பூங்கா,
சென்னை.

53. -------, 2006, 'தமிழ் மொழியை வளர்க்கப் போகிறவர்கள் மக்கள்தான்' (பேட்டி),
புதிய பார்வை, (ஜுலை இதழ் 1 - 15),
சென்னை, பக். 64 – 67.

54. - - - - - - -, 2006, நஞ்சை மனிதர்கள்,
நிவேதிதா புத்தக பூங்கா,
சென்னை.

55. - - - - - - -, 2006, மடையான்களும் சில காடைகளும்,
நிவேதிதா புத்தக பூங்கா,
சென்னை.

56. - - - - - - -, 2007, நாட்டுப்புறச் சிறுகதைகள்,
பாவை பிரிண்டர்ஸ் (பி) லிட்.,
சென்னை.

57. - - - - - - -, 2007, மரக்கால்,
பாரதி புத்தகாலயம்,
சென்னை.

58. ஞானி. கோவை., 2001, 'செந்நெல்லுக்கு முன்னும் பின்னும்',
வெண்மணியும் 44 பிடி சாம்பலும்,
தாமரை பப்ளிகேஷன்ஸ் (பி) லிட்.,
சென்னை, பக். 19 - 23.

59. டேவிட் சித்தையா, 1995, 'திரிபுவாத விடுதலை இறையியல்',
(க.ஆ.), சுபமங்களா இதழ்,
சென்னை, பக். 86 – 87.

60. தணிகைச் செல்வன்,1998,தலித்தியம் தமிழியம் இந்தியம்,
பல்கலைப் பதிப்பகம்,
சென்னை.

61. தமிழ் பாவை, 2005, தலித்துகளும் வன்கொடுமைகளும்,
முத்து. கே.எஸ்., (முத.), தலித் ஆதார மையம்,
(தொ.ஆசி.),மதுரை.

62. திருமாவளவன். 2004, அடங்கமறு,
தொல்., தாய்மண் வெளியீட்டகம்,
சென்னை.

63. - - - - - - -, 2007, வெளிச்சம்,
தாய்மண் வெளியீட்டகம்,
சென்னை.

64. துரைசாமிப் பிள்ளை.சு. ,1995, (உ.ஆ.), பதிற்றுப் பத்து, திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக கழகம் லிமிடெட் சென்னை.

65. - - - - - - - , 1996, புறநானூறு, திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை.

66. தேவசகாயம்.இ., (ப.ஆ.), 2004, உரிமைக் காப்போம் (உரிமையாளர்க்கான அறிவும் ஆற்றலும்), மனித உரிமைக் கல்வி நிறுவனம், மதுரை.

67. - - - - - - -, 2004, மனித உரிமைக் கல்வி தொடர் – 111-பாகுபாடு, மனித உரிமைக் கல்வி நிறுவனம், மதுரை.

68. தேவி செந்தில் குமார், 2007, (க.ஆ.), 'தலித் பண்பாடு', இலக்கியமும் சமூகமும் – பன்முகப் பார்வை, ஞாலத் தமிழ்ப் பண்பாட்டு ஆய்வு மன்றம், மதுரை, பக். 147 – 150.

69. நாராயண வேலுப்பிள்ளை.எம்., (உ. ஆ.), 2000, நாலாயிர திவ்ய பிரபந்தம் (முதல் ஆயிரம்), முல்லை நிலையம், சென்னை.

70. பஞ்சாங்கம், (க.ஆ.), 2006, 'சாதிச் சங்கக் கலாச்சாரமும் இடதுசாரிகளின் எதிர்கொள்ளலும்', அகமும் புறமும், நிவேதிதா புத்தக பூங்கா, சென்னை, பக். 129 – 137.

71. பத்மநாபன்.ஆ., 2002, தலித்துகளின் இன்றைய நிலைமை,
பூம்புகார் பதிப்பகம்,
சென்னை.

72. பத்மாவதி விவேகானந்தன்,
2006, பெருந்திணை – சோலை சுந்தர பெருமாள் (நூல் விமர்சனம்),
கணையாழி (ஆகஸ்ட் இதழ்),
சென்னை, பக். 23 – 25.

73. பாலசுந்தரம் பிள்ளை.தி.சு.,
(உ.ஆ.), 1992, நாலடியார்,
திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம் லிமிடெட்,
சென்னை.

74. பாலமுருகன், (க.ஆ.), 2006, 'செந்நெல் புதினம் காட்டும் தலித்திய மக்களின் வாழ்க்கைச் சிக்கல்கள்',
தமிழ் இலக்கியத் திறன் அன்றும் இன்றும்,
ஞாலத் தமிழ்ப் பண்பாட்டு ஆய்வு மன்றம்,
மதுரை, பக். 68 – 73.

75. புலியூர்க்கேசிகன், (உ.ஆ.), 1995, முக்கூடற்பள்ளு,
பாரி நிலையம்,
சென்னை.

76. - - - - - - -, (ப.ஆ.), 1998, திருக்குறள் பரிமேலழகர் உரை,
பூம்புகார் பதிப்பகம்,
சென்னை.

77. பொன்ராஜ், (க.ஆ.), 2007, 'விழி.பா. இதயவேந்தனின் 'எவருமறியாத நாம்' கவிதைகளில் – தலித் விடுதலை யுணர்வு', புத்திலக்கியம் – பன்முகப் பார்வை,
ஞாலத் தமிழ்ப் பண்பாட்டு ஆய்வு மன்றம்,
பல்கலை நகர், மதுரை, பக்.130 – 135.

78. மர்மக்கோவா.ஏ. ராட்னிக்கவ்.வி., (த.மொ.பெ.) 1998, வர்க்கங்கள் வர்க்கப் போராட்டம் என்றால் என்ன?, முன்னேற்றப் பதிப்பகம், மாஸ்கோ, ரஷ்யா.

79. மார்க்ஸ்.அ., 2002, உலகமயம் எதிர்ப்பு அரசியல் தலித்துகள், அடையாளம், புத்தா நத்தம்.

80. மீனாமயில், (க.ஆ.), 2006, 'இருக்க விடலாமா ஜாதியை?', தலித் முரசு (சூலை இதழ்), சென்னை, பக். 16 – 18.

81. முகில், 1996, 'தமிழில் தலித் இலக்கியம்', தலித்தியம், காவ்யா பதிப்பகம், பெங்களூர், பக். 86 – 127.

82. முருகு பாண்டியன்.அரச., 2008, 'தலித் என்னும் சொல்லாடலின் அரசியல்', காலச்சுவடு (நவம்பர் இதழ்), நாகர்கோவில், பக். 50 – 51.

83. முருகையன்.மு.அரங்க., 1990, சாதீயம், இலக்கியா வெளியீடு, புதுச்சேரி.

84. - - - - - - -, (க.ஆ.), 1996, 'மநுதர்ம அடிப்படையில் வர்ணமும் சாதிய அமைப்பும்', ஆய்வுக் கோவை, தமிழியல் துறை, புதுவைப் பல்கலைக்கழகம், புதுச்சேரி, பக். 1214 – 1218.

85. மூர்த்தி.பூ., நிக்கோலஸ்.சி., 1995, தலித் சமூக இயல், ஜெய்பீம் பதிப்பகம், புதுச்சேரி.

86. மேகலின் சந்திரா.சா.,2007, (க.ஆ.), 'தப்பாட்டம் நாவலில் தீண்டாமை வடிவங்கள்', நான்காவது காஸ் கருத்தரங்க கட்டுரைத் தொகுப்பு, ஸ்காட் கிறிஸ்தவக் கல்லூரி, நாகர்கோவில், பக். 42 – 44.

87. - - - - - - - , 2009, 'சோலை சுந்தர பெருமாள் படைப்புகளில் காணலாகும் தலித் விழிப்புணர்வுச் சிந்தனைகள்', தலித் இலக்கியமும் சமூக விழிப்புணர்வும் இரண்டாம் பகுதி, ராணி அண்ணா அரசு மகளிர் கல்லூரி, தமிழ்த்துறை, திருநெல்வேலி, பக். 642 – 645.

88. - - - - - - - , 2009, 'பொதி என்ற குறுநாவலின்வழி அறியலாகும் ஒட்டா இன மக்களின் சமூகப் பொருளாதார நிலை', பழங்குடியினரின் கலை மற்றும் இலக்கியம், ஸ்காட் கிறிஸ்தவக் கல்லூரி, தமிழ்த்துறை, நாகர்கோவில், பக். 87 – 88.

89. மோகன் லார்பீர்.பா., 1998, (தொ.ஆ.), தலித் விடுதலைக்கான அரசியல், தலித் ஆதார மையம், தமிழ்நாடு இறையியல் கல்லூரி, மதுரை.

90. - - - - - - -, 2007, கலகமொழி, தலித் ஆதார மையம், தமிழ்நாடு இறையியல் கல்லூரி, மதுரை.

91. ரந்திர் குமார்.ஆ., 2007, (க.ஆ.), 'அருந்ததிய சாமியாடிகளும் சாதிய மதிப்பீடுகளும்', இலக்கியமும் சமூகமும் – பன்முகப் பார்வை, ஞாலத் தமிழ்ப் பண்பாட்டு ஆய்வு மன்றம், பல்கலை நகர், மதுரை, பக். 210 – 215.

92. ரவிக்குமார், 2001, கொதிப்பு உயர்ந்து வரும்,
காலச்சுவடு பதிப்பகம்,
நாகர்கோவில்.

93. ராமகிருஷ்ணன்.எஸ்.,
(ப.ஆ.), 2008, க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி,
க்ரியா, சென்னை.

94. ராமசாமி.அ., 2008, 'தலித் இலக்கியம் - 2000க்கு முன்னும்
(க.ஆ.), பின்னும்',
காலச்சுவடு (நவம்பர் இதழ்),
நாகர்கோவில், பக். 44 – 47.

95. ராஜ் கௌதமன்,2005, தலித்திய விமர்சனக் கட்டுரைகள்,
காலச்சுவடு பதிப்பகம்,
நாகர்கோவில்.

96. ராஜேஸ்.எஸ்., 2006, 'தகனம் நாவல் காட்டும் வெட்டியான் இன
(க.ஆ.), மக்களின் வாழ்க்கைப் போராட்டங்கள்',
தமிழ் இலக்கியத் திறன் அன்றும் இன்றும்,
ஞாலத் தமிழ்ப் பண்பாட்டு ஆய்வு மன்றம்,
மதுரை, பக். 78 – 82.

97. ரீனாபாய்.செ., 2007, 'தலித் இலக்கியம் - ஓர் ஆய்வு',
(க.ஆ.), புத்திலக்கியம் - பன்முகப் பார்வை
(தொகுதி – 2),
ஞாலத் தமிழ் பண்பாட்டு ஆய்வு மன்றம்,
மதுரை, பக். 158 – 161.

98. லேனா தமிழ்வாணன்,
(ப.ஆ.), 1986, நற்றிணை - மூலமும் தெளிவுரையும்,
பாகம் -1, பாடல்கள் 1 – 200,
மணிமேகலைப் பிரசுரம்,
சென்னை.

99. ஹரீதையா கான்ஸ்தந்தின்,
2008, சிக்கல்களின் பெருமூச்சு,
காலச்சுவடு, (ஆகஸ்ட் இதழ்),
நாகர்கோவில், பக். 12 – 14.

100. வின்செண்ட் ராஜ்.சி., 2004, சமரசம் கி.பி.2001 (இரண்டாம் பகுதி) மேட்டுக்குடிகள், NUDROS அறக்கட்டளை, கன்னியாகுமரி மாவட்டம், தமிழ்நாடு, இந்தியா.

101. வேங்கடசாமி நாட்டார், (உ.ஆ.), 1996, நல்வழி, திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிட்., சென்னை.

102. வைடூரியம்மாள்.பா., 2007, (க.ஆ.), 'சோ. தர்மனின் ம(னி)தம் ஒரு தலித்தியப் பார்வை', புத்திலக்கியம் - பன்முகப் பார்வை (தொகுதி – 2), ஞாலத் தமிழ்ப் பண்பாட்டு ஆய்வு மன்றம், மதுரை, பக். 114 – 118.

103. வைத்தியநாதன்.கே., (ப.ஆ.), 'புதிரை வண்ணான் சமூகத்திற்குத் தனி நலவாரியம்', தினமணி நாளிதழ், திருநெல்வேலி பதிப்பு, 08-07-2009, ப.4.

104. ஜான்துரை.ஆ., 1996, (க.ஆ.), 'தலித் - ஓர் இறையியல் பார்வை', ஆய்வுக் கோவை, தமிழியல் துறை, புதுவைப் பல்கலைக் கழகம், புதுச்சேரி, பக். 1376 – 1380.

105. ஜான் வின்செண்ட் , 1998, (மொ.பெ.ஆ.), பணியிடங்களில் பாலியல் வன்முறை – உச்சநீதிமன்றம் தீர்ப்பு, மக்கள் கண்காணிப்பகம்- தமிழ்நாடு, மதுரை.

106. ஜீவானந்தம். ஆ., 2002, தமிழில் தலித் இலக்கியம், தி பார்க்கர், சென்னை.

107. ஜெயந்தி.க., (க.ஆ.),2006, 'நாவல்களில் தீண்டாமை', தமிழ் இலக்கியத் திறன் - அன்றும் இன்றும், ஞாலத் தமிழ்ப் பண்பாட்டு ஆய்வு மன்றம், பல்கலை நகர், மதுரை, பக். 108 – 113.

108. ஜோசப் சார்லி 2006, 'தலித்து அரங்கியல்',
ஆரோக்கிய தாஸ், (க.ஆ.), பிற துறைத் தமிழியல்,
ஞாலத் தமிழ்ப் பண்பாட்டு ஆய்வு மன்றம்,
பல்கலை நகர், மதுரை, பக். 300 – 303.

109. ஜோதி பாசு, (ப.ஆ.),2003, சித்ரவதை – ஓர் முழுமையான பார்வை,
மக்கள் கண்காணிப்பகம் - தமிழ்நாடு,
மதுரை.

110. ஸ்டாலின் ராஜாங்கம், 2008, 'சென்னகரம்பட்டி : அதிகாரத்தின்
(க.ஆ.), ஓலம்',
காலச்சுவடு (செப்டம்பர் இதழ்),
நாகர்கோவில், பக். 12 – 14.

111. - - - - - - - , 2008, 'தலித் அடையாளம் - அங்கீகாரத்தின்
நிறங்கள்',
காலச்சுவடு (நவம்பர் இதழ்),
நாகர்கோவில், பக். 59 – 61.

**ஆங்கிலம்**

1. Alikhan Mumtaj, 1980, Scheduled Castes and their Status in India,
Uppal Publishing House,
New Delhi.

2. Ambedkar.B.R., 1987, Annitilation of Caste Dalit,
Sahitya Akademy,
Bangalore.

3. Dinakarlal Thavamony.J.,
Cyril Kanmony.J., 2007, Human Rights Education,
Scott Publications,
Nagercoil.

4. Hanumanthan.K.R., 1979, Untouchablity,
Koodal Publishing House,
Madurai.

5. Mateer, Samuel, 1991, Native Life in Travancore, UPH, New Delhi.

6. Prabhakar. M.E., (Ed.), 1989, Towards a Dalit Theology, The Indian Society for Promoting Christian Knowledge (ISPCK), Delhi.

7. Shinde. Prem Kumar, (Ed.), 2005, Dalits and Human Rights (Three Volumes), Isha Books, New Delhi.

8. Stanislaus.L., 1999, The Liberative Mission of the Church Among Dalit Christians, ISPCK, Delhi.

# பின்னிணைப்பு - 1

படைப்பாளர் திரு. சோலை சுந்தரபெருமாள் அவர்களின் நிழற்படம்



# பின்னிணைப்பு - 2

## படைப்பாளர் திரு. சோலை சுந்தர பெருமாள் அவர்களின் பேட்டி

| | | |
|---|---|---|
| பேட்டி காண்பவர் | - | சா. மேகலின் சந்திரா |
| பேட்டி அளிப்பவர் | - | திரு. சோலை சுந்தர பெருமாள் |
| இடம | - | எழுத்தாளர் இல்லம்,<br>2-192/ நடுத்தெரு,<br>காவனூர், அம்மையப்பன் – 613 701. |
| நாள் | - | 06-03-2009 |

ஐயா,

வணக்கம் !

**1. தங்களைக் குறித்த அறிமுகம்**

நான் சுப்பிரமணியப் பிள்ளை, கமலம் தம்பதியினருக்கு மகனாகத் தற்போதைய திருவாரூர் (முன்னர் தஞ்சை) மாவட்டம் காவனூரில் 09-05-1953 இல் பிறந்தேன். பிறப்பால் சோழிய வெள்ளாளர் சமுதாயத்தைச் சார்ந்தவன், எனினும் சாதியில் உடன்பாடு இல்லை. பதினொன்றாம் வகுப்பு வரை பள்ளியில் படித்து, மேற்படிப்புகளை அஞ்சல் வழிக் கல்வியில் கற்றேன். தற்போது அரசு மேல்நிலைப் பள்ளி, அம்மையப்பனில் தமிழாசிரியராகப் பணியாற்றி வருகிறேன். இலக்கியப் படைப்பிலும் ஆர்வம் உண்டு.

**2. தங்களது இலக்கியப் பணி எத்தனை ஆண்டுகளாக நடந்து வருகிறது?**

இருபது ஆண்டுகளுக்கு மேல்.

**3. சமுதாய மாற்றத்திற்கு ஒரு படைப்பின் பங்களிப்பு என்ன?**

சமூக மாற்றத்திற்கு அடித்தளமாக அமைவது படைப்பு. மனிதனைப் பண்புடையவனாக – ஆழ் மனதிற்குள் உந்து விசையாக இருந்து உலுக்கி எடுக்கக்கூடிய ஆற்றல் படைப்புக்கு மட்டுமே உண்டு. கல்வி புகட்டல் எல்லாமே மேம்போக்காக நின்று வழிகாட்டுமே தவிர, உள்ளும் புறமும் அடக்கி அகவயப்படுத்தாது. அப்படியான ஆற்றல் படைப்புக்கு மட்டுமே உள்ளது.

**4. தலித் அல்லாதவர்களின் தலித் சார்ந்த படைப்புகள் எத்தகைய நம்பகத் தன்மையை ஏற்படுத்துகின்றன?**

படைப்பாளியின் வாழ் அனுபவம் அசலாக இருக்க வேண்டும். பாசாங்கு இல்லாத மனோசக்தியைப் பெற்று இருக்கும் படைப்பாளியின் படைப்புகள் நம்பகத்தன்மையைக் கொண்டு இருக்கும். பல தலித் படைப்பாளிகளின் படைப்புகள் அனுபவத் தன்மை இழந்து கற்பித்தல் நிழல் படிந்து கிடப்பதைப் பார்க்க முடிகிறதே. தலித்தாய்ப் பிறந்த ஒருவரால் தான் தலித் படைப்புகளைத் தர முடியும் என்று சொல்வது மோசடித்தனமே. தலித்தாய் பிறந்தவர்கள் தலித் வாழ்க்கை என்பதை அறியாமல் இருக்கும் போது அசலான படைப்பு எப்படி கிடைக்கும்?

**5. உங்களது படைப்புகளின் வாயிலாக தலித் மக்கள் விழிப்புணர்வு அடைந்துள்ளார்களா?**

மக்கள் நேரடியாக விழிப்புணர்வு அடைய வழியில்லை. அவர்களுக்குத் தலைமை தாங்குபவர்களிடையே எனது படைப்புகள் விழிப்புணர்விற்கான விதையை விதைக்கிறது.

**6. உங்களது படைப்புகளுக்காக நீங்கள் யாரிடமிருந்தாவது எதிர்ப்புகளைச் சந்தித்தது உண்டா?**

எதிர் வர்க்கத்தார்கள் வன்முறைக்குத் துணைநின்று தாக்குதல் நடத்தியுள்ளார்கள். பெரிய அளவுக்கு அப்படி எதுவும் நடந்துவிடாமல் காக்கப்பட்டுள்ளேன். படைப்பாளியிடம் உள்ள நேர்மை இருக்கும் போது அச்சம் கொள்ளத் தேவை இல்லை.

**7. தலித் உரிமைகள் குறித்து உங்கள் கருத்து என்ன?**

காலம்காலமாக ஒடுக்கப்பட்டவர்கள் இன்று விழிப்புணர்வு பெற்று வருகிறார்கள். வெள்ளம் கரைபுரண்டு வரும்போது நல்லவை, கெட்டவை எல்லாம் இணைந்து தான் வரும். போகப் போகத் தெளிவடையும். அதுபோல ஒடுக்குமுறை குறைந்து நீங்கவும் வாய்ப்பு அதிகம் உண்டு. எனவே தலித் உரிமைகள் தேவை. அதற்கான போராட்டங்களும் தேவை.

**8. 'செந்நெல்', 'தப்பாட்டம்' நாவல்களில் தலித்துகளின் முன்னேற்றத்திற்கு உதவுகிறவர்களாக வடிவேலு, சுந்தரமூர்த்தி வாத்தியார் என்னும் ஆதிக்கச் சாதியினரைப் படைத்துள்ளீர்கள். தலித்துகளில் யாரையாவது அவ்வாறு படைத்திருக்கலாமே? ஏன்?**

பொதுவுடைமை இயக்கவாதிகளுக்குச் சாதி இருக்க முடியாது. முன்னேறின சமூகத்தில் உள்ளவர்கள் விழிப்படைந்து மக்கள் பணிக்கு விரைவாக வந்து விடுகிறார்கள். அவர்கள் தலைமைப் பொறுப்புக்கும் வந்துள்ளார்கள். இன்று தலித்துகள் என்று நீங்கள் சொல்லும்

ஒடுக்கப்பட்டவர்கள் தலைமைப் பொறுப்பிற்குச் சென்று விட்டார்களே. சாதியும், மதமும் – கடவுளர்களும் ஒடுக்கும் வர்க்க நலனைப் பாதுகாப்பவர்கள் என்பதை மறக்கக்கூடாது.

**9. 'தப்பாட்டம்' நாவலில் குறிப்பிடப்படும் தீண்டாமைக் கொடுமைகளில் எவையேனும் தற்போது நிலவில் உள்ளனவா? எவை என்று குறிப்பிட்டுக் கூற முடியுமா?**

இன்றும் உட்கிராமங்களில் அனைத்துவிதமான தீண்டாமைக் கொடுமைகளும் களத்தில் உள்ளன. நகரம் சார்ந்த பகுதிகளில் தீண்டாமைக் கொடுமைகள் அனைத்தும் மறுவடிவம் கொண்டுள்ளன என்பதை ஊன்றிக் கவனித்தால் தெரியும்.

**10. ரெட்டிப்பாளையத்தின் எந்தெந்த பகுதிகளில் தீண்டாமைக் கொடுமைகள் நிலவில் உள்ளன?**

ரெட்டிப்பாளையம் ஒரு குறியீடு மட்டுமே. இதுபோல் பல கிராமங்கள் உண்டு.

**11. உங்களது படைப்புகளில் பெரும்பான்மையான தலித் மக்களை விவசாயத் தொழிலாளர்களாகப் படைத்துள்ளதன் காரணம் என்ன?**

எம்மண்ணில் பெரும்பாலானவர்கள் விவசாயத் தொழிலாளா களாக இருக்கிறார்கள். அதனால் அப்படியேச் சொல்ல வேண்டியிருக்கிறது.

**12. 'ஆசை' என்ற குறுநாவல் 'மனசு' மற்றும் 'குருமார்கள்' என்ற இரு குறுநாவல் தொகுப்புகளில் இடம் பெற்றுள்ளது. மேலும்'காத்திருக்கிறாள்' என்ற சிறுகதை ஒரே கருப்பொருளில் இரு சிறுகதைத் தொகுப்புகளில் இடம்பெறக் காரணம் என்ன?**

படைப்பின் கருப்பொருள் வாசகர்களின் மனதில் ஆழமாக வேரூன்றவே அவ்வாறு நிகழ்ந்துள்ளது.

**13. 'செந்நெல்' நாவலில் இடம்பெற்றுள்ள தலித் கதை மாந்தர்கள் யாராவது தற்போது வாழ்ந்து வருகிறார்களா?**

சிலர் வாழ்கிறார்கள். பெரும்பாலும் வாழ்ந்தவர்கள் தான். கற்பனை என்பதே இல்லை. கொஞ்சம் புனைவு உண்டு. கற்பனையும் புனைவும் ஒன்று அல்ல.

**14. 'மரக்கால்' என்ற நாவலைப் படைக்கக் காரணம் என்ன?**

வைதீகம் நந்தனாரைப் படைத்துள்ள விதத்திற்கும் 53 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த நந்தன் எப்படி வாழ்ந்திருக்க முடியும்? என்பதைப் புனைவு வழி படைப்பாக்கியிருக்கிறேன். நான் கற்பனை வயப்படாதவன். சமூக அறிவின் தடத்தில் பயணிப்பவன்.

# பின்னிணைப்பு - 3

## திரு. சோலை சுந்தர பெருமாள் படைப்புகளின் பட்டியல்

**சிறுகதைத் தொகுப்புகள் 4**

**குறுநாவல் தொகுப்புகள் 4**

**நாவல்கள்**

| வ. எண் | நாவலின் பெயர் | ஆண்டு | நாவல் பெற்ற பரிசு |
|---|---|---|---|
| 1. | உறங்க மறந்த கும்பகர்ணர்கள் | 2000 | 1990 |
| 2. | ஒரே ஒரு ஊர்ல | 2001 | |
| 3. | தப்பாட்டம் | 2002 | |
| 4. | செந்நெல் | 2003 | தமிழக அரசின் பரிசு, கலை, இலக்கியப் பெருமன்றப் பரிசு |
| 5. | பெருந்திணை | 2005 | |
| 6. | நஞ்சை மனிதர்கள் | 2006 | |
| 7. | மரக்கால் | 2007 | |

## தொகுப்புநூல்

| தொகுத்த சிறுகதைகளின் தலைப்பு | கதையைச் சொன்னவர் |
|---|---|
| கம்பங்கொழுக்கட்டை | கலியம்மாள் (குறவர்) |
| மச்சக்காவடி | சீதையம்மாள் (சோழிய வெள்ளாளர்) |
| முட்டாள் திருடன் | கலியம்மாள் (குறவர்) |
| ஒரு குடம் தண்ணி ஊத்தி ஒரு பூ பூக்க | அலமேலு (சோழிய வெள்ளாளர்) |
| சமத்து | கலியம்மாள் (குறவர்) |
| சொரக்காய் | கலியம்மாள் (குறவர்) |
| தொம்பை | கலியம்மாள் (குறவர்) |
| தரித்திரம் | கலியம்மாள் (குறவர்) |
| தென்னை புடுங்கி | கலியம்மாள் (குறவர்) |
| மரக்கா நந்தன் | கோவிந்தம்மாள் (சோழிய வெள்ளாளர்) |
| தூண்டில்காரன். | தங்கச்சியம்மாள் (இசை வேளாளர்) |
| குட்டிச் செல்லான் வைரக்கண்ணுபிள்ளை | கட்டைக்குப்பான் (பறையர்) |
| மயிலு பொண்ணு . | கலியம்மாள் (குறவர்) |
| அத்திரிபாட்சா கொழுக்கட்டை | சு. பத்மாவதி |

# பின்னிணைப்பு - 4

## திரு. சோலை சுந்தர பெருமாள் அவர்களின் கடிதம்

அன்புடையீர் வணக்கம். உங்கள் கடிதம் உரிய காலத்தில் கிடைத்து விட்டது. சூழல் நெருக்கடி. உடன் பதில் எழுதவில்லை. அவ்வளவே.

1. 'தஞ்சை சிறுகதைகள்' என்ற தொகுப்பில் உள்ள என்னுடைய சிறுகதை 'வைக்கப் போரும் கடாவடிக்கு வாக்கப்பட்டவளும்'.

2. தஞ்சை கதைக் களஞ்சியத்தில் என்கதை இல்லை. தொகுப்பு வெளிவரக்காரணம் தொகுப்பின் முன்னுரையில் கவனம் கொள்ளுங்கள்.

3. கார்வாரி – அந்தக் கதை 2000 ஆண்டு வாக்கின் நிகழ்களம் கொண்டது. நீராணிக்கம் என்ற சொல்லும் பயன்படுத்தி இருக்கிறேன். இந்த நீராணிக்கம் தாழ்ந்த சாதிக்காரனாக இருப்பான். கார்வாரி உயர்சாதி அதாவது வேளாளர் சமூகத்தைச் சார்ந்தவனாக இருப்பான்.

4. வேளாளர் என்பது உடையார், நாயுடு, வெள்ளாளர் (பிள்ளைமார் என்பவர்), பறையர் ஆகியோரைக் குறிப்பதாக அமையும். சில நேரங்களில் குயவர் – மண்பாண்டம் செய்வோரும் வேளாளராக அழைக்கப்படுவர். இப்படியானவர்கள் பூசாரிகளாக இருப்பார்கள்.

5. தமிழகத்தில் உள்ள அனைத்து பல்கலைக் கழகங்களிலும் 2000 முதல் 2006 வரை இருந்தது 'செந்நெல்'. முதுகலை, இளங்கலை என்னும் பல்வேறு பிரிவுகளில் இருந்தது. இன்றும் சில சுயாட்சிக் கல்லூரிகளில் பாடமாக உள்ளது.

6. செந்நெல் மலையாள மொழி மாற்றம் - விஜயகுமார்-குனிச்சேரி, சிந்தா பதிப்பகம் - திருவனந்தபுரம். (ஒப்பந்தச் சிக்கலால் வெளிவருவதில் இடர் ஏற்பட்டுள்ளது)

7. ஆங்கில மொழி பெயர்ப்பு Dr. D. Thomas (Retired Prof. Our News Letter – Editor).

8. இயற்பெயர் சு. சுந்தர பெருமாள். 1900 ஆண்டு வாக்கில் எனது ஊர் பெயர் 'சோலை வனம்'. பின்னர் 'காவனூர்' என்று மாற்றப்பட்டுள்ளது. அதன் அடையாளத்தை என் பெயரோடு இணைத்துள்ளேன்.

9. 'தஞ்சை சிறுகதைகள்' தஞ்சை மண்ணின் படைப்பாளிகள். சிறுகதை இலக்கியத்திற்குப் பங்களிப்புச் செய்தவர்களின் சிறுகதைகள் (விதை நெல் கோட்டை)

தஞ்சைக் கதைக் களஞ்சியம்' – சிறுகதைகள் எழுதியவர்களின் படைப்புகள் – சிறுகதை இலக்கியத்திற்கு நம்பிக்கைக்கு உரிய வகையில் எதிர்காலத்தில் செய்யக்கூடும் என்ற எதிர்பார்ப்புடன் தொகுக்கப்பட்டுள்ளன. (நெல்முட்டை)

வாழ்த்துக்கள்.

# பின்னிணைப்பு - 5

## தலித் வழக்காற்றுச் சொற்கள்

1. அடிமை - தனது அடிப்படைத் தேவைகளை நிறைவு செய்ய இயலாதவராய், ஏற்ற கூலி பெறாமல் வேலை செய்யும் பணியாள்.
2. அம்பட்டன் காணி வருவாய் - நாவிதருக்கு (சவரத் தொழிலாளிக்கு) கொடுக்கப்படும் கூலி.
3. அம்பட்டன் கொட்டகை - நாவிதர் தனது தொழிலைச் செய்யும் இடம்.
4. ஆக்கை - கயிறு.
5. ஆண்டை பண்ணை முதலாளி.
6. ஆதிக்கச் சாதி - ஆதிக்கம் செலுத்தும் மேல்சாதி.
7. உறுமி - தோல் இசைக் கருவி.
8. எரவானம் - வீட்டின் கீழ் உறை.
9. கசையடி - சாட்டையால் அடித்தல்
10. கட்டுப்பாடு - இவற்றைச் செய்யக்கூடாது என்ற கட்டளை.
11. கண்காணி - தலையாரி.
12. களக்குருணி - சமுதாயம் பார்ப்பதற்கான வருவாய்.
13. களிக்கம் - காவடியில் கெண்டைக் காலை சேர்த்துப் பூட்டிக் கட்டி வைத்துவிட்டுச் சாத்தூர் மிளகாயை அரைத்து உடம்பில் உள்ள துவார வாசல்கள் வழி உள்செலுத்தித் தண்டித்தல்.
14. கார்வாரி - நீர் வடிகால் பாய்ச்சலைக் கவனிப்பவர்.
15. குடியானவர்த் தெருவினர் - ஆதிக்கச் சாதித் தெருவினர்.
16. குதறி எடுத்தல் - நையப்புடைத்தல்.
17. குப்பாயம் - தலித் பெண்களுக்கென்று தயாராக்கப்படும் தொள தொளப்பான ஆடை.
18. கூறைத்துணி - புதிய ஆடை.
19. கொசவன் காணி - குயவர்களுக்கான சமுதாய நிலம்.
20. கொசுவம் - இடுப்பில் கட்டினால் தடுக்காமல் இருப்பதற்கு ஆடையில் வைக்கப்படும் சுருக்கு.
21. கொட்டில் சேவகர்கள் - மாடு மற்றும் மாடு தொடர்பானவைகளைப் பராமரிப்பவர்கள்.
22. கொம்பு - துளை இசைக்கருவி.
23. சமுதாய நிலம் - தனி மனிதர்களுக்கு உரிமையாகாத நிலம்.
24. சிறுகாணி அம்பட்டன் - தலித்துகளுக்குச் சவரத்தொழிலைச் செய்யும் நாவிதர். இவர் சிறுகாணி நிலவருவாயைப் பெறுபவர். ஆகவே சிறுகாணி அம்பட்டன் என்று அழைக்கப்படுவார்.

25. சின்ன சாதி - கீழ்ச் சாதி (ஒடுக்கப்படுபவர்கள்).

26. சீமைச் சர்க்கரை - சீனி

27. டமாரா - குவளை

28. த(ட்)டை போடுதல் - குழந்தையைப் பாதுகாப்பதற்காக நாட்டுப்புற நம்பிக்கையின் அடிப்படையில் காது குத்துதல், இடுப்பில் நூல் கட்டுதல் போன்ற சடங்குகளை நிகழ்த்துதல்.

29. தண்டோரா போடுதல் - அரசு அல்லது ஊர்த்தலைவர்கள் தரும் செய்திகள், இயற்கையின் சீற்றங்கள் – தொற்று நோய்கள் - கோவில் திருவிழாக்கள் போன்ற செய்திகள் முதலியவற்றை வெட்டியான் சமுதாயத்தினர் பறைஇசைக் கருவியை அடித்து ஒலி எழுப்பி மக்களுக்குத் தெரிவிப்பது.

30. தத்தெடுத்தல் - குழந்தை நீண்ட ஆயுளுடன் வாழ்வதற்குத் தவிடு, பச்சையரிசி போன்றவைகளை மாற்றிச் செய்யப்படும் சடங்கு. (தஞ்சைப் பகுதியில் பெரும்பாலும் தவிட்டிற்காகத் தத்தெடுத்தல் சடங்கு நடத்தப்படுகிறது).

31. தப்பாட்டம் - தப்பு (பறை) என்ற இசைக்கருவியை அடித்து ஒலியெழுப்பி ஆடும் ஆட்டம். தப்பாட்டம் அல்லது பறையாட்டம் பொதுவாக சாவு வீடுகள், கோவில் விழாக்கள், கலை விழாக்கள் ஆகிய மூன்று இடங்களில் முக்கியமாக நடைபெறுகின்றது. சாவு வீடுகளில் வாசலிலும், கோவில் விழாக் களில் நடுத்தெருவிலும், கலை விழாக்களில் மேடைகளிலும் தப்படித்தல் நடைபெறுகிறது. சாவு வீடுகளிலும், கோவில் விழாக்களிலும் தப்படிக்க சேரிப்பறையர் என்ற அடையாளம் போதுமானது. இங்குச் சுயமரியாதை என்பதைச் சிறிதும் எதிர்பார்க்க இயலாது. இந்த இரு இடங்களிலும் அடிமைத்தனத்தின் அடையாள மாக தப்படித்தல் நடைபெறுகிறது.

32. தம்பட்டை - தோல் இசைக் கருவி. இதனைத் 'தப்பட்டை' எனவும் அழைப்பர்.

33. தலையாரி - ஊரைப் பாதுகாக்கும் பணியை மேற்கொள்பவர்.

34. தவில் - தோல் இசைக் கருவி.

35. தனிக்குவளை - கீழ்ச்சாதி மக்களுக்கு என்று தனியாக ஒதுக்கப்பட்ட குவளை.

36. தனிப் பொத்தல் - தனியான வழி (ஓட்டை).

37. தாரை - தோல் இசைக் கருவி

38. தாலி இறக்கும் சடங்கு - கணவன் இறந்த பிறகு மனைவிக்கு நடைபெறும் ஒருவித நிகழ்ச்சி.

39. திமிறுதல் - அடங்க மறுத்தல்.
40. திருக்கவால் - ஒரு வகை மீனின் வால்.
41. தீண்டாமை - தொட்டால் தீட்டுப்படும் எனக் கருதும் நிலை.
42. துணி முகூர்த்தம் - துணி அணிவித்தல்.
43. நலுங்கு வைத்தல் - இசைப் பாடல் சார்ந்த பண்பாட்டுச் சடங்கு நிகழ்ச்சி.
44. நன்னி புன்னி போடுதல் - ஆபரணம் அணிதல்.
45. நாட்டுச் சர்க்கரை - வெல்லம்.
46. நீசச் சாதி - தாழ்ந்த சாதி.
47. பண்ணை - ஆதிக்கச் சாதியினரான பெருஞ்செல்வரின் நிலபுலன்கள் மற்றும் வீடு அடங்கின இடம்.
48. பண்ணையார் - ஆதிக்கச் சாதியினரான பெருஞ்செல்வம் படைத்த நிலவுடைமைக்காரர்.
49. பந்தல் கால் - பந்தலின் தூண்.
50. பம்பை - தோல் இசைக் கருவி.
51. பரிசம் பேசுதல் - திருமண ஒப்பந்தம் பேசும் சடங்கு.
52. பரியாரி - முடி வெட்டுபவர்.
53. பாந்தமாய் - அழகாய்.
54. பால் பள்ளையம் - பால் சோறு படையல்.
55. புதிரை வண்ணார் - ஒடுக்கப்பட்ட மக்களின் ஆடைகளை அலசும் வண்ணார் சமுதாயத்தினர்.
56. பெரிய சாதி - ஆதிக்கச் சாதி.
57. பேப்பர்த் திடல் - இடத்தின் பெயர்.
58. மஞ்சக் கயிறு - தாலிக் கயிறு.
59. மரக்கால் - நெல் அளக்கப் பயன்படுத்தும் ஓர் அளவுக் கருவி.
60. மருத்துவர் - மயிர் நீக்குபவர் என்ற பணியுடன் நோய்க்கான மருந்தையும் அளிப்பவர்.
61. மறைப்புக் கட்டுதல் - பார்வை படாமல் இருக்க தடுப்புக் கட்டுவது.
62. முக்கூட்டு - மூன்று பாதைகள் சந்திக்கும் இடம்.
63. முலைப்பால் பணம் - பெண்ணைப் பெற்றவளுக்கு (பால் கொடுத்து வளர்த்தமைக்கு) மணமகன் தரும் பணம்.
64. மேல் சாதி - அதிகாரம் செலுத்தும் ஆதிக்கச் சாதி.
65. வக்கணையாய் - (ஒளிவு மறைவு இல்லாமல்) விபரமாய்.
66. வருஷக்கூலி - சமுதாயம் பார்ப்பவர்களுக்கு ஆண்டுதோறும் கொடுக்கப்படும் ஊதியம்.
67. வெட்டியான் - சுடுகாட்டுப் பணியைச் செய்பவர்.

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

சென்னை - 600 113

## அண்மை வெளியீடுகள்

| | ரூ.பை. |
|---|---|
| இந்தியச் சூழலில் மொழிஇழப்பு ஒரு சமுதாய மொழியியல் பார்வை | 60.00 |
| நீறணி பவளக் குன்றம் | 35.00 |
| உலகப் பகுத்தறிவு நீரோட்டத்தில் பெரியார் | 35.00 |
| கலீலியோ முதல் கலாம் வரை | 35.00 |
| குலோத்துங்கன் கவிதைகள் ஒரு கோபுர தீபம் | 60.00 |
| தமிழறிஞர் அடிகளாசிரியரின் சிறுவர் இலக்கியப் பாடல்கள் | 30.00 |
| நாமக்கல் கவிஞரின் தமிழ்ப்பணி | 30.00 |
| ஈழத்தில் கண்ணகி கலாச்சாரம் | 30.00 |
| சிறுபஞ்சமூலம்- ஒரு சமூகவியல் பார்வை | 30.00 |
| சங்கத் தமிழ் பகுதி 1 | 100.00 |
| சங்கத் தமிழ் பகுதி 2 | 100.00 |
| சங்கத் தமிழ் பகுதி 3 | 115.00 |
| சங்கத் தமிழ் பகுதி 4 | 130.00 |
| சங்கத் தமிழ் பகுதி 5 | 110.00 |
| ம.பொ.சி.யின் வாழ்க்கை வரலாற்று இலக்கியங்கள் | 60.00 |
| தொல்காப்பியம், சங்க இலக்கியம் பதிப்பும் பதிப்பாளரும் | 160.00 |
| இந்தி நாடகப்பனுவல் (ஆடிமாதத்தில் ஒரு நாள்) | 50.00 |
| திராவிட இயக்கத்தில் அன்னை மணியம்மையின் பங்கு | 40.00 |
| பண்பாட்டுப் பார்வையில் திருமந்திரம் | 70.00 |
| காரைக்கால் அம்மையார் பாடல்கள் ஓர் ஆய்வு | 40.00 |
| Freudism in the Novels of James Joyce and T.Jankiraman: A comparative study | 125.00 |
| இலக்கணத்தொகை யாப்பு பாட்டியல் | 290.00 |
| தென்கிழக்கு ஆசியா நாடுகளில் தமிழ்ப்பண்பாடு | 310.00 |
| பதிற்றுப்பத்து மூலமும் ஆராய்ச்சிப்புத்துரையும் | 170.00 |
| தமிழ் மொழிபெயர்ப்பு முன்னோடிகள் | 185.00 |
| மனிதப் புனிதர் கக்கன் | 110.00 |
| மொழிபெயர்ப்பு:ஒரு கவின்கலை | 75.00 |
| மூவர்தமிழ் மூன்று பார்வைகள் | 50.00 |
| காமன்வெல்த் நாடுகளின் கவிதைகள் | 100.00 |
| அறிஞர்கள் பார்வையில் பேரறிஞர் அண்ணா | 145.00 |
| அறிஞர் அண்ணா-மொபசான் சிறுகதைகள்-ஒப்பாய்வு | 160.00 |
| இராசேந்திர சோழன் வெளியிட்ட எசாலம் செப்பேடுகள் | 55.00 |
| கடலடியில் தமிழர் நாகரிகம் | 55.00 |
| கடற்பொறியியற் கலைச்சொற்கள் (குறுங்கலைக்களஞ்சியம்) | 150.00 |
| சங்க இலக்கியத்தில் சமூக ஆய்வுகள் | 55.00 |
| சங்க அகப்பாடல்கள் தோழி கூற்று | 170.00 |
| தமிழ் நாடக மொழியும் வரலாறும் | 110.00 |
| வா.செ.கு. என்ற ஆளுமையாளர் | 50.00 |
| உ.வே.சா.வின் குறுந்தொகை உரைத்திறன் | 45.00 |
| மருதத்தில் மக்கள் வாழ்வியல் | 40.00 |

---

**714 படைப்பிலக்கியம் – விளிம்புநிலை மக்கள் ஆய்வுநோக்கு 100.00**